உ

# தருமதீபிகை

(மூலமும்—உரையும்)



ஐந்தாம் பாகம்

ஆசிரியர்

**செகவீரபாண்டியனார்**

மதுரை

மதராஸ், சி. வரதராஜுலு நாயுடு பிரஸில்
பதிப்பிக்கப் பெற்றன.

விஜய ௵ மாசி ௴

**1954.**

All Rights Reserved.

# இதில் அடங்கியுள்ளவை.

---

# முகவுரை

---

இது தரும தீபிகையின் ஐந்தாவது பாகம். மனித சமுதாயம் புனித நிலையில் ஒழுகி இனிது வாழ்ந்து வருவதற்கு உரிய போதனைகள் இதில் சாதனைகளாய் அமைந்திருக்கின்றன. கரவு முதல் அரசு ஈறாகப் பதினொரு அதிகாரங்கள் அடங்கியுள்ளன.

நெஞ்சம் வஞ்சம் படியாமல் நல்ல நேர்மையாய் வாழுக: பொருளாசையால் மருள் மண்டி உலோபம் புரியாமல் உதவி புரிக; தீமை யாதும் கருதாமல் நேம நியமமாய் நிலவுக; புலை ஒழிந்து, கொலை தவிர்ந்து, பழி நீங்கிப், பாவம் சேராமல் வாழ்வைத் தூய்மையாப் பண்பு படுத்தி வருக. சிறந்த பிறவிக்குப் பயன் உயர்ந்த புகழ் ஆதலால் அதனை விரைந்து வரைந்து கொள்ளுக; இம்மை மறுமைகளை இனிமை செய்து அருளுவது தருமமே; அந்தப் புண்ணியத்தைப் பொருந்தி எண்ணிய இன்ப போகங்களை எளிதே எய்துக; மலர்தலை உலகிற்கு உயிர் என அமைந்துள்ள அரசனது நீர்மை தெரிந்து சீர்மை தெளிந்து எவ்வழியும் நேர்மையுடன் வரிசை செய்து வருக என்னும் இவ்வாறான உறுதி நலன்கள் இதில் செவ்வையாய் வந்திருக்கின்றன.

உயிர் துயர் தோயாமல் உயர் நிலையில் ஒளி புரிந்து வாழ வேண்டுமாயின் உள்ளம் புனிதமாய்த் தெளிவடைந்து வர வேண்டும். எண்ணமும் சொல்லும் செயலும் சத்தியம் தோய்ந்து பரிசுத்தமான விழுமிய நிலையில் பழகிவரின் அங்கே அரிய பெரிய புண்ணியம் கெழுமிவரும்; அதனால் எண்ணரிய மகிமைகள் உளவாம். இவ் வுண்மையை உணர்ந்து உய்தியுறுக.

> நெஞ்சைப் புனிதமா நீசெய்து வாழினோ
> தஞ்சம் இருமை தரும்.

இந்த உத்தம நிலையை நித்தமும் நினைந்து நியமமாய் வாழுக.

திருவள்ளுவர் நிலையம்
மதுரை.
25—2—54.

செகவீரபாண்டியன்.

## சிறப்புப்பாயிரம்.

---

தருமநலம் தழைத்துவரத் தக்கவர்கள்
கிளைத்துவரத் தகவு நீதி
பெருமையுடன் பெருகிவரப் பெருநலங்கள்
மருவிவரப் பெருநீர் வையம்
கருமநலம் புரிந்துநேர் இருமையும்சீர்
பெறஓர்ந்து கருதி ஆய்ந்து
மருமலர்த்தார்ச் செகவீர பாண்டியனர்
இந்நூலை வழங்கி னரே.

மனம் புனிதமானவரே மகான்களாய் உயர்ந்து மனுக்குலத்தை உயர்த்தி வருகிருர். அரிய மாட்சிகளை யெல்லாம் உரிமையோடு உதவவல்ல மனத்தைச் சிறிய புன்மைகளால் பழுதுபடுத்தி வருவது பரிதாபமாகின்றது. பாழான அது ஒழிய வேண்டும்.

நேர்மை அழிந்து நெறி இழந்து.

என்றது உள்ளத்தில் கரவு புகுந்தபொழுது உளவாகும் இழவுகளை உணர்த்தி நின்றது. இழிவு புகவே உயர்வுகள் ஒழிந்து போகின்றன. ஊனங்கள் பெருகி வருகின்றன.

நேர்மை, நெறி, நீர்மை, சீர்மை என்பன உயர்ந்த பண்பாடுகள். அவை சிறந்த மேன்மைகளை அருள வுரியன.

மனம் வாக்கு காயம் என்னும் மூன்றும் ஒருமையாய்ச் செம்மை தோய்ந்து இருப்பது நேர்மை என வந்தது. இந்தச் செவ்விய தன்மையால் திவ்விய நன்மைகள் உளவாகின்றன. உள்ளும் புறமும் ஒழுங்காய் நேர்மை ஒளி செய்து நிற்றலால் அதனை உடையவர் அரிய மகிமைகளை எளிதே அடைந்து கொள்ளுகின்றனர். உரிய ஒரு நீர்மையால் பெரிய சீர்மைகள் மருவுகின்றன. நேர்மையாளர் மேலோராய் மேலான கதிகளை அடைகின்றனர்.

இந் நீர்மை குன்றி உள்ளம் கரவாய் உள்ளவர் கீழோராயிழிந்து பாழே அழிந்து போகின்ருர். விளைவுதெரியாமல் வீணே கள்ளம் புரிந்து வெந்துயர் உறுவது நிந்தனையாய் நின்றது.

உள் ஒன்று வைத்துப் புறம் ஒன்று பேசுவார் எள்ளத்தக்க இழிமக்களாகின்ருர். கள்ளம் இன்றி நேர்மையா யிருப்பவர் சீர்மையான மேலோராய் யாண்டும் சிறப்படைந்து நிற்கின்ருர்.

திரிகரணசுத்தி தெய்வீக நிலையமாய்ச் சிறந்து திகழ்கிறது.

இந்தத் தூய்மை இழந்த அளவு சிறுமையும் தீமையும் மருவி நிற்கின்றன. மனத்தில் ஒன்றை வைத்து வாக்கில் மாறு பேசிச் செயலில் வேறு புரிவது சின்ன மக்களுடைய சிறு தொழில்களாயுள்ளன.

"மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம்;
மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்."

"மனம் வேறு சொல் வேறு செயல் வேறுயிருப்பது கீழோர் இயல்பாம்; மனமும் சொல்லும் செயலும் மாறுபடாமல் நேர்மையாயிருப்பது மேலோர் நீர்மையாம்" என இந்த ஆரியக் கவி ஓர்ந்து குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்க வுரியது.

மனம் கரவாயிழிந்த பொழுது வாக்கும் செயலும் அவ்வழியே வழிந்து போகின்றன. போகவே உள்ளக் கரவுடையவன் எல்லாவகையிலும் இழிந்து பொல்லாதவனுய்ப் புலையுறுகின்ருன்.

துராத்துமாக்களுடைய புலையையும் மகாத்துமாக்களுடைய நிலையையும் இந்தச் சுலோகம் நன்கு உணர்த்தியுள்ளது. குறிப்பு மொழிகள்கூரியஒளிகளாய்ச்சீரியஉண்மைகளைவிளக்கியுள்ளன.

உள்ளம் கரவா யிழிந்தவர் துராத்துமாக்கள்.

அது நேர்மையாய் உயர்ந்தவர் மகாத்துமாக்கள்.

என்றதனுல் கரவின் இழிவையும், நேர்மையின் உயர்வையும் நேரே தெரிந்து கொள்ளுகிருேம். இவ்வாறு இழிபழியையும் அழி துயரையும் தருகிற கரவை உறவாக்கொண்டு மனிதன் களித்து உழலுவது மாய வியப்பாயுள்ளது.

நெஞ்சக் கரவு உன்னை நீசப்படுத்தும்; அதனை அஞ்சி ஒழித்து யாண்டும் நேர்மையோடு பழகிச் சீர்மையுடன் வாழுக. சீரிய வாழ்வு நேரிய நீர்மையில் நிலைத்து உள்ளது.

---

653. உள்ளம் கரவாய் ஒழுகி வரினவனைக்
குள்ளநரி என்றுலகம் கூறுமால்—எள்ளலிதில்
எவ்வள வேறியுள தீனம் தெரியாமல்
அவ்வளவே வாழ்தல் அவம். (ங)

இ-ள்

உள்ளத்தில் கரவுடையனுய் ஒழுகி வரின் அந்த மனிதனைக் குள்ளநரி என்று உலகம் இகழ்ந்து வரும்; எள்ளல் இழிவுகள் பல ஏறியுள்ள இந்த ஈனம் தெரியாமல் இறுமாந்து வாழ்ந்து வருவது பெரிய மானக்கேடாம் என்க.

தன்னுடைய அந்தரங்க நிலைக்குத் தக்கபடியே எந்த மனிதனும் மதிக்கப்படுகின்ருன். வெளி வேடத்தால் நல்லவன்போல்

நடித்து வரினும் உள்ளக் கரவு எப்படியும் உலகிற்குத் தெரிந்து விடுகின்றது; விடவே அவனுடைய பகட்டுகள் எல்லாம் பழிப் புக்கே இடமாய்ப் படுதுயர் புரிகின்றன.

உள்ளத்தில் நேர்மையின்றி உரை செயல்களில் பாசாங்கு கள் செய்து வருகிற வஞ்சகனைக் குள்ளநரி என்று உலகம் சொல்லிவருகிறது. நரி மிகவும் தந்திரமுடைய பிராணி ஆதலால் கபட சிந்தனைகளோடு நடித்து வருபவனை நரி என்பது வழக்க மாய் வந்தது. குள்ளநரி என்றது எள்ளல் இழிவுகள் தெரிய.

நேர்மையுடையவன் யாண்டும் ஆண்மையாளனாய் நிலவி நிற்பன் ஆதலால் அவன் சிங்கம் என எங்கும் சீர் பெற்று நிற்கின்றான். வஞ்ச நெஞ்சன் எவ்வழியும் அஞ்சி ஒடுங்கிக் கரவே செய்துவருவன்; ஆகவே அவன் குழிநரி என இழிவடைய நேர்ந்தான். உயர்ந்த மனித உருவில் வந்தும் இழிந்த இயல்புக ளால் பலர் ஈனமடைந்து ஊனமாய்க் கழிந்துள்ளனர்.

தங்களுடைய தாழ்வு நிலையை உணர்ந்து கொள்ளாமல் பெரிய தந்திரசாலிகளாய் வாழ்ந்து வருவதாக அவர் சிந்தை களித்து வருவது மேலோர்க்குச் சிரிப்பை விளைத்து வருகிறது.

"Ye brutish among the people; and ye fools, when will be wise." (Bible)

"ஓ மனிதர்களுள் மிருகங்களே! நீங்கள் முழுமூடர்கள்; உங்களுக்கு எப்பொழுது நல்ல புத்தி வரும்?" என ஒரு பெரிய வர் கரவுடையாரை நோக்கி இவ்வாறு மறுகியிருக்கிறார்.

வஞ்சமும் சூதும் எங்கணும் பெருகியுள்ளமையால் மனித உலகம் விலங்கின் காடாய் இந்நாள் இலங்கியுள்ளது. இந் நாட்டு வஞ்சகம் மிகவும் அஞ்சத் தக்கது. உள்ளத்தில் கள்ளங் கள் நிறைந்துள்ளன; வெளியே பெரியோர்களைப் போல் உரை களாடி அரிய பதவிகளில் உலாவி வருகின்றனர். அவருடைய வரவும்போக்கும் உலகஉள்ளங்களைக் கொதிக்கச்செய்கின்றன.

குள்ளநரித் தனங்கள் எல்லாம் குடிகொண்ட
  நெஞ்சுடையார் கொடுமை யாவும்
மெள்ளமறைத்து இனியவர்போல் வெளிவேடம்
  பூண்டுலகில் மேன்மை காணத்

துள்ளிஎழுந் தோடுகின்றார்; சூழ்ச்சியுடன்
பேசுகின்றார்; துள்ளல் எல்லாம்
கள்ளமனக் குகையிருக்கும் கடவுள்கண்டு
நகைக்கின்றார் கதிதான் என்னே; (1)

வாயெல்லாம் பொய்யுரைகள் வழியெல்லாம்
அழிசெயல்கள் வஞ்சம் சூது
போயெல்லாம் பெருகியுள்ள புலைநெஞ்சம்
நிலையிங்ஙன் பொருந்தி நின்றும்
தாயெல்லாம் போலினிய தயவுடையார்
எனப்பேசித் தானம் காண்பார்
பேயெல்லாம் இவர்போலப் பெருங்கேடு
செய்யுமோ பேசுங் காலே. (2)

(இந்தியத்தாய்நிலை)

நெஞ்சக் கரவுடையார் இந்நாட்டில் செய்துவரும் வஞ்சக் கொடுமைகளை நினைந்து பரிந்து நெஞ்சு நொந்து பாடிய பாடல்கள் இவை. உள்ளத்தில் தகுதியில்லாமல் உலகத்தில் பெரிய பதவிகளை அடைய அவாவி அலைவது மிகவும் எள்ளத்தக்கது.

"உள்ளத்தே வஞ்சம் உறவைத் துயர்ந்தார்போல்
கள்ளத்தே காட்டும் கரவுடையீர்!---உள்ளிடத்தே
நீச மலத்தை நிரப்பிப் புறக்கோலம்
பூசினால் என்னாகிப் போம்?"

இழிந்த வஞ்சத்தை உள்ளத்தில் மறைத்து வைத்து உயர்ந்தவர்போல் வெளியே நடித்துத் திரியும் பழியுடையாரை நோக்கி அறிவு கூறியுள்ள இது ஈண்டு விழி திறந்து நோக்கவுரியது. நீச மலத்தை உள்ளே நிரப்பி மறைத்துப் புறத்தே கோலம் செய்து காட்டுவார் போல் அவர் சாலம் செய்து நீட்டுகிறார். நீட்டினும் அவரது ஈன நிலையை உலகம் உணர்ந்து அருவருத்து வருகிறது.

ஈனம் தெரியாமல் வாழ்தல் அவம்.

தனது மனக் கோட்டத்தால் ஆன்ம நிலை அவலமடைந்திருத்தலை அறியாமல் கவலையின்றிக் களி கூர்ந்து வருகிற அந்த மனிதன் வாழ்வு மிகவும் இரங்கத் தக்கதாம். உயிரை நாசப்படுத்தி உடலை வளர்த்து உள்ளம் செருக்கித் திரிவது முழுமடமையாயுள்ளது. மூடம் ஒழிவது பீடை கழிவதாம்.

வஞ்சமும் சூதும் வகையாய்ப் புரிந்து பெரிய இராச தந்திரி என வெளியே பேர் பெற்று நின்றாலும் உள்ளே கள்ளமுள்ளவர் எள்ளலடைந்து இழிந்தே போதலால் அவரது நிலையும் புலையும் நேரே தெரியலாகும்.

"வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்." (குறள், 271)

வஞ்ச நெஞ்சன் புரிந்து வரும் கள்ளச் செயலை நோக்கிப் பூதங்கள் ஐந்தும் உள்ளே நின்று எள்ளிச் சிரிக்கும் என்னும் இது ஈண்டு உள்ளி உணரவுரியது. பிறரை வஞ்சித்துவிட்டோம் என்று நெஞ்சம் களிப்பவன் தனக்கு நேரும் பழியையும் அழிவையும் பாராமல் ஒழிவது பாச மயக்கமாயுள்ளது.

இவ்வுலகோர் தம்மை வென்று பொருள் கவர்தற்கு
இவர் இயற்றும் இடம்பாசாரம்
அவ்வுலகும் சென்றிடுமோ என்று நகும்
பூதங்கள் ஐந்தும் உள்ளே
கவ்வையுறும் உட்கவடு கண்டு நமன்
தமர் உமரைக் கணத்தில் ஆவி
தெவ்வர்எனக் கொடுபோய்அத் தீநரகில்
விடுத்தும் என்று சிந்திப்பாரால்.

(பிரபோதசந்திரோதயம்)

வஞ்சக் கரவுடையார் நரகமே தஞ்சமாய் நைந்து கிடப்பர் என இது உணர்த்தியுள்ளது. நெஞ்சுள் வஞ்சனை யுடையவர் வெளியே நல்லவர்போல் கரவாய் நடித்து வருதலால் பலர் அவரை நம்பி மோசம் போகின்றார்; அந்த மோசம் அவரை நாசமடையச் செய்து நீசம் புரிகின்றது.

வஞ்சகர் மிகுந்த பொழுது அந்த நாடு நஞ்சுதோய்ந்த ஏரிபோல் நவையுறுகின்றது; உறவே அந் நாட்டு வாழ்வு கேட்டையே விளைத்தலால் அது அஞ்சத்தக்கதாய் அவலமடைகின்றது.

"வஞ்சகராம் கானினிடை அடைந்தே நெஞ்சம்
வருந்தியுறு கண்வெயிலால் மாழாந்து அந்தோ!
தஞ்சம் என்பார் இன்றிஒரு பாவி நானே
தனித்தருள் நீர்த் தாகமுற்றேன் தயைசெய்வாயோ?

செஞ்சொல்மறை முடிவிளக்கே உண்மை ஞானத்
தேறலே முத்தொழில்செய் தேவர் தேவே
சஞ்சலம் நீத்து அருள்தணிகை மணியேசீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே!"

இறைவனை நோக்கி இராமலிங்கர் இவ்வாறு மறுகியிருக்கிறார். வஞ்சகர் நிறைந்த கானம் என இந்நாட்டை அவர் நொந்து கூறியிருப்பது நுனித்து நோக்கத் தக்கது.

உள்ளத்தைக் கள்ளமாக்கி எள்ளலடைந்து இழிந்து போகாதே; நல்ல நேர்மையை நயந்து வாழுக.

---

654. கள்ளம் கபடு கதுவாமல் யாண்டும்தன்
உள்ளமே சான்றாய் ஒழுகிவரின்—வெள்ளமென
இன்ப நலன்கள் இனிது பெருகியுன்
முன்பு வருமே முனைந்து. (௪)

இ—ள்

உள்ளத்தில் கள்ளம் கபடுகள் புகாமல் பாதுகாத்து மனமே சாட்சியாய் நீ ஒழுகி வரின் அரிய இன்ப நலன்கள் எல்லாம் உன் எதிரே வெள்ளம்போல் விரைந்து பெருகிவரும் என்க.

பொல்லாத புன்மைகளைப் புறம் ஒதுக்கி நல்ல தன்மைகளை வளர்த்து வரின் அது அரிய பெரிய ஆன்ம பரிபாலனமாய்த் தழைத்து வருகிறது. அகம் புனிதமாக யாவும் இனிமையாகிறது.

நேர்மையும் சத்தியமும் மனிதனைத் தெய்வமாக்கி மாண்புகள் விளைக்கின்றன. கரவும் கபடமும் அவனைப் பிசாசு ஆக்கிப் பீழைகள் புரிகின்றன. வஞ்ச நினைவால் நெஞ்சம் கெடுகிறது; கெடவே அந்த மனிதன் கெட்டவனாய்க் கேடுகள் செய்ய நேர்கின்றான். அதனால் அவலத் துயரங்கள் விளைகின்றன.

"சூதும் வாதும் வேதனை செய்யும்."

என ஔவையார் இவ்வாறு போதனை செய்துள்ளார்.

வஞ்சச் சூதுகள் ஒழிந்த பொழுதுதான் அந்த நெஞ்சம் நீதி நெறிகளில் நிலைத்து நேர்மையோடு நெடிது செல்லும். உள்ளம் நேரிய வழியில் ஒழுகின் அங்கே சீரிய மேன்மைகள் செழித்து வருகின்றன. கரவுறின் கடுங்கேடுகள் உறுகின்றன.

**கள்ளம்நீங்கிய அளவு உள்ளம் ஒளிசெய்து மிளிர்கின்றது.**

அறுகும் கரடும் நிறைந்த தரிசு நிலத்தில் நல்ல பயிர்கள் விளையா; அதுபோல் கரவும் கபடும் படிந்த உளத்தில் தருமப் பயிர்கள் முளையா என்க. விளைவு நிலையின் உளவு தெரிக.

நீ புண்ணியவானாகி உயர்ந்த இன்ப நலங்களை அடைய வேண்டின் முதலில் உன் உள்ளத்தைப் புனிதம் ஆக்கு; சித்த சுத்தியிலேதான் முத்தித் திரு என்றும் உவந்து நிற்கிறாள்.

நெஞ்சம் ஆகிய நிலத்தில் வஞ்சம் ஆகிய கொடிய கட்டை இல்லையானால் அங்கே தருமமாகிய கற்பகத் தரு செழித்து வளரும்; அதில் தெய்வீகமான இன்பக் கனி பழுத்து வரும் என ஆன்ம அனுபவமுடைய மேன்மையான ஒரு ஞானி தெளித்திருக்கிறார். ஞானமொழி வான ஒளியாய் வயங்கியுள்ளது.

"நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேர்அற அகழ்ந்து போக்கித் தூர்வைசெய்!"

என்று பட்டினத்து அடிகள் இப்படிப் பரிந்து போதித்துள்ளார். புனித போதனை நுணுகி உணர வுரியது.

வஞ்சம் படிந்தபோது அந்த நெஞ்சம் நஞ்சமாய் நாசமே தருகிறது. தரவே ஈசன் அருளை இழந்து அது நீசமடைந்து நிற்கிறது. நெஞ்சம் புனிதமுறின் ஈசன் நிலையமாயினிமையுறுகிறது.

"வஞ்சமிலார் நெஞ்சகத்தே மருவு முக்கண் மாமணியே!"

என இறைவனை இராமலிங்கர் இவ்வாறு துதித்திருக்கிறார்.

"வஞ்சகத்தில் ஒன்றானைத் துதிக்கைமிகத் திரண்டானை."

என்று விநாயகர் இப்படித் துதிக்கப் பட்டுள்ளார்.

வஞ்சகம் இருந்தால் அந்த நெஞ்சில் தெய்வத் திருவருள் சேராது என்பதை இவற்றால் உணர்ந்து கொள்ளுகிறோம். வஞ்சகன் சூதன் பொய்யன் கபடன் என மனிதன் இழிபழி அடைந்த பொழுது அழிதுயரங்களையே காணுகின்றான்.

நெஞ்சில் நேர்மை ஒன்று இருப்பின் அங்கே எல்லா நீர்மைகளும் நிறைந்து நிற்கின்றன. நேர்மையாளனை யாவரும் மதித்துப் போற்றுகின்றனர். அஞ்சாமை ஆண்மை வீரம் முதலிய மேன்மைகள் எல்லாம் நேர்மையுடையானிடமே நீர்மை

யோடு நிலவி நிற்கின்றன. அரிய பல நன்மைகள் அவனுக்கு உரிமையாய் வருகின்றன.

"கரதலா மலகம்போல் கருத்தியலும்
புறத்தியல்போல் காட்டு வார்க்கு
விரதம் மாதவம் பிறவும் வேண்டுமோ?
அவர்புகுதா வீடும் உண்டோ?"
(மெய்ஞ்ஞான விளக்கம்)

தன் உள்ளத்தில் நேர்மையுடையவர்க்கு விரதமும் தவமும் வேறு வேண்டியதில்லை; பேரின்ப வீடு அவர்க்கு நேரே உரிமையாம் என இது உணர்த்தியுள்ளது.

ஆமலகம்=நெல்லிக்கனி. உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உள்ளும் புறமும் ஒத்திருப்பர் என நேர்மையாளரை இங்கே குறித்திருப்பது கூர்மையோடு உய்த்துணரத் தக்கது.

"A man must really be what he seems or purports to be."
(Character)

"புறத்தே தோன்றுகிற படியே அகத்தே உண்மையாய் இருக்கவேண்டும்" என்னும் இது ஈண்டு எண்ணவுரியது. செம்மையான மனிதத்தன்மையை இது உண்மையாக உணர்த்தியுள்ளது. உள்ளம் கரவு ஒழியின் உயிர் உயர்வாய் ஒளி பெறுகிறது.

உள்ளமே சான்றாய் ஒழுகி வரின் என்றது நேர்மையின் நீர்மையைக் கூர்மையாக உணர்ந்து கொள்ள வந்தது.

தன் நெஞ்சையே சாட்சியாக நேர் நிறுத்தி யாண்டும் நெறியோடு ஒருவன் ஒழுகி வரின் அரிய பல மாட்சிகளை அவன் எளிதே அடைந்து கொள்ளுகிறான்.

இன்ப நலன்கள் வெள்ளம் என வரும்.

உள்ளத்தில் நேர்மையாளனுக்கு உளவாம் ஊதியங்களை இது உணர்த்தியுள்ளது. நேர்மை தெய்வத்தின் நீர்மை ஆதலால் அதனையுடையவன் தெய்வத் திருவருளைத் தனி உரிமையாக அடைந்து கொள்ளுகிறான்.

"நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்---ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க்கு என்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான்." (நல்வழி, 21)

நெஞ்சில் வஞ்சனை இல்லாதவர்க்கு எல்லாச் செல்வங்களை யும் திருமகள் உள்ளம் உவந்து அள்ளிக் கொடுப்பாள் என ஔவையார் இவ்வாறு அருளி யிருக்கிருர். வஞ்சம் ஒன்று இல்லையானல் எல்லாப் பாக்கியங்களும் அவனைத் தஞ்சமாக வந்து அடையும் என்பதை இதனல் அறிந்து கொள்ளுகிறேம்.

கள்ளம் ஒழிந்த பொழுது அந்த உள்ளம் புனிதமாய் உயர் கிறது; உயரவே உயர்ந்த தெய்வங்கள் உரிமையாய் உவந்து உதவிகள் புரிகின்றன. புரியவே அரிய பேறுகள் வருகின்றன.

உள்ளத்தில் கள்ளம் ஒழியின் உயரின்ப
வெள்ளத்தில் நின்ருன் அவன்.

இதனை நீ உள்ளத்தில் வைத்து ஒழுகி உயர்க.

---

655. வஞ்சம் உளம்வைத்து வாயினிக்கப் பேசுவார்
தஞ்சம் எனவரினும் சாரற்க—நஞ்செனவே
அஞ்சி அகல்க அகலாயேல் அல்லலெல்லாம்
மிஞ்சி எழும்பின் மிடைந்து. (ரு)

இ-ள்.

நெஞ்சில் வஞ்சனையுடையவர் நேரே இனியவார்த்தைகளைப் பேசி அன்பு காட்டிவரினும் அவரை அணுகாதே; நஞ்சம் என்று அஞ்சி விலகிவிடுக; விலகாயேல் அல்லல் பல அடைந்து அல மரலுறுவாய்; உள்ளதை உணர்ந்து உறுதி செய்து கொள்ளுக.

உருவத்தில் மனிதன் ஆயினும் உள்ளம் தீயதேல் அவன் கொடிய மிருகத்தினும் கடியபாம்பினும் கொடியவனுவன். புலி கரடி பாம்பு முதலியன எவ்வளவு கொடியன ஆயினும் கேடு களை எண்ணி ஆராய்ந்து குறிதப்பாமல் செய்யும் ஆற்றல் அவற் றினிடம் இல்லை. வஞ்சநெஞ்சன் நாசவேலைகளை நன்கு சூழ்ந்து நாடிநின்று எவ்வழியும் தப்பாதபடி செய்துவிடுவன் ஆதலால் அந்த நீசன் மிகவும் அஞ்சத்தக்கவன் என்க.

உள்ளத்தில் வஞ்சனையுடையவர் உரைசெயல்களில் அன் பும் பணிவுமுடையவர் போல் நன்கு நடிப்பர் ஆதலால் அந்த வஞ்சநிலைகளை நம்பலாகாது; நம்பினல் நாசம் நேர்ந்து விடும்.

கோவலன் மிகவும் நல்லவன்; பெருந்தன்மை யுடையவன்.

தன் செல்வநலங்களை இழந்து அல்லல் உழந்து மதுரையை அடைந்து மனைவியின் கால் சிலம்பை விலைப்படுத்த விழைந்து வீதியிடையே சென்றான். கனகன் என்னும் தட்டான் ஒருவன் கண்டான். அந்தச் சிலம்பை நல்ல விலைக்கு விற்றுத்தருவதாக நயமொழிபுகன்றான். பொன்னகை செய்வோன் பொய் நகை செய்து இன்னுரையாடவே கோவலன் அவனை நம்பினான். தனது அரிய அணியை அவனிடம் கொடுத்தான். அதனை வாங்கிக் கொண்டு போன அவ்வஞ்சன் அரசனிடம் போய்க் கோள் மூட்டினான்; அதனால் கோவலன் கொலையுண்டு மாண்டான். பின்பு உண்மை தெளிந்து அரசனும் உயிர்பதைத்து இறந்தான். அவலங்கள் பல விளைந்தன. ஒருவஞ்சகன் செய்த தீமையால் நாடும் நகரமும் பாடழிந்து பரிந்து நொந்தன.

நெஞ்சில் வஞ்சனையுடையவர் எவ்வளவு கொடியவர்! அவரால் நாட்டுக்கு எவ்வளவு கேடுகள்! என்பதனை அந்த வஞ்சகக் கொல்லனால் உலகம் நேரே உணர்ந்து நெடிது வருந்தியது.

அஞ்சி அகல்க.

என்றது வஞ்சனையாளரோடு பழகலாகாது; பழகினால் அழிவும் அல்லல்களும் விளையும் ஆதலால் அஞ்சி ஒதுங்குவது நலமாம்; ஆகவே வஞ்சனையைக் கடப்பதற்கு அது ஒரு வழியாய் வந்தது. வஞ்சகனை நஞ்சகமுடைய கொடிய பாம்பாகக் கருதி ஒழுகவேண்டும் என்பது கருத்து.

---

656. அன்பன் அடியன் அருகமைந்தேன் ஆதிமுதல்
இன்பமுறு நண்பின் இருங்குடியேன்—என்பனபோல்
வல்லபல சொல்லுவார் வஞ்சர் மருவினால்
அல்லலுறச் செய்வார் அறி. (௬)

இ—ள்

வஞ்சநெஞ்சர் உரிய அன்பர் போல் உறவாடுவர்; எளிய ஏவலர்போல் இதம்புரிவர்; பிரிய நண்பர் போல் இனிது பேசுவர்; இன்னவாறு பலவகையினும் நன்னயம் காட்டுவர்; நம்பித் தழுவினால் அழிகேடுகளைச் செய்து நழுவி விடுவர் என்க.

மனம் நேர்மையாயிருப்பின் அங்கே நல்ல நீர்மைகள் நிலவுகின்றன; அது மாறுபடின் வேறுபாடுகள் விரிகின்றன. அகத்

தில் உள்ள கரவு வஞ்சனைகளை மறைக்கப் புறத்தில்நல்லவர்போல் நடிக்க நேர்கின்றனர். நடிப்பு ஒரு படிப்பாய்ப் படிந்துள்ளது.

உள்ளத்தில் கள்ளம் படிந்த பொழுது அந்த மனிதன் எல்லா இழிவுகளில் பழகிவருகிருன்; வரவே இழிந்தவனாய்க் கழிந்து போகிருன்; போகவே ஈனங்களையாண்டும் துணிந்துசெய்கிருன்.

கள்ளன் திருடன் வஞ்சகன் பொய்யன் என்று சொன்ஞல் எந்த மனிதனும் சிந்தை நோகின்ருன். அவ்வாறு நோகின்றவன் அந்த இழி பழக்கங்களை விடாமல் தழுவி உழலுகிருன். மாறுபாடான இழிசெயல்களால் சீரழிவு நேர்வதை அறிந்தும் திருந்தி உயராமல் அழிந்து போவது அவலவாழ்வாய் முடிந்துள்ளது. அகம் பழுதுபடவே யாவும் பாழ்படுகின்றன.

மனச்செம்மை எவ்வழியும் நன்மையாம்.

மனக்கோட்டம் யாண்டும் தீமையாம்.

"மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு
வினைவேறு பட்டவர்பால் மேவும்--அனமே
மனம்ஒன்று சொல்ஒன்று வான்பொருளும் ஒன்றே
கனம்ஒன்று மேலவர்தம் கண்." (நீதிவெண்பா'75)

கீழோர் புலையையும் மேலோர் நிலையையும் இது விளக்கியுள்ளது. சொல்லும் செயலும் மாறுபட்டுப் புல்லர் புலையாடித் திரிதலால் அவர் இழி நிலையாளராய்ப் பழிபட நேர்ந்தனர்.

கரவு வஞ்சனைகளால் உள்ளம் பாழ்பட்டவர் எவ்வழியும் அல்லல்களையே புரிவர் ஆதலால் அவரை அணுகவிடின் அவகேடேயாம். இழிவு நெருங்கின் அழிவு நெருங்கும் என்க.

வஞ்சர் அல்லல் உறச் செய்வர்.

என்றது நெஞ்சு பாழான அவரை நெருங்காமல் மருங்கோடு ஒழுகவேண்டும் என உணர்த்தி நின்றது. தீயசேர்க்கையால் தீமையே விளையும் ஆதலால் சேமமாய் வாழ விரும்பினவர் தீயவரை யாதும் யாண்டும் சேரலாகாது.

"நல்லிணக்கம் அல்லது அல்லற்படுத்தும்."

என ஔவையார் இவ்வாறு அருளியுள்ளார். கெட்டசகவாசம் குட்டநோயினும் கொடியது. பொல்லாத புல்லரை அணு

காமல் நல்லவரை நாடி ஒழுகிவரின் நலம்பல விளைந்து வரும்.

---

657. வேம்பிற் கரும்பு விளையுமோ வீழ்ந்திழிந்த
தூம்பிற் சுவைநீர் துளும்புமோ—பாம்பின்வாய்
நஞ்சன்றி நல்லமிர்தம் நல்குமோ நல்லதுதீ
நெஞ்ச ரிடைவருமோ நேர். (எ)

இ—ள்

வேம்பில் கரும்பு விளையாது; இழிந்த அங்கணத்துள் இனிய சுவை நீர் எழாது; பாம்பின் வாய் நஞ்சை நல்குமே அன்று நல்ல அமிர்தத்தை நல்காது; அது போல் வஞ்சனை யுடைய தீய நெஞ்சரிடமிருந்து தீமை வருமே அன்றி நன்மை வராது; இந்த உண்மையை உணர்ந்து கொள்க என்பதாம்.

உள்ளம் புனிதம்ஆயபோதுஅந்த மனிதன் இனிமைசுரந்து திகழ்கின்றான். அது களங்கமா யிழிந்துபடின் அவன் கடையனாய்க் கசந்து படுகின்றான். மனமே எல்லா மகிமைகளுக்கும் மூலகாரணமாயுள்ளது. அதனை நலமாப் பேணிவரும் அளவு நல்ல பலன்கள் விளைந்து வருகின்றன. பிழை பட விடின் எவ் வழியும் வெவ்விய துயரங்களே விரிந்து நிறைகின்றன.

வஞ்ச நினைவுகளால் நெஞ்சைப் பாழாக்குகின்றவன் நஞ்சைக் குடித்தவனாய் நாசம் அடைகின்றான். ஒரு முறை பழகிய தீய வாசனையால் பிறவிகள்தோறும் துயரமடைய நேர்தலால் தீமை எவ்வளவு கொடியது! என்பது தெளிவாம்.

"கிளரும்எரி விடம்எழுதல் விழுதல் முதலாய
அளவிலரு நரகில்வரு நவைபலவும் அஞ்சின்
உளம்மொழிமெய் நெறிஒழுகி உறுபொருள் சிதைக்கும்
களவுவிழைவு ஒழிதல் கடனாக்கல் நனிநன்றே."

(சாந்திபுராணம்)

மனத்தில் கள்ளம் மருவினால் எரிவாய் நரகத்தில் விழுந்து அழுந்த நேரும் ஆதலால் வஞ்சகக் களவை ஒழித்து நெஞ்சம் மொழி மெய்களை நேர்மை செய்து சீர்மையோடு ஒழுகுங்கள் என இது உணர்த்தியுள்ளது.

களவி னாகிய காரறி வுள்ளன்மின்
விளைவில் வெவ்வினை வீவில் கதிகளுள்

உளைய உள்ளழித்து ஒன்றல வேதனை
வளைய வாங்கி வருத்தம் உறுக்குமே." (சூளாமணி)

களவு புரியின் அளவிடலரிய இழிதுயர்கள் வரும்; அதனை ஒழித்து வாழுங்கள் என்னும் இது ஈண்டு ஊன்றி உணரவுரியது.

"பீடில் செய்திகளால் களவில் பிறர்
வீடில் பல்பொருள் கொண்ட பயன்எனக்
கூடிக் காலொடு கைகளைப்பற்றி வைத்து
ஓடலின்றி உலையக் குறைக்குமே." (வளையாபதி)

வஞ்ச வினைகள் புரிந்து பிறரை ஏமாற்றிப் பொருளைக் கவர்ந்தவர் படுந்துயரங்களை இது விளக்கியுள்ளது. இன்னவாறு தனக்கு அல்லல் அவலங்களைத் தருகிற கரவை ஒருவன் உறவாக் கொள்ளுதல் எவ்வளவு மதியீனம்! பிறரை வஞ்சித்து விட்டதாகக் களித்து வருகிறவன் தன்னையே வஞ்சித்து அழி துயரங்களை விளைத்துக் கொள்ளுகிறான். விளைவுநிலை தெரியாமல் விழிமூடியுழல்வது வியப்பாயுள்ளது. வஞ்சம் ஏறிய அளவில் மனிதன் நஞ்சமாய் மாறுகிறான். அவனைக் கொடிய ஒரு நச்சுப் பாம்பாகக் கருதி விலகி உறுதி காண வேண்டும்.

"நெஞ்சத்தோர் அன்பின்றி நின்றும் நெடுமொழியால்
வஞ்சித்து வாழ்வார் வரக்கண்டால்---நஞ்சொத்த
நீரரென அஞ்சி நெறிக்கொள்க நேர்மையுறு
சீரரையே ஆர்வமுடன் சேர்."

பொல்லாத வஞ்சகரை அஞ்சி ஒதுங்கி நேர்மையான நல்ல நீர்மையாளரை நயந்து கொள்க என்னும் இதனை உணர்ந்து கொள்ளுக. இனிய நீரரோடு சேர்வது இன்பம் சார்வதாம்.

தனது நெஞ்சம் கரவாய் ஒருவன் வஞ்சிக்கப் புகின் அவனைப் பிறரும் வஞ்சிக்க நேர்கின்றனர். இவ்வாறு நெஞ்சக் கரவுகள் தொத்து வியாதிகள்போல் பெருகி விரிந்து மனிதசமுதாயத்தை மாசுபடுத்தி நீசம் புரிந்துள்ளன.

"Men were deceivers ever." (Shakespeare)

"மனிதர் என்றும் வஞ்சகர்களாயுள்ளனர்" என ஆங்கில மேதை இவ்வாறு உலக நிலையை நினைந்து உள்ளம் வருந்தி உரைத்திருக்கிறார். புல்லிய கரவால் மாந்தர் புன்மை தோய்ந்துள்ளனர்.

கபட வஞ்சனைகளைச் செய்வதிலேயே மக்கள் கண்ணும் கருத்துமாய்ப் பழகி யிருத்தலால் உண்மையான நல்ல நீர்மை யாளரைக் காண்பது உலகத்தில் மிகவும் அருமையாயுள்ளது.

"Deceitful shine, deceitful flow,
There's nothing true but Heaven." (Moore)

"எங்கும் வஞ்சமினுக்கு; யாண்டும் கபட ஓட்டம்; இந்த உலகத்தில் யாதும் உண்மையில்லை; பரலோகத்தில்தான் அது உள்ளது" எனத் தாமஸ்மூர் என்னும் ஆங்கிலப் பெரியார் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

பிழைபாடுகளைப் பழகி மனித சமுதாயம் இழிந்து போயுள்ளமையால் பொல்லாத உலகம் என நல்லோரால் இகழ்ந்து சொல்ல நேர்ந்தது. எவ்வழியும் வஞ்சனைகள் பெருகியுள்ளமையால் நீதிமான்கள் அஞ்சி வெறுத்துள்ளனர்.

வஞ்சநெஞ்சனை மாசழக்கனைப் பாவியை வழக்கில் லியைப்
பஞ்சதுட்டனைச் சாதுவேஎன்று பாடினும் கொடுப்பாரிலை;
பொன்செய் செஞ்சடைப் புண்ணியன்புக ழாரைப்பாடுமின் புலவீர்காள்!
நெஞ்சில் நோயறுத்துஞ்சுபோவதற்கு யாதும் ஐயுறவில்லையே.
(தேவாரம்)

சுந்தர மூர்த்தி சுவாமிகள் புலவர்களை நோக்கி இவ்வாறு பாடியிருக்கிறார். இழிந்த நிலைகளில் அழுந்தியுள்ள இழி சனங்களை நினைந்து அவர் பரிந்து வருந்தியுள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்ளுகிறோம். தீய கூட்டங்களைத் தொகுத்துச் சொல்லும் பொழுது வஞ்சநெஞ்சனை முதலில் குறித்திருக்கிறார். வஞ்சனை எவ்வளவு கொடியது! எத்துணை இழிந்தது! என்பது உய்த்துணர வந்தது. கள்ளத்தால் உள்ளத்தைப் பாழாக்காமல் நல்லவராய் உயர்ந்து கொள்பவரே எல்லா இன்ப நலங்களையும் அடைந்து கொள்ளுகின்றார். உறுதி யுணர்ந்து உய்தி யுறுக.

---

658. பச்சென் றடர்ந்த பசும்புல்லை மேற்கொண்டு
நச்சுநீர்ப் பாழ்ங்கூவல் நண்ணல்போல்—இச்சையுறப்
பேசி நகைத்துறவு பேணி நயவஞ்சர்
நாசமுறச் செய்வரே நாடு. (அ)

இ-ள்.

பசிய புல்லை மேலே மேவிப் படர்ந்து கீழே கொடிய நச்சு

நீரையுடைய பாழ்ங்கிணறு போல வெளியே இனியவர் போல் உறவு பூண்டு உள்ளே கரவாய் நயவஞ்சகர் தீமை செய்வர்; அவரை அஞ்சி அகலுக என்பதாம்.

வஞ்சத்தீமையை ஓர் உவமையால் நெஞ்சம் தெளிய இது உணர்த்துகின்றது. கரவு சூதுகளால் மனம் மலினமும் சலனமும் அடைகிறது. அடையவே பழிவழிகளிலேயே ஓடிப் பாழ்படுகின்றது. பாழ் வாழ்வு பாவச் சூழ்வாய் முடிகின்றது.

அகத்தில் வஞ்சனை புகுந்தபோது அது நஞ்சகமாய் மாறி நாசவேலைகளைச் செய்தலால்மிகவும் அஞ்சத்தக்கதாய் நேர்ந்தது.

உள்ளம் கெட்டபோது அந்த மனிதன் பொல்லாத மிருகமாய் அல்லல் புரிய நேர்கின்றான்; நேரவே யாரும் அவனை அஞ்சி அகலநேர்கின்றார். தீயவரைக் காணுவதும் தீதாகின்றது.

கள்ளம் கபடுகள் எல்லாம் வஞ்சகத்தின் விளைவுகளாய் வருகின்றன. நெஞ்சகமே எவற்றிற்கும் நிலைக்களமா யுள்ளது.

இனியவர் போல் இதமாக நடித்து ஏமாற்றுகின்றவர் நயவஞ்சகர் என நேர்ந்தார். பகையுள் உட்பகை கொடியது; அதுபோல் வஞ்சகத்துள் நயவஞ்சகம் மிகவும் கொடியதாம்.

இனிக்கப் பேசிக் குளிர்க்கச் சிரித்துக் கழுத்தை அறுத்து விடுவர் ஆதலால் நயவஞ்சகரை எவ்வழியும் அஞ்சி எச்சரிக்கையாயிருக்க வேண்டும். அவரை யாண்டும் நம்பலாகாது; நம்பினால் நாசம் புரிந்து விடுவர்.

வெளியே இனியவர் போல் காணப்படினும் வஞ்சநெஞ்சர் உள்ளே கொடியவராயிருப்பர் ஆதலால் நஞ்சு அனைய அவரை அணுகவிடின் நாசமும், குடிகேடும் மூசி விடும் என்க.

"முகம் பத்மதளாகாரம் வசஸ்சந்தந சீதளம்
ஹிருதக் கர்த்தரீஸமம் சாதிவிநயோ தூர்த்தலக்ஷணம்."

"முகம் தாமரை மலர்போல் மலர்ந்தும், வாய்மொழி சந்தனம் போல் குளிர்ந்தும், உடல் மிகுந்த பணிவு அமைந்தும் வெளியே காணப்படும் ஆயினும் வஞ்சருடைய நெஞ்சம் கொலைக் கருவியைப் போல் கொடியதாயிருக்கும்" என்னும் இந்த ஆரிய சுலோகம் இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது.

கத்தரிக்கோல் மெல்ல அணைப்பது போல் தழுவி இரண்டு துண்டாய் வெட்டித்தள்ளும்; அது போல் நயவஞ்சகர் இனியவர்போல் நெருங்கி அழிகேடுகள் செய்துவிடுவர் ஆதலால் அது அவர்க்கு உவமையாய் வந்தது.

"செங்கமலப் போதலர்ந்த செவ்விபோலும் வதனம்;
தங்குமொழி சந்தனம்போலும்;--பங்கிஎறி
கத்தரியைப் போலுமிளங் காரிகையே வஞ்சமனம்
குத்திரர்பால் மூன்று குணம்" (நீதிசாரம்)

வஞ்சகருடைய நிலைமையை இது நன்கு விளக்கியுள்ளது. இவ்வாறு செவ்வியர் போல் தோன்றி எவ்வழியும் அவர் கொடியராயிருத்தலால் அவரை யாதும் அணுக விடாமல் தம்மைப் பேணிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

நச்சுநீர்ப் பாழ்ங் கூவல்.

வஞ்ச நெஞ்சரை நம்பிநெருங்கினல் நாசம் நேரும் என்பதைத்தெளிவாகஉணர்த்தஇவ்வுவமானம்வந்தது.கூவல் = கிணறு.

காட்டில் ஒரு பாழ்ங்கிணறு; அதன்மேல் எங்கும் இனிய பசும்புல் நன்கு படர்ந்திருந்தது; உள்ளே நச்சுப்புழுக்கள்நிறைந்த அழுகல் நீர் கிடந்தது; அங்குமேயச் சென்ற ஆடு அந்தப் பசியபுல்லைக் கண்டது; காணவே ஆவலோடு விரைந்து போயது; கிணற்றுள் விழுந்தது; பதைத்து இறந்தது. வஞ்ச நெஞ்சரை நம்பி நெருங்கினல் இவ்வாறே அழிவு நேரும் ஆதலால் தெளிவோடு விலகி ஒழுகுக.

உரைசெயல்கள் வெளியே இனியன போலத் தோன்றினும் நயவஞ்சரது நெஞ்சம் கொடியதாயிருக்கும் ஆதலால் பசும்புல்லும், பாழ்ங்கிணறும் உவமைக் குறிப்புகளாய் நின்றன. நச்சுநீர் என்றது எண்ணங்களின் இழிகொடுமையைக் கண்ணும் கருத்தும் காண. உள்ளத்தில் வஞ்சனைகள் தோய்ந்த பொழுது அந்த மனிதன் நஞ்சமாய்நீண்டு நாசங்கள் செய்ய நேர்கிருன்.

வஞ்சகரினும் நய வஞ்சகர் மிகவும் கொடியர்; அவரை நெருங்க விடாமல் நிலை தெரிந்து ஒழுகுக.

"வஞ்சனைகள் செய்வாரோடு இணங்க வேண்டாம்"

என உலகநீதி இவ்வாறு உணர்த்தியுள்ளது.

நெஞ்சைப் புனிதமாப் பேணிக் கொள்ளுக.

659. கண்ணுக் கினிதாய்க் கவினெய்தி நின்றாலும்
உண்ணற்கின் னாதாய் உயிர்க்கேடு—பண்ணுகின்ற
எட்டிக் கனிபோல் இருந்தழிவே செய்குவார்
பட்டிமக்கள் ஓட்டல் பழி. (9)

இ-ள்.

எட்டிப் பழம் பார்க்க அழகாய் இருக்கும்; தின்றால் உயிர்க் கேடு செய்யும்; அதுபோல் உருவத்தோற்றத்தில் இனியராய்த் தோன்றினும் நெஞ்சில் வஞ்சமுடையவர் நஞ்சு போல் நாசமே செய்வர் என்க.

கவின் = அழகு. கண்ணைக் கவரும் வனப்பு கவின் என வந்தது. உள்ளம் கவியச் செய்வது என்னும் காரணமும் அமைந்தது. காட்சியின் கவர்ச்சி கருத நேர்ந்தது.

வெளியே நல்லவர்போல் தோன்றினும் உள்ளம் கரவாயுள்ளவர் பொல்லாத அல்லல்களையே புரிவர் ஆதலால் அவரை அணுகிப் பழகாமல் விலகி ஒழுகுவதே எவ்வழியும் இனிதாம். வெளி மினுக்கு விழி மயக்காய் இழி துயர்களை விளைத்து விடும்; ஆகவே அது மிகவும் அஞ்சத் தக்கதாய் நின்றது.

விளக்கின் ஒளியில் வீழ்ந்து விட்டில்கள் மடிவதுபோல் வஞ்சகர் வலையில் சிக்கி மாய்ந்தவர் பலர். இனியவர்போல் நடித்து இன்னாமைகளைச் செய்பவர் தீயவர் எவரினும் தீயராவர்.

பட்டிமக்கள் என்றது களவு வஞ்சனைகளையே பழகி யாண்டும் அழிதுயர்களைச் செய்யும் இழிநிலையாளரை. பட்டி = கரவு, கள்ளம். திருடர்களைப் பட்டிகள் என்பது குட்டநாட்டு வழக்கு.

அகப்பட்டி யாவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ். (குறள், 1074)

இதில் பட்டி சுட்டி நிற்கும் குறிப்பைக் கூர்ந்து நோக்குக. பட்டிகளைக் கயவர் கீழ்மக்கள் எனத் தேவர் சுட்டிக் காட்டியிருப்பதை இதில் நாம் உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம். புன்மை படிந்து அயலாரை வஞ்சிக்கும் இயல்பு பட்டி என வந்தது.

விளை புலன்களில் கரவாய்ப் புகுந்து பயிர் முதலியவற்றை மேயும் காலியைப் பட்டிமாடு என்பர். வேலியிட்டு எவ்வளவு

பாதுகாப்புக்களை செய்து வந்தாலும் கள்ளமாடு உள்ளேபுகுந்து கரவாய்க் கவர்ந்து தின்னும்; அதுபோல் வஞ்சகரும் சமையம் பார்த்து உள்ளம் துணிந்து கள்ளம்புரிவர் ஆதலால் அவர் பட்டி என நேர்ந்தார்.

"தடுக்குநர்க்கு அடங்காது இடுக்கண் செய்யும்
பட்டி அஞ்சினுக்கு அஞ்சி." (மருதூர், மும்மணி 10)

"நோதக்க செய்யும் சிறுபட்டி" (குறிஞ்சிக்கலி, 15)

பட்டியின் செயல் இயல்களை இவை சுட்டிக் காட்டியுள்ளன.

கள்ளம் படிந்த நெஞ்சர் பிறர் நொந்துபடுமாறு அல்லல் புரிவர் ஆதலால் அவரைச் சேரவிடுவது தீரா இடும்பையாம்.

பட்டிமக்கள் எட்டிக்கனி. என்றது வெளிமினுக்கையும் உள்ளக் கள்ளத்தையும் உய்த்துணர்ந்து உறுதி காண வந்தது.

உள்ளே நஞ்சையுடைய எட்டிக்கனி வெளியே அழகாய்த் தோன்றும்; அத் தோற்றத்தில் மயங்கி அதனை விரும்பி உண்டால் உயிர்க் கேடு விளையும். நெஞ்சில் கரவுடைய வஞ்சகரும் அவ்வாறே அழிவு செய்வர் ஆதலால் அப் பழிகேடரை அறவே ஒழியவிட வேண்டும் என்க.

பட்டி மாடெனத் திரிதரு மடவார்
  பாழ்ங்குழிக்குள் வீழ்ந்து ஆழ்ந்திளைக் கின்றேன்
தட்டி லார்புகழ் தணிகையை அடையேன்
  சம்பு என்னும்ஓர் தருவொளிர் கனியே!
ஒட்டி லேன்நினை உளத்திடை நினையேன்
  உதவு றாதுநச் சுறுமரம் ஆனேன்
எட்டி என்முனம் இனிப்புறும் அந்தோ
  என்செய் வான்பிறந் தேன்எளி யேனே. (அருட்பா)

பட்டியும் எட்டியும் இதில் ஒட்டி வந்திருத்தலறிக.

மனத்தில் கரவு படிந்தவுடன் மனிதன் கொடியனாய் இழிந்துபடுகிறான். வஞ்ச நெஞ்சனுடைய மொழிகளும் செயல்களும் தீய வழிகளிலேயே செல்லும் ஆதலால் நன்மைகளை இழந்து பழி பாவங்களையே அடைகிறான்.

"He that hath a froward heart findeth no good." (Bible)

"மனம் மாறுபட்டவன் நல்லதைக் காணான்" எனச் சால

மன் என்பவர் இவ்வாறு கூறியுள்ளார். உள்ளம் பிழைபடின் அந்த உயிர் வாழ்வு அழி துயரங்களேயே அடைந்து அலமரலுறு கின்றது. பிழையாளர் பீழைகளேயே பெருக்கி அழிகின்ருர்.

இழிந்த வஞ்சனைகளால் தம் நெஞ்சத்தை நீசமாக்கி வாழ்வைப் பாழாக்கிவிடுதலால் வஞ்சனையாளர் தம்மையே கொல்லும் பொல்லாத கொலையாளராய்ப் புலையாடி நிற்கிருர்.

களவு வஞ்சனை காமம்என்று இவைஎலாம் காட்டும்
அளவு மாயையிங் காரெனக் கமைத்தனர் ஐயா!
உளவி லேயெனக் குள்ளவாறு உணர்த்தின் உன்அடிமை
வளரு மாமதி போல்மதி தளர்வின்றி வாழ்வேன்.

(தாயுமானவர்)

தூய பரநிலையை அடைய ஒட்டாதபடி களவு வஞ்சனைகள் மாயை மயக்கங்களாய் மருவியுள்ளன; அவற்றை ஒழித்து உய்தி பெறவேண்டும் எனத் தாயுமானவர் இவ்வாறு வாய் மலர்ந்துள்ளார். புலை ஒழிந்தவர் நிலை உயர்ந்து திகழ்கின்ருர்.

---

660. கள்ளமிலா உள்ளமே காணும் கதிநலத்தைக்
கள்ளமலி யுள்ளம் கடையாகி—எள்ளலொடு
பாவம் பழிதுயரே பார்க்கும் அழிதொடர்பை
ஓவல் ஒழிக வுடன். (ம)

இ-ள்.

கள்ளம் இல்லாத உள்ளமே உயர்ந்த கதிநலங்களைக் காணும்; கள்ளம் உடையது எள்ளலடைந்து இழிதுயரங்களேயே எய்தும்; அழிகேடுடைய அதனை ஒழிய விடுக என்பதாம்.

நல்ல சிந்தனைகள் அமுதத்துளிகள் போல் இனிமை சுரந்து மனிதனுக்கு மகிமை புரிந்து வருகின்றன. தீய எண்ணங்கள் கொடிய நஞ்சுகளாய் யாண்டும் அழிதுயரங்களையே விளைத்து அடுகின்றன. உள்ளம் பிழைபட ஊனங்கள் விளைகின்றன.

கரவு வஞ்சனைகளால் நெஞ்சம் நீசமாய் நாசமடைகிறது. ஆகவே நீசன் நாசன் என மனிதன் நிலையழிந்து ஒழிகின்ருன்.

தீய நினைவுகளால் மனம் மாசுபடிந்த பொழுது மனிதன் தீயவனாய் இழிந்து படுகிருன்; படவே யாதொரு நன்மையும் அடையாமல் அவன் அநியாயமாய் அழிந்தே போகிருன்.

பிறரை வஞ்சிப்பதாக எண்ணிக் கபடவேலைகளைச் செய்து வருபவன் தான் இழிந்து அழிந்து போவதை அறியாமலிருப்பது அதிசய மாயையாயுள்ளது. நல்ல அறிவுடைய மனிதப் பிறவியை அடைந்துவந்தும் பொல்லாத புலைகளைப் பழகிப் புலையாடி ஒழிந்துபோவது தன்னையே கொல்லும் தற்கொலையாய் முடிந்து நிற்கிறது. தீய வஞ்சம் மாய நஞ்சமாய் மடித்து வருகிறது.

நேர்மையான நீர்மைகளே மனிதனுக்குச் சீர்மைகளைத் தருகின்றன; திவ்விய மகிமைகளை எங்கும் நன்கு அருளுகின்றன.

நெஞ்சில் வஞ்சம் படிந்தால் அவன் பஞ்சையாய்ப் பாழ்படுகின்றான்; வஞ்சனை படியாதபொழுது சிறந்த ஆண்மையாளனாய் உயர்ந்து திகழ்கின்றான்; யாண்டும் அவன் நிறைந்த மேன்மைகளை எய்தி மகிழ்கின்றான்.

வஞ்சனை தீவினை மறந்த மாதவர்
நெஞ்செனத் தெளிந்தன நீரம்; நீர்தொறும்
பஞ்செனச் சிவக்குமென் பாதப் பேதையர்
அஞ்சனக் கண்ணெனப் பிறழ்ந்த ஆடல்மீன்.

(இராமாயணம், கார்காலப் படலம், 113)

கார்காலம் நீங்கிக் குளிர்காலம் வந்தபொழுது நீர் நிலைகள் தெளிந்திருந்த நிலையை இது உணர்த்தியுள்ளது. குளம் தடாகம் முதலியவைகளில் பெருகியிருந்த சலம் களங்கமின்றித் தெளிந்திருந்தது என்பதைத் தெளிவாக விளக்க இதில் வந்துள்ள உவமையை விழியூன்றி நோக்கவேண்டும்.

பளிங்குபோல நீர் தெளிவாயிருந்தது என்று சொல்லியிருக்கலாம்; அங்ஙனம் சொல்லவில்லை; உயர்ந்த தவசிகளுடைய உள்ளம் போலத் தெளிந்திருந்தது என்று மொழிந்திருக்கிறார்.

வஞ்சனை தீவினை மறந்த மாதவர் நெஞ்சுஎனத் தெளிந்ததுநீரம்.

என்றது நினைந்து நினைந்து சிந்திக்கத்தக்கது. மனிதன் மகான் ஆகவேண்டுமானால் அவன் உள்ளம் எப்படி இருக்க வேண்டும் என்பதை இதில் உய்த்துணர்ந்து கொள்ளுகின்றோம். நெஞ்சில் வஞ்சனை நீங்கியபோது மனிதன் புனிதனாய் ஓங்குகின்றான். மாசு கழிந்தவன் தேசு மிகுந்து திகழ்கின்றான்.

கலங்கிய நீரில் யாதும் தோன்றாது; அது தெளிந்தபோது எல்லாம் தன்னுள் தெளிவாய்த் தோன்றும்; வஞ்சனையால் நெஞ்சம் மலினமடைந்துள்ளபோது உறுதி நலங்கள் ஒன்றும் தோன்றா; வஞ்சனை ஒழிந்து அது தெளிந்தபொழுது யாவும் எளிதே விளங்கும். எல்லா இன்ப நலங்களும் அங்கே விளையும்.

தன் நெஞ்சைப் பழுதுபடுத்தித் தன்னைப் பாழாக்கும் வஞ்சனையை அறவே ஒழிக்க வேண்டும்; அவ்வாறு ஒழிப்பின் அந்த மனிதன் உயர்ந்த கதிநலங்களை அடைந்து கொள்ளுகிறான்.

வஞ்சமனத்து அஞ்சொடுக்கி வைகலும்நற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளும் நம்பிஎனவே நினையும்
பஞ்சவரில் பார்த்தனுக்குப் பாசுபதம் ஈந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவும் கோளிலிஎம் பெருமானே."
(தேவாரம்)

தன்னை வஞ்சித்து வந்த மனத்தை அடக்கியதால் அருச்சுனனுக்கு ஈசன் அருள் கிடைத்தது என இப் பாசுரம் உணர்த்தியுள்ளது.

வஞ்சமின்றி வணங்குமின் வைகலும்;
வெஞ்சொலின்றி விலகுமின் வீடற;
நைஞ்சு நைஞ்சுநின்று உள்குளிர் வார்க்கெலாம்
அஞ்சல் என்றிடும் ஆனைக்கா வண்ணலே. (தேவாரம்)

வஞ்சமில்லாதவர்க்கு ஆண்டவன் அருள் உண்டாம்; அவர் நீண்ட பேரின்ப நலன்களை எய்துவர் என இது குறித்துள்ளது.

"வஞ்சகர்க்கு அரியர் போலும் மருவினோர்க்கு எளியர் போலும்
குஞ்சரத்து உரியர் போலும் கூற்றினைக் குமைப்பர் போலும்
விஞ்சையர் இரிய அன்று வேலைவாய் வந்தெழுந்த
நஞ்சணி மிடற்றர் போலும் நாக வீச்சரவ னாரே." (தேவாரம்)

ஈசன் வஞ்சகர்க்கு அரியன்; மருவினார்க்கு எளியன் எனத் திருநாவுக்கரசர் இவ்வாறு அருளியுள்ளார். வஞ்சத்தீமை ஒழிந்து நெஞ்சம் தூய்மையடையின் தூய பரம்பொருளை நேரே அவன் அடைந்து கொள்ளுகிறான்.

உள்ளத்தைப் புனிதம் ஆக்கி உயர்கதி யுறுக.

## இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

நெஞ்சம் கரவுறின் வஞ்சன் என வசை வரும்.
நேர்மை சிதைந்து சீர்மை அழியும்.
உள்ளம் இழிந்து ஊனம் அடையும்.
கள்ளம் ஒழியின் உள்ளம் தெளியும்.
வஞ்சனையாளர் நஞ்சென உரியவர்.
நம்பி நெருங்கின் நாசங்கள் விளையும்.
பாம்பினும் கொடிய தீம்புகள் புரிவர்.
உணராது அணுகின் உயிர்க்கேடு நேரும்.
அணுகாது அகலுதல் யாண்டும் நல்லது.
கரவு நீங்கின் கதிநலம் ஓங்கும்.

௬௬-வது கரவு முற்றிற்று.

# அறுபத்தேழாம் அதிகாரம்.

## கொடுமை.

அஃதாவது இனிய நீர்மையின்றிக் கொடியராய் நிற்பது. நெடிய துயரங்களை விளைத்து மனித வாழ்வைப் பாழ்படுத்தும் ஆகலால் அதனை ஒழித்து ஒழுக வேண்டும் என இது உணர்த்துகின்றது. உள்ளக் கரவுபோல் கொடுமை எள்ளித் தள்ளத்தக்கது; ஆகவே அதன் பின் இது வைக்கப்பட்டது.

661. நெஞ்சில் இரக்கமின்றி நீசக் கொடுமைகளை
அஞ்சாமல் செய்யும் அழிகேடர்—நஞ்சம்
உருவெடுத் துள்ள துபோல் உள்ளார் அவரை
அருவருத்து நீக்கல் அறம். (க)

இ-ள்

நெஞ்சில் இரக்கமில்லாமல் நீசமான கொடுமைகளை அஞ்சாமல் செய்பவர் அழிகேடர் ஆகின்றார்; நஞ்சம் உருவு எடுத்துள்ளது போல் கருவெடுத்து நேரே அவர் பெருகி நிற்கின்றார்; அவரை அருவருத்து நீக்குவது அறமாம் என்க.

இது கொடுமையின் கேடுகளை உணர்த்துகின்றது.

இனிய நீர்மை மனிதனைத் தெய்வம் ஆக்குகிறது; இரக்கமற்ற தன்மை அரக்கனாக்கி அவலப் படுத்துகிறது. அருள் அன்பு இரக்கம் என்னும் பண்புகள் எவ்வுயிர்க்கும் இதமாய் இன்ப நலங்களை அருளி வருதலால் அவை திவ்விய மகிமைகள் தோய்ந்துள்ளன. தயவு தாய்மையாய்த் தழைத்து வருகிறது.

உள்ளத்தைப் பண்படுத்தி உயிர்களை உயர்ந்த கதிகளில் உய்த்தருளுகிற இந்த உத்தம இயல்புகளை இழந்தபொழுது மனிதன் இழிந்து ஈன நிலையில் கழிந்து ஒழிகின்றான்.

இனிய பண்புகளை எய்தியிருக்கும் அளவு தெய்வீக இன்பங்களை எய்துகிறான்; இழந்துவிடின் வெய்ய துயரங்கள் வளர்ந்து வருகின்றன; வீயாத அல்லல்கள் விரிந்து நிற்கின்றன.

இரக்கம் என்பது உள்ளத்தின் உருக்கம் ஆதலால் அதனை உடையவன் ஒளிமிகுந்து உயர்ந்து போகிறான். எவ்வுயிர்க்கும்

இரங்கி யருளுகிறவன் தன்னுயிர்க்குப் பெரிய இன்பச் சுரங்கத்தைச் செய்து கொள்ளுகிருன். ஆகவே அவன் அரிய ஒரு பாக்கியவாளுய்ப் பெருமகிமை பெற்றுள்ளான். உண்மை மருவிய உள்ளத்தில் இரக்கம் பெருக்கமாயுள்ளது. எல்லாருக்கும் இரங்கியருள வுரியவன் இறைவன் ஒருவனே. அவனது இரக்கத்தைப் பெறவேண்டுமாயின் மனிதனும் இரக்கமுள்ளவனயிருக்கவேண்டும்.

"Be merciful unto me, O Lord; for I cry unto thee daily." (Bible)

"இறைவ! எனக்கு இரங்கியருள்; நாளும் உன்னை நோக்கி முறையிடுகிறேன்" என்னும் இது இங்கே அறிய வுரியது. தேவ இரக்கம் சீவ இரக்கத்தின் உறவாயுள்ளது. ஒருவன் சீவர்களுக்கு இரங்கி வரின் அவனை நோக்கித் தேவ கருணை விரைந்து வருகிறது. உரிய தகுதி அரிய உரிமையை அடைந்துகொள்கிறது.

தெய்வ சம்பத்தாகிய இத்தகைய இரக்கத்தை இழந்து விடின் வெய்ய துன்பங்கள் பல விளைந்து நையவருத்தும். அருளை மறந்த மருளினுலேதான் அல்லல்கள் எல்லாம் அடர்ந்து தொடர்ந்து யாண்டும் படர்ந்து வந்திருக்கின்றன.

அன்பு கனிய இன்பம் கனிகிறது; அது மறையத் துன்பம் விளைகிறது. வினையின் விளைவு வீயாது நின்று விளிவு செய்கிறது.

நஞ்சம் உருவு எடுத்து உள்ளது போல் உள்ளார்.

என்றது பிறவுயிர்களுக்கு இடர்கள் இழைக்கும் படர்களை.

கொடியவிடம் நெடிய வடிவங்கள்கொண்டு வந்ததுபோல் தீம்பர் உலகில் திரண்டு திரிகின்றனர். பாம்பு புலிகளினும் அத் தீம்பர் மிகவும் தீயவர் ஆதலால் அவரை அருவருத்து அயலே ஒதுங்கிப் போவது யாண்டும் நல்லது.

கெடுப்பது ஒழி. (1)

கெடுவது செய்யின் விடுவது கருமம். (2)

பிறர்க்கு யாதொரு கேடும் செய்யாதே; அவ்வாறு கேடு செய்பவர் எவராயினும் அவரை அணுகாதே என ஔவையார் இவ்வாறு அருளியுள்ளார். நன்மை செய்யவே இந்தப் பிறவி வந்துள்ளது; இதன் தன்மையை உணர்ந்து தகைமை புரிக.

662. உள்ளம் கொடியார் உலகிற்கோர் நஞ்சாகி
எள்ளும் இடரே இயற்றுவார்—வெள்ளம்
படிந்த விடம்போல் படியி லவர்காண்
கடிந்து விடுக கடிது. (உ)

இ—ள்

உள்ளம் கொடியவர் உலகத்திற்கு ஓர் நஞ்சாய் அல்லல்களைச் செய்வர்; நீரில் படிந்த விடம் போல் நிலத்தில் அவர் கலந்துள்ளார்; அந்தக் கொடியரைக் கடிது கடிந்து விடுக என்க.

மனத்தில் கொடுமை மண்டிய பொழுது மனிதன் கொடியவன் ஆகின்றான். நெடிய பாதகங்கள் எல்லாம் கொடுமையால் விளைந்து வருகின்றன. நெஞ்சம் தடித்து நெடுந்தீமைகளைச் செய்கின்றவன் கொடிய வன விலங்குகள் போல் அஞ்சத் தக்கவனாய் அவலம் அடைகின்றான். புலி கரடி கடுவாய் முதலிய மிருகங்கள் காடுகளில் ஒதுங்கி வாழ்கின்றன. ஈன ஊன்களை உண்டு இயல்பாகவே இடர்கள் புரிவன ஆதலால் மான மனிதன் அவற்றைக் காண நேர்ந்தபோது பயந்து ஒதுங்குகிறான். பயங்கரமுடைய அவையும் மனிதனைக் கண்டு பயப்படுகின்றன. செயல்கள் கொடுமையாகவே உயர்வுகள் குன்றுகின்றன; அச்சமும் திகிலும் மண்டி யாண்டும் அவலங்கள் உறுகின்றன.

உள்ளம் இரக்கமாய் உருகிய அளவு அந்த உயிர் பரகதியை நோக்கி உயர்ந்து செல்லுகின்றது. கொடுமையாய்க் கடுமை படிந்த அளவு இழிந்த நிலையில் அழுந்தி ஈனமடைந்து போகிறது.

"கல்லேனும் ஐயஒரு காலத்தில் உருகும் என்
கல் நெஞ்சம் உருக இலையே!
கருணைக்கு இணங்காத வன்மையையும் நான்முகன்
கற்பிக்க ஒரு கடவுளோ?" (தாயுமானவர்)

என் உள்ளம் உருக வில்லையே! என்று இறைவனை நோக்கித் தாயுமானவர் இப்படி உருகி அழுதிருக்கிறார். கருணை வள்ளலான அவர் இவ்வாறு மறுகியிருத்தலால் உருக்கம் எவ்வளவு மகிமையுடையது! என்பதை ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்ளுகிறோம்.

நெஞ்சம் உருக உருக உயிர் பரமாய் உயர்கின்றது. அது இறுக இறுகக் கடையாய் இழிகின்றது. உயர்ந்த மனிதப்

பிறவியை அடைந்தும் உய்திபெருமல் ஒழிவது வெய்ய துயரமாய் முடிகின்றது. முடிவு தெரியாமல் களிப்பது மூடமாய் நின்றது.

உள்ளத்தின் கொடுமையால் மனிதன் எள்ளல் இழிவு களையே அடைகின்ருன். நெஞ்சத் தடிப்பு நெடுந் தடியனுக்கி நீசங்களையே விளைத்து விடுகின்றது. பொல்லாத கொடியவன் என்று ஒருவன் சொல்லப்படுவான் ஆனல் உள்ளத்தின் கொடு மையால் அந்த இழி நிலையை அவன் அடைந்திருக்கிருன் என்று தெளியப்படுகின்றது. உள்ளம் கொடுமையாய்க் கெடவே கோடியவன், கெட்டவன், கயவன், கீழ்மகன் என்று எள்ளப் படுகின்ருன். வன்னெஞ்சம் வசைகளை வளர்த்து வருகின்றது.

வைகலும் நீருள் கிடப்பினும் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும்---அஃதேபோல்
வைகலும் நல்லறம் கேட்பினும் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. (அறநெறிச்சாரம்)

கீழ்மக்கள் உள்ளம் கல்லினும் வலியதாய்க் கடுமை மண்டி யிருக்கும்; நல்ல தரும நீதிகளை எவ்வளவு சொன்னலும் அவர் நெஞ்சம் இரங்கி இதம் செய்யார் என இது உணர்த்தியுள்ளது.

கொடியனுய் இழிந்து போகாதே; இரக்கமுடையனுய் உயர்ந்து கொள்க. பரிவும் பண்பும் பரமஇன்பம் அருளுகின்றன.

---

663. சாந்தகுண மாந்தர் தனிஒதுங்கி வாழ்ந்தாலும்
பாந்தளனை யார்துயரம் பண்ணுவார்—நேர்ந்த
வனத்தமர்ந்த மானினத்தை வல்வேடர் சென்று
சினத்தடுவர் அந்தோ செயிர்த்து. (ங)

இ—ள்

வனத்தில் மறைந்து வாழுகிற மான் இனங்களை வேடர் வலிந்து சினந்து வதைத்தல்போல் அமைதியான நல்ல குண முள்ள மேலோர்களைப் பொல்லாத கொடியவர் வீணே புகுந்து அல்லல் புரிந்து வருத்துவர் என்பதாம்.

உள்ளம் கெட்டதாயின் மனிதன் கொடிய மிருகத்தினும் நெடிது தீயவனுகிவிடுகிருன். எவ்வழியும் அல்லல்களையே செய்ய நேர்கின்ருன். புலி கரடி முதலிய தீய விலங்குகளும்

தமக்கு இடர் நேர்ந்தபோதுதான் ஆங்காரமாய்ச் சினந்து பாய்ந்து தீங்குகள் புரிகின்றன. மனித வடிவிலுள்ள தீயவர்கள் தமக்கு யாதொரு இடரையும் எண்ணாதவர்க்கும் வீணே இன்னல் புரிந்து இடர்கள் செய்கின்றனர்.

கொடியவரைப் பாந்தள் என்றது அவரது நிலைமைகளை நினைந்துணர வந்தது. பாந்தள் = பாம்பு. கொடிய நஞ்சுடைய பாம்புகளுள் நெடியது பாந்தள் என நேர்ந்தது.

எந்தவகையிலும் பிறருக்கு அச்சத்தையும் அல்லலையும் தருவது ஆதலால் கொடியவிடப் பாம்பு எனக் கொடியவர் முடிவாகி நின்றனர். நெஞ்சம் கெடவே உரை செயல்யாவும் நஞ்சமாகின்றன. அந்த நாசகாலர் நீச நிலையமாய் நிலவி நிற்கின்றார்.

ஈக்கு விடம் தலையில் எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே---நோக்கரிய
பைங்கண்அர வுக்குவிடம் பல்அளவே; துர்ச்சனருக்கு
அங்கமுழு தும்விடமே யாம். (நீதிவெண்பா, 18)

தேன் ஈக்கு தலையில் விடம்; தேளுக்கு வாலில்விடம்; பாம்புக்குப் பல்லில் விடம்; துர்ச்சனர்க்கோ உடம்பு முழுவதும் விடமாம் என இது உணர்த்தியுள்ளது. கொடிய துட்டர் தீமையே வடிவமாயிருப்பர்; அவரைக் கண்டாலும், அவர் பேச்சைக் கேட்டாலும் அல்லலேயாம் என்பது அறிய வந்தது. நெஞ்சம் கொடுமையாயபோது அவர் நஞ்சின் பிண்டமாய் நாசங்களையே செய்கின்றார்; அந்த நீசங்களை அஞ்சி அகல வேண்டும். நவையே கருதி நாசமே புரிதலால் நீசப் பாம்பினும் தீயராய் நிமிர்ந்து கொடியவர் நெடிய நீசராயினர்.

"துர்ச்சனரும் பாம்பும் துலைஒக்கினும் பாம்பு
துர்ச்சனரை ஒக்குமோ தோகையே---துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலும் இணங்காரே பாம்புமணி
மந்திரத்தால் ஆமே வசம்."

துர்ச்சனர் பாம்பினும் தீயவர்; யாண்டும் தீம்பே புரிவர்; எதற்கும்அவர் கட்டுப்பட்டு நில்லார் எனத் துட்டரைக் குறித்து வந்துள்ள இது ஈண்டு உய்த்துணர வுரியது.

பாம்பு மிதித்தால் கடிக்கும்; தேள் தொட்டால் கொட்டும்; துட்டர் யாதொரு காரணமுமில்லாமலே வீணே வலிந்து

போய்ப் பிறர்க்கு அல்லல் செய்வர் ஆதலால் பாம்பு முதலிய கொடிய பிராணிகளினும் தீயவர் மிகவும் கொடியராயுள்ளனர்.

நெஞ்சம் கொடுமையாய்த் தீமையே செய்யும் தீம்பர் யாதொருவகையிலும் நல்லது நாடார்; எவ்வழியும் அல்லலே செய்வர்; பொல்லாத அந்தப் புலையாளர் எந்த நிலையிலும் திருந்தாமல் ஈனமே புரிதலால் அவரைப் பார்ப்பதும் பழிகேடேயாம்.

"பாம்பு கடித்தால் அதுவும் நீக்க வல்லோம்;
பசாசு அறைந்தால் நீறிட்டுப் பார்க்கவல்லோம்;
வேம்பு கசப்புஅறக் கறியும் ஆக்க வல்லோம்;
விறல்வேழத்து அதிகமதம் தணிக்க வல்லோம்;
சாம்பொழுது திடமாகப் பேச வல்லோம்;
தரணியின்மேல் கல்லாதது ஒன்றுமில்லை;
தீம்பரை நல்லவராக்கிக் குணமுண்டாக்கும்
திறம் ஒன்றும் அறியாமல் திகைக்கின்றோமே."

தீயவர் யாதும் எவ்வகையிலும் திருந்தாமல் தீமையிலேயே செருக்கித் தீங்கு புரிந்து திரிவார் என இது உணர்த்தியுள்ளது.

உள்ளம் கொடுமையாய்ப் பாழ்பட்டபொழுது இப்படிப் படுபாதகனாய் நிமிர்ந்து மனிதன் இழிந்து அழிந்து போகிறான்.

நெஞ்சில் கொடுமை வளர்ந்து வரவே அங்கே இரக்கம் அன்பு முதலிய நல்ல பண்புகள் ஒழிந்து போகின்றன; பொல்லாத புலைகளே தலையெடுத்து நிற்கின்றன. தீயபழக்கங்களில் பழகிவந்துள்ள அவ்வளர்ச்சி தீமைகளைத் துணிந்து செய்கின்றது. நல்லோர் அஞ்சி நடுங்குகின்ற தீமையைப் பொல்லாதவர் அஞ்சாமல் செய்வது நெஞ்சம் படிந்துள்ள கொடுமையினாலேயாம். கொடிய பழக்கத்தினாலேயே மனிதன் கொடியவனாய் மாறி நெடிய நீசங்களைச் செய்கின்றான்.

"There is a method in man's wickedness,
It grows up by degrees." (Beaumont)

"மனிதனுடைய தீமையும் படிமுறையே வளர்ந்து வருகிறது" என்னும் இது இங்கே அறியவுரியது.

கொடுமையைப் பழகிக் கொடியவனாயிழிந்து போகாமல் நன்மையைப் பழகி யாண்டும் நல்லவனாய் உயர்ந்து கொள்ளுக.

அன்புநலம் என்றும் அமுதாம்; கொடுமையோ
துன்ப விடமாம் தொடல்.

துன்பநிலை ஒருவி இன்பநலம் பெறுக.

---

664. கொடுமையுளம் கொண்டான் கோடி மிகினும்
கடுமொழியும் கையிழிவே காட்டும்—நெடுமரமாய்
நின்று கனிநீழல் நீட்டினும் எட்டிதான்
நன்று கனிவாமோ நாடு. (ச)

இ-ள்

எட்டிமரம் நெடிது வளர்ந்து நிழல் விரிந்து கனி சொரியினும் தீமை மிகுந்தே நிற்கும்; அதுபோல் உள்ளத்தில் கொடுமையுடையவன் வெளியே நல்ல செல்வங்களை எய்தியிருந்தாலும் சொல்லும் செயலும் இழிந்து அல்லலாகவே யிருக்கும் என்க.

இனிய பண்பு மனிதனைத் தனி நிலையில் உயர்த்துகிறது. அருள் நீர்மை தோய்ந்த அளவு பெரு மேன்மைகள் வாய்ந்து வருகின்றன. உயர்ந்த சான்றோர் சிறந்தமேலோர் என விளங்கி நிற்பவர் எவரும் அன்பான குண நலங்களாலேயே எங்கும் இன்ப நிலையமாய் உயர்ந்து வந்துள்ளனர்.

தண்ணளி எவ்வழியும் இதங்களையே செய்து வருதலால் அதனையுடையவர் புண்ணிய சீலர்களாய்ப் பொலிந்து விளங்குகின்றனர். எவரையும் உத்தம நிலையில் உயர்த்துகின்ற இத்தகைய நல்ல நீர்மையை இழந்து பொல்லாத புன்மைகளைப் பழகி வருபவர் என்றும் புல்லியராயிழிந்து அல்லலுழந்து அழிகின்றார்.

மனம் கடுமையாய்க் கொடுமை படிந்தபொழுது மனிதன் கொடியவன் தீயவன் என நெடிய பழிகளை அடைய நேர்கின்றான். நெஞ்சம் கெடவே நஞ்சம் படிந்து நாசம் வருகின்றது.

தன் உள்ளத்தில் இனிய இரக்கம் இல்லாமையால் பிற உயிர்களுக்குக் கொடிய துன்பங்களைச் செய்யத் துணிகிறான். அந்த நீசச் செயல்கள் தனக்கே நாசங்களை விளைத்து வருகின்றன. வரவே பிறவிகள்தோறும் பெருந் துயரங்களை அடைந்து நரக வாழ்க்கையாய் அவன் நைந்து உழலுகின்றான்.

நல்ல அறிவுடைய மனிதப் பிறவியை அடைந்தும் உரிய உறுதி நலங்களை அடையாமல் கொடியரா யிழிந்து போவது நெடிய மதிகேடாய் நீண்டு நிற்கின்றது.

"பொருள்நீங்கிப் பொச்சாந்தார் என்பர் அருள்நீங்கி
அல்லவை செய்தொழுகு வார்." (குறள், 246)

"உயிர்களிடத்து அருளின்றிக் கொடுமைகளைச் செய்பவர் உறுதிநலனை இழந்து தம் உயிர்க்கு நெடிய துயரங்களைச் செய்து கொள்ளுகின்றனர்" எனத் தேவர் இங்ஙனம் இரங்கி மறுகியுள்ளார். அருள் நீங்கிய அளவில் இருள் ஓங்கி வருகிறது; எவ்வழியும் இன்னலே வீங்கி இழிபழிகள் எழுகின்றன.

"அருள்தீர்ந்த காட்சியான் அறன்நோக்கான் நயம்செய்யான்
வெருவுற உய்த்தவன் நெஞ்சம்போல் பைபய
இருள்தூர்பு புலம்பூரக் கனைசுடர் கல்சேர." (கலி-120)

"அருள் இல்லாதவன் தரும நோக்கமின்றி யாதும் இதம் செய்யாமல் எவ்வுயிரும் வெருவும்படி யாண்டும் கொடுமையே செய்வான்; அவனுடைய நெஞ்சம் இருள் மண்டியிருக்கும்" என இது குறித்துள்ளது. உரைக் குறிப்புகள் ஊன்றி உணரவுரியன. அருள் இழந்தவன் மருள் உழந்து மடிகின்றான்.

கோடி மிகினும் இழிவே காட்டும்.

என்றது கொடிய இயல்பின் முடிவு காட்டி நின்றது.

உள்ளத்தில் கொடுமையுடையவன் வெளியே எவ்வளவு நல்ல செல்வங்களை எய்தியிருந்தாலும் இதம் செய்யான்; எவ்வழியும் அல்லலே செய்வன்; அவன் வாழ்வு அவலமேயாம்.

இனியது செய்யாமல் இன்னாமையே புரியும் இயல்பு கொடியவரிடம் அமைந்திருத்தலால் அவர் நெடிய செல்வங்களை அடைந்திருந்தாலும் மதிப்பும் மாண்பும்பெறார்; பழிப்பும் இழிப்புமே பெற்றுப் பாழ்பட்டு உழலுவார் என்க.

மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணிஅழுத்திச்
செய்தது எனினும் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினும் கீழ்களைச்
செய்தொழிலால் காணப் படும் (நாலடியார், 347)

பொன்னும் மணியும் அழுத்திச் செய்தாலும் செருப்பைக் காலில் இட்டே மிதிப்பர்; பொல்லாத கீழ்மக்கள் செல்வம்பெற்ருலும் மதிப்பு அடையார் என இது உணர்த்தியுள்ளது.

எட்டி கனி நீட்டினும் கனிவு ஆமோ?

என்றது கெட்டவரது கெடுநிலை தெரிய வந்தது.

உள்ளம் கொடியவர் இனிய பொருளை அடையினும் இன்னுதவராகவே இருப்பர் ஆதலால் அவர் யாண்டும் இழிக்கப்படுவர்; அவரது இருப்பு வெறுப்புக்கே இடமாம்.

தன் நெஞ்சில் கொடுமையை வளர்த்து வருபவன் தனக்கு நீசத்தையே வளர்த்து நாசத்தை அடைகிருன்; அவ்வாறு நீசமும் நாசமும் அடையாமல் நல்ல நீர்மையை வளர்த்து நலம் பல பெறுக. இனிய பண்பு பெரிய இன்பம் ஆகின்றது.

---

665. இனிய உயர்நீர்மை இன்ப அமுதாம்
துனிசெய் கொடுமை துயராம்—கனியும்
மனத்தின் அளவே மனிதன் மருவி
இனத்தின் எழுவன் எதிர். (ரு)

இ-ள்.

இனிய நீர்மை அரியஅமுதமாய் இன்பம் தரும்; கொடிய தன்மை நெடிய விடமாய்த் துன்பம் புரியும்;மனத்தின் கனிவின் அளவே மனிதன் இனியனுய் உயர்ந்து விளங்குகிருன் என்க.

இனிமை கொடுமை நன்மை தீமை என்னும் மொழிகள் செயல் இயல்களை நோக்கி வெளியாயுள்ளன. எதுவும் தனியாய் வருவதில்லை; வினைகளின் வழியே விளைந்து வருகின்றன.

எண்ணிவருகின்ற எண்ணங்கள் இனியனவாயின் அந்த மனிதன் புண்ணியவானுய்ப் பொலிந்து விளங்குகிருன். உள்ளம் இனிமையாய்ப் பழுத்தபொழுது அதிமதுரமான நல்ல தீங்கனி போல் எல்லாருக்கும் இன்பம் புரிகின்ருன். இனிய நீர்மைகளில் பழகிவருபவன் அமுதமய்மாய் அதிசயநிலையை அடைகின்ருன். குணநலங்கள் எவ்வழியும் திவ்விய மகிமைகளை அருளுகின்றன.

சான்ருேர்,பெரியோர் என வான்தோய் புகழோடு வயங்கி நிற்பவர்எவரும் இனியபண்பாடுகளில் தனி உயர்ந்தவரேயாவர்.

கொடியவர் தீயவர் பாவிகள் எனப் பாழ்பட்டுள்ளவர் யார்? பொல்லாத புன்மைகளில் பழகிப் புலைபடிந்தவரே எல்லா வகைகளிலும் இழிந்து ஈனமாய் எள்ளல் அடைந்துள்ளனர்.

உருவ நிலையில் ஒன்றுபோல் தோன்றினும் இனியவர் தனி மகிமை எய்தி நிற்கின்றார்; கொடியவர் நெடியபாவிகளாய் நிலை குலைந்துழல்கின்றார்.

கற்பூரம் போலக் கடல்உப் பிருந்தாலும்
கற்பூரம் ஆமோ கடலுப்பு--பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியர் ஆவாரோ புகல். [நீதிவெண்பா'33]

உருவநிலையில் ஒத்திருந்தாலும் புல்லியர் புண்ணியரைப் போல் கண்ணியம் அடையார் என இது உணர்த்தியுள்ளது.

உள்ளத்தில் நல்ல பண்புகளுடையவர் மேலான நிலைகளை யே எண்ணி மேன்மை அடைந்து வருகின்றார்; புல்லர் அவ்வா றின்றிக் கீழான வழிகளிலேயே இழிந்து பாழாயழிந்து போகி ன்றார். அவர் மெய்யராய் உயர்ந்து தெய்வகதியை அடைகின் றார்; இவர் மையல் மயக்கங்களில் ஆழ்ந்து வெய்ய துயரங்களில் அழுந்தி எவ்வழியும் உய்தியின்றி யுழல்கின்றார்.

நெஞ்சகம் உருகும் தன்மை நீடறி வுடையார்க்கு அன்றி
வஞ்சகர் திறத்தும் உண்டாம் என்னினும் ஒவ்வார்; மாதர்
அஞ்சன விழியால் உள்ளம் அறிவிலார் குழைவர் ஈசன்
தஞ்செனும்அருட்கண்நோக்கால்தம்முளம்கரைவர்சான்றோர்.
[மெய்ஞ்ஞானவிளக்கம்]

நல்ல மேலோர் இறைவனைக் கருதி உள்ளம் உருகுவர்; புல் லிய கீழோர் மாதரை நினைந்து மறுகி உழலுவர் என இது குறித் துள்ளது. மேன்மையும் கீழ்மையும் ஒருங்கே உணர வந்தன.

உயர்ந்த நினைவுகளை யுடையவர் உத்தமராய் உயர்கின்றார்; இழிந்த புலைகளை எண்ணியுழல்பவர் பித்தராய்ப் பிழைபட்டழி கின்றார். படிந்த நினைவின்படி பலன்கள் விளைந்து வருகின்றன.

மனத்தின் அளவே மனிதன்

என்றது இனத்தின் இயல்பு தெரிய வந்தது.

தான் எதனைச் சார்ந்ததோ அதன் வண்ணமாய் உயிர்

ஆர்ந்து வருகிறது. மனம் நல்ல எண்ணங்களோடு பழகிவரின் மனிதன் நல்லவனாய் உயர்ந்து வருகிறான்; தீய சிந்தனைகள் தோய்ந்துவரின் தீயவனா யிழிந்து போகின்றான்.

பொய்யான உலக நிலைகளில் தோயாமல் மெய்யான பரமனைச் சிந்தனை செய்துவரின் அந்த மனிதன் பந்தபாசங்கள் யாவும் ஒழிந்து விரைந்து தெய்வகதியை எய்துகின்றான்.

பன்னிறங்க ளவை காட்டும் படிகம்போல் உள்ளம்
பலபுலன்கள் நிறம்காட்டும் பரிசுபார்த்திட்டு
இந்நிறங்கள் என்நிறமன்று என்று தன் தன்
எழில்நிறம் கண்டருளினால் இந்நிறத்தின் வேறாய்ப்
பொய்ந்நிற ஐம்புலன் நிறங்கள் பொய்என மெய்கண்டான்
பொருந்திடுவன் சிவத்தினொடும் போதான் பின்னை
முன்னிறைநீர் சிறைமுறிய முடுகி ஓடி
முந்நீர்சேர்ந்து அந்நீராய்ப் பின்நீங்கா முறைபோல்.

(சிவஞானசித்தியார்)

தேகசம்பந்தமாய் மருவியுள்ள கருவி கரணங்களை மறந்து ஏகபரம் பொருளை நினைந்து ஆன்மா முனைந்து எழின் சிறை நீங்கிய நீர்கடலை அடைதல் போல் இறைவனாகிய பேரின்பக்கடலை அது அடைந்து கொள்ளும் என இது உணர்த்தியுள்ளது.

அதிசயமான ஆனந்தநிலையை அடைய உரிய உயிர் மதிமயங்கிக் கொடுமைகள் புரிவதால் துயரக்கடலில் வீழ்ந்து நெடிது உழலுகின்றது. துன்பம் நீங்கி இன்பம் அடைய வேண்டின் கொடுமை நீங்கி யாண்டும் அன்புடையனாய் அருள்புரிய வேண்டும். உள்ள அருள் ஆனந்த வெள்ளமாகின்றது.

---

666. ஒட்டி உதிரம் உறிஞ்சி உயிர்பிழைக்கும்
அட்டைபுழு மூட்டையென அல்லலே—கட்டிநிற்கும்
புன்தொழிலே தம்தொழிலாப் பூண்டுசிலர் வெந்நரகம்
சென்றுழல நின்றார் செறிந்து. (சு)

இ-ள்.

பிறருடைய உதிரத்தை உறிஞ்சி உயிர் வாழும் அட்டை புழு மூட்டைகளைப் போல் யாண்டும் கெட்ட தொழில்களையே செய்து தம் வாழ்வை நடத்திக் கொடிய நரகத்தை அடையும் தீயவர் சிலர் ஈண்டு நோயராய் நீண்டு உளர் என்பதாம்.

இனிய சிந்தனைகளையும் நல்ல பழக்கங்களையும் இழந்தபோது மனிதன் பொல்லாத கொடியவனாய்ப் புலைபடிந்து நிற்கிறான். உயர்ந்த மனிதப்பிறப்பை அடைந்தும் இனிமைப்பண்பு இன்மையால் இழிந்துபோகிறான். கொடுமை இயல்பு மனிதனைக் கடுமையாகத் தாழ்த்திநெடியகேடுகளைமுடிவின்றிவிளைத்து விடுகின்றது. தீய செயல் தன்னை அதோகதியில் ஆழ்த்தி அவலப்படுத்துவதை அறிந்து கொள்ளாமையால் மேலும் மேலும் அதனை விழைந்து பற்றி வீணே நாசம் அடைகின்றான். செயலில் தீமை படிந்த அளவு உயிர்சிறுமையாய் இழிந்துமறுமையை இழந்துபடுகிறது.

பாம்பு, தேள், நரி, ஓநாய், என்று கெட்டவன் திட்டப்படுகிறான். அட்டை என்பது நீரில் வாழும் ஒரு செந்து. கிட்ட நெருங்கினவர்களுடைய கால்களில் ஒட்டி உதிரத்தை உறிஞ்சிக் கொள்ளும் இயல்பினது. அதன் வாழ்வு அவலமிக வுடையது.

மூட்டைப்பூச்சிகள் மக்களுடைய இரத்தத்தைப்பருகியே உயிர் வாழுகின்றன. அல்லல்புரியும் அவலப்பிராணிகள் ஆதலால் மனிதன் அவற்றைக்கண்டால் கசக்கிக் கொல்லுகிறான். அந்த அளவு பாவம் படிகின்றது. அருள்நீர்மையுடையவர் அதனைக் கொல்லாமல் பிடித்து மெல்ல வெளியே எறிந்து விடுகிறார்கள்.

மனிதவாழ்வு அல்லல்களுடையது; எவ்வழியும் வினைகள் விளைய விரிந்துள்ளது. இதிலிருந்து பாவம் படியாமல் தப்பி மேலே போகவேண்டுமானால் அருள் நீர்மையைப் பேணிவர வேண்டும். அந்த இனிய இயல்பு தனிமகிமைகளை அருளுகின்றது.

கொடுமை இடர் செய்கின்றது.
கருணை இதம் செய்கின்றது.
அது பாவமாய்த் துன்பம் தருகின்றது.
இது புண்ணியமாய் இன்பம் தருகின்றது.

இன்பத்துக்கு ஏதுவான அருளைக் கைவிட்டுக் கொடுமையை மருவி நின்றவன் பாவியாய்த் துன்பத்தையே அடைய நேர்கின்றான். தான் செய்ததையே எய்தி அனுபவிக்கின்றான்.

பிற வுயிர்களுக்கு இடர் செய்வதால் கொடுமையாளன் தன் உயிர்க்குத் தானே கேடு செய்தவன் ஆகின்றான். தனக்கு இனிய இதத்தை நாடுகிறவன் கொடியவனா யிருக்கக் கூடாது.

பிறர்க்கு இடர்புரிவது பாவமாய்த் துன்பமேதருதலால் அதனை விலகியபோது புண்ணியமும் இன்பமும் பொருந்தி வருகின்றன. நல்ல செயல்கள் நலங்கள் பல தருகின்றன.

கோடிக் கணக்கான நூல்கள் போதித்துள்ள போதனை களையெல்லாம் நான் அரைச்சுலோகத்தில் சொல்லுகிறேன் என்று வடமொழியில் ஒரு பெரியவர் கூறியுள்ளார். அவ்வாறு அவர் உயர்வாகக் கூறியது அயலே வருகின்றது.

"சுலோகார்த்தேந ப்ரவக்ஷ்யாமி யதுக்தம் க்ரந்தகோடிஷு
பரோபகார: புண்யாய பாபாய பரபீடநம்."

"கோடானுகோடி நூல்களில் கூறியுள்ள நீதிகளையெல்லாம் திரட்டி இந்த அரை வாக்கியத்தில் கூறியிருக்கிறேன்! அதாவது பிறர்க்கு இதம் புரிவது புண்ணியம்; இடர் செய்வது பாவம் என்பதேயாம்" என்னும் இது இங்கே அறிய வுரியது.

புண்ணியம் இன்னது பாவம் இது என்பதை ஈண்டுத்தெளிவாக உணர்ந்து கொள்ளுகிறோம். இனியராய் இதம் புரிபவர் புண்ணியவான்களாய் உயர்ந்து திகழ்கின்றார்; கொடியராய் இடர் செய்வர் பாவிகளாய் இழிந்து பழி யடைகின்றனர்.

பிறர்க்குத் தாம் புரிகிற கொடுமைகள் தமக்கு இம்மையும் மறுமையும் துயரங்களைவிளைத்து வருதலைச் சிறிதேனும் உணர்ந்து சிந்திப்பின் எவரும் யார்க்கும் இடர் செய்ய நேரார். அறியாத மூடத்தால் அவகேடுகளைப் பழகி அநியாயமாய் அழிந்து போகின்றார். உறுவதை உணராமல் ஊனம் புரிவது ஈனமாகின்றது.

புன் தொழிலே தம் தொழில்.

என்றது புலையான புல்லரின் செயல்களை உணர்த்திநின்றது. மேலோர் வெறுத்து விலகும் கொடுமைகளை விரும்பிச் செய்பவர் கீழோராயிழிந்து நரகதுயரங்களுக்கு ஆளாகின்றனர். அவரோடு பழகினும் பழியாம் ஆதலால் விழிகாணாது விலகிவிடவேண்டும்.

"உணும் சுவை அமுதையும் உயர்வொழித்திடும்
பிணம்படும் உடம்பினைப் பேணித் தீத்தொழில்
இணங்குபு திரிதரும் இழுதை மாந்தரைப்
பணிந்திடின் மக்களில் பதடி என்பரால்."

(சீகாளத்திப் புராணம்.)

இழிதொழிலாளரோடு கூடலாகாது; கூடின் கொடிய இழிவாம் என இது குறித்துள்ளது. இனிமை புரிந்து உயராமல் கொடுமை புரிந்து கெடுவது அமுதை உண்ணுமல் நஞ்சை அருந்தி அழிந்தபடியாம். உண்மை தெளிந்து உய்தி காணுக.

---

667. காட்டு விலங்குள் கரடி புலிகொடிய
நாட்டுட் கொடியர் நவையூறக்—கூட்டிநின்று
வட்டிக்குப் பொன்கொடுப்போர் வஞ்சமுடன் கோளுரைப்போர்
ஓட்டல் ஒழிக வுடன். (எ)

இ—ள்

காட்டில்திரியும் மிருகங்களுள் கரடியும் புலியும் கொடியன; நாட்டில் வாழும் மக்களுள் வட்டி யாளரும் வஞ்சக்கோளரும் கொடியவர்; ஆகவே அவரை அணுகாமல் அகன்று வாழுக.

இது விழுமிய வாழ்வை விழி தெரிய விளக்கியது.

கூட்டம் கூட்டமாய்க் கூடிவாழும் இயல்புகள் மக்களிடமும் மாக்களிடமும் ஒக்க மருவியுள்ளன. சீவப்பிராணிகளுடைய சீவிய முறைகள் பலவாறு பிரிந்திருக்கின்றன. நாடு காடு என்னும்மொழிகள் பாடு படிந்து வந்துள்ளன. மக்கள் கூட்டமாய் உயர்ந்த தேட்டங்களை விரும்பித் தம் வாழ்க்கைகளை நாடி நடத்தும் நிலப்பகுதி நாடு என வந்தது. அந்த நாட்டம் கடந்துள்ள இடம் காடுகள் என நின்றது.

மனித சஞ்சாரம் இல்லாத காட்டில் மிருகங்கள் கூட்டமாயிருக்கின்றன. அந்த மிருக இனங்களில் புலியும் கரடியும் கொடிய இயல்பின. பிற உயிர்களுக்கு அல்லலான செயல்களைத் தாம் இயல்பாக வுடைமையால் அவை கொடிய மிருகங்கள் என நெடிய பேர் பெற்றன.

அந்தக்காட்டு மிருகங்களை இங்ஙனம் குறித்துக்காட்டியது நாட்டு மிருகங்களைக் கூர்ந்து காணவந்தது. உருவநிலையில் மனிதராய்த் தோன்றியிருந்தாலும் குணம் செயல்களில் கொடியராயுள்ளவர் மிருகங்களாகவே கருதப்படுகின்றனர்.

நல்ல நீர்மைகள் குன்றியபொழுது மனிதரும் பொல்லாத

விலங்குகளாய்ப் பொங்கி எழுகின்றார். உள்ளம் கொடுமையாகவே கடுமையானகேடுகளைச் செய்ய நேர்கின்றார். நேரவே கடுவாய் புலிகளைப்போல் அவர் அஞ்சத்தக்கவ ராகின்றார்.

புல்வாய் பசு முதலிய மெல்லிய பிராணிகளைப் புலி அடித்துத் தின்னும்; அதுபோல் யாண்டும் அல்லலே செய்து பிழைப்பவர் பொல்லாத மிருகங்கள் என்று சொல்ல நேர்ந்தார்.

கோள் கூறும் கொடியவர் மனித சமுதாயத்துள் பெருங் கேடுகளை ஒருங்கே செய்துவிடுவர் ஆதலால் அவர் பாம்பினும் தீம்பினர்; பேயினும் தீயவர்; புலியினும் கொடியவராவர்.

வாள்செய்யாத கொலையைக் கோள் செய்யும்.

என்னும் பழமொழியால் கோளரது பழிபாதங்களைத்தெளிவாக உணர்ந்து கொள்ளலாம். கூனி கூறிய ஒரு கோளுரையால் அரிய பல அரச செல்வங்களை இழந்து காடு புகுந்து இராமன் கடுந்துயர் உழந்தது காவியமாய் வந்துள்ளது. காதில் ஓதிக்கடுங் கேடுகள் புரியும் காதகர் கொடியபாதகர் ஆதலால் அவரை அருகே அணுக விடுவது பெரிய அபாயமாம்.

"தீயன்எனும் பாம்பு செவியில்ஒரு வற்கவ்வ
மாயுமே மற்றை யவன்."

கோளன் செய்யும் கொலைபாதகத்தை இது குறித்திருக்கிறது. இவ்வாறு கொடுந் தீமைகளைச் செய்து வருதலால் கோளன் வாழ்வு கடும்பாதகமாய் முடிந்து நிற்கிறது.

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும். (குறள் 183.)

கோளன் உயிர்வாழ்ந்திருப்பதைவிடச் செத்துப்போவது நல்லது என்று தேவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். விரைவில் இறந்து போனால் புறங்கூறும் பாவம் அதிகமாய் அவனைச் சேராது. பாவத் துயரிலிருந்து அவனை விடுதலை செய்தலால் அந்தச் சாவு அவனுக்கு அறமும் ஆக்கமுமாய் அமைந்தது. கோள் உரைப்பது எவ்வளவு கொடுமை என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்துகொள்ளுகிறோம்.

வட்டிக்குப் பொன் கொடுப்போர்.

கொடிய இனத்தை இது இங்ஙனம் சுட்டிக்காட்டியுள்ளது.

தன்னிடமுள்ள பொருளை ஊதியத்தை விரும்பிப் பிறரிடம் கொடுப்பவன் வட்டியாளன் என நேர்ந்தான். வட்டி என்பது வட்டம் கருதியது என்னும் ஏதுவான் வந்தது.

நூறு ரூபாய்க்கு மாதம் ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் வரையறை செய்து வட்டிக்குக் கொடுப்பது இந் நாட்டில் வழக்கமாயுள்ளது. இதற்குமேலே அதிகமாக வாங்குவதை அநியாய வட்டி என்பர். கூட்டி நின்று என்று இங்கே சுட்டியது இந்தக் கொடிய வட்டியையே.

நியாயமான வட்டியே குடிகேடுடையது; அதனினும் வட்டிக்குமேல் வட்டியாக் கூட்டிக்கொண்டுபோவது நாட்டுக்குக் கொடிய கேடாம்.

நூறுரூபாயைநியாயமானமுறையில்வட்டிக்குக்கொடுத்தால் ஆறு ஆண்டுகளுள் அதன் வட்டியே நூறு ரூபாய் ஆம். இந்த மாதிரி செய்து வந்தால் ஒரு 100 ரூபாய் 85 ஆண்டுகளுக்குள் (1650000) பதினாறு லட்சத்து ஐம்பதினாயிரம் ரூபாய்கள் ஆகின்றன. வட்டிக்குக் கடன் வாங்குகிறவன் கதி என்னும்? இதனை உய்த்துணரவேண்டும். இந்தவாறு கேடும் மோசமும் கூடியிருத்தலால் வட்டியால் பொருளை ஈட்டுவது பாவம் என வந்தது. நேர்ந்துள்ள நீதி கூர்ந்து சிந்திக்க வுரியது.

"நட்பிடை வஞ்சம் செய்தும் நம்பினோர்க் கூன்மாறுட்டத்து
உட்படக்கவர்ந்தும் ஏற்றோர்க்கு இம்மியும் உதவாராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியும் சிலர்போல் ஈட்டப்
பட்டதோ? அறத்தாறு ஈட்டும் நம்பொருள் படுமோ?"

(திருவிளையாடல் புராணம்)

சொக்கநாதப் பெருமான் செட்டிவடிவில் மாமனாகவந்து வழக்காடியபோது இவ்வாறு உரையாடியிருக்கிறார். "என் பொருள் வட்டியால் ஈட்டியதல்ல; தரும நெறியே ஈட்டியது; ஆதலால் அதற்குப் பழுது வராது" என்று முழுமுதல் பரமன் இங்கே மொழிந்துள்ளமை உணர்ந்து தெளிந்து கொள்ளத் தக்கது. பொருளை வட்டியால் சம்பாதிப்பது தீது என மேலோர் யாவரும் ஓதியுள்ளனர்.

"It is with lent money that all evil is mainly done."

(Ruskin)

"பொருளை வட்டிக்குக் கொடுப்பதாலேயே எல்லாத் தீமைகளும் முக்கியமாய்ச் செய்யப் படுகின்றன" என ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

வட்டிக்குக் கடன் வாங்கிய குடிகள் பல அடியோடு அழிந்து போயுள்ளன. "வெளியே கடன் கொண்டான் உள்ளே விடம் கொண்டான்" என்னும் முதுமொழியால் அதன் கொடுங் கேடுகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம்.

"நேர்ந்தஒரு சிறுகடனால் நிலைத்திருந்த
நிலங்களொடு வளங்கள் யாவும்
ஆர்ந்தகரை யான்படிந்த அணிமரம்போல்
அடியோடும் அழிந்த அந்தோ!
சார்ந்தகடன் புகுந்தஅன்றே சனியன்வந்து
புகுந்ததெனச் சலமே கண்டேன்
கூர்ந்தகுடி கெடுத்துயிரைக் குடித்தகொடும்
பேயெனவே கொண்டேன் அம்மா!"

செல்வவளங்களால் ஓங்கியிருந்த தன் உயர் குடி வாங்கிய ஒரு சிறு கடனால் நிலைகுலைந்து இழிந்து அழிந்து போன நிலையை ஒரு கடனாளி இப்படிக் கடுந்துயரோடு கதறிக் கூறியிருக்கிறான்.

வட்டி ஈட்டம் இவ்வாறு கேடு படிந்து வருதலால் அது கொடுமை என வந்தது. வட்டித் தொழில் புரிய உதவியாய் நின்றவரும் கொடுமையாளர் என வந்தார்.

"வட்டிக்குப் பணம் கொடுப்போனும், அதனை வாங்குவோனும், அதன் சம்பந்தமான பத்திரங்களை எழுதுவோனும், அதற்குச் சாட்சியாயிருப்போனும் ஆகிய எல்லோரும் ஒரே விதமான குற்றத்தையே செய்கிறார்கள்" (நபி, 423) என மகமது நபி அரபி பாஷையில் இவ்வாறு கூறியிருக்கிறார்.

மனித சமுதாயத்திற்கே இடரிழைத்து வருவதால் வட்டித் தொழில் கெட்டது என்று பெரியோர்களால் இப்படித் திட்டப் பட்டது. சுட்டி இகழ்ந்துள்ள குறிப்புகள் உய்த்துணர வுரியன.

காட்டில் வாழும் கரடி ஒரு புற்றில் போய் வாய் வைத்தால் அதில் உள்ளவற்றை யெல்லாம் உறிஞ்சிவிடும்; அது போல் வட்டியாளனும் ஒரு குடியில் கைவைத்தால் அதனை அடி

யோடு தடவி விடுவன்; ஆதலால் கரடியோடு இனமாய் ஈண்டு அவன் எண்ண நேர்ந்தான்.

ஓட்டல் ஒழிக.

என்றது இந்தப் பட்டிகளோடு ஒட்டிப்பழகாதே எனத் தெளிவாக வலியுறுத்தியது. இனம் தீதானால் மனம் தீதாம்என்க.

கோளும் வட்டியும் நாளும் கெட்டது. அந்தப் பாழ் வழி யாரோடு பழகாதே; பழகின் வாழ்வு பழுதாம். கொடுமை கடிந்து கொடியாரை ஒதுங்கி இனியனாய் உயர்ந்து யாண்டும் இதமா ஒழுகுக. புனித வாழ்வு புண்ணியமாய் மிளிர்கிறது.

---

668. தாயின்பால் உண்ணத் தவித்துப் பசுங்கன்று
வாயின் முலைவைக்க வாய்க்காமல்—நோயாகப்
பற்றி இழுக்கும் படுகொடுமை இந்நாட்டில்
முற்றி யுளதே முனைந்து. (அ)

இ—ள்

தன்னை ஈன்ற தாயின் பாலை உண்ண அவாவிப் பசுவின் கன்று முலைத்தலையில் வாய் வைக்கு முன்னமே அதனைப் புலையாய்ப் பற்றி இழுத்து அயல் ஒதுக்கும் படுகொடுமை இந் நாட்டில் இந்நாள் முற்றியுளது என்பதாம்.

பரிதாபமான கொடுமைகள் பல அறியாமையால் வளர்ந்து வருகின்றன. அறிந்து இரங்கி நல்லதை நாடிச் செய்யும் பெருந் தன்மையை மனித சமுதாயம் இழந்து வருவதால் இழிந்த நிலைகளில் அழுந்தி யாண்டும் ஈனமா யுழல்கின்றது.

இரங்கியருளும் நீர்மை உயர்ந்த நிலைகளில் உயர்த்தியருளுகின்றது; அந்த உண்மையை உணர்ந்து கொள்ளாமையால் இரக்கமற்ற கொடுமைகளில் பழகி மனிதன் இழிந்து அழிகிறான்.

தனது சுயநலமும் ஆசையும் பெருகப் பெருக அயலாருடைய சுக துக்கங்களை யாதும் கருதாமல் மயல்மிகுந்து மனிதன் கொடுமைகளைச் செய்ய நேர்கின்றான். தனக்கு எவ்வழியும் இனிமையாய் இதங்களையே செய்து வருகிற செவ்விய நல்லாரிடமும் வெவ்வினைகளை விழைந்து செய்வது நன்றி கொன்ற பாதகமாய் மனிதனுக்கு என்றும் இடும்பை தருகின்றது.

மனித சமுதாயத்துக்கு மாடுகள் செய்துவரும் உதவி அளவிடலரியது. உழவு முதலிய தொழில்களைச் செய்து பயிர்களை விளைத்து உயிர்களை வளர்த்து வருகிற அவற்றின் உபகார நிலைகளை உணருந்தோறும் எவரும் உள்ளம் உருகுவர். அத்தகைய இனத்தைப் பரிந்து பேணிவரின் நாட்டிற்குப் பெரிய பயன்கள் விளைந்து வரும். பேணுதுவிடின் பெருங்கேடுகளாம்.

காளைகள் இளங்கன்றுகளாயுள்ள பொழுது தாயின் பாலை அவற்றிற்கு நன்கு ஊட்டி வர வேண்டும். அவ்வாறு உண்டு வரின் அவை செழித்து வளர்ந்து எவ்வழியும் உறுதியாய் உழைத்து வரும்.

"பீரம் பேணி பாரம் தாங்கும்"

என்றார் ஔவையார். பீரம் = தாய்ப்பால். பாரம் தாங்கும் என்ற குறிப்பால் மனிதனைக் காட்டிலும் மாட்டுக்கு முலைப் பால் எவ்வளவு உரியது என்பது இனிது தெளிவாம். இங்ஙனம் தனி உரிமையாயுள்ள பாலை உரிய கன்றுக்குப் பெரிதும் ஊட்டி மீதம் உள்ளதையே மனிதன் உண்ண உரியவன். அவ்வாறு செய்யாமல் கன்று மறுகி ஏங்கி நிற்கப் பாலை முழுதும் கறந்து கொள்வது கொடிய பழியாம்; நெடிய பாவமாம்.

முலைப்பாலை விலைப்பால் ஆக்கித் தலைப்பாலாகப் பணத்தை யீட்ட நேர்ந்தவர் கொடிய கொலைப் பாலராய் நெடிய பாவங்களை ஈட்டி நேரே நாட்டுக்குக் கேடுகளை விளைத்து நிற்கின்றார்.

"கன்றுஉயிர் ஓய்ந்துகக் கறந்து பால் உண்டோன்;
மன்றிடைப் பிறர்பொருள் மறைத்து வவ்வினேன்;
நன்றியை மறந்திடும் நயமில் நாவினேன்;
என்றிவர் உறுநரகு என்ன தாகவே."

(இராம, பள்ளியடை, 104)

பரதன் இவ்வாறு கூறி யிருக்கிறான். தனது அண்ணனை இராமனுக்கு அணுவளவேனும் துரோகம் எண்ணி யிருந்தால் இன்னவாறு பாவிகள் அடையும் கொடிய நரகத்தை நான் உறுவேனாக என்று இக் குலமகன் குறித்துள்ளான். இதில் தலைமையாக உரைத்திருத்தலை ஊன்றி உணர வேண்டும். கன்று உயிர் ஓய்ந்து உகக் கறந்துபால் உண்பது எவ்வளவு கொடிய பாவம் என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம்.

தன் தாய்ப்பாலை இழந்து இறந்து போன கன்றின் தோலை உரித்து அதனுள் வைக்கோலைப் பொதிந்து உயிருள்ள கன்று போல் காட்டிப் பசுக்களிடம் வஞ்சமாய்க் கறக்கும் வன் கொடுமைகள் எங்கும் மண்டியுள்ளன. நாமும் நேரே கண்டு நெஞ்சம் வருந்துகின்றோம். இந்தக் கள்ளக் கறப்பும் உள்ளக் கொடுமையும் நல்லோர் கண்களை வருத்தி வருகின்றன. அருளு டையவர் அல்லல்களை நோக்கி அலமருகின்றனர்.

"தோல்கன்று காட்டிக் கறவார்; கறந்தபால்
பாற்பட்டார் உண்ணர் பழிபாவம்" (சிறுபஞ்சமூலம், 84)

தோலால் செய்த கன்றைக் காட்டிப் பாலைக் கறப்பதும், அவ்வாறு கறந்த பாலைக் குடிப்பதும் பாவம் எனக் காரியாசான் இங்ஙனம் கூறியிருக்கிறார். உரையின் குறிப்பு ஓர்ந்துணரவுரியது.

உரிய கன்றுக்குப் பாலை நன்கு விடாமல் அறவே கறந்து கொள்வது பெரிய கொடுமை ஆதலால் அது நெடிய பழி, கொடிய பாவம் என்று மேலோர் கடிய நேர்ந்தனர்.

மூன்று பசுங்கன்றுகள் ஓர் இடத்தில் கட்டப் பட்டிருந் தன. அந்தி நேரம் வந்த பொழுது அவற்றுள் ஒன்று அம்மா! என்று கத்தியது. அடுத்து நின்ற கன்று "ஏன் இப்படிக் கத்துகி ருய்?" என்று கேட்டது; "என் அம்மா வருவாள்; எனக்குப் பால் கொடுப்பாள்; நான் குடிப்பேன்" என்று அது உவந்து சொன்னது; அயலே நின்ற மூன்ருவது கன்று பாலா? அது எப்படி யிருக்கும்? என்று கேட்டது; இரண்டாவது கன்று சிரித்து விட்டு முதல் கன்றைப்பார்த்து "ஏன்வீணே கத்துகிருய்; இங்கே போட்டுள்ள புல்லைத் தின்ருலும் கொஞ்சம் பசி தீரும்; நம்ம தாய்ப்பாலை நாம் குடிக்க வாய் வைக்கு முன்பே மனிதப் பாவிகள் வெடுக்கென்று நம்மை இழுத்துக் கட்டி விடுகிருர்க ளே!" என்று நொந்து மொழிந்தது. இந்த மூன்றும் முறையே யாருடைய கன்றுகளாயிருக்கும்? ஆராய்ந்து சொல்லுங்கள் என்று ஓர் அரசன் சபையிலிருந்த மந்திரிகளிடம் கேட்டான். அவருள் முதல் அமைச்சர் மொழிந்தார்:

முதல் கன்று விவசாயம் செய்கிற வேளாளனுடையது. இரண்டாவது கன்று பாலை விலைக்கு விற்கும் கோனுடையது.

மூன்றுவது கன்று பஞ்சாங்கம் கூறும்பார்ப்பான் உடையது.

என இவ்வாறு மந்திரி சொல்லவே மன்னன் உண்மைதான் என்று மனம் மகிழ்ந்து கொண்டான். நிகழ்ந்துள்ள இந்த நிகழ்ச்சியால் பாலின்பால் ஆவலும் பசுபரிபாலனமும் பரிதாப நிலையில் மருவியுள்ள வகைகள் அறிய வந்தன.

நசைகள் ஏற நாசங்கள் நேர்ந்தன.

அநியாயமான ஆசைகளால் மனிதர் நியாய முறைகளை மறந்து நெறிகேடர் ஆகின்றூர். ஆதலால் பழி யிழிவுகள் விளைகின்றன. தாயின் பாலை உண்ண விடாமல் கன்றைத் தடை செய்தவன் பின்பு தனது தாயின் பாலை இழந்து தவிக்கின்றுன்.

தன்னை யினிதீன்ற தாய்ப்பசுவின் தீம்பாலை
உன்னி இளங்கன் றுருகவே---பன்னி
முழுதும் கறந்துகொளும் மூட மனிதர்
கழுதுகள் ஆவர் கழிந்து.

இளங்கன்றுக்குப் பால் ஊட்டாமல் கறந்து கொண்டவர் அந்தப் பாவத்தால் பின்பு பேயாய்ப் பிறப்பர் என இது உணர்த்தியுள்ளது. கழுது=பேய். பசியால் பதைப்பது தெரிய வந்தது.

இனிய பண்பாடுகளை இழந்து கொடுமைகளைத் துணிந்து செய்து வந்தவர் முடிவில் கடுமையான தண்டனைகளை அடைகின்றனர். இனிய நீர்மைகளால் இன்பங்கள் விளைகின்றன; கொடுமைகளால் துன்பங்களே வருகின்றன.

கொடியராய் இழியாமல் இனியராய் உயர்ந்தவர் எவ்வழியும் புகழுடையராய் யாண்டும் இன்ப நலங்களையே அடைகின்றூர்.

வன்னெஞ்சனாய் வசையுறுமல் நன்னெஞ்சனாய் நலம் பல பெறுக. அருள் நலம் அரிய இன்ப நிலையமாகின்றது.

---

669. கொடுமை புரியின் கொடியவ னுகிப்
படுதுயரில் வீழ்ந்து பதைப்பாய்—கொடுமையின்றி
உள்ளம் இரங்கி ஒழுகின் உயரின்ப
வெள்ளம் பெருகும் விரைந்து. (௬)

இ-ள்.

கொடிய செயல்களைச் செய்தால் கொடியவன் என்று பழி

படிந்து படுதுயரங்களில் வீழ்ந்து பதைப்பாய்; கொடுமையின்றி உள்ளம் இரங்கி உதவிபுரியின் பேரின்ப வெள்ளம் பெருகி நேரே வரும் என்க.

ஒருவன் செய்துவரும் செயல்களால் அவனுடைய மனநிலைகளும் மருவியுள்ள வாசனைகளும் அறிய வருகின்றன. வெளி அசைவுகள் உள்ளத்தின் இசைவுகளாயுள்ளமையால் அவை மனிதனை அளந்து காணச் செய்கின்றன. இனிமை இன்பங்களையே யாவரும் விரும்புகின்றனர்; கொடுமை துன்பங்களை எவரும் விரும்புவதில்லை. இவ்வாறு வெறுப்பாயுள்ளவற்றை விரும்பிச் செய்வது விசித்திர வியப்பாயுள்ளது.

இளமையிலிருந்தே சிறிது சிறிதாகத் தீமைகளில் பழகி வருவதே பின்பு கொடுமைகளைத் துணிந்து செய்ய ஏதுவாகின்றது. பழகிய பழக்கத்தின் பயனாகவே மனிதன் விளைவுற்று நிற்கின்றான். கொடுமையால் சீவ இமிசை மருவியிருத்தலால் அதனையுடையவன் பாவியாய்ப் பழிக்கப்படுகிறான்.

தன் செயலால் தான் இழிந்து கெடுவதை அறிந்து கொள்ளாமல் ஒருவன் களித்துத் திரிவது அவகேடான மூடமாயுள்ளது.

"கொடியது கொம்பு ஒடியும்; கடியது கால் ஒடியும்."

என்பது பழமொழி. கடுமை கொடுமைகளால் வரும் கேடுகளை இது விளக்கியுள்ளது. இனிய அமைதி மனிதனைத் தனிமகிமையில் உயர்த்துகிறது. கொடிய துடுக்குச் சிறுமையில் ஆழ்த்தி நெடிய துயரங்களை விளைக்கின்றது.

படுதயரில் வீழ்ந்து பதைப்பாய்!

என்றது கொடிய செயலால் வரும் பயனை முடிவாக உணர்ந்து கொள்ள வந்தது. செய்த கொடுமை செய்தவனை உய்தியில்லாத துயரில் ஊக்கித் தள்ளும் ஆதலால் அந்த உண்மையை ஊன்றி நோக்கி அவன் உய்திபெற வேண்டும்.

உள்ளம் இரங்கி ஒழுகின் இன்ப வெள்ளம் பெருகும்.

இரக்கத்திற்கும் இன்பத்திற்கும் உள்ள உறவுரிமையை இது உணர்த்தி நின்றது. எவ்வுயிர்க்கும் யாதும் கொடுமையைச் செய்யாதவன் தன் உயிர்க்குப் பெரிய இன்ப நலனைச் செய்தவனாகின்றான். அதிசய விளைவு மதி தெளிய வந்தது.

அருள் இரக்கம் மனிதனைப் பெரிய மகானுக்கி விடுகின்றது; விடவே அரிய மகிமைகள் எல்லாம் அவனை நோக்கி ஆவலோடு வருகின்றன. இனிய பரிவு இன்பப் பேறுகின்றது.

பிற பிராணிகள் ஏதேனும் அல்லலடையக் கண்டால் அருளாளர் உள்ளம் உருகி அயர்கின்றனர்; அந்த இயல்பினல் அவரது பரிவுநிலையும் பரிபாக நிறைவும் அறியலாகும்.

பெரியவர்தம் நோய்போல் பிறர்நோய்கண் டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க---தெரியிழாய்!
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண். (நன்னெறி,20

பிறர் துயருறுவதைக் காணின் பெரியோர் உள்ளம் நெருப்பிலிட்ட வெண்ணெய் போல் நெகிழ்ந்து உருகும் என இது உணர்த்தியுள்ளது. கண்ணை அவருக்கு இதில் உவமை கூறியிருப்பது எண்ணி யுணரவுரியது. நீர்மை சுரந்தபொழுது சீர்மை நிறைந்து உலகசமுதாயத்தில் தலைமையாய் மனிதன் உயர்ந்து விளங்குகிருன். உயிர்கள் பால் இரக்கமுடையவன் துயரம் நீங்கி உயர் பதவியை மருவி மகிழ்கின்ருன்.

உருமலி உலகில் உன்னைநான் கலந்தே
ஊழிதோ றூழியும் பிரியாது
ஒருமையுற் றழியாப் பெருமைபெற் றடியேன்
உன்னையே பாடி நின்றாடி
இருநிலத் தோங்கிக் களிக்கவும் பிறருக்கு
இடுக்கண் உற்றலவை தவிர்த்தே
திருமணிப் பொதுவில் அன்புடை யவராய்ச்
செய்யவும் இச்சைகாண் எந்தாய்! (1)

வருமுயிர் இரக்கம் பற்றியே உலக
வழக்கிலென் மனம்சென்ற தோறும்
வெருவிநின் அடிக்கே விண்ணப்பித் திருந்தேன்
விண்ணப்பம் செய்கின்றேன் இன்றும்
உருவனுன் உயிர்தான் உயிரிரக் கந்தான்
ஒன்றதே இரண்டிலை இரக்கம்
ஒருவில்என் உயிரும் ஒருவும் என்உள்ளத்து
ஒருவனே நின்பதத்து ஆணை. (2)

[திருவருட்பா]

இந்த இரண்டு பாசுரங்களும் இங்கே சிந்தனைக்கு உரியன. இராமலிங்கசுவாமிகளுடைய அனுபவ நிலைகளை இவை உணர்த்தியுள்ளன. அரிய அருள் இரக்கங்கள் அறிய வந்தன.

இரக்கமே என் உயிர்; அது இல்லையேல் எனக்கு உயிரில்லை என அந்த அருள்வள்ளல் உரைத்திருப்பது ஊன்றி உணரவுரியது.

சீவதயை மீதூர்ந்து உள்ளம் உருகி உயர்ந்தவர் பெரிய மகான்களாயுள்ளனர். நெஞ்சக்கனிவு நேரே பரம நீர்மையை மருவி மிளிர்கிறது. வஞ்சக் கொடுமை வன் துயரமாகிறது.

கொடியர் கடையராயிழிந்து ஒழிகின்றார்; இனிய நீரர் தனி மகிமை அடைந்து இன்ப நிலையில் உயர்கின்றார்.

கொடுமை புரிந்து குடிகெடாதே.

கருணை புரிந்து கதிநலம் காணுக.

---

670. அன்புசெய வந்த அரிய பிறவியைத்
துன்புசெய வூக்கித் துயரமாய்—வன்பழியுள்
மாயும் கொடுமைபோல் மாநிலத்தில் ஓர்மடமை
ஆயும் பொழுதில் இலை. (ய)

இ—ள்

அன்பு செய்யவே இந்த அரிய மனிதப் பிறவி வந்துள்ளது; இதனைத் துன்ப வழிகளில் செலுத்தித் துயர்புரிந்து பழியடைந்து இழியும் கொடுமைபோல் கொடியமடமை யாதும் இல்லை என்க.

இது பிறவிப் பயனை உணர்த்துகின்றது.

இந்த உலகில் சீவகோடிகள் பல தோன்றி நின்று மறைந்து போகின்றன. அவற்றுள் மனித உருவில் மருவி வருவது அரிய செயலும் பெரிய பேறுமாய்ப் பெருகியுள்ளது. அறிவு நலங்கள் பல நன்கு அமைந்திருத்தலால் மானிடசன்மம் அதிக மேன்மையுடையதாய் மேவி நின்றது. எல்லாப் பிராணிகளையும் படைத்த சிருட்டிகர்த்தா மனிதனைப் படைத்த பின்பே மகிழ்ச்சி அடைந்தான்; அதனால் மானிடர் மகிமை தெரிய வந்தது.

"ஊனுடம் புடைய உயிர்களைப் படைத்தும்
உளமிக மகிழ்ந்திலன் முடிவில்
மானுடம் படைத்த பின்னரே மலரோன்
மகிழ்ச்சிமீக் கூர்ந்தினி தமர்ந்தான்."

இவ்வாறு மாட்சிமை மிகுந்த பிறப்பினை அடைந்தே மனிதன் இங்கு வந்திருக்கிறான். இங்ஙனம் எடுத்து வந்த பிறவி இன்பமுடையதாய் உயர்ந்த தெய்வீக நிலையை அடைய வேண்டுமாயின் இனிய பல பண்பாடுகளைப் பழகி ஒழுக வேண்டும். பண்புகளுள் அன்பு தலை சிறந்தது. தன்னையுடையானை உயர்ந்த மனிதனாக்கி என்றும் குன்றாத இன்பநிலையில் உய்த்தருளுதலால் அன்பு சீவ அமுதமாய் மேவியுள்ளது.

"அன்பினுள்ளாகி அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே அணைதுணையாமே." [திருமந்திரம்]

அன்புக்கும் இறைவனுக்கும் உள்ள உரிமையை இது உணர்த்தியுள்ளது. உண்மை நிலை ஊன்றி உணர வுரியது.

உள்ளம் இரங்கி அருளும் நீர்மையே அன்பு ஆதலால் அதனையுடையவன் எல்லா உயிர்களும் உவந்து போற்றும் மகிமையை எளிதே அடைந்து கொள்ளுகின்றான். அன்புநலம் ஒன்றே எல்லா இன்பநலங்களுக்கும் மூல காரணமாயுள்ளது.

துன்பத் தொடர்புகள் நீங்கி உயிர் இன்பநிலையை அடைய வேண்டின் அன்பைத் தனி உரிமையாக அது அடைய வேண்டும். அன்பு ஒன்றை அடைந்து கொள்ளின் மனிதப்பிறவி துன்பங்களை யெல்லாம் நீங்கி இன்ப நிலையை அடைந்து கொண்டதாம்.

இங்ஙனம் தனக்கு உரிமையான இனிய அன்பை இழந்து விடின் அந்த மனித வாழ்வு பயனிழந்து பாழ்படுகின்றது. பிறவுயிர்கள்பால் நன்கு அன்பு செய்யாதவன் தன் உயிர்க்கு என்றும் துன்பத்தையே செய்தவனாகின்றான்.

"ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கு அன்பில்லார்;
எவ்வுயிர்க்கும் அன்பில்லார்; தமக்கும் அன்பில்லார்;
பேசுவதென் அறிவிலாப் பிணங்களைநாம் இணங்கின்
பிறப்பினிலும் இறப்பினிலும் பிணங்கிடுவர்விடுநீ
ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்டு
அவர்கருமம் உன்கருமமாகச் செய்து
கூசிமொழிந்து அருள்ஞானக் குறியில் நின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித்திரியே.
[சிவஞானசித்தியார்]

அன்பு இல்லாதவர் தம் உயிர்க்கு இன்பநலன்களை இழந்தவர்; அறிவில்லாப் பிணங்கள் என இதில் குறித்துள்ளதைக் கூர்ந்து நோக்குக. நல்ல நீர்மையை இழந்தவன் பொல்லாத புலைகளில் அழுந்திப் பொன்றி ஒழிகின்றான்.

கொடுமை போல் மடமை இலை

அன்பு செய்ய உரிய அருமைப் பிறவியைச் சிறுமைப் படுத்தித் துன்பமான கோடுமைகளைப் பழகி நிற்பது முழுமூடமேயாம். தனக்கு வருகிற இழிபழியையும் அழிதுயரங்களையும் அறிந்து கொள்ளாமையால் மனிதன் கொடிய செயல்களைச் செய்து அடியோடு கெடுகின்றான்.

இனிய நீர்மையாளர் பெரிய மனிதராய்ப் பெருமகிமை பெறுகின்றார்; கொடுமையாளர் சிறுமையாளராய்ச் சீரழிகின்றார். உரியதகுதி மனிதனை உயர்த்தி யருளுகின்றது; அதனை இழந்து நின்றவன் இழிந்து படுகின்றான்.

"Worth makes the man, and want of it the fellow" (Pope)

"அரியதகுதி பெரிய மனிதன் ஆக்குகிறது; அஃது இல்லாதவன் சிறியவனாய் நிற்கிறான்" என்னும் இது இங்கே அறியவுரியது. இயல்பு இழியவே உயர்வு ஒழிகின்றது.

பண்டு செய்த கொடுமையின் விளைவே இன்று அல்லல்களில் அழுந்தி மனிதர் அவலமாயுழலுவதற்குக் காரணமாயமைந்தது. கொடிய வினைப்பயன்கள் அடுதுயரங்களாய் அடர்ந்துள்ளன.

தனக்கு இதத்தையே எவ்வழியும் எவனும் விரும்புகின்றான். அவ்வாறான அனுபவமிருந்தும் பிறர்க்கு ஒருவன் இடர் செய்ய நேர்வது முழுமடமையாகின்றது. தான் செய்தது எதுவோ அது தனக்கே மாறி வருகிறது.

நெருப்புயிர்க் குஆக்கி நோய் செய்யின் நிச்சமும்
உருப்புயிர் இருவினை உதைப்ப வீழ்ந்தபின்
புரிப்புரிக் கொண்டுபோய்ப் பொதிந்து சுட்டிட
இருப்புயிர் ஆகிவெந்து எரியுள் வீழுமே.

[சீவகசிந்தாமணி]

பிற வுயிர்கள் வருந்தும்படி கொடுமை செய்தவன் துயரங்களையே அனுபவித்து இழிபிறவிகளை அடைந்து எரி நரகில் விழு

ந்து வருந்தி அழுந்துவான் என இது குறித்துள்ளது.

தன்னைப் போல் பிறரை எண்ணி ஒழுகுபவன் நீதிமான் ஆகின்றான். அவ்வாறு கருதாமல் அவகேடு செய்பவன் அநீதியாளனாய் அவலமடைகின்றான். தரும நீதியைக் கடந்தபோது தான் மனிதன் பாவத் தீமைகளைச் செய்ய நேர்கின்றான்.

Where law ends, tyranny begins. (Johnson)

"நீதி எங்கே விலகுகிறதோ அங்கே கொடுமை விளைகிறது" என்னும் இது இங்கே அறிய வுரியது. தன் உயிர்க்கு இதத்தை நாடும் இயல்பினன் பிறவுயிர்க்கு அகிதத்தைச் செய்ய முயல்வது அநியாயமாயது; ஆகவே அதன் பலனை அனுபவிக்கிறான்.

கொடுமையால் பாவம் விளைகிறது; அதனால் வறுமை முதலிய துயரங்கள் வந்து உயிர்களை வாட்டி வருத்துகின்றன.

உண்ண உணவும் உடுக்க உடையுமின்றி
எண்ணம் பழுதாய் இழிந்துமே—வண்ணம்
குலைந்து திரியும் கொடுமை நினையின்
உலைந்து குலையும் உளம்.

இதனை நினைந்து நெஞ்சம் இரங்கி வாழுக.

கொடிய தீமைகளை மறந்து விடுக.

இனிய நீர்மைகள் நிறைந்து உயர்ந்து கொள்ளுக.

---

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கொடுமை கடுமையான கேடுகள் உடையது.
கொடிய விடம் போல் கடிய வுரியது.
நெடிய இடர்களை யாண்டும் நீண்டு செய்வது.
நச்சுமரமாய் நாசம் தருவது.
நீசத்துயர்களை நேரே புரிவது.
நரகதுன்பத்திற்கு ஏதுவானது.
கொடியரை யாதும் கூடலாகாது.
பழகிய கொடுமை படுபழியாகும்.
கொடுமை ஒழியின் இனிமை விளையும்.
இனிய இரக்கம் இன்பநிலையமாம்.

கஎவது கொடுமை முற்றிற்று.

# அறுபத்தெட்டாம் அதிகாரம்.

## உலோபம்.

அஃதாவது இரங்கி ஈயாத தீய இயல்பு. பொருளாசை மண்டி மருள் கொண்டு நிற்கும் மடமையான உலோபம் கொடுமையாய் நிமிர்தலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

671. ஏதேனும் ஓர்பொருளை ஈஎன் றெவரேனும்
தாதா எனநினைந்து சார்வரேல்—மீதோடிக்
கொல்லவரும் நாய்போல் கொதித்துக் குலைக்குமே
நல்ல உலோபமெனும் நாய். (க)

இ—ள்

பொருளுடையான் ஏதேனும் அருளுவான் என்று கருதி எவரேனும் வந்து ஈ என்று நெருங்கினால் உலோபம் என்னும் நாய் துள்ளி எழுந்து துடுக்காய்க் கொதித்துக் குலைத்துக் கடிக்க வரும் என்பதாம்.

இது, பொருளின் மருளாளனை உணர்த்துகின்றது.

குணம் குற்றம் என்னும் இருவகையான தொகைகள் சீவர்களை மருவி நிற்கின்றன. குணத்தால் புகழும் புண்ணியமும் இன்பமும் வருகின்றன. குற்றத்தால் பழியும் பாவமும் துன்பமும் விரிகின்றன. ஈகை நல்ல குணம்; அதனையுடையவன் பல வகையிலும் உயர்ந்து தலைமை எய்தி நிற்கின்றான். உலோபம் கெட்ட குற்றம். தன்னையுடையானைச் சின்ன மனிதனாக்கிச் சீரழித்து விடுதலால் தீய இழிவு என அது தீர்ந்து நின்றது.

உலோபம் என்பது பொருள் மேல் கடும் பற்றுக்கொண்டு வெறிமண்டி நிற்கும் மருள். இந்த மருளுடையவன் அருள் அறம் முதலிய உயர்நலங்களையெல்லாம் ஒருங்கே இழந்து இழிந்து போகின்றான். உயர்ந்த பொருள் கையில் இருந்தும் இழிந்த மனப் புன்மையால் மனிதன் ஈனமடைந்து போவது ஞான சூனியமான ஓர் பரிதாபமாயுள்ளது.

ஈகையாளன் அரியபல மகிமைகளை எய்தி உயர்ந்து போகின்றான்; உலோபி கொடிய பல சிறுமைகளை அடைந்து இழிந்து வீழ்கின்றான். இழிவீழ்வு பழி துயரமாகிறது.

பொருள் மேல் அளவு மீறி வைத்துள்ள ஆசையே உலோபம் என வந்தமையால் அதனையுடையவன் உலோபி என நேர்ந்தான். ஈன இயல்பு மனிதனை ஈனன் ஆக்கி விடுகின்றது.

பணப்பித்து பழிப்பத்து என்னும் பழமொழியால் உலோபத்தால் விளையும் இழிவும் பழியும் ஈனமும் அறியலாகும்.

பொருளால் அடையவுரிய நல்ல உறுதி நலங்களையெல்லாம் இழந்து இழிந்து போதலால் உலோபியின் பிறப்பும் இருப்பும் பழிப்புலைகளாய்ப் பாழ்பட்டு நின்றன. உண்மையுணராத ஊனத்தால் புன்மைகள் படிந்து புலையுறுகின்றனர். அருளை வளர்த்துப் பொருளின் பயனைப் பெரியோர் அடைந்து கொள்ளுகின்றனர்: சிறியோர் மருளராய் மறுகி வறிதே மடிகின்றனர்.

பொருளில் மருள் கொண்ட நசையால் உள்ளம் இருள் மண்டி ஈனமடைந்தது; அடையவே யாவும் அவலமாயின.

நல்ல நிலைகளை நாசப்படுத்தி மனிதனை உலோபம் நீசமாக்கி விடுதலால் அது கொடிய புலையாய்க் கடியநின்றது.

> பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
> எண்ணப் படுவதொன்று அன்று. [குறள்,438]

"இழிந்த எந்தக்குற்றங்களோடும் உலோபத்தை இணைத்து வைத்து எண்ணலாகாது; அது மிகவும் ஈனமானது" எனத்தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

பற்றுள்ளம், இவறன்மை என உலோபத்திற்குப் பெயர் இட்டிருக்கும் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன. பொருளை உபயோகமாக உரிமையோடுவிடவேண்டியஇடத்தும் விடாமல் இறுகப் பற்றிநிற்கும் கொடிய வன்னெஞ்சமே உலோபம் என நெடிது ஓங்கி நிற்றலால் அது பற்றுள்ளம் என வந்தது. பேராசையால் மேலும் மேலும் பொருள் மேல் இவர்ந்து நிற்பது இவறன்மை என நேர்ந்தது. இவறல் = நசையால் மேல் ஏறுதல்.

இந்த ஈனநசை மனிதனை இழி நிலையில் தள்ளிவிடுதலால் உலோபம் கழி நெடுந் தீமையாய்ப் பழிபடர்ந்து நின்றது.

பொறுமை முதலிய நல்ல குணங்கள் பல மருவியிருந்தாலும் உலோபியிடம் அவை சிறுமையாகவே எண்ணப்படும். சினமும் சீற்றமும் இன்றி அவன் அமைதியாய் அடங்கியிருப்பினும்

"தன்கையிலுள்ள பணம் போய்விடும் என்றே பயல் மானம் கெட்டு மழுங்கி யிருக்கிறான்" என வையம் அவனை எள்ளலாக வைதே வரும். எவ்வழியும் பிசுனன் இழிவே அடைகின்றான்.

உத்தம குணங்கள் எல்லாம் உலோபத்தால் ஒழிந்து போமே என்றதனால் அதன் ஈனமும் இழிவும் தெளிந்து கொள்ளலாம்.

"உளப்பரும் பிணிப்புறு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி கேடிலா
வளப்பரு மருதவைப்பு அழித்து மாற்றினாள்."
[இராமா, தாடகைவதை 42]

தாடகையை உலோபத்தோடு ஒப்பவைத்துக் கம்பர் இங்ஙனம் பாடியிருக்கிறார். இனிய குளிர் நிழல்களையும் அரிய கனிகளையும் எவ்வழியும் உதவிவந்த செவ்விய நல்ல சோலைகள் பலவற்றை வெவ்விய அரக்கி ஒருத்தி நின்று அழித்து ஒழித்தாள்; அந்த அழிவுநிலை உயர்ந்த குணநலங்களை எல்லாம் உலோபம் ஒன்று நின்று நாசப்படுத்துவது போல் இருந்தது என இது உணர்த்தியுள்ளது. உலோபத்தின் புலையும் நிலையும் புன்மையும் நீசமும் இதனால் இனிது உணரலாகும்.

உலோபம் கொல்லவரும் நாய்போல் குலைக்கும்.

என்றது உலோபியின் பொல்லாத புலை தெரிய வந்தது. பொருள்மேல் கடும்பற்றுக் கொண்டிருப்பவன் ஆதலால் உலோபியிடம் யாரேனும் போய் ஏதேனும் கேட்க நேர்ந்தால் அவன் உள்ளம் துடிக்கிறது; துடிக்கவே உருத்துக் கொதிக்கின்றான்; கடுத்துப் பேசுகின்றான்; எள்ளி இகழ்ந்து எவரையும் அயல் ஒதுக்கித் தன் பொருளை அவன் காத்து நிற்கின்றான்.

"பாட்டைநான் பாடிப் பயன்நாடிப் போயினேன்
வேட்டைநாய் போல்சீறி வீண்குலைத்தான்--நாட்டம்
தெரியாமல் சென்றேன் தெரிந்து தெளிந்து
பரியாமல் வந்தேன் படிந்து."

மனிதன் என்று மதித்து நான் போனேன்; அவன் நாய் போல் சீறி வந்தான்; வரவே உண்மை தெரிந்து யாதும் வருந்தாமல் உடனே திரும்பிவந்தேன் என ஒரு உலோபியிடம் உதவியை

நாடிப்போன புலவர் ஒருவர் அங்கே நேர்ந்த நிலைமையை நெஞ்சம் வருந்தி இவ்வாறு செவ்வையாகக் குறித்து உரைத்திருக்கிறார்.

உலோபத்தின் நிலையும் அதனையுடையவரது புலையும் அவரை அணுகினரது அவலமும் இதனால் உணர்த்தப்பட்டன.

---

672. கூட்டித் தொகுத்துவைத்த குப்பைதனைத் தன்புலத்தில்
ஊட்டி உதவா உழவன்போல்—ஈட்டிவைத்த
ஒண்பொருளை நல்லறத்தில் ஓர்ந்து புரியாதான்
மண்புதைய மாண்டு படும். (உ)

இ—ள்

தான் கூட்டிவைத்த குப்பையைத் தன் நிலத்தில் பரப்பி விளைவை விருத்திசெய்யாத உழவன் போலத் தான் ஈட்டிவைத்த பொருளை நல்ல தருமங்களில் பரப்பி நலங்களை அடைந்து கொள்ளாத உலோபி இழிந்து அழிந்து படுவான் என்பதாம்.

உலக வாழ்க்கைக்குப் பொருள் மிகவும் தேவையாயிருத்தலால் யாவரும் அதனை ஆவலோடு வருந்தித் தேடுகின்றனர். அவ்வாறு தேடித் தொகுத்த பொருளை நாடிவகுத்து நல்ல வழிகளில் வழங்கிவரின் அது எவ்வழியும் சிறந்த செல்வத்திருவாய் உயர்ந்து வரும். தேடியதை நாடிச் செலவுசெய்பவன் செல்வச் சீமானாய்ப் பேரும் சீரும் பெறுகிறான்; அவ்வாறு செய்யாதவன் புல்லிய உலோபியாய்ப் புலையுற்று இழிகின்றான்.

கிணற்றில் ஊறிய நீரைப் பயிர்களுக்குப் பாச்சுதல் போல் முயற்சியால் ஏறிய பொருளை உயிர்களுக்கு ஊட்டின் அந்தச் செல்வன் நல்ல புண்ணியவானாயுயர்ந்து எண்ணிய இன்பநலங்களையெல்லாம் எளிதே எய்துகின்றான். அங்ஙனம் உதவாதவன் பொருளின் பயனை இழந்து வறிதே அழிகின்றான்.

பொருளைச் சேர்ப்பது இன்பமும் அறமும் புகழும் அடையவேயாம்; உரிய பயன்களைத் தக்க பருவத்திலேயே பக்குவமா அடைந்து கொள்ள வேண்டும்; அவ்வாறு அடையாவழி அப்பொருள் கடையாய்க் கழிந்தேபோம்.

தான் தேடிய பொருளின் பயனைச் செவ்வையாய் அடை

யாமல் வீணே சேர்த்து வைத்திருப்பவன் குப்பையைக் கூட்டி வைத்த விளக்குமாறு என இளிக்கப்பட்டுள்ளான்.

"பல்வே றிடத்தில் பரந்து கிடந்திருந்த
புல்லாதி யெல்லாம் புடைதொகுத்து—நல்ல
பயனென் றறியாப் படுசோ தனிபோல்
நயனறியான் லோபி நவை."

பாடுபட்டுச் சேர்த்தும் பொருளின் பயனை அனுபவியாமையால் உலோபியை விளக்குமாறு என்று காரணம் காட்டி இது விளக்கியுள்ளது. சோதனி = துடைப்பம். உவமானம் அவமானமாய் வந்திருந்தாலும் உள்ள ஒப்பு நிலைகளை நுட்பமா ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

கூட்டிவைத்த குப்பையை நிலத்தில் இட்டுப் பரப்பினல் அந்த நிலம் சிறந்த உரமுடையதாய் உயர்ந்து நல்ல விளைவுகளை நல்கி அருளும்; அவ்வாறு பரப்பாமல் குவித்தே வைத்திருந்தால் அது வீணேகெட்டு விளிந்துபோம்; ஈட்டிவைத்த பொருளை எளிய பிராணிகளுக்கு ஊட்டி உதவினல் அது புண்ணியமாய்ப் பொங்கிப் பெரும் போகங்களை நீட்டியருளும்; அங்ஙனம் உதவாமல் இருந்தால் அது தானகவே கெட்டு அழிந்துபோம் என்க. வருந்தித் தொகுத்த பொருளை வறிதே அழிந்து போக விடுவது கொடிய மதிகேடாய் முடிகின்றது. அந்த முடிவைத் தனது சொந்தமாக்கி உலோபி நிந்தனையடைந்து முடிகின்றன்.

எருவைச் சேர்ப்பது நிலத்தினுக்கு இடுவதற் கன்றிப்
பெருமையாக் குவித்துயர்வுறப் பேணுதற்கு அன்றே
அரிய நன்பொருள் படைத்தவன் அறம்இன்பம் அடையாது
ஒருமையாய்த் தொகுத் திடினது பழியுடன் ஒழியும். (1)

ஆக்கிய பொருளைநல் அறத்தில் ஆக்கினன்
பாக்கிய வான்அதைப் பதுக்கி வைத்தவன்
தேக்கிய கழிவுநீர்ச் சிறுகிடங்கென
மேக்குயர் பழியொடு வெம்பி வீழுமே. (2)

கழிந்த வெங் குட்டத்துள் கலந்து நிற்குநீர்
பொழிந்த புண்ணுற்றமே புறத்து வீசல்போல்
இழிந்துறும் உலோபர்பால் இருக்கும் வெம்பொருள்
வழிந்தபுன் பழியையே வளர்த்து மாயுமால். (3)

(வீரபாண்டியம்)

உலோபியின் பொருள் நிலையை இவை குறித்து வந்துள்ளன. குறிப்புகள் கூர்ந்து நோக்கி ஈண்டு ஓர்ந்து உணரவுரியன.

செல்வம் எவரிடமும் நெடிது நிலைத்து நில்லாதது; அது தன்பால் நிலைத்திருக்கும் போதே மனிதன் நல்லதைச் செய்து கொள்ளவேண்டும். அவ்வாறு செய்தவன் உய்திபெற்று உயர்ந்து போகிறான்; செய்யாதவன் வெய்ய பேதையாய் இழிந்து படுகிறான். பணநசை பழி வசையாய் வருகிறது.

ஈயாத உலோபியை எவரும் வெறுக்கின்றார்; உற்றமனைவியும் ஊனமா இகழ்கின்றாள்; பெற்றபிள்ளைகளும் பிழைபடப் பேசுகின்றார். அவனது வாழ்வு அவலமாயழிகின்றது.

"ஈகையில் லாதுபொன் ஈட்டுவோன் கொண்ட
தோகையும் மைந்தரும் தொலைகிலான் என
ஓகையாய் அருவிடம் உணவில் இட்டு அவன்
சாகையே கருதிமா தவம்செய் வார்களே." (நீதிநூல்)

பொன்காத்த பூதம் போல் பணத்தை உலோபி பற்றி நிற்பன் ஆதலால் அவன் செத்துத் தொலைவதையே எல்லாரும் விரும்பி எதிர் பார்த்து நிற்பர் என இது குறித்துள்ளது.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்--கூடுவிட்டிங்கு
ஆவிதான் போனபின் பாரே அநுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம். (நல்வழி,22)

ஈட்டிய பொருளை அனுபவியாமலும், அறம் செய்யாமலும் வீணே தொகுத்து மறைத்து வைத்திருக்கும் உலோபிகளை நோக்கி இரங்கி ஔவையார் இவ்வாறு புத்தி போதித்திருக்கிறார். பொருளால் அடையவுரிய பயனை இழந்துவறிதே மடிந்து போவது பெரிய மருளாயுள்ளது. மருண்டமனப்பற்றால் இருண்ட இழிவுகள் திரண்டு வருகின்றன; வரவே யாதும் அறியானாய் அவலமாயிழிந்து அவன் கவலையோடு அழிகின்றான்.

பித்து பணத்தில் பெருகவே எத்திறத்தும்
செத்தவன் ஆவன் சிதைந்து.

உலோபியின் செத்தவாழ்வை இது உணர்த்தியுள்ளது.

673. ஈயா திவறும் இழிமகன்தன் செல்வத்தின்
ஓயா வறுமை உயர்ந்ததே—பேயாகும்
வன்பிறப்பும் பொல்லா வசையும் ஒழியாத
புன்பிறப்பும் நல்கா புகுந்து. (ங.)

இ-ள்.

ஈயாத உலோபியான இழிமகன் எய்தியுள்ள செல்வத்தினும் ஓயாத வறுமை நல்லது; பொல்லாத பேய்ப்பிறப்பும் புலையான பழியும் இழிவும் அது நல்கா என்க.

செல்வம் உயர்ந்த சிறப்புடையது; தன்னை உடையானுக்கு எல்லா மேன்மைகளையும் அருளவல்லது. அத்தகைய செல்வம் புலையான புல்லரிடமிருந்தால் தலைமை சிதைந்து நிலைமை குலைந்து தாழ்ந்து அழிகின்றது. உடையவன் இயல்பின் படியே உடைமைகள் செயலடைந்து வருவது உலகக் காட்சியாயுள்ளது.

உள்ளத்தில் நல்ல இயல்பு இல்லாத புல்லரிடம் செல்வம் சேர்ந்தால் அது அல்லலாய் அவலமே அடைகின்றது.

பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யால்திரிந் தற்று. (குறள், 1000)

நல்ல பசுவின் பாலும் கெட்ட பாத்திரத்தில் இட்டால் கெட்டுப்போம்; அது போல் இன்ப நிலையமான நல்ல செல்வமும் பண்பு இல்லாத புல்லனிடம் சேர்ந்தால் புலையாயிழிந்து படும் என இது உணர்த்தியுள்ளது. பாத்திரபேதத்தின் இழிநிலை விழி தெரிய வந்தது.

"மூத்திரக் கலசத் துற்ற முதியதீம் பாலும் தீதாய்
மாத்திரைப் பொழுதில் மாறி மாசுறும் அதுபோல் செல்வம்
தீத்திற முடையார் பக்கல் சேரினே தீதாம்; யாவும்
பாத்திர பேதத் தாலே பழிநிலை யடைந்து பாழாம்."

சிறந்த பொருளும் சேர்ந்த இடத்தின் புன்மையால் இழிந்து படும் என்பது இதனல் உணர்ந்து கொள்ள வந்தது. பொருள் அடைந்தவன் மருளடைந்து மயங்கி மாள்வது இருளடைந்த தீமையாய் இயங்கிவருகிறது.

மனநலம் உடையனுய் மனிதன் உயர்ந்தபோது எல்லா மாண்புகளும் இனிதே விளைந்து வருகின்றன. உள்ளம் இழிந்து

படின் யாவும் இழிவாய் எவ்வழியும் ஈனமுறுகின்றன.

அகத்தில் நல்ல பண்புடையவன் புறத்தே செல்வம் இலனு யினும் சிறப்பும் சீரும் பெறுகின்முன்; அந்தப் பண்பு இல்லாத வன் எவ்வளவு செல்வங்களை எய்தியிருந்தாலும் யாதொரு மேன் மையும் காணுமல் இழிந்தே நிற்கின்முன்.

அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ வாயினும்
கள்ளிமேல் கைநீட்டார் சூடும்பூ அன்மையால்
செல்வம் பெரிதுடையர் ஆயினும் கீழ்களை
நள்ளார் அறிவுடை யார். (நாலடியார்,262)

ஈயாத கீழ்மக்களிடம் மிகுதியாய்ச் செல்வம் பூத்திருந்தாலும் அவை கள்ளிப்பூக்களைப் போல் எள்ளப் படும் என்னும் இது ஈண்டு உள்ளி உணரவுரியது. பொருள் பெருமையுடையதாயி னும் மருவிய இடத்தின் சிறுமையால் மதிப்பிழந்து படுகிறது.

ஈயும் இயல்பில்லாத இழிமகன் செல்வம் பெற்றிருப்பதை விட அதனைப் பெருமல் இருப்பது நல்லது. பொருள் இல்லையா ளுல் அவனுடைய புன்மை வெளியே தெரியாது. வன்னெஞ் சன், கொடியவன், உலோபி, பாபி என்னும் பழிகள் நேரா. பொருளுடைமையால் இழிபழிகள் நேர்தலால் அந்த மருளனு க்கு வறுமை நல்லது என வந்தது.

வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான். [நீதிநெறிவிளக்கம்,67]

செல்வமிருந்தும் ஈகையில்லையாளுல் அவனுக்கு வரும் இழிவு களை விழிதெரிய இது விளக்கியுள்ளது. வறிய ஏழையினும் பொருளுடைய உலோபி பழிகளை யடைந்து பாழ்படுகின்முன்.

வழங்காத செல்வரின் நல்கூர்ந்தார் உய்ந்தார்
இழந்தார் எனப்படுதல் உய்ந்தார்--உழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலும் உய்ந்தார்தம் கைந்நோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல. [நாலடியார்,277]

செல்வமுடைய உலோபியினும் வறியவர் பலவகையினும் உயர் நலங்களையடைந்துள்ளார் என்னும் இது இங்கே சிந்திக்க

வுரியது. உலோபி பணத்தைப் பூமியில் புதைத்து வைப்பன்; அந்த அல்லல் வறியவர்க்கு இல்லை ஆதலால் கல்லுதலும் உய்ந் தார் என்றார். இங்கே சொல்லியுள்ள குறிப்புகள் பலவும் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவுரியன.

ஈயாத உலுத்தன் ஒருவன் பிறர்க்குத் தெரியாதபடி தன் பொருளைப் பூமியில் தோண்டிப் புதைத்து வைத்தான். அப் பொழுது பூமிதேவி அவனைப்பார்த்துச் சிரித்தாள்: "ஏ மூடனே! என் வாயில் நீ பொன்னையிடுகின்றாய்! நான் உன் வாயில் என்னை இடுவேன்; அதாவது மண்ணைப் போடுவேன்" என்று புன்னகையோடு சொன்னாள்.

"என்வாயில் பொன்னை இடுகின்றாய் பேதையே!
உன்வாயில் என்னை இடுவேன்காண்---என்னவே
பூதேவி சொன்ன பொருள்மொழியை அம்மூட
மூதேவி கேளான் முனம்."

தன் பொருளை இவ்வாறு மண்ணில் புதைத்துப்போன அந்த உலோபி சிலகாலம் கழித்து வந்து கிளைத்துப் பார்த்தான்; அங்கு யாதொன்றும் காணாமையால் அலறி ஏங்கி அழுதான்; ஆவி தீர்ந்துபோனான். பொருளில் மருள்கொண்டுள்ள உலோபி களுடைய வாழ்வு இழிவும் இன்னலும் படிந்து எவ்வழியும் இவ்வாறு பரிதாபமாகவே முடிந்துபோகின்றது.

பேயாம் பிறப்பும் வசையும் நல்கும்.

என்றது ஈயாமையால் எய்தும் இழிதுயரங்களைத் தெளி வுற விளக்கியபடியாம். பொருள் கையில் இருந்தும் உள்ளம் இரங்கி உதவாத பாவத்தால் மனிதன் மறு பிறப்பில் பேயாய்ப் பிறக்கின்றான். "ஈயாது இவறும் மருளான் மாணுப் பிறப்பு ஆம்" என்ற தேவர் அருள்மொழியும் ஈண்டுப் பொருள் தெரியவுரியது. இவ்வாறு இழி பிறப்பும் பழி வசையும் அடையாமல் பொரு ளுடையவர் விழிதிறந்து தெளிவடைந்து உய்ய வேண்டும்.

உற்ற பொருளால் உயிர்க்குறுதி செய்கவின்றேல்
பேற்றன எல்லாம் பிழை.

இதனை உய்த்துணர்ந்து உறுதி நலம் பெறுக.

---

674. ஐம்புலனும் ஆர அருந்தார் அறங்கருதி
இம்பரிசை ஏற இனிதீயார்—வம்பமைய
ஈட்டி இருந்தார் இருந்துயரே கண்டுபழி
நீட்டி யழிந்தார் நிலை. (ச)

இ—ள்

உலோபிகள் நல்ல சுகபோகங்களை அனுபவியார்; தரும நலம் கருதி உதவிபுரியார்; பொருளை ஈட்டித் தொகுத்து வீணே கூட்டிவைத்துப் பழி இழிவுகளை நீட்டி நிறுத்தி அழிவர் என்க.

இது உலோபியின் மயல் இயல்களை உணர்த்துகின்றது.

சீவகோடிகள் யாவும் தேக போகங்களை ஆவலோடு நுகர்ந்து வருகின்றன. படுகின்ற பாடுகள் எல்லாம் வயிற்றுப் பசியைத் தணித்துச் சுகமாய் வாழவேண்டும் என்றே யாவரிடமும் நீளமாய்த் தொடர்ந்து வந்துள்ளன. இயல்பான இந்த நியமம் உலோபிகளிடம் அயலாய் விலகி நிற்கிறது.

ஈட்டிய பொருள் யாதும் குறைந்து படாமல் நிறையச் சேர்த்துவைப்பதே அவரது இயல்பாய் இசைந்திருத்தலால் பொறி நுகர்ச்சிகளை ஆனவரையும் அவர் அடக்கிக்கொள்ளுகின்றனர். மானம் மரியாதைகளையும் இழந்து விடுகின்றனர்.

நல்ல உணவுகளை உண்ணார்; சிறந்த ஆடைகளை அணியார்; உயர்ந்த காட்சிகளைக் காணார்; எப்படியாவது வயிற்றைக்கட்டி வாயைக்கட்டிப் பொருளைச் சேர்த்து வைப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பர் ஆதலால் உலோபிகளுடைய வாழ்வு வறுமை தோய்ந்து எவ்வழியும் பரிதாபமாகவே படிந்து நிற்கும்.

பொருள்வளங்கள் நிறைந்திருந்தாலும் உலோபத்தால் யாதொரு போகங்களையும் அனுபவியாமல் இருப்பதால் உலோபி செல்வம் பெற்றும் ஏழையாய், உயிரிருந்தும் செத்தவனாய் எள்ளி இகழப்பட்டு வீணே இழிந்துள்ளான்.

வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். (குறள், 1001)

வீடு நிறைய அதிகமான பொருளை வைத்திருந்தும் உலோபத்தால் நல்ல உணவு முதலிய போகங்களை அனுபவியாதவன் உயிர் உளனாயினும் செத்தவனே எனத் தேவர் இங்ஙனம் உரைத்

திருக்கிறார். அறிவுடைய உயிரின் பயனை அடைந்துகொள்ளாமையால் சேத்தான் என்றார். நுகர்வில் உணவு மிகவும் அவசியம் ஆனது; அதனையும் உலோபி சரியாக உண்ணான் என்றதனால் அவனது ஊனநிலை உணரவந்தது.

உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்---கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தான்என் றெண்ணப் படும். (நாலடியார் 9)

உலோபியின் இழவையும் இழிவையும் அழிவையும் மேலோர் இங்ஙனம் பரிவோடு உணர்த்தியுள்ளனர். பொருள் எப்படியும் அழியும் இயல்பினது; அது தன்கையில் உள்ள போதே அனுபவித்துக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் அனுபவியாமல் உலோபி அவலமாய் அழிந்துபோகிறான்; போகவே, அந்தப்பொருளை அயலார் கவர்ந்து போகின்றார். பொருளின் பயனை அடையாமல் உலோபி மருளனாய் இழிந்து உழலுதலால் அவனை யாவரும் இகழ்ந்து பழிக்கின்றார். மானமும் மதிப்பும் மனிதத் தன்மையும் இல்லாதவனாய்ப் பிசுனன் பிழைபட்டு நிற்கின்றான். அவனது நிலை பரிதாபமாயுளது.

"Misers are generally characterised as men without honour or without humanity, who live only to accumulate, and to this passion sacrifice every other happiness." (Goldsmith)

"கண்ணியமும் மனிதத்தன்மையுமின்றிப் பொருளைச் சேர்த்துவைப்பதே உலோபிகளின் இயல்பாயுள்ளது; இந்தப் பணப்பற்றால் எல்லா இன்ப நலங்களையும் அவர் துறந்து விடுகின்றனர்" என்னும் இது இங்கே அறிய வுரியது.

பொருளின் மேலுள்ள மருளால் மனிதன் பேயனாய்ப் பிழைகளில் இழிந்து பழிகளில் ஆழ்ந்துள்ளான். உலோபம் உள்ளத்தில் புகுந்தால் அந்த மனிதன் உலகத்தின் எள்ளல்களையெல்லாம் மறந்து பொருள் ஒன்றையே எவ்வழியும் இறுகத் தழுவி இருள் மண்டிக்கிடக்கின்றான்.

கருமி, உலுத்தன், பிசுனன், கிருபணன் என்று உலோபிக்குப் பெயர்கள் வாய்ந்துள்ளன. இந்தப் பெயர்க் குறிப்புகள்

அவனுடைய இழிவுகளை விழிதெரிய விளக்கிப் பழிகளையும் துலக்கி நிற்கின்றன. உற்ற நாமங்களால் குற்றங்கள் தெரிந்தன.

தருமம் புகழ் முதலிய அருமை நலங்களையெல்லாம் இழந்து சிறுமையாளனு யிருத்தலால் உலோபி கருமி என நேர்ந்தான்.

புண்ணியவான் தருமி என வந்தான்.

பாவி கருமி என நின்முன்.

தீய காரியங்களைச் செய்கின்ற பாவகாரியைக் குறித்து வரும் கருமி என்னும் பேரைத் தனக்குத் தனி உரிமையாக உலோபி பெற்றிருத்தலால் அவனுடைய புலை நிலைகளை அது உய்த்துணரச் செய்தது.

பொருளை இறுகப் பற்றி மருளனுய் இருள்மண்டிக் கிடப் பனே அன்றி வேறு தீய செயல்களை உலோபி துணிந்து செய் யான். அப்படியிருந்தும் அவன் பாவி என நேர்ந்தது நிலைமை களைக் கூர்ந்து உணர்ந்துகொள்ளவந்தது.

அறம் புகழ் இன்பங்களை ஆக்கவுரிய பொருளை அநியாய மாய்த் தடைசெய்து அவலப்படுத்தி யிருத்தலால் உலோபி பாபி என நேர்ந்தான். அவனது இருப்பு பலருக்கும் வெறுப்பாய்ப் பழி விளைத்து நின்றது.

"ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை." (குறள் 1003)

பொருள் ஈட்டம் ஒன்றிலேயே நசைகொண்டு மண்டி வேறு புகழ் நலங்களை விரும்பாத மனிதரது பிறப்பு இந்த உலகத் திற்குப் பெரிய பாரமாம் எனத் தேவர் இவ்வாறு கூறியுள்ளார். இதில் குறித்துள்ள குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கவுரியன. உலோ பிகள் பெரிய பாவிகள் ஆதலால் அவரைத் தாங்கிக்கொண் டிருப்பது கொடிய சுமையாகப் பூமிதேவி தவித்துக்கொண் டிருக்கிருள். இதனுல் அவரது ஈனமும் இழிவும் எளிது புலனும்.

ஈட்டி இருந்தார் பழிநீட்டி அழிந்தார்.

புகழ் யாதும் ஈட்டாமல் பழிகளையே நீட்டி உலோபிகள் பாழாய் இழிந்து அழிந்துபோகும் அவலநிலைகளைக் கவலையோடு இது காட்டியுள்ளது. பொருளில் மருளராய் இழிந்துபோகாமல்

தெருளுடையராய் உயர்ந்து கொள்வோரே அருளும் அறமும் படிந்து உத்தம கதிகளை அடைந்து கொள்ளுகின்றார்.

உலுத்தனைய் இழியாதே; உத்தமனைய் உயர்ந்துகொள்க.

---

675. உள்ளிரங்கி ஈயா உலோபம்போல் இவ்வுலகில்
எள்ளல் தருமிழிவொன் றில்லையே—வெள்ளமெனச்
செல்வம் இருந்தாலும் தீயன் கொடியனெனச்
சொல்விக்கும் ஆக்கும் துயர். (ரு)

இ—ள்

உள்ளம் இரங்கி ஈயாத உலோபம்போல் இவ்வுலகில் எள்ளலான இழிவுகள் வேறு யாதும் இல்லை; வெள்ளம் என்னும் படி நிறைந்த செல்வங்கள் இருந்தாலும் கொடியன் தீயன் எனப் பழிகளை வளர்த்து மனிதனை அது பாழ்படுத்தும் என்க.

அன்பு இரக்கம் முதலிய பண்புகள் மனிதனை உயர்த்தி மகிமைப்படுத்தி வருகின்றன. இந்த இனிய நீர்மைகளை இழந்த அளவு மனிதன் இழிந்து நிற்கிறன். குணநலங்களை இழந்தவன் பிணநிலையில் பிழை பட்டுள்ளான் என ஒரு பெரியவர் மறுகியிருக்கிறார். இயல்பு குன்றிய பொழுது உயர்வுகள் ஒழிகின்றன.

உலோபி பொருளிலேயே மருள்கொண்டு மயங்கியிருத்தலால் அருள் முதலிய குண நீர்மைகளை அடியோடு இழந்து அவலமாய் நிற்கிறன். நெஞ்சம் இரங்காத நெடிய கொடிய வன்கண்மையே அவனுக்குத் தஞ்சமாய் அமைந்திருக்கிறது.

தாட்சணியம் தனநாசம் என்பது பழமொழி. இது உலோபியினுடைய வாய்மொழியாய் முதலில் விளைந்து வந்தது. இதனையே வேதமந்திரமாக எப்பொழுதும் அவன் செபித்து வருகிறன். சமயம் நேர்ந்த போதெல்லாம் இந்த வாசகத்தை வெளியே சொல்லி உள்ளே களிப்பூர்ந்துள்ளான்.

உலோபிகளுடைய கருத்தும் குறிப்பும் பேச்சும் செயலும் பிழைபாடுகளே பெருகியிருக்கின்றன. இருப்பினும் அவற்றிலிருந்து யாதும் திருந்தாமல் யாண்டும் நீசமாய் நீண்டே நிற்கிறார். படிந்த பழக்கம் முடிந்த முடிபாய் மூண்டு வருகிறது.

ஈகைக்கு இரக்கம் காரணமாயிருத்தல்போல் ஈயாமைக்கு இரங்காமை ஏதுவாயிருக்கிறது. ஆகவே அருள் இழந்த மருளாய் உலோபம் இருள்படிந்துள்ளமை தெருளலாகும்.

ஈகை புகழை வளர்த்து வருகிறது.

ஈயாமை பழியை விளைத்து நிற்கிறது.

ஈகையாளன் இசையும் இன்பமும் எய்துகிறான்.

ஈயாத உலோபி வசையும் துன்பமும் மருவுகிறான்.

"ஈவானே தெய்வம்" என்றார் ஔவையார்.

ஈயாதவன் பேய் என்பது இதனால் பெறப்பட்டது.

யாருக்கும் உதவாத உலோபியை நோக்கிப் பொன்காத்த பூதம் என வையம் வைதுவருகிறது. இவ்வசையை யாவரும் அறிந்து வருகிறார். வசையுடையவர் இசை அடையாது போகிறார்.

இவ்வுலகில் மிகவும் இழிவான செயல் பிறரிடம் போய் இரந்து நிற்பதே. அதைக்காட்டிலும் இழிந்த பழி அவ்வாறு வருந்தி வந்து இரந்தவருக்கு இல்லை என்று சொல்லுவதேயாம். ஆகவே உலோபியினுடைய பழிநிலை எவ்வளவு இழிநிலையிலுள்ளது என்பதைத் தெளிவாக அறிந்து கொள்ளலாம்.

"ஈஎன இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று" (புறம் 204)

கழைதின்யானையார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் பாடியுள்ளார். யாசகம் இழிவே ஆயினும் அதைவிட உலோபியின் இழிவு கொடிய பழியுடையது என அவர் விழிதெரிய விளக்கியிருக்கும் நயம் வியந்து சிந்திக்கவுரியது.

ஈயா உலோபம்போல் இழிவு இல்லையே.

இதில் ஏகாரம் உணர்த்தி நிற்கும் பொருளை உள்ளச் செவியால் ஓர்ந்துகொள்ளுக. அரிய பொருளை அடைந்திருந்தும் உரிய புகழை அடைந்துகொள்ளாமல் கொடிய பழியாளனாய் உலோபி இழிந்து நிற்பது நெடிய துயரமாய் நீண்டுள்ளது. தனது பொருளின் மருளால் தனக்கு வசையும் இழிவும் வருதலை அறியாமல் இருப்பதால் உலோபி கொடிய வெறிகொண்ட பெரிய ஒரு மடையன் என அறிவுலகம் பரிவோடு அவனை இகழ்ந்து நின்றது. பழிப்புரைகள் விழிப்புற வந்தன.

பலவகையான நன்மைகளைப் பயக்க வல்ல செல்வத்தை வீணே பாழ்படுத்தியுள்ளமையால் அந்த நல்ல செல்வத்துக்கு உலோபி ஒரு பொல்லாத நோயாய் அமைந்து பேயாய் நிற்கின்றான். அவனது நிலை அதற்குப் புலையாய் நேர்ந்தது.

"ஏதம் பெருஞ்செல்வம் தான்துவ்வான் தக்கார்க்குஒன்று
ஈதல் இயல்பிலா தான்." (குறள் 1006)

தான் நன்கு அனுபவியாமலும் தக்கவர்க்கு யாதும் உதவாமலும் உள்ள உலோபி தன்பால் எய்தியிருக்கும் செல்வத்திற்கு ஒரு கொடிய நோய் ஆம் என நாயனார் இங்ஙனம் கூறியிருக்கிறார். குற்றம், கேடு, துன்பம் முதலிய துயர் நிலைகளையெல்லாம் ஒருங்கே உணர்த்திவரும் ஏதம் என்னும் சொல்லை இங்கே குறித்தது அவனது இழிநிலைமைகள் யாவும் தெளிவாத் தெரிய என்க.

தான் ஆசையாகப் பிடித்துவைத்திருக்கும் பொருளும் தன்னை உள்ளே இகழ்ந்து "இந்தப்பாவி என்னைக் கெடுத்துவைத்திருக்கின்றானே!" என்று உலோபியை நோக்கிக் கடுத்து வைது கொண்டிருக்கும். ஆகவே அவனது அவலநிலை பலவகையிலும் இழிவுடையதாய்ப் பழி படர்ந்துள்ளது.

துய்த்துக் கழியான் துறவோர்க்கு ஒன்று ஈகலான்
வைத்துக் கழியும் மடவோனை---வைத்த
பொருளும் அவனை நகுமே உலகத்து
அருளும் அவனை நகும். (நாலடியார், 273)

செல்வத்தை அனுபவிக்கத் தெரியாத மடையனை உலோபியை நோக்கிப் பொருளும் அருளும் இகழ்ந்து சிரிக்கும் என இது குறித்துள்ளது.

தெருளில் பொருள் வானுலகம் ஏறுதற்குச் செம்பொன்
இருளில் படிக்கால் புகழ்வித்து இல்லைஎனின் எல்லா
அருளும்நக, வையம்நக, ஐம்பொறியும் நையப்
பொருளும்நக ஈட்டும்பொருள் யாதும் பொருளன்றே
(சீவகசிந்தாமணி 2872)

வானுலகம் ஏறுவதற்குப் பொருள் இனிய ஏணியாக அமைந்துள்ளது; அதனை உலோபத்தால் சிறுமைப்படுத்தலாகாது; அவ்வாறு படுத்தின் அது சிரித்து இகழும்; ஐம்பொறி

யும் ஆர நுகர்ந்து யாவருக்கும் உதவிபுரிந்து வருவதே அரிய பொருளின் உரிய பயனும் என இது உணர்த்தியுள்ளது. பொருள் நிலையை நன்கு தெளிந்து அருள்நிலையில் உயர்க.

---

676. ஈதல் அனுபவித்தல் இல்லாமல் நாசமாய்ப்
போதல்இம் மூன்றே பொருள்நிலையாம்—ஓதிமுன்
வைத்த இருநிலையில் வையாப் பொருள்கடையாச்
செத்தொழிந்த தாமே தெளி. (௬)

இ—ள்

உயிர்களுக்கு இரங்கி உதவுதல், போகங்கள் நுகர்தல், வேகமாய் அழிந்துபோதல் ஆகிய இம்மூன்று நிலைகள் பொருளின் இயல்புகளாய் அமைந்திருக்கின்றன; முதலில் உள்ள இருவகைகளில் சரியாக வைக்கவில்லையானல் இறுதி வழியில் முழுதும் விரைந்து ஒழிந்துபோம் என்க.

இது பொருளின் நிலைகளை உணர்த்துகின்றது.

மனிதனுடைய முயற்சியால் பொருள் ஈட்டப்படுகிறது. அவ்வாறு ஈட்டிய பொருளை அவன் அனுபவிக்கின்முன். அனுபவங்கள் பலவழிகளாய்ப் பரவி யுள்ளன. ஐம்பொறிகளும் நுகர்தற்கு ஏதுவாயிருத்தலால் பொருளுக்குப் போறி என்று ஒரு பெயரும் வந்தது. பொருள் போகங்களாகி மனிதனை ஊட்டியருளுகிறது. இருக்க இடம், உடுக்க உடை, உண்ண உணவு, படுக்கப் பாய், படிக்க நூல், நடக்க வாகனம், அணிய அணி, என இன்னவாறு மனிதனுடைய வாழ்க்கையைப் பல வகைகளிலும் பரவி நின்று பொருள் வளம் படுத்தி வருகிறது. ஆக்கம், பாக்கியம் என்னும் பேர்களும் நோக்கவுரியன.

"சீரும் வெறுக்கையும் விபவமும் திருவும்
மாவும் ஆக்கமும் வாழ்க்கையும் பொறியும்
ஆகும் செல்வத்து அபிதா னம்மே." (பிங்கலந்தை)

மனிதனுடைய வாழ்க்கையைச் சீரும் சிறப்புமாச் செய்து வருகிற செல்வத்துக்கு இவ்வாறு பெயர்கள் வந்திருக்கின்றன. காரணக் குறிகளின் பூரண நிலைகள் கருதி யுணர வுரியன.

அனுபவித்தல் தன் உடலளவில் உரிமையாகிறது.

ஈதல் உயிருக்கு உறுதி புரிகிறது.

கல்விக்கு அறிவும் ஒழுக்கமும் பயன் ஆதல்போல் செல்வத்துக்குஅனுபவித்தலும்ஈதலும் பயன்களாயுள்ளன. பிறர்க்கு உபகாரமாய் ஈவது புண்ணியமாய் விளைந்து வந்து தன் உயிர்க்கு இன்பம் தருதலால் ஈதலே தலையாய பயனாய் நின்றது.

அனுபவித்தலினும் ஈதலை இதில் முதலில் குறித்தது உயிர்க்கு ஊதியமாய் அது உறுதி புரிதல் கருதி. எடுத்த உடம்பு அளவில் அனுபவம் முடிகிறது; ஈதல் உயிரோடு புகுந்து தொடர்ந்து எவ்வழியும் இதமாய் இன்பம் சுரந்து வருகிறது.

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு." (குறள் 231)

உயிர்க்கு ஊதியம் ஈதலே எனத் தேவர் இங்ஙனம் குறித்துள்ளார். இதனால் அதன் மகிமையும் மாண்பும் அறியலாகும். ஒரு பிறவியில் செய்த ஈகை உயர்ந்த தருமமாய் ஓங்கி உயிர்புக்குழியெல்லாம் புகுந்து உரிமையாய் மருவி யாண்டும் உய்தி புரிந்து வருதலால் ஈதல் உயிரின் ஊதியம் என வந்தது.

"ஈத்துச் செய்க பொருளை" என்றார் நல்லாதனார்.

"செல்வம் விரும்பின் பிறர்க்கு அளிப்பத் தேடுக;
கல்வி விரும்பின் நெறிநிற்பக் கற்கமன்:
அல்லலிலா இன்பமுற எண்ணி அருநெறியில்
செல்லின் இடர்நோன்றல் செய்." (இன்னிசை)

செல்வம், கல்வி, தவங்களை இது நல்வகையாக உணர்த்தியுள்ளது. நல்ல உபகாரம் செய்வதே செல்வம் ஆகும்.

பிறர்க்கு உதவி செய்யும் பொருட்டே உயர்ந்தோர் செல்வத்தைத் தேடுவர் என்றதனால் அதன் பாடும் பயனும் நாடி அறியலாம். அருள் நலமுடைய மேலோர் பொருள் ஈட்டம் எல்லாம் புண்ணிய நாட்டமாகவே கண்ணியம் படிந்து வந்துள்ளது.

"இல்லோர்க்கு இல் என்று இயைவது கரத்தல்
வல்லா நெஞ்சம் வலிப்ப நம்மினும்
பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே." (அகம், 53)

தன்பால் வந்து இரந்தவர்க்கு இல்லை என்று சொல்லாமல் கொடுக்க வேண்டுமே என்னும் ஆவலால் தனது அருமைக் காதலியையும் பிரிந்து ஒரு தலைவன் பொருள் தேடப் போயிருத்தலை இது குறித்திருக்கிறது. குறிப்பு கூர்ந்து சிந்திக்க வுரியது.

ஈட்டிய பொருளைப் போகங்களாக்கி நன்கு அனுபவிப்பவன் சுகி, போகி என நிற்கின்றான். வந்த விருந்தினரைப் பேணி எந்த வகையிலும் யாருக்கும் உதவி புரிந்து வருபவன் உபகாரி, தருமவான் எனப் பெருமை மிகப் பெறுகின்றான்.

**இரு நிலையில் வையாப் பொருள் கடையாய் ஒழிந்தது.**

ஈதலிலும் அனுபவித்தலிலும் செலவு செய்யாமல் வீணே சேர்த்து வைத்திருக்கும் பொருள் தானாகவே நாசமாய் அழிந்து போகின்றது. அழிவும் போக்கும் வழியமைந்து வருகின்றன.

பொருள் எவரிடமும் நிலைத்து நில்லாது; விரைவில் அழியும் இயல்பினது; அது அழிந்து போகுமுன் புண்ணியத்தையும் இன்பத்தையும் விரைந்து செய்து கொள்ள வேண்டும்; அவ்வாறு செய்து கொண்டவன் செல்வத்தின் பயன்களைப் பெற்ற பாக்கியவான் ஆகின்றான். அங்ஙனம் செய்து கொள்ளாதவன் வறிய வெறியனாய் வையம் இகழ வசை பட்டழிகின்றான்.

நீர் நிறைந்த ஒரு குளத்திற்கு இரண்டு மதகுகள் அமைந்திருந்தன. அந்த மடைகள் வழியே நீர் வெளியே பாய்ந்து பயிர்களையும் உயிர்களையும் நெடிது வளர்த்து வந்தன. ஒரு நாள் ஒருவன் வந்து அவற்றை இறுக்கி முறுக்கி அடைத்து விட்டான்; விடவே தண்ணீர் பெருகிக் கரையை உடைத்துக் கொண்டு முழுதும் வெளியே போய்விட்டது; அது போல் ஒருவனிடம் நிறைந்த பொருளை ஈதல் அனுபவித்தல் என்னும் இரண்டு இனிய வழிகளில் செலவு செய்து வரவேண்டும்; அவ்வாறு செய்யாமல் உலோபமாய்க் குவித்து வைத்திருந்தால் அது விரைந்து சிதைந்து அடியோடு அழிந்து போய்விடும் என்க.

தானும் அனுபவியாமலும் தக்கார்க்கு உதவாமலும் வீணே பொருளைத் திரட்டி வைத்திருப்பது மதிகெட்ட மருளர் செயலாதலால் அவர் பழிபட்டு இழிவுறுகின்றனர். ஈட்டி வைத்த செல்வமும் அவரை எள்ளி இகழ்ந்து விட்டு அயலே அகன்று போய் விடுகின்றது. மயலோடு உலோபர் மறுகி மாய்கின்றார்.

"கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய
கோடியுண் டாயினும் இல்." (குறள், 1005)

ஈவதும் நுகர்வதும் இல்லாதவர் பலகோடி பொருள்களை எய்தியிருந்தாலும் அவற்றால் அவர்க்கு யாதொரு பயனும் இல்லை என இது உணர்த்தியுள்ளது. எண்ணரிய காட்சிகள் எதிரே எய்தியிருந்தாலும் கண் இல்லாத குருடன் காணாது இழிதல் போல் புண்ணியம் இல்லாத உலோபி பொருளின் பயன்களை அடையாது மருளனாய் மடிந்து ஒழிகின்றான்.

பொருள் கிடைத்தால் அதனை விரைந்து பயன்படுத்திக் கொள்பவர் நயனுடையராகின்றார். போகத்தை நுகர்வதினும் ஈகையாகிய புண்ணியத்தையே மேலோர் கண்ணும்கருத்துமாய் எண்ணி விரைந்து யாண்டும் அடைந்து கொள்ளுகின்றனர்.

தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே
பிறவும் எல்லாம் ஓர் ஒக்கும்மே
செல்வத்துப் பயனே ஈதல்
துய்ப்பேம் எனினே தப்புந பலவே." (நக்கீரர்)

உலகம் முழுவதையும் ஆளுகின்ற சக்கரவர்த்திக்கும் ஒன்றும் இல்லாத ஏழைக்கும் உணவும் உடையும் இனமாயமைந்துள்ளன; அந்த அளவில் நின்றுவிடின் பெருமையாகாது; செல்வத்தின் பயன் ஈதலேயாம்; அதனை விரைந்து செய்ய வேண்டும்; செய்யாது நின்றால் அறம் புகழ் முதலிய அரிய நலங்கள் பல ஒழிந்து போம் எனக் கல்வி வீரராகிய நக்கீரர் செல்வத்தின் பயனை இங்ஙனம் நன்கு உணர்த்தியுள்ளார்.

பயன் படுத்தாத செல்வம் பாழ்படுகின்றது; தன்னைத் தடைப்படுத்தி வைத்திருந்தவனுக்கும் கொடிய பழியை விளைத்து விட்டு நெடிய வழியில் விரைந்து போய் விடுகின்றது.

"வழங்கலும் துய்த்தலும் தேற்றுதான் பெற்ற
முழங்கு முரசுடைச் செல்வம்---தழங்கருவி
வேய்முற்றி முத்துதிரும் வெற்ப! அதுவன்றோ
நாய்பெற்ற தெங்கம் பழம்." (பழமொழி, 151)

ஈதலும் துய்த்தலும் தெரியாத உலோபி செல்வம் நாய் பெற்ற தேங்காய் போல் நோய் பற்றியுளது என இது குறித்திருக்கிறது. நாய்க்குத் தேங்காய் தக்குமா? என்னும் பழமொழி உலோபியை நோக்கி வந்துள்ளது என்று தெரிகின்றது.

கொடுத்தலால் புண்ணியம் விளைகின்றது; துய்த்தலால் இன்பம் விளைகிறது; இந்த இரண்டையும் ஒருங்கே இழந்து பழியும் துன்பமும் எய்தி உலோபி இழிவடைவது முழுமடமையாயுள்ளது. விழிதிறந்து பார்த்தவர் தெளிவடைந்து உய்கின்றார்.

"மென்மொழியால் உள்நெகிழ்ந்து ஈவானேல் விண்ணோரால்
இன்மொழியால் ஏத்தப் படும்" (சிறுபஞ்சமூலம், 82)

இங்கே இரங்கி ஈவானை அங்கே தேவர்கள் புகழ்ந்து போற்றி உவந்து தழுவிக் கொள்வர் என இது காட்டியுள்ளது. இத்தகைய திவ்விய நிலைகளையெல்லாம் இழந்து உலோபத்தால் மனிதன் சிறுமையடைந்து போகிறான்.

மருள்மண்டிய உலோபத் தீமையை ஒழித்துப் பொருளின் பயனை அடைந்து கொள்பவன் தெருளுடைய குலமகனாய்ச் சிறந்து திகழ்கின்றான். சிறப்பு இழந்தவன் சீரழிந்து கழிகிறான்.

புல்லியன் ஆக்கிப் புலைக்கும் உலோபத்தை
ஒல்லை ஒழிக உடன்.

புலை நிலை நீங்கித் தலைமையில் ஓங்குக,

---

677. ஈகை அடைந்திருந்தும் ஈகை இலாமையினால்
ஓகை அடையா தொழிகின்றான்—ஈகை
உடையான் அடையும் உயர்நலங்கள் கண்டும்
அடையான் மடையன் அவன். (எ)

இ—ள்

பொருள்கள் பல நிறைந்திருந்தும் ஈகை ஒன்று இல்லாமையினால் உலோபி புகழ்இன்பங்களை இழந்து வறிதே ஒழிகின்றான்; ஈகையாளன் அடைகின்ற உயர் நலங்களை நேரே கண்டும் உள்ளம் தேறி உதவாமல் ஒழிவது அந்த மடையனுடைய மதிகேடேயாம்; அறிவுகெட யாவும் கேடாய் முடிகின்றன என்பதாம்.

நல்ல அறிவும் உள்ளப் பண்பும் மனிதனைத் தனி நிலையில் உயர்த்தி வருகின்றன. இந்த இரண்டும் இல்லையானால் அந்த மனிதன் எவ்வளவு செல்வங்களை அடைந்திருந்தாலும் சீர்மை யிழந்து சிறுமையே யுறுகின்றான்.

செல்வம் எவரையும் சிறப்புடையராக்கும் இயல்பினது; ஆயினும் அறிவிலிகளிடம் அது வறிதே அவலமடைகின்றது.

நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. (குறள், 1008)

உலோபியிடம் கிளைத்துள்ள செல்வம் ஊர் நடுவே நச்சு மரம் பழுத்தது போலாம் எனத் தேவர் இங்ஙனம் குறித்திருக் கிறார். நச்சப்படாதவன் என உலோபியைச் சுட்டியிருப்பது உய்த் துணர வுரியது. யாருக்கும் யாதும் கொடான் ஆதலால் அவனை எவரும் விரும்பார்; எல்லாரும் வெறுத்தே பழிப்பர்; ஆகவே இப்படி அவன் அவப்பேர் பெற்றான்.

நல்ல செல்வம் புல்லன் கையில் சிக்கினமையால் அதுவும் புலையடைய நேர்ந்தது. தனது சேர்க்கையால் இனிய திருவும் இன்னாதாய் இகழும்படி ஆனமையின் அவனது ஈனமும் இழி வும் இயலும் மயலும் விழி தெரிய வந்தன.

ஈகை இரண்டனுள் முன்னது பொன்; பின்னது கொடை. ஈகை இல்லாதவனிடம் ஈகை சேர்ந்திருப்பது செத்த சவத்திடம் பூமாலை சேர்ந்திருப்பது போலாம். விழுமிய செல்வம் இடத்தின் புன்மையால் இழிவுடையதாயது.

"சுற்றும் கருங்குளவி சூரைத்தூறு ஆரியப்பேய்
எற்றும் சுடுகாடு இடிகரையின்---புற்றில்
வளர்ந்த மடற்பனைக்குள் வைத்ததேன் ஒக்கும்
தளர்ந்தார்க்கு ஒன்று ஈயார் தனம்." (ஔவையார்)

ஈயாத உலோபி பொருளைக் குறித்து ஔவையார் இவ்வாறு பாடியிருக்கிறார். உவமைக் குறிப்புகள் ஊன்றி உணரவுரியன.

நல்ல பயனுடையதாய் எல்லார்க்கும் இன்பம் தருகிற பொருள் பொல்லாத உலுத்தன் கையில் சிக்கியதால் புலைபடிந்து நிலைகுலைந்து நின்றது. சேர்ந்த இடத்தால் சிறுமை ஆயது.

தானும் பழியடைந்து தன் கைப்பொருளையும் இழிவடையச் செய்தலால் உலோபியின் வாழ்வு ஈனமாய்க் கழியநேர்ந்தது.

ஈகை இலாமையால் ஓகை அடையாது ஒழிகின்ருன்.

என்றது பிசுனனுடைய வாழ்வின் பிழைபாடு தெரிய வந்தது.

ஈதலில் புகழும் புண்ணியமுமேயன்றி ஈகின்ற பொழுது ஓர் இன்பமும் உள்ளது. ஈயும் பொருளை ஏற்றுக் கொள்ளுகின்றவர் இன்பம் உறுகின்ருர். அந்த மகிழ்ச்சியைக் கண்டு ஈகையாளன் பேரின்பம் அடைகின்ருன். எதிரே நின்ற உயிர் மகிழத் தன் உள்ளமும் மகிழ்கின்றது. புண்ணியத்தோடு கலந்து எழுகின்ற இந்த அரிய இன்பத்தை ஈயும் இயல்புடைய வள்ளல்களே தனி உரிமையாக அடைந்து கொள்ளுகின்றனர். புனிதமான இந்த நல்ல இன்பத்தை உலோபிகள் எள்ளளவும் அறியாமல் இழந்து போகின்ருர்; போகவே எள்ளலும் இழிவும் ஏகமா அவர் அடைந்து சாகின்ருர்.

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (குறள், 228)

தம் பொருளை யாருக்கும் கொடாமல் அவமே தொகுத்து வைத்து இழக்கின்ற வன்கண்ணர் ஈந்து மகிழும் இன்பத்தை அறியாரோ? எனத் தேவர் இவ்வாறு பரிதாபமாய் உரைத்திருக்கிருர். அந்த ஈகையின் இன்பத்தை அறிந்திருந்தால் துன்பமும் பழியும் அடைந்து வீணே தம் பொருளை இழந்து போகார்; அறியாமையினுலேதான் பெரிய இழவை அவர் மருவி அழிகின்ருர் எனப் பெரியவர் மறுகியுள்ளமை நுணுகி யுணர வந்தது.

புகழும் புண்ணியமும் அரிய இன்ப நலங்களை அருளி மனித வாழ்வை எவ்வழியும் இனிமை செய்து புனிதமா மகிமை புரிந்து வருகின்றன. உயிரின் உயர் ஊதியங்களான அவை ஈகையால் அமைகின்றன. ஈகையாளன் கீர்த்திமான் தருமவான் எனக் கிளர்ந்து விளங்குகிருன்.

இத்தகைய ஈதலை இழந்தவன் உலோபியாயிழிந்து நோதலை அடைகின்ருன். பழியும் இழிவும் எவ்வழியும் அவனைச் சூழ்ந்து கொள்ளுகின்றன. பொருளின் பயனை அறமும் இன்பமும் எய்தாமல் மறமும் துன்பமும் எய்துதலால் அவனுடைய வாழ்வு

தாழ்வாய் அவலமுறுகின்றது. செல்வமிருந்தும் உலோபத்தால் சீரழிந்து அல்லலடைய நேர்ந்தான்.

“கல்வி கல்லாரின் கற்றறி வில்லார்
கடையர்என் றுரைப்பது கடுப்பச்
செல்வம் இல்லாரின் செல்வமுற் றிருந்தும்
செய்வினை செய்வகை செய்யார்
பலவிதத் தினிலும் கடையரே; உலகில்
பார்த்தவர் பழிக்கவும் பின்னர்ப்
புல்லிய நரகில் புகுதவும் போந்த
பூரியர் இவரலால் எவரே?” (குமணன்)

கற்றிருந்தும் கல்வியின் பயனாகிய ஒழுக்கம் இல்லாதவர் கல்லாத மூடரினும் கடையரே; அதுபோல் செல்வம் பெற்றிருந்தும் அதன் உரிமையான ஈகை இல்லாதவர் யாதும் இல்லாத ஏழைகளினும் ஈன மிடியரே என இது உரைத்துள்ளது. பூரியர், நரகர் என உலோபரை இதில் குறித்திருக்கிறார். பூரியர் = நீசர். அரிய திருவின் பயனை இழந்து பழி இழிவுகளில் படிந்து கொடிய நரகம் புகுதலால் உலோபரது மடமை மருள்களை யாண்டும் மேலோர் கடுமையாக இகழ நேர்ந்தனர்.

உற்ற பொருளை உதவா உலோபத்தால்
பெற்ற பிறப்பும் பிழையாகிக்---குற்றம்
பலபடிய நின்று பழிதுயரே கன்றி
அலமருவர் அந்தோ அவம்.

கருமி இவ்வாறு பரிதாபமாய் இழிந்து அழிகின்றான்.

பொருளின் பயனை உணர்ந்து புண்ணியம் பெறுக.

---

678. செத்த சவமும் சிலர்க்குதவி யாயிருக்கும்
ஒத்த உருவில் உயிரிருந்தும்—பித்தம்
படிந்த பிசுனன் படியில் எதையும்
ஒடிந்தும் உதவான் உணர். (அ)

இ—ள்

செத்த சவமும் சிலர்க்கு உதவியாயிருக்கும்; உயிரோடு இருந்தாலும் உலோபி யாருக்கும் யாதும் உதவான் என்பதாம்.

ஒத்த உருவு என்றது பொருந்திய மனித வடிவத்தை. அரிய பேருய்க் கிடைத்துள்ள மனித உருவை அடைந்திருந்தும் உரிய பயனை அடையாமையால் அந்தப் பிறப்பு அவலமாயிழிந்து அவமே கழிந்து போகிறது.

உலகப் பொருள்கள் உயிரினங்களுக்குப் பயன்படும் அளவு உயர்வாக மதித்து உவந்து போற்றப் படுகின்றன. பயன் இல்லாதன இகழ்ந்து தள்ளப்படுகின்றன. பிற உயிர்களுக்கு இதமாய்ப் பயன்பட்டுவரின் அந்த மனிதன் தன் உயிர்க்கு உயர்ந்த பயனடைந்தவனாய் ஒளி நிறைந்து வருகிருன். வெளியே விதைத்தது உள்ளே விளைவாய்த் தழைத்து வருகிறது. பருவம் கண்டு விதையாதவன் வறியனாய் வாடி வசையும் துயரும் நீடி இழிந்துபோகிருன். ஈனப்போக்குகள் இழிவுகளாய்வருகின்றன.

இந்த இழிவையும் அழிவையும் தழுவி உலோபி பழியாய்ப் பாழ்படுகின்ருன். பொருளாசையால் குருடுபட்டு அறிவுக்கண் பாழாயுள்ளமையால் தனக்கு நேருகிற பழிகேடுகளையும் அழி துயரங்களையும் அறிய முடியாமல் அவன் வெறியனாய் விளிந்து கழிகிருன். ஆவதை ஆறிந்து கொள்வதே அறிவின் பயனும்.

பொருளைப் போற்றி வாழ் என்பது பொருளாதாரத்தின் நீதி போதனை. கருதிப் பேணி வருவது காணியாய் வருகிறது.

ஊணின் மிச்சம் உலகம் ஆளும் என்பது பொருள் வளர்ச்சியின் பழமொழி. அதுவளர்ந்துவரயாவும்கிளர்ந்துவருகின்றன.

இவ்வாறு பொருளைப் போற்றி வாழாமல் அதனைத் தூற்றி விடலாமா? கையிலுள்ளதை வெளியே விடின் பின்பு வறியனாய் நைய நேருமே! வறுமையுறின் சிறுமைகள் பலவும்வந்து விடுமே! என இன்னவகையான ஐயங்கள் இங்கே தோன்றலாம்.

செட்டும் சிக்கனமும் உயர்ந்த வாழ்க்கையின் சிறந்த அறிகுறிகள். உழைப்பும் சிக்கனமும் எவ்வழியும் பொருளைப் பெருக்கி வருகின்றன. அப் பெருக்கம் மகிமைகளை அருளுகின்றது.

வெண்ணெய்நல்லூர் சடையப்ப பிள்ளை பெரிய கொடை வள்ளல். நிறைந்த செல்வர். செட்டும் சீரும்ஆன வாழ்க்கையில் கட்டும் காவலும் உடையவர். ஒரு நெல் வெளியே சிந்திக்கிடந்தாலும் அதனை எடுத்துச் சேர்ப்பர். முற்றத்தில் சிதறிக் கிடந்த

நெல்லுகளை ஒருநாள் பொறுக்கிக் கொண்டிருந்தார். அவ்வமையம் பரிசில் கருதி அவரிடம் ஒரு புலவர் வந்தார். நிலைமையைப் பார்த்தார். இப்படிக் கஞ்சத்தனமாயிருப்பவர் நமக்கு என்ன கொடுப்பார்? என்று அவர் கருதினர். பின்பு அவரை உபசரித்து விருந்து புரிந்து ஒரு பெருந்தொகையை இவர் உவந்து கொடுத்தார். அவர் வியந்து மகிழ்ந்தார். தான் கருதிய பிழையை உரியவரிடம் அவர் மறுகி மொழிந்தார். "இப்படிக் காணி காணியாத் தேடுவது கோடிகோடியாக் கொடுக்கவேயாம்" என இக் கொடை வள்ளல் உரைத்தார். புலவர் புகழ்ந்து போயினர்.

"சிந்தியஓர் நெல்லையுமே சிந்தாமல் சேர்த்துவந்தார்
வந்தவருக் கெல்லாம் வழங்கினர்---அந்த
அருளாளர் செய்கை அரசர் முதலாப்
பொருளாளர் கண்டார் புகழ்ந்து."

இங்கே நிகழ்ந்துள்ள நிலைகளைச் சிந்திக்க வேண்டும்.

செட்டு நல்லது. உலோபம் கெட்டது.

செட்டும் சீருமாய் உள்ளவரை உலோபி என்று சொல்லி விடலாகாது. அளவறிந்து செட்டாய் வாழ்பவரே வாழ்க்கையைச் சீரும் சிறப்புமாய் நடத்துபவராவர்.

உலோபம் எவ்வழியும் யாருக்கும் யாதும் உதவாத ஈன இயல்பு ஆதலால் அதனையுடையவர் யாவராலும் இழிக்கப்படுகின்றர். யாதொரு வகையிலும் இரங்கி உதவாமல் மடமையாய் மருள் மண்டி நிற்பவரை வையம் வைது வருகிறது. கண் இருந்தும் குருடராய்க் காதிருந்தும் செவிடராய்ச் சுவை கெட்டிருத்தலால் உலோபிகள் பூமிக்குப் பாரங்கள் என இகழப் பட்டுள்ளார். பயன் அற்றவர் பழியாளராயினர்.

"வள்ளல் எனக்கூறி வாழ்த்தினும் வாய்திறவார்
எள்ளளவும் ஈய இசையாரே---உள்ளும்
செவிக்குணவு கொள்ளாச் செவிடரிவ ரன்றிப்
புவிக்குப் பொறையார் புகல்."

அரிய பொருளை அடைந்திருந்தும் கொடிய உலோபத்தால் இவ்வாறு கடையராய்க் கழிய நேர்ந்தார். பயன் இலாமையால் பழிகள் படிந்து இழிவுகள் மிடைந்து அழிவுகள் அடைந்தன.

"பதர்ஆகிலும் கனவிபூதி விளைவிக்கும்;
பழமை பெறு சுவாகிலும்

பலருக்கும் மறைவாகும்; மாடுரைஞ்சிடும்; மலம்
பன்றிகட்கு உபயோகமாம்;
கதமிகு கடாஎன்னில் உழுது புவிகாக்கும்; வன்
கழுதையும் பொதி சுமக்கும்;
கல்எனின் தேவர்களும் ஆலயமுமாம்; பெருங்
கான்புற்றும் அரவ மனையாம்;
இதமிலாச் சவமாகிலும் சிலர்க்கு உதவிசெயும்
இழிவுறு குரங்காயினும்
இரக்கப் பிடித்தவர்க்கு உதவி வரும்; வாருகோல்
ஏற்ற மாளிகை விளக்கும்;
மதமது மிகும்பரம லோபரால் உபகாரம்
மற்றொருவருக்கும் உண்டோ?" (குருபாததாசர்)

கல் ஆலயமாம்; தேவரும் ஆம்; கழுதை கசடர் பொதிசுமக்கும்;
கடாவோ உழுதுபயிரிடற்காம்; கட்டம் பன்றிக்கு இரையாகும்;
புல்ஏறு ஈசர் வாகனமாம்; பொதியும் சுமக்கும்; பிணம்எனிலோ
பூசிமுடித்து மறையோர்க்குப் பொருளை ஈந்து புகழ் எய்தும்
மல்லார் குட்டிச் சுவர்எனிலோ மாடும் உரைஞ்சும்; மறைவாகும்
மதியாத் துடைப்பம் தானெனிலோ மாடகூடங்களைவிளக்கும்;
அல்லா உலுத்தன் தனக்கிணையாயாரை உரைப்பேன்புவிமீதில்
அவனைக்குறித்துக்கூறுமிடத்துஅவனுக்குஅவனே சரிதானே.
(இராமச்சந்திர கவிராயர்)

இந்த உலகிலுள்ள எந்தப் பொருளும் ஏதேனும் பயனுடையதாம்; உலோபி மாத்திரம் யாதொரு வகையிலும் பயன் படாதவன் என இவை உணர்த்தியுள்ளன. பாழான அவனது இழி நிலை விழி தெரிய வந்தது.

பொருள் மயக்கால் மயங்கி மருள் மண்டி யிருத்தலால் உலோபனை யாரும் திருத்த முடியாது; யாண்டும் அவமே நீண்டு எவ்வழியும் நசையாய் வசைபடிந்தே நிற்பன்.

"தேன்கொண்ட துளிஒன்றினல் ஏழு கடலெலாம்
தித்திக்க வேசெய்யினும்
செய்யபூ மலரினல் வச்சிரம் தன்னைச்
சிதையவே பொடி செய்யினும்

கான்கொண்டமலையெலாம்கைக்கொண்டு வெண்ணெயால்
கவினுற்ற மெருகு செயினும்
கயவர்க்கு நீதியும் பேடிக்கு வீரமும்
கபடர்க்கு மெய்ஞ்ஞானமும்
ஊன்கொண்ட மூடர்க்கு இரக்கமும் தெளிவுற
உரைத்து நலமே செய்யினும்
ஊமை செவிடன் குருடன் முத்தமிழ் படிக்கினும்
உலோபருக்கு ஈவு வருமோ?" (மணவாள நாரணர்)

ஈயாத உலோபரின் தீய நிலைமையை இது தெளிவாக விளக்கி யுளது. உலோபி எந்த வகையிலும் இரங்கான்; யாதும் கொடான்; எனவே அவனது மடமையும் கொடுமையும் மருளும் மயக்கமும் அறியலாகும். இவ்வாறு வெறியனாயிழிந்து வீணே அழிந்து போகாமல் உதவி புரிந்து உயர்ந்து கொள்ளுக.

---

679. பொல்லா உலோபம் புகுந்திருக்கும் நெஞ்சிலருள்
நில்லா ததனால் நெடுஞ்செல்வம்—எல்லாம்கை
எய்தியிருந் தாலும் இரங்கார் இதம்செய்யார்
வெய்தா மவர்வாழ்வு வீண். (கூ)

இ—ள்

கொடிய உலோபம் புகுந்திருக்கும் நெஞ்சில் இனிய அருள் இராது ஆகலால் உலோபிகள் எவ்வளவு செல்வங்களை எய்தியிருந்தாலும் யாதும் இரங்கார்; யாருக்கும் இதம் செய்யார்; அவருடைய வாழ்வு பயனற்ற பாழாம் என்க.

பொல்லா என்னும் அடை உலோபத்தின் எல்லாத் தீமைகளையும் எதிர் உணர வந்தது. நல்ல மனிதப் பிறப்பை அடைந்து செல்வ வளங்கள் நிறைந்து சிறந்த மனிதன் எனத் தோன்றியுள்ளவனை இழிந்தவனாக்கி எவ்வழியும் பழிகளைச் சுமத்தி அழிவு செய்து வருதலால் உலோபம் பொல்லாதது, புலையானது, பழி பாவங்கள் படிந்தது என இளிவு கொண்டு நின்றது.

தன் பொருளைப் பிறர்க்கு உபகாரமா உதவுகின்றவன் ஈகையாளன் ஆகின்றான். அன்பு அருள் இரக்கம் கண்ணோட்டம் என்னும் அரிய நீர்மைகள் ஈதலுக்கு உரிமைகள் ஆகின்

றன. பிற உயிர்களின் துயர்களுக்கு இரங்கியருளுவது உயர்ந்த மேன்மக்களின் தனி இயல்பாய் அமைந்துள்ளது.

உலோபம் கொடிய நீசம் உடையது ஆதலால் அந்தப் புலே படிந்த உள்ளத்தில் அருள் முதலிய நல்ல இயல்புகள் நில்லா. தன் உயிர் போக நேர்ந்தாலும் பொருளைக் கைவிடாத பொல்லாத நிலையிலேயே நெடிது பழகிக் கடிது தோய்ந்து வந்துள்ளமையால் பிற உயிர்கள் துயருறக்கண்டாலும் உள்ளம் இரங்கி உலுத்தன் உதவ மாட்டான். சீவதயை எதையும் உதவ நேர்கிறது; அந்த அனுதாபம் நெஞ்சில் இல்லாமையால் உலோபியிடம் உபகாரம் நில்லாமல் ஒழிந்து போயது.

"Nature never makes men who are at once energetically sympathetic and minutely calculating." (George Eliot)

"உலோபமும் கருணையும் ஒருங்கே வாய்ந்த மனிதரைக் கடவுள் ஒரு போதும் படைக்கவில்லை" என்னும் இது இங்கே அறியவுரியது. பொருளின் மருள் அருளை இழந்து விடுகிறது.

பிறர்க்கு இரங்கி இதம் செய்வதால் தன் உயிர்க்குஉயர்ந்த இன்ப நலங்கள் விளைந்து வருகின்றன. இந்த அரிய வரவுகளை உலோபி அநியாயமாய் இழந்து விடுகிறான். செல்வம் கிடைத்தும் நல்ல பயனை அடையாமல் நாசமடைந்து போதலால் அந்த வாழ்வு நீசம் என நேர்ந்தது.

"கொடாது இவறும் மடாஅ வெறுக்கையின்
துனியுறு வறுமை நனிசிறந் தன்றே;
இம்மைப் பழியும் அம்மை நரகும்
பெரும்பசி உழக்கும் இரும்பேய்ப் பிறவியும்
ஓவின்று யாண்டும் ஈவின்று மாதோ!"

ஈயாத உலோபி இழி நிலையில் வாழ்ந்து பழி நரகங்களை அடைந்து அழி துயரடைவான் என இது குறித்துள்ளது.

அருமையான பொருள் தன் கையில் உரிமையாய்க் கிடைத்திருந்தும் அதன் பயனை அடையாமல் பாழ்படுதலால் உலோபியின் தோற்றம் இழிவாத் தூற்றப்பட்டது.

"இயாது வீயும் இளிவுடையார் இவ்வுலகில்
காயாத புன்மரம்போல் கண்தோன்றி---தீயார் தன்

வாயில் உடலை வறிதொழித்துப் பேயாகி
ஓயா துழல்வர் உழந்து."

ஈயாமல் மாயும் இழி நிலையாளர் காயாத புன்மரம் போல் வீணே தோன்றி வளர்ந்து முடிவில் தமது உடலைத் தீயினுக்கு இரையா இழந்து விட்டுப் பேயாய்ப் பிறந்து ஓயாமல் உழலுவர் என இது உணர்த்தியுள்ளது.

நாயாய்ப் பிறந்திடின் நல்வேட்டையாடி நயம்புரியும்
தாயார் வயிற்றின் நரராய்ப் பிறந்து பின் சம்பன்னராய்க்
காயா மரமும் வறளாம் குளமும் கல் ஆவுமென்ன
ஈயா மனிதரை ஏன்படைத் தாய்கச்சி ஏகம்பனே!
(பட்டினத்தார்)

நாயும் ஓர் உதவி புரியும்; உலோபி யாதும் பயன் இல்லையே! அவனை ஏன் படைத்தாய்? தெய்வமே? என இறைவனை நோக்கிப் பட்டினத்தார் இப்படிப் பரிந்து நொந்து பாடி யிருக்கிறார்.

"த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாசநம் ஆத்மந:
காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாத் ஏதத்ரயம் த்யஜேத்."
(பகவற்கீதை, 16---21)

"ஆன்மாவை நாசப்படுத்தி நரகத்தில் தள்ளும் கொடிய தீமைகள் காமம் கோபம் உலோபம் என்னும் மூன்றுமேயாம்; இவற்றை மனிதன் கடிந்து ஒழிக்கவேண்டும்" எனக் கண்ணன் இன்னவாறு போதித்துள்ளார். உலோபம் நரகத்தின் வாசல் என்றதனால் அதன் கொடுமையைக் கூர்ந்து உணர்ந்து கொள்ளலாம். உயிர்க்கு ஊனம் புரிதலால் ஆன்ம நாசமாய் நின்றது.

இரக்கமின்றிக் கொடிய வன்கண்மையா யிருத்தலால் உலோபம் படுபாதகமாய் வந்தது; ஆகவே அதனையுடையவன் பாவியாய் நரக துன்பத்தை அடைய நேர்ந்தான்.

செல்வத்தைப் படைக்கவும் காக்கவும் அழிக்கவும் வல்ல மனிதன் அதனை நல்லவகையில் உபயோகப் படுத்தாமல் ஊனமாய் நின்றால் அது அவனை மானம் கெடுத்து ஈனன் ஆக்கி இகழ்ந்து விட்டு ஒதுங்கிப் போகின்றது.

பிறர்க்கு உதவாமையால் உலோபி தருமத்தை இழந்தான்; தான் அனுபவியாமையால் இன்பத்தையும் இழந்தான். இன்ன

வாறு இழவுகள் அவனைத் தழுவிக் கொள்வதால் அவனுடைய வாழ்வு அவலத் துயரங்களாய் நின்றது.

பேய்வாயில் சிக்கிய பிள்ளைபோல் பொருளாசையால் பித்தேறி யிருத்தலால் ஒத்தது யாதும் உணராமல் ஒரு வகையிலும் உதவாமல் உலோபி செத்த சவமாய்த் திரிய நேர்கின்றான்.

''நல்லுடை புனையான்; உண்டி நயந்தெரிந்து உண்ணான்; நல்லோர்
சொல்லிய அறமும் செய்யான்; சுகம் என்பது ஒன்றும் ஓரான்;
புல்லிய உலோபம் என்னும் பூதம்வாய்ச் சிக்கி என்றும்
அல்லலே அடைந்தான்; செல்வம் யாவுமே இழந்தான் அந்தோ!''

உள்ளத்தில் உலோபமுடையவன் உலகத்தில் வாழ்ந்து கழியும் நிலையை இது குறித்துள்ளது. பெற்ற திருவின் பயனைப் பெறாமல் ஒழிவது பெருங்கேடாய் நின்றது.

''உண்ணாது நின்றான் உறுதி நலமிழந்து
கண்ணாணை செத்தான் கதியற்றான் --- அண்ணாநீ
தேர்ந்து பொருளின் திறமறிந்து நல்லறத்தை
ஓர்ந்து புரிக வுடன்.''

உலோபியாயிருந்த தன் தமையனை நோக்கி ஒரு தம்பி இப்படிப் புத்தி கூறியிருக்கிறான். சேர்ந்து நின்ற பொருளைச் செவ்வையாப் பயன்படுத்தின் அவன் சீர்மையும் சிறப்பும் பெறுகின்றான். பிறவிப்பேறு தெரிந்து பெருமை பெறவேண்டும்.

---

680. நில்லாப் பொருளை நிலையாகச் செய்பவர்
பல்லார்க்கும் நல்கிப் பயன்பெறுவர்—அல்லாதார்
செல்லாத காசாகச் செல்வத்தைச் சீரழித்து
நில்லா தழிவர் நிலை. (ம)

இ—ள்

நிலையில்லாத பொருளை நிலையாகச் செய்பவர் பலர்க்கும் உதவிப் பயன் மிகப் பெறுவார்; அவ்வாறு உதவாதவர் செல்வத்தை வீணே பழுது படுத்திப் பழியோடு அழிவார் என்பதாம்.

பொருள் எவரிடமும் நிலைத்து நில்லாது; குறைவது, தேய்வது, மறைவது, அழிவது என்னும் நிலைகளை இயல்பாகவுடையது. இவ்வாறு அழிவு நிலையிலுள்ள பொருள் கழிந்து ஒழிந்து போகு

முன் நல்ல வகையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். பொருளை வீணே செலவழிப்பதும் தவருன வழிகளில் தள்ளுவதும் குற்றமாம்; புகழ் புண்ணியம் என்னும் நிலையான உயர்ந்த பொருள்களுக்குத் தன் பொருளைத் தகுந்த வகையாகத் தந்து மாற்றிக் கொள்ளின் அவன் தெளிந்த மதிமானுய்ச் சிறந்து உயர்ந்த சமர்த்தனுய் விளங்கி நிற்கின்றுன்.

பிறர்க்குக் கொடுத்தால் தன்பொருள் குறைந்து போம் என்றே எவரும் அஞ்சுகின்றுர்; இந்த அச்சம் உலோபியிடம் உச்ச நிலையில் ஓங்கி நிற்கிறது; ஆகவே ஈதலை அவன் சாதலைப் போல் எண்ணி நடுங்குகிறுன். ஈ என்று சிறு பறவையின் பேரை யாரேனும் சொல்ல நேர்ந்தாலும் நேரே தன்னைக் கொல்ல நேர்ந்தது போல் அவன் உள்ளம் துடிக்க நேர்கின்றது.

ஈகின்றவனை வள்ளல் என்றும், ஈயாதவனை உலோபி என்றும் சொல்லுகின்றனர். ஈகையாளனை உலகம் புகழ்ந்து போற்றுகிறது; ஈயாதவனை எவரும் இகழ்ந்து தூற்றுகின்றனர்.

"ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன எட்டிமரம்
காயா திருந்தென்ன காய்த்துப் பலன் என்ன?"

என இன்னவாறு காய்ந்து உலோபரை வையம் வைது வருகிறது. வசையுடையவர் வசவுகளை அடைய நேர்ந்தனர்.

"உலோபி உள்ளத்தில் திடம் இல்லாதவன்; பேடி போல் பிழை நிலையில் உள்ளவன்; கொடுத்தால் பொருள் குறைந்து போம்; அது போனுல் ஏழையாய் வருந்த நேரும் என்னும் கொடிய அச்சமும் நெடிய திகிலும் அவனுடைய நெஞ்சில் என்றும் குடி கொண்டுள்ளன; ஆகவே அவன் யாருக்கும் ஏதும் ஈயாமல் இறுகப் பற்றி நிற்கிறுன்" என ஒரு மானச தத்துவக் கலைஞன் ஓர் அரச சபையில் கூறினன். அங்கே யிருந்த பெரியவர் ஒருவர் வள்ளலும் அவ்வாறு உள்ளம் வெருவியே பிறர்க்கு உதவி செய்கிறுன் என உரைத்தார். அரசன் திகைத்து "அது எப்படி?" என்று வினவினன். பெரியவர் விளக்கினர்: பொருள் குறைந்து அழிந்துபோம் என்று பயந்தே உலோபி கொடாதிருக்கிறுன்; வள்ளல் உள்ளத்திலும் அந்தப் பயம் உள்ளது: "பொருள் நிலையில்லாதது; விரைவில் அழியும் இயல்பினது; அது நம் கையை விட்டுப் போகுமுன்னரே பைய அதனைப்

பயன் படுத்திக் கொள்ள வேண்டும்'' என்னும் துடிப்பினாலே யே அவன் கொடுத்துத் தன் உயிர்க்கு ஊதியங்களாகப் புகழ் புண்ணியங்களை வளர்த்துக் கொள்ளுகிறான்.

"உலுத்தன் மிடிவருமென்று உள்வெருவி நல்கான்
நிலத்தென்று ஒருவன் நிகழ்த்த---நலத்திசைகூர்
வள்ளலும்அவ் அச்சம் மருவியே நல்குமென
விள்ளலுற்றான் மற்றொருவன் மெய்"

உலோபியும் வள்ளலும் உள்ள நிலைகளை இது உல்லாச விநோதமாய் விளக்கியுள்ளது. உண்மை நிலைகள் உணரவுரியன.

அவனது அச்சம் ஊன நிலையில் ஊன்றியது; இவனுடையது ஞான நிலையில் தோன்றியது; ஈகையாளன் இம்மையிலும் மறுமையிலும் பெருமை பெறுகின்றான்; உலோபன் இருமையும் சிறுமையுறுகின்றான். கொடுத்து வந்தவன் அந்தப் புண்ணியத் தால் பெருஞ் செல்வங்களை அடைய நேர்கின்றான்; கொடாது நின்றவன் மறுபிறப்பில் வறுமையாளனாகவே வருகின்றான்.

நரக துன்பம் பாவத்தால் வருகிறது; பாவம் வறுமையால் உறுகிறது; அந்த வறுமை இரங்கி ஈயாத கொடுமையால் நேர் கிறது; ஆகவே கொடிய நரகத்திற்கும் நெடிய தரித்திரத்திற் கும் மூல காரணம் உலோபம் என்பது தெளிய வந்தது.

"படர்நரகம் பாவத்தால் பாவம் மிடியால்
மிடிஈவி லாமையினா மே."

இதனை இங்கே கருதிநோக்கி உறுதியுண்மையை யுணர வேண்டும்.

ஈயாத உலோபர் வாழ்வு எவ்வழியும் வெவ்விய பழியும் துயரங்களுமாய் மருவி விரிகிறது. கடுநசையோடு பொருளைச் சேர்த்து வைக்கின்றார்; அதிலிருந்து ஒரு பயனும் பெறாமல் ஊனமாய் ஒழிந்து போகின்றார்.

உடாஅதும் உண்ணாதும் தம்உடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமும் செய்யார்---கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்தோய் மலைநாட
உய்த்தீட்டும் தேனீக் கரி. (நாலடியார், 10)

தாம் வருந்திச் சேர்த்து வைத்த தேனைப் பிறர் கவர்ந்து போக ஈக்கள் கலைந்து அலைந்து திரிதல்போல் உலோபிகள்

பொருளை இழந்து மருளராய்த் திரிவர் என இது குறித்துள்ளது. பிறர்க்கு உதவி செய்ய அவர் மனம் இசையாது ஆதலால் அது விசையாய் வெளியேறி அயலே போய் விடுகின்றது.

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி ஆக்குபவர் பேறும் — பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல்நீர் சென்று புயல்முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (நன்னெறி)

யாருக்கும் பயன் படாதபடி உலோபியிடம் பெருகிக் கிடக்கும் பொருளை உபகாரி வாரிக்கொண்டு போய் உலகம் உண்டு மகிழ உதவுவான் என இது உணர்த்தியுள்ளது. இதன் உவமை நிலையை ஊன்றி உணர்ந்து கொள்ளுக.

கொடுத்தலும் துய்த்தலும் தேற்ற இடுக்குடை
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
ஏதிலான் துய்க்கப் படும். [நாலடியார், 274]

உலோபியின் செல்வத்தைஅயலாரே அனுபவிப்பர் என்னும் காட்சியை இது காட்டியுளது. நல்ல பெண்ணைப் பெற்றவன் பருவம் கண்டு அவளைத் தக்க ஒருவனுக்கு உரிமையா மணம் முடித்துத் தர வேண்டும். அவ்வாறு தரின் அவள் சுக போக மாய் மனம் மகிழ்ந்து வாழ்வள்; மக்களும் உளவாம்; மருமகன் மகள் பேரன் பேத்திகள் என்னும் கிளைகளைக் கண்டு உளம் மகிழ்ந்து கொள்ளலாம். அப்படிக் கொடாதிருந்தால் மகள் குமரியாய் வீட்டில் இருப்பள்; அந் நிலைமையை நோக்கி உலக மும் பழிக்கும்; எவனுவது ஒருவன் வந்து அவளைக் கவர்ந்து கொண்டு போவன்; அவளும் துணிந்து வெளியே போய் விடு வள்; போகவே தந்தை பழி அடைந்து வருந்துவன். பொருளைப் பெற்றவன் பக்குவமாத் தக்கவர்களுக்கு உதவினல் உபகாரி என உயர்ந்து புகழும் புண்ணியமும் மருவி உவகை மிகப் பெறு வன்; உதவாதிருந்தால் உலோபி என இழிவன்; பொருளும் எப்படியும் வெளியே போய்விடும்; போகவே பழி துயரங்களை அடைந்து இழிவாய் நொந்து பதைத்து அழிவான் என்க.

ஈயும் பொருளே இசையும் இன்பமும் தருவதாம்; ஈயாதது வசையும் துன்பமும் தந்து விசையாய் வெளியே தொலைந்து போ வதாம். உரிய வழியில் அளியாதது கொடிய பழியில் ஒழிகிறது.

"ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்."

என்று எழுத்து முறையில் இங்ஙனம் சுருக்கி உரைத்த ஔவையார் பின்பு தனியே விரித்து ஈயாத பொருள்கள் போம் வழிகளை விழிகள் காண விளக்கியிருக்கிறார்.

"நம்பன் அடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காம்
கொள்ளைக்காம் கள்ளுக்காம் கோவுக்காம் சாவுக்காம்
கள்ளர்க்காம் தீக்காகும் காண்." (ஔவையார்)

நல்ல வழியிலே நல்காத பொருள் பொல்லாத வழிகளிலே புலையாடிப் போம் நிலைகளை இது காட்டியுள்ளது.

தனக்கு உடைமையாய் வந்த பொருளை உடையவன் கடமை ஓர்ந்து தக்க வழிகளிலே மிக்க கவனத்தோடு பயன் படுத்த வேண்டும்; அவ்வாறு நெறிமுறையே முறையாகச் செலுத்தாமல் பொருள் வெறி கொண்டு மருள் மண்டி மடையனாய் நின்றால் மடைதிறந்த வெள்ளம் போல் அது வறிதே வெளியேறி விடுகின்றது. பொருளுடையவன் நல்ல அறிவுடையனாயிருந்தால் அவன் செல்வம் ஊருணி நீர்போல் உலகம் உவந்து புகழ உயர்ந்து திகழ்கின்றது; பொல்லாத புல்லனாயிருந்தால் அது அல்லலாயிழிந்து அவமே அழிகின்றது.

மனிதன் அடைய வுரிய உறுதி நலங்களுக்குப் புருடார்த்தம் என்று பெயர். அது அறம், பொருள், இன்பம், வீடு என நான்கு வகையாய் அமைந்துள்ளது. பொருள் ஒன்று மாத்திரம் கண்ணுக்குத் தெரிவது; மற்ற அறம் முதலிய மூன்றும் அருவமானவை. உளம் உணர்வு உயிர்கள் போல் ஒருமையாய் மருவியுள்ள அவற்றிற்குப் பொருள் உடலாய் அமைந்திருக்கிறது.

உரிய பொருளைக் கொண்டு அரிய உறுதி நலங்களை அடைந்து கொள்ள வேண்டும். அவ்வாறு அடையவில்லையானால் உயிர் இழந்த உடலாய்ப் பொருள் இழிந்து படுகிறது. உடலைப் பேணுவதும் புண்ணியத்தை நோக்கியே இருக்க வேண்டும். அந்த உயர்ந்த நோக்கை உடையதே சிறந்த திருவாம்; அல்லாதது இழிந்த மருளாம். பயன் படிந்த அளவு பணம் மணம் பெறுகின்றது.

உண்மையை உணர்ந்த பெரியோர்கள் பொருளின் தன்மையை அறிந்து அதனை நன்மையான வழிகளில் செலுத்தி நலம்

பல பெறுதலால் அவர் உயர்ந்த வானத்தில் ஓர் சிறந்த தானம் பெற்றவராய்த் தகைமையுற்று விளங்குகின்றார்.

செல்வத்தைப் பெற்றார் சினம்கடிந்து செவ்வியராய்ப்
பல்கிளையும் வாடாமல் பாத்துண்டு---நல்லவாம்
தானம் மறவாத தன்மையரேல் அஃதென்பார்
வானகத்து வைப்பதோர் வைப்பு. (அறநெறிச்சாரம்)

செல்வம் பெற்றவர் வாழவேண்டிய வகைகளையும், அவ்வாறு வாழ்ந்து வந்தால் அவர்க்கு வரும் பயன்களையும் இது விளக்கியுள்ளது. வைப்பு=சேம நிதி, செவ்விய இடம்.

“அழியும் இயல்பினையுடைய பொருளை அழியாமல் பேணுபவர் யார்?” என்று ஓர் அரசன் பலர் குழுமியிருந்த சபையில் சிலரது நிலைமை தெரியக் கேட்டான். “அதனை நல்ல வழியில் வைப்பவரே” என்று ஒரு பெரியவர் அதற்குப் பதில்உரைத்தார்

“செட்டும் சீருமாய் வாழ்பவர் செல்வத்தைச் சிறந்த
கட்டும் காவலும் ஆகவே பேணுவார்; கதியாய்
எட்டி மேல்வரும் இன்பநன் னலங்களை எண்ணி
இட்டு வைகலும் இசையினை எய்துவர் இனிதே.”

மறுமையில் வறுமையுறாமல் வழிசெய்து கொள்பவரே பொருளை அழியாமல் போற்றினவராவார் என இது காட்டியுளது. நிலையாததை நிலையாகச் செய்பவர் தலையானநிலையாளர்.

“ஈவாரின் இல்லை உலோபர்; உலகத்தில்
யாவரும் கொள்ளாத வாறெண்ணி---மேவரிய
மற்றுடம்பு கொள்ளும் பொழுதும் தமதுடைமை
பற்று விடுதல் இலர்.” (அறநெறிச்சாரம், 221)

இந்தக் கவியின் கருத்தைக் கண் ஊன்றி நோக்குபவர் கலையின் சுவையையும் பொருளின் நிலையையும் உணர்ந்து மகிழ்வர்.

ஈயாதவரை உலோபர் என்பது தவறு; ஈகின்றவரே பெரிய உலோபிகள். தமது பொருள் யாதும் குறையாமல் எவரும் கொள்ளாமல் என்றும் அழியாமல் தாம் இறந்த பின்பும் தம்மை விட்டு அகலாதபடி கண்ணும் கருத்துமாய்ப் பொருளைப் பொத்தி வைத்திருத்தலால் வள்ளல்களே நல்ல உலோபிகள் என உல்லாச விநோதமாச் சொல்லியிருக்கும் இதன் அழகையும் சுவையையும் கூர்ந்து நோக்கி உண்மையை ஓர்ந்து கொள்க.

வருந்தும் உயிர்களுக்குத் தன் பொருளை அருந்த உதவி அருள் புரிந்து வருபவன் பெருந்திருவாளனாய் உயர்ந்து பேரின்ப நலங்களைப் பெறுகிறான். எய்திய செல்வம் இனிது பயன்படுங் கால் அது செய்தவமாய்ச் சிறந்து உய்தி புரிந்து வருகிறது.

பெற்ற பொருளால் பெரிதும் பெறுதற்கு உரியது தன் உயிர்க்கு இனிய உறுதி நலனே யாம். அவ்வாறு அடைந்து கொள்பவன் அதிசய பாக்கியவானாகிறான்; அடையாதவன் கடையா யிழிந்து கதிநலம் இழந்து கழிகிறான்.

முழவொலி முந்நீர் முழுவதும் ஆண்டோர்
விழவூரில் கூத்தேபோல் வீழ்ந்தவிதல் கண்டும்
இழவென்று ஒருபொருளும் ஈயாதான் செல்வம்
அழகொடு கண்ணின் இழவு. (பழமொழி)

நல்ல உருவ அழகு அமைந்திருந்தும் கண் இல்லையானால் அவன் குருடனாய் இழிவுறுதல் போல் ஈகையில்லாத செல்வமும் இழிவுபடும் என இது உணர்த்தியுள்ளது. பொருள் அழகுக்கும் ஈகை கண்ணுக்கும் இனங்களாயின. இனிய பொருளைப் பெற்றிருந்தும் ஈயாத உலோபி கண்ணில்லாத கபோதி போல்இழிந்து கழிந்து அழிந்து போகின்றான். அவ்வாறு அவலமாய் ஒழிந்து போகாமல் எவ்வாறும் உதவி நலங்கள் புரிந்துஉயர்ந்து கொள்க.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

உலோபம் இழிந்த புன்மையாம்.
அதனை யுடையவன் உயர்ந்து நில்லான்.
உலோபி வசையே அடைவான்.
இசையும் இன்பமும் எய்தான்.
ஈயா உலோபம் இழிவையே தரும்.
ஈதல் இல்லாத பொருள் சாதல் உறும்.
ஈயாதவன் தீயவன் ஆகின்றான்.
யாதும் உதவாதவனாய் ஒழிகின்றான்.
அருள் இலனாய் அவலம் உறுகின்றான்.
அவன் பொருள் அவமே அழிகின்றது.

கூஅ வது உலோபம் முற்றிற்று.

# அறுபத்தொன்பதாம் அதிகாரம்.

## தீமை.

அஃதாவது தீய செயல்களை விழைந்து புரிந்து இழிந்து திரிவது. பாவத் தீமையை ஒழித்து ஒழுக வேண்டும் என உணர்த்துகின்றமையால் உலோபத்தின் பின் இது வைக்கப்பட்டது.

681. தீயன செய்பவன் தீயன் எனஇழிந்து
மாயும் பழியுள் மடிகின்றான்—தூயவினை
செய்வோன் சிறந்து திருவும் புகழும்கொண்
டுய்திபெறு கின்றான் உயர்ந்து. (க)

இ—ள்

தீயசெயல்களைச் செய்பவன் தீயவனாயிழிந்து பழிகள் பல படிந்து அழிகின்றான்; நல்ல செயல்களை யுடையவன் நல்லவனாயுயர்ந்து செல்வமும் புகழ்களும் எய்திச் சிறந்து விளங்கி மேலான கதிகளை அடைந்து கொள்கின்றான் என்பதாம்.

நல்லவர் எனவும் கெட்டவர் என்றும் மக்கள் சுட்டிச் சொல்லப்படுகின்றனர். தங்கள் குணம் செயல்களால் அவர் அவ்வாறு சொல்ல நேர்ந்தனர். நெறியோடு நடந்து பிறர்க்கு இதமான செயல்களைச் செய்து வாழ்பவர் நல்லவராய் உயர்ந்து நலம் பல பெறுகின்றார். நெறிகேடராய் நின்று கெட்ட காரியங்களைச் செய்து வருபவர் கெட்டவராய் நிமிர்ந்து அல்லல்களை அனுபவித்து அவலமா யழிகின்றார். எல்லாச் செயல்களுக்கும் எண்ணங்கள் மூல காரணங்களாயுள்ளன.

தன் எண்ணம் நல்லது ஆயின் அந்த மனிதன் நல்லவன் ஆகின்றான்: அது தீயது ஆயின் அவன் தீயவனாய் வருகின்றான். அக நினைவுகள் புற வாழ்வுகளாய்ப் பொங்கி நிகழ்கின்றன. அந்தக் கரணத்தின் இயக்கங்கள் அதிசய நிலையின. அதில் படிந்துள்ள வாசனையின்படியே வளர்ந்து கிளர்ந்து வெளியே உயர்ந்து தோன்றுகின்றன. மனோவிருத்திகள் அளவிடலரியன; ஆயினும் அவை நன்மை, தீமை என்னும் இருவகை நிலைகளில் அடங்கி மனிதனுடைய பலவகை நிலைகளுக்கும் காரணங்களாயுள்ளன. நிலையின் விளைவுகள் மனித வுலகமாய் நிலவுகின்றன.

நல்லது, நன்று, நன்மை என்னும் மொழிகள் தருமம் நீதி இனிமை முதலிய மகிமைகளை உணர்த்தி வருகின்றன. தீயது தீங்கு தீமை என்பன பாவம் பழி இடர் முதலிய படர்களைக் குறித்து நிற்கின்றன. உற்றதொடர்புகள் ஊன்றி உணர வுரியன.

நல்ல எண்ணங்கள் நல்ல செயல்களை விளைத்து வருதலால் அந்த மனிதன் நல்லவனாய் உயர்ந்து புகழ் புண்ணியங்களை அடைந்து கொள்ளுகிறான்; அதனால் இருமையும் இன்பம் பெறுகின்றான். இனிய கருமங்கள் தனி மகிமைகள் தருகின்றன.

தீய எண்ணங்கள் தீய செயல்களை விளைத்து வருகின்றன; வரவே அந்த மனிதன் தீயவனாய் இழிந்து பழி பாவங்களை அடைகின்றான்; அடையவே இம்மை மறுமை என்னும் இருமையிலும் துன்பங்களை நுகர்ந்து துடித்து உழல்கின்றான்.

தன்னை நல்லவன் என்று உலகம் சொல்ல வேண்டும் என்றே எல்லாரும் பிரியப் படுகின்றனர். கெட்டவன், தீயவன், பாவி என்னும் பேரை யாரும் விரும்புவதில்லை; எவரும் வெறுக்கவே செய்கின்றார்; சீவர்களுடைய இயற்கையான சுபாவங்கள் இவ்வாறு இயைந்து நிற்கின்றன. நின்றும் பிறவிகள்தோறும் பரம்பரையாய்ப் பழகி வந்துள்ள பழக்க வாசனைகளால் இழுக்கி வீழ்ந்து இழிவுறுகின்றனர்.

மனித இனம் அரிய பிறவியை அடைந்து வந்துள்ளது; நல்லது இது, தீயது இது என்று பகுத்து நோக்கி வகுத்து அறியும் திறன் உடையது; நல்வினையாளர் புண்ணியவான்களாய் உயர்ந்து இன்ப உலகங்களை அடைகின்றனர்; தீவினையாளர் பாவிகளாயிழிந்து நரக துன்பங்களில் அழுந்துகின்றனர் என இன்னவாறான உறுதி உண்மைகளைத் தெளிவாக உணரவுரியது; இத்தகைய மகிமை வாய்ந்த பிறப்பைப் பெற்று வந்தும் சிறப்பான பேறுகளைப் பெறாமல் மனிதன் பிழையாயிழிவது கொடிய பரிதாபமாயுள்ளது. பழமையில்பழகியதுவளமையாய்வருகிறது.

தனது வாழ்வு உயர்ந்த செல்வங்களை அடைந்து சிறந்த வளங்களோடு வளர்ந்து வர வேண்டும் என்றே எந்த மனிதனும் சிந்தனையோடு முயன்று வருகிறான்; அவ்வாறு வந்தும் கருதிய பலன்களைக் காணாமல் மறுகி அலைகிறான். எண்ணம்

சரியான குறிக்கோளோடு மருவிவரும் அளவே அதன் பலன்கள் பெருகி வருகின்றன; மருவா வழி யாவும் விருதாவாய் விளிந்து போகின்றன. போகவே அவன் வறிதே இழிகிருன்.

தன் உள்ளம் பொல்லாத தீமைகளில் பழகி வரவே மனிதன் எல்லா நன்மைகளையும் இழந்து போய் இழிந்து திரிய நேர்ந்தான். நல்ல உணவுகளை உண்டு சிறந்த உடைகளை அணிந்து வெளியே களிப்போடு மினுக்கித் திரிந்தாலும் மனம் மொழி மெய்கள் பிழைபாடுடையவர் இழி நிலையாளராய் அழிவே அடைகின்ருர். பேசிய செயல்களின் அளவே யாவும் விளைகின்றன.

நல்லது நினைந்து, நல்லது பேசி, நல்லது செய்ய உரிய கரணங்களைப் பொல்லாத வழிகளில் பழக்கி எல்லாத் தீமைகளையும் துணிந்து செய்து மான மனிதர் ஞான சூனியராய் ஈன நிலையில் இழிந்து திரிவது இஞ்ஞான்று எங்கணும் விரிந்து வருகிறது. அவல வாழ்வைக் கவலையின்றி நடத்தி அவமே அழிந்து கழிகின்ருர். வையக வாழ்வுகள் வெய்ய பழிகளாயுள்ளன.

"பொய்பேசிப் புறங்கூறிப் புன்மைகளே செய்து
புலைவாழ்வே தலைவாழ்வாப் போற்றுகின்ற உலகீர்!
மெய்பேசி மெய்நினைந்து மேன்மைகளே செய்யும்
மேலான குலவாழ்வை மிகமறந்து போனீர்!
கைபூசி முகம்பூசிக் கால்பூசி உண்டே
களியாட்டம் புரிகின்றீர் ஒளிநாட்டம் இழந்தீர்!
மைபூசி இருண்டுள்ள கண்ணுடி எனவே
மனமிருண்டு மதிமருண்டு மடிகின்றீர் அந்தோ! (1)

நாள்தோறும் செத்துநீர் நாசம் அடைகின்றீர்!
நாசநிலை தெரியாமல் நீசம் உறுகின்றீர்!
வாள்தோறும் அறுபட்டு மடிந்துபடும் மரம்போல்
வாணுள்கள் தேய்ந்துவர மாய்ந்துபடு கின்றீர்!
ஆள்தோறும் அழிவேறி ஆண்டுவரும் உலகின்
அழிவுநிலை தெரியாமல் அகம்களித்து வாழ்வீர்
நீள்தோறும் சிறிதேனும் நினைந்துநீர் பார்மின்
நெறிவிலகி அழிகின்ற நிலைதெரிய லாமே." (2)

தீய பழக்கங்களைப் பழகி மக்கள் தீயராய் இழிந்து அழிந்து வரும் அவல நிலைகளை இவை கவலையோடு காட்டியுள்

ளன. பழியான பிழைகளை நீக்கி விழிதிறந்து நோக்கி மேலான நல்ல வழிகளில் ஒழுகி வர வேண்டும். அவ்வாறு வரின் மனித சமுதாயம் புனிதமாய் உயர்ந்து இனிது வளர்ந்து வரும்.

நேர்மையான நல்ல தரும நெறிகளில் செல்லமாட்டாமல் அல்லலான அவல நிலைகளிலேயே மனிதர் ஆவலோடு செல்லு கின்றனர். செயல் முறைகள் மயல்களாய் மாசு படிந்துள்ளன.

சத்தியமே பேசி வாழும் உத்தம நிலை ஒழிந்து போயது. பொய் பேசாமல் இந்த உலகில் வாழ முடியுமா? என்று யாரும் நீளமாய் எதிர்ந்து பேசும் காலம் நேர்ந்துள்ளது. படுமோச மான நீச நிலையில் மனித வாழ்வு நாசமடைந்திருத்தலை இந்த வாசகம் நன்கு விளக்கி நிற்கிறது. பொல்லாத வழிகளில் ஆசை பொங்கி ஓடுகின்றது; நல்ல நெறிகளில் நாட்டம் குன்றி இழிகின் றது. யாண்டும் புலைகளே நீண்டு நிலவி நெடிது உலாவுகின்றன.

பொய் பேசு, களவு செய், புறம் கூறு என்று யாரும் போதிக்கவில்லை. எவரும் பள்ளிக்கூடங்கள் வைத்து இவற்றைச் சொல்லிக் கொடுக்கவுமில்லை. இவை எல்லாரிடமும் எங்கும் பொங்கி நிற்கின்றன. மெய்யே பேசுக; எவ்வுயிர்க்கும் இரங்கி யருளுக; யாருக்கும் இடர் செய்யாதே; அயலார் உரிமைகளை மயலாய் விரும்பாதே; புலையும் கொலையும் களவும் ஒழி; என இன்னவாறு மேலோர் பலர் காலம் தோறும் நல்ல நெறிகளைப் போதித்து வந்துள்ளனர்; நூல்களும் சாதித்து வருகின்றன; வந்தும் ஒருபயனையும் காணோம்.

யாரும் சொல்லிக் கொடாமலே அல்லலான தீமைகளை அள்ளிக் கொண்டு யாண்டும் துள்ளித் திரிந்து துடுக்காய்ச் செய்து மனிதர் உள்ளம் களித்து வருவது அதிசய வியப்பா யுள்ளது. பழி வழிகளில் களி மீதூர்ந்து வருகின்றனர்.

"பாவம் என்றால் ஏதும் பயமின்றிச் செய்ய இந்தச்
சீவனுக்கு ஆர் போதம் தெரித்தார் பராபரமே!"

என்று தாயுமானவர் இவ்வாறு இறைவனை நோக்கிப் பரி தாபத்தோடு வினவியிருக்கிறார். மனிதரது போக்கை நோக்கி அந்தப் புனித உள்ளம் துடித்திருப்பதை இதில் ஊன்றி உணர்ந்து கொள்கிறோம். அவல நிலைகள் கவலைகளை விளைத்துள்ளன.

பழகி வந்த பழக்கங்களால் இழி நிலைகளை யுணராமல் ஈனங்களைத் துணிந்து செய்து மானமழிந்து மாந்தர் மாய்ந்து ஒழிகின்றார். ஆய்ந்து தெளிந்தவர் அவங்களை விலகி உய்கின்றார்.

*தீவினையார் அஞ்சார் விழுமியார் அஞ்சுவர்*
*தீவினை என்னும் செருக்கு.* (குறள், 201)

தீவினைகளை அஞ்சி ஒதுங்குவார் மேலோர்; அவற்றை அஞ்சாமல் துணிந்து செய்வார் கீழோர் என இது குறித்துள்ளது. தீமை செய்பவன் பாவியா யிழிந்து படுதுயரடைகின்றான். அந்தக் கேடு நேராமல் நாடிக் காத்துப் பீடு பெற்று வாழுக.

---

682. கோனெனினும் நல்ல குலனெனினும் தீவினைசெய்
வானெனிலன் னானைவையம் வையுமால்—ஆனுதவு
பாலெனினும் நஞ்சு படிந்தால் அதனைஎவர்
மேலெனவுண் பார்பின் விழைந்து (உ)

இ—ள்

சிறந்த அரசன் எனினும் உயர்ந்த குலத்தவன் ஆயினும் தீய செயல்களைச் செய்வான் ஆயின் அவனை உலகம் இகழ்ந்து பழிக்கும்; நல்ல பசுவின் பால் எனினும் நஞ்சு கலந்திருந்தால் அதனை யாரும் பருகார்; அயலே கழித்து விடுவர் என்க.

அரசன் இயல்பாகவே உயர்ந்த சிறப்புகளை யுடையவன்; உலக மக்களால் உவந்து போற்றத் தக்கவன்; அரிய திருவும் பெரிய மேன்மையும் வாய்ந்தவன்; அதிகார ஆற்றல்கள் அமைந்தவன்; அத்தகைய உன்னத நிலையில் உயர்ந்திருந்தாலும் தீய செயல்களைச் செய்வான் ஆயின் யாவரும் அவனை மதியார்; யாண்டும் இழிவாக எவரும் அவனை இகழ்ந்தே தூற்றுவர்.

**வையம் வையும்** என்றது தீமையின் வெய்ய நிலையை விழி தெரிய விளக்கி நின்றது. கேடு தீமை என்பன உயிர்களுக்குத் துயர்களாய் வருதலால் அவை பாவங்கள் என நேர்ந்தன.

பவமும் பாவமும் பாதகமும் தீவினை. (பிங்கலந்தை)

தீவினைக்குப் பெயர்கள் இங்ஙனம் வந்திருக்கின்றன.

205

இதனால் அதன் இயல்பும் கொடுமையும் அறியலாகும். தீய காரியங்களைச் செய்பவர் பாவிகளாய் இழிதலால் தமக்குத் தாமே அழிதுயரங்களை விளைத்துக் கொள்ளும் பழிகாரராய் இழிந்து எவ்வழியும் தாழ்ந்து அவர் பாழ்படுகின்றனர்.

கோனுக்கும் குலனுக்கும் பால் இதில் உவமானமாய் வந்துளது. நிலைமை தலைமைகள் நினைந்து சிந்திக்க நேர்ந்தன.

பிறப்பினும் சிறப்பினும் எவ்வளவு பெருமை வாய்ந்திருந்தாலும் தீமை புரிவரேல் அவர் சிறுமை அடைந்து இழிவர் என்பதைஉவமைக் குறிப்புகள் இங்கு நன்கு உணர்த்தி நின்றன.

தீமையை நஞ்சு என்று சுட்டியது அதன் கொடுமையும் அடு துயரங்களும் நெஞ்சு தெரிய வந்தது. நஞ்சைக் குடித்தவன் துடித்துச் சாகின்றான்; தீமையை அடுத்தவனும் அவ்வாறே அல்லல் பல அடைந்து அழிந்து போகின்றான். உண்ட நஞ்சு அந்த உடம்பிலுள்ள ஓர் உயிரை மட்டும் கொண்டு ஒழிகின்றது; செய்த தீமை எய்திய பிறவிகள் தோறும் விடாமல் புகுந்து உயிரை வதைத்துத் துயரங்கள் புரிகின்றது.

கொடிய விடத்தினும் தீமை கொடியது ஆதலால் அதனை யாதும் அணுகாமல் எவ்வழியும் அஞ்சி ஒதுங்கி ஒழுக வேண்டும்; பிழையாய் நெருங்கினல் பெருங்கேடுகள் ஒருங்கே விளைந்து மருங்கு எங்கும் துன்பங்கள் நுழைந்து விடும் என்க.

தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினும் அஞ்சப் படும். (குறள், 202)

தீய செயல்கள் தீயினும் கொடியன; அவற்றை அணுகினால் அடு துயரங்கள் பல அடைய நேரும்; யாண்டும் எவ்வகையிலும் யாதும் தீண்டாதபடி தீமையை நீங்கி வாழுங்கள் எனத் தேவர் இங்ஙனம் போதித்திருக்கிறார். யாதொரு துயரமும் அடையாமல் சீவ கோடிகள் என்றும் சுகமாய் வாழும்படி இப் போதனை வந்துள்ளது; வாழ்க்கையில் இதனைச் சாதனை செய்து கொள்பவர் வேதனைகள் நீங்கி மேலான நிலைகளை மேவி விளங்குவார். தீமைகழிய நன்மை விளைந்துநலம்பல வருகின்றன.

683. தீதெண்ணித் தீதுசொல்லித் தீதுசெயல் தீவினையாம்
ஏதமிலை தெள்ளளவே எய்திடினும்—மீதோடி
எல்லை யிலாத இழிதுயர்கள் செய்யுமே
ஒல்லை தெளிக வுடன். (௩)

இ—ள்

எண்ணமும் சொல்லும் செயலும் தீமையான வழிகளில் செல்லுமாயின் அவை தீவினைகள் ஆகின்றன; எள் அளவு தீவினையும் எல்லையில்லாத துன்பங்களை விளைத்து உயிர்களை வருத்தும்; ஆதலால் அதனை ஒழித்து ஒழுக வேண்டும் என்க.

நெஞ்சம் நினைக்கின்றது; வாய் பேசுகின்றது; கைகள் செய்கின்றன. மனம் வாக்கு காயம் என்னும் இந்த மூன்றின் வழிகளாலேயே மனித வாழ்வுகள் ஊன்றி உலாவி வருகின்றன. நினைவும் சொல்லும் செயலும் நீதி நெறிகளோடு தோய்ந்து இனியனவாய் வரின் அவை தருமங்களாய்த் தழைத்து அந்த மனித வாழ்வை எவ்வழியும் மகிமைப் படுத்தியருள்கின்றன. அவை கொடியனவாயின் பாவங்களாய்ப் படு துயரங்களை விளைக்கின்றன. மூன்று நிலைகளும் ஊன்றி உணர உரியன.

களவு கொலை முதலியன காயத்தால் விளையும் தீமைகள்.

பொய் கோள் முதலியன வாக்கால் விளையும் கேடுகள்.

பிற உயிர்கட்குக் கேடு சூழ்தல் முதலியன மனத்தால் விளையும் பாவங்கள். தீய விளைவுகள் தெளிய வந்தன.

இந்த மூவகைகளிலும் இவ்வாறான தீமைகள் நிகழாமல் தன்னைப் பாதுகாத்து வருபவன் புண்ணிய சீலனாயுயர்ந்து புகழ் இன்பங்களை அடைகின்றான். அவ்வாறு காவாமல் தீமைகளில் மேவினவன் பாவியாயிழிந்து கொடிய துன்பங்களை அடைய நேர்கின்றான். அறவண அடிகள் என்னும் பெரியவர் ஒருவர் தீவினை நிலையைக் குறித்துத் தொகுத்துக் கூறி யிருக்கிறார். அயலே வருவது காண்க.

“தீவினை என்பது யாது? என வினவின்
ஆய்தொடி நல்லாய்! ஆங்கது கேளாய்!
கொலையே களவே காமத் தீவிழைவு
உலையா உடம்பில் தோன்றுவ மூன்றும்;

பொய்யே குறளை கடுஞ்சொல் பயனில்
சொல்எனச் சொல்லில் தோன்றுவ நான்கும்;
வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சி என்று
உள்ளம் தன்னின் உருப்பன மூன்றும் எனப்
பத்து வகையால்; பயன்தெரி புலவர்
இத்திறம் படரார்; படர்குவர் ஆயின்
விலங்கும் பேயும் நரகரும் ஆகிக்
கலங்கிய உள்ளக் கவலையில் தோன்றுவர்."
(மணிமேகலை, 24)

மனம் மொழி மெய்களால் விளையும் தீவினைகளின் வகைகளையும் அவற்றால் விளையும் துயர நிலைகளையும் இது உணர்த்தியுள்ளது. தீமைகளைச் செய்தவர் மிருகம் முதலிய இழிந்த பிறவிகளை அடைந்து கொடிய துன்பங்களை அநுபவிப்பர் என்றதனால் அவரது அவல நிலைகள் அறியலாகும். தனக்கு வருகிற அல்லல்களையும் அவகேடுகளையும் ஒருசிறிது உணர்ந்து சிந்தித்தால் எவனும் தீமைகளைச் செய்யத் துணியான். பிழையாய்ப் பழகிய பழக்கத்தாலும் மடமையாலும் கொடிய வினைகளைச் செய்து நெடிய துயரங்களை விளைத்துக் கொள்ளுகின்றனர். கொள்ளவே வாழ்வுகள் துன்பங்களாகின்றன; ஆவதை ஆய்ந்து தெளிந்து ஆன்ம நலனை மேவி உய்ய வேண்டும்.

---

684. இன்பமெலாம் நல்வினையுள் ஈனத் துயரமெலாம்
துன்பமிகு தீவினையுள் தோய்ந்துளவால்—முன்பிதனை
நெஞ்சில் நினைந்து நெடுந்தீமை நஞ்செனவே
அஞ்சி ஒழிக அயல். (ச)

இ—ள்

இன்பங்கள் எல்லாம் நல் வினையால் உளவாகின்றன; துன்பங்கள் யாவும் தீவினையால் விளைகின்றன; இந்த உண்மைகளை உள்ளத்தில் ஊன்றி உணர்ந்து தீமைகளை யாண்டும் அஞ்சி யாதும் தீண்டாமல் ஒழுக வேண்டும் என்க.

நல்ல சுகபோகங்களை அநுபவிக்கவேண்டும் என்றேயாண்டும் எல்லாரும் ஆவலோடு அலைந்து திரிந்து வருந்தி முயன்று வாழ்ந்து வருகின்றனர். மனித இனம் இனிது என்று கருதியுள்ள இன்ப நலங்கள் பல வகை நிலைகளில் பரவி நிற்கின்றன.

அழகிய பெண், இனிய உணவுகள், பெரிய மாளிகை அரிய செல்வங்கள் என இன்னவாறு எண்ணரிய வகைகளில் இன்ப சாதனங்கள் எண்ணப் பட்டுள்ளன. ஐம்புலன்களின் நுகர்வுக்ளை அடைய ஆருயிர்கள் அலமந்து அலேவது அதிசயக் காட்சிகளாய் நிலவுகின்றது. போகங்களின் ஆவல்கள் பொறி வெறிகளாய் எங்கும் பொங்கியுள்ளன. தேக போகங்களேயே அவாவி சீவ கோடிகள் எவ்வழியும் உழன்று வருதலால் அவற்றின் வகையும் வரவும் உணர வந்தன. உற்ற பிறவிகள் உண்மை நிலைகளை உணர்த்தி நிற்கின்றன.

தனது மனம் மொழி மெய்களை இனிமையாகப் பேணி வந்தவன் இன்பநலங்களைக் காணியாக அனுபவிக்கின்றான். அவ்வாறு பேணாமல் வெவ்விய வினைகளைச் செய்து வந்தவன் துன்பத் தொடர்புகளைத் தோய்ந்து நிற்கின்றான். எந்த வித்தை நிலத்தில் விதைத்தானே அதன் விளைவை அந்த மனிதன் அடைந்து கொள்ளுகிறான். இந்த நியதிகள் உயிர்களின் நியமங்களையும் சுக துக்கங்களின் இயல்புகளையும் உணர்ந்துகொள்ளச் செய்கின்றன.

புண்ணிய கருமங்களைப் புரிந்து வருபவன் இன்பங்களை எய்தி மகிழ்கின்றான்; பாவ காரியங்களில் படிந்து வருபவன் துன்பங்களைத் தோய்ந்து நிற்கின்றான். இந்த இன்பமும் துன்பமும் ஒரு நிலையில் நில்லாமல் மாறி மாறி மனிதனிடம் மீறி வருகின்றன. அவ் வரவுக்குரிய மூல காரணங்கள் அவனிடம் கூடமாய்க் கூடியிருத்தலால் இவ்வாறு அவை ஓடி வர நேர்கின்றன.

இன்பம்நனிசெய் நல்வினையின் இறப்பின் இறப்ப உடம்பினிடைத்
துன்பமதுசெய் தீயவினை தோன்றும் அத்தீவினை மாய்வில்
முன்புசெயு நல்வினைவரும் இம்முறையால் இரண்டும் மாறிவரும்
என்ப உலகில் ஒண்பகலும் இரவும் மாறி வருதல் போல்.

(பிரபுலிங்க லீலை)

நல்வினையின் பயன் இன்பம்; தீவினையின் பயன் துன்பம். புண்ணிய விளைவுகளாகிய இனியபோகங்களைமனிதன் அனுபவிக்குங்கால் தனது உள்ளக் களிப்பினால் அல்லல் புரிய நேர்கின்றான்; நேரவே முடிவில் அவல நிலைக்கு வருகின்றான்; அதிலிருந்து தேறி நல்லது புரிகின்றான்; நலம் பல நுகர்கின்றான்; இவ்வாறே மாறிமாறிப் பலன்கள் படிந்து வருகின்றன. இந்த இருவகை வினைகளும்

முழுவதும் ஒருங்கே நீங்கிய போதுதான் பிறவி நீங்கி ஆன்மா பேரின்பம் பெறுகின்றது. அறவினையும் இடையே தடையாயது.

இனிய போகங்களை யூட்டிப் பிறவியை நீட்டுதலால் நல்வினையைப் பொன் விலங்கு என்பர் ஞானிகள். நல்வினையாளர் புண்ணியவான்களாய் இனியபோகலோகங்களை அடைகின்றனர். அங்கே போகங்களை நுகர்ந்து போகிகளாய் மயங்கி நிற்கின்றார்.

நல்வினைக் குழவி நன்னீர்த் தயாளனும் செவிலி நாளும்
புல்லிக்கொண்டுஎடுப்பப் பொம்மென் மணிமுலை கவர்ந்துவீங்கிச்
செல்லுமால் தேவர் கோவாய் எனுமிருள் கழிந்த சொல்லால்
அல்லிமேல் நடந்த கோவே அச்சந்துள் நீங்கி னேமே. (1)

தீவினைக் குழவி செற்றம் எனும்பெயர்ச் செவிலி கையுள்
வீவினை இன்றிக் காம முலையுண்டு வளர்ந்து வீங்கித்
தாவினை இன்றி வெந்நோய்க் கதிகளுள் தவழும் என்ற
கோவினை அன்றி எந்நாக் கோதையர்க் கூறல் உண்டே? (2)
(சீவக சிந்தாமணி)

கருணை முதலிய இனிய நீர்மைகளோடு தழுவி வளர்ந்த நல்வினையாளர் தேவராசனைய் உயர்ந்து சிறந்த இன்பங்களை அடைகின்றனர்; கோபம் முதலிய புலைகளோடு பழகிநின்ற தீவினையாளர் பாவியராய் இழிந்த பிறவிகளில் அழுந்தி வருந்துவர் என இது உணர்த்தியுள்ளது. உருவகங்களின் பொருள் அமைதிகளை ஊன்றி உணர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

தான் செய்த கருமங்களின் நிலைகளுக்குத் தக்கபடியே பலன்கள் மருமங்களாய் விளைந்து வருகின்றன; அவ் விளைவையே மனிதன் நுகர்ந்து வருகின்றான். என்றும் தனக்கு இதத்தையே நாடி யுள்ளவன் யாண்டும் நன்றே புரிய வேண்டும். வினைப் போகங்களின் நிலைகளை உணர்ந்து எவ்வழியும் நினைப்போடு நல்லதைச் செய்து வருபவர் நல்லவராய் உயர்ந்து எல்லா நன்மைகளையும் அடைந்து இன்ப நிலையில் உயர்ந்து கொள்ளுகின்றனர்.

முற்செய் வினையின் பயன்துய்த்து அதுஉலந்தால்
பிற்செய் வினையின்பின் போகலால்—நற்செய்கை
ஆற்றும் துணையும் அறம்மறவேல் நன்னெஞ்சே!
கூற்றம் குடில்பிரியா முன். (அறநெறிச்சாரம்)

உடம்பு உள்ளபொழுதே உயிருக்கு நல்லதைச் செய்து

கொள்ளுங்கள் என உலக மக்களுக்கு உறுதி நலனை இது உணர்த்தியுள்ளது. உண்மை நிலை ஓர்ந்து சிந்திக்கத் தக்கது.

தீமை நஞ்சு என அஞ்சி ஒழிக.

என்றது தன் உயிர்க்கு நேர்ந்துள்ள தீய அபாயத்தை நெஞ்சம் தெளிந்து மனிதன் விரைந்து விலக்க வேண்டும் என விளக்கி நின்றது. கொடிய துயரங்களை உளவாக்கி உயிர்களை நெடிது வருத்துதலால் தீமை நஞ்சினும் மிக அஞ்சத்தக்கதாம்.

---

685. தொட்ட இடத்தில் தொடுப்பொழுது மட்டும்தீ
சுட்டுத் தகித்துக் துயருறுத்தும்—கெட்டவினை
எவ்வழியும் நீங்காமல் இன்னுயிரைத் துன்புறுத்தி
வெவ்வழலாய் நிற்கும் விரிந்து. (ரு)

இ—ள்

தொட்ட பொழுது மட்டும் தொட்ட இடத்தில் தீ சுட்டு எரிக்கும்; தீவினை எவ்வழியும் நீங்காமல் தொடர்ந்து படர்ந்து வெவ்வழலாய்த் தகித்து உயிரை என்றும் வருத்தி வரும் என்க.

அல்லலை எல்லாரும் அஞ்சுகின்றனர். எவ்வகையிலும் யாதும் தனக்கு அது நேரலாகாதென்றே யாரும் கண்ணும் கருத்துமாய் எண்ணி வருகின்றனர். அவ்வாறு எண்ணிவரினும் எல்லையில்லாத அல்லல்கள் எவ்வழியும் தொடர்ந்து புகுந்து அடர்ந்து படர்ந்து அலைத்து வதைத்து வருகின்றன.

இன்பங்களையே அனுபவிக்க வேண்டும் என்று யாண்டும் நீண்ட ஆவலோடு நிலவி வரும் மனிதர் துன்பங்களை அடைந்து துடித்து வருந்தி வருவது விசித்திரக் காட்சியாய் விரிந்து வருகிறது. வினைவிளைவு தெரியாமல் வெந்துயரமாய் விளிந்து வருகிறார்.

துயரம் நேர்ந்தபோது மனிதன் தெய்வத்தை நோகின்றான். "பாவி தெய்வமே! உனக்குக் கண் இல்லையா? எனக்கு இந்தத் துன்பத்தைக் கொடுத்து வருத்துகின்றாயே!" என்று துடித்து வைகின்றான். தான் செய்த தீவினையின் விளைவு தன்னை வந்து வருத்துவதை உணராமையால் அவ்வாறு இன்னலுழந்து இழிந்து புலம்புகின்றான். மனமுடைந்து மதிகெட்டு அப்படிப் புலம்புவதை விட்டுத் தான் செய்த பிழையால் நேர்ந்த வெய்ய விதி என்று அவன் அதனை உணர்ந்து திருந்தி மேல் உய்ய வேண்டும்.

செய்தீ வினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால்
எய்த வருமோ இருநிதியம்—வையத்து
அறும்பாவம் என்னஅறிந் தன்றிடார்க்கு இன்று
வெறும்பானை பொங்குமோ மேல். (நல்வழி, 17)

முன்பு பிறர்க்கு இட்டு உண்ணுதவர் பின்பு பட்டினி கிடந்து பதைக்க நேர்வர் என ஔவையார் இவ்வாறு சுட்டிக் காட்டியிருக்கிறுர். ஒருவன் செய்த தீவினையானது வறுமை முதலிய துயரங்களை ஊட்டி அவனை வாட்டி வதைக்கும் என்பதை நம்பாட்டியார் இப்பாட்டில்இங்கேநன்குவிளக்கியுள்ளார்.

தான் செய்த தீமை தன்னை விடாது வந்து அடுதுயர் செய்யும் ஆதலால் படு துயரங்களுக்கெல்லாம் தானே காரணன் என்னும் உண்மையைப் பூரணமாக எவன் உணர்ந்து கொள்ளுகிறுனே அவன் அன்றே தீவினைகளிலிருந்து விலகினவனுகிறுன்.

ஒரு பிறவியில் செய்தது வரு பிறவிகளிலும் அருவமாய்ப் புகுந்து பருவரல் புரியும் ஆதலால் தீவினை மிகவும் பயங்கரமானது. தன் உயிர்க்கு நெடிய துயரத்தை விளைத்துக் கொள்வது எவ்வளவு கொடிய மடமை! எத்துணை மருள்! உய்த்துணர வேண்டும். அயலே இன்னல் செய்வது தன்னையே கொல்வதாம்.

வேதனை விளைப்பதில் தீ மிகவும் கொடியது. அந்தத் தீயினும் தீவினை பெரிதும் தீயதாம். தீ தொடட்போது மாத்திரம் உடம்பைச் சுட்டு வருத்தும்; மருந்து முதலிய சாதனங்களால் அவ் வேதனை நீங்கிப் புண்ணும் ஆறிவிடும். செய்த தீவினை அவ்வாறு எளிதில் தீராது. தன்னைச் செய்த அவ்வுடம்பு அழிந்தாலும் உயிரை விடாமல் தொடர்ந்து புகுந்து பிறவிகள் தோறும் படர்ந்து வருத்திப் பெருந்துயரங்களை அது விளைத்து வரும்.

அல்லித்தாள் அற்ற போதும் அருதநூ லதனைப் போலத்
தொல்லைத்தம் உடம்பு நீங்கத் தீவினை தொடர்ந்து நீங்காப்
புல்லிக்கொண்டு உயிரைச் சூழ்ந்து புக்குழிப்புக்குப் பின்னின்று
எல்லையில் துன்ப வெந்தீச் சுட்டு எரித்திடுங்கள் அன்றே.
(சீவக சிந்தாமணி, முத்தி 278)

தீவினை ஆகிய தீ உயிர் புக்க இடம் எல்லாம் புகுந்து அதனைச் சுட்டு எரிக்கும் என இது குறித்திருக்கிறது. பவணமாதேவன் என்னும் மன்னன் தனது மகனுக்கு இன்னவாறு

நீதியைப் போதித்திருக்கிருன். செய்த தீவினை செய்தவனை விடாது ஆதலால் தன் செயலில் யாதொரு தீதும் நேராதபடி பாதுகாத்து ஒழுக வேண்டும் என்னும் இப்போதனை அந்த இராச குமாரனுக்குப் பெரிய உள்ளத் தெளிவை உணர்த்தியருளியது. உயர்ந்த சீவதயாபரனாய் ஒளிமிகப் பெற்று அவன் உய்தியை அடைந்தான். அருள் நிலை அதிசய நலனை உதவியது.

பகைமை பொருமை மடமை முதலிய காரணங்களால் மனிதன் பிறர்க்கு இடர் செய்ய நேர்கின்ருன். தான் செய்த தீமை தனக்கே மீண்டு வந்து நீண்டதுயரங்களை நெடிது விளைக்கும் என்பதைச் சிறிதேனும் சிந்தனை செய்து நோக்குவானுயின் எந்தவகையிலும் அதனை அவன் தீண்டாமல் விலகிவிடுவான். அறியாமையால் அவலக் கேடுகளை விளைத்துக் கொள்ளுகிருன்.

நோய்எல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர். (குறள்- 320)

பிறர்க்குச் செய்கிற துன்பங்கள் எல்லாம் தன் மேலேயே பெருகி வந்து விழும்; இது இயற்கை விதியின் நியதி. ஆகவே தாம் துன்பம் இல்லாமல் இன்பமாய் வாழ விரும்புகின்றவர் யாதொரு தீமையும் செய்யார் எனப் பொய்யாமொழி இங்ஙனம் கூறியுள்ளது. தீமையை மறந்த போதுதான் சேமம் சுரந்து வருகிறது; இந்த நேமத்தை நினைந்து கொள்ள வேண்டும்.

---

686 மெய்யிருக்க நல்ல வினையிருக்க மேவாமல்
பொய்யிருக்கும்புன்மைதனைப்போற்றியே–வையமய்யல்
பூண்டு மனிதர் புலையாடி ஓடியே
மாண்டு மடிகின்ருர் மண். (சு)

இ—ள்

சத்தியமும் நல்ல உத்த கருமங்களும் எத்திசையிலும் செய்யவுரியன வாயிருக்கின்றன; இருந்தும் அவற்றைப் பேணி ஒழுகாமல் வீணே பொய்யும்புலைகளும் புரிந்து வெய்யநிலைகளில் இழிந்து மனிதர் அநியாயமாய் மாய்ந்து மடிகின்றனர் என்க.

சத்தியத்தைத் தழுவி வரும் அளவே மனிதனுடைய வாழ்வு புனிதமாய் மருவி வருகிறது. மெய் ஒன்று சிதைந்தால்

மேன்மைகள் யாவும் சிதைந்து போகின்றன. போக்கின் புலை தெரியாமையால் பொய்யராயிழிந்து வெய்ய நிலையில் மக்கள் மறுகி யுழலுகின்றார்.

உண்மை வாய்மை மெய்மை என்பன மனம் மொழி மெய்களை இனமாத்தழுவி வந்துள்ளன. வாயாலும் மனத்தாலும் காயத்தாலும் மெய்யைப் பேணி வரவேண்டும் என்பதை இந்தப் பரியாய நாமங்கள் பாங்காயுணர்த்தி யுள்ளன.

உண்மையால் உள்ளம் தூய்மை ஆகின்றது.

வாய்மையால் வாக்கு மகிமை அடைகின்றது.

மெய்யால் மேனி மேன்மை யுறுகின்றது.

கள்ளம் யாதும் இன்றி உள்ளம் தூய்மையாய் உள்ளதை உள்ளபடி பேசி வருவதே சத்தியம் என ஒத்து உணர்ந்து வருகிறோம். நீரால் உடம்பு சுத்தம் ஆதல் போல், சத்தியத்தால் உயிர் புனிதமாய் உத்தம நிலையை அடைகின்றது. நீரால் கழுவா விடில் உடல் அழுக்குப் படிந்து இழுக்குப் படும்; வாய்மை தோயாவழி உயிர் தூய்மை இழந்து தீமையா யிழிவுறும். மெய் மேலான மேன்மையை அருளுகிறது. பொய் கீழான தாழ்மை யையே தருகிறது.

மெய்யுரை விளங்குமணி மேலுலக கோபுரங்கள்
ஐயம்இலை நின்றபுகழ் வையகத்து மன்னும்;
மையல்வினை மாநரக கோபுரங்கள் கண்டீர்
பொய்யுரையும் வேண்டா புறத்திடுமின் என்றான்.

(சீவகசிந்தாமணி,2869)

மெய்யால் புகழும் பொன்னுலக வாழ்வும் வரும்; பொய் யால் பழியும் நரகமுமே கிடைக்கும் என இது உணர்த்தியுளது. எவ்வழியும் இன்பநலங்களை அருளவல்ல மெய்யைக் கைவிட்டுப் பொய்யைப் பேசி மனிதன் புலையாய் அழிவது தொலையாத துன்பமாய்த் தொடர்ந்து நிற்கிறது. இழிவான பழக்கங்களைப் பழகி வருபவர் ஈனமாயிழிந்தே போகின்றார்.

"பொய்ம்மை மொழி புகன்றறியேம் புகலமனம் எண்ணுகினும்
மெய்ம்மை அலது உரையாநா வேதம் நவில் பயிற்சியால்."

(நைடதம்)

நல்ல வழியில் பழகி வந்துள்ள நா பொல்லாத பொய்யைச் சொல்லாது என இது குறித்துள்ளது. பொய்யால் அல்லலே விளையும்; ஆன்மசத்தி அழிந்து இழிந்து போம். மெய்யால் எல்லா மகிமைகளும் உளவாம்; சத்தியவான் அதிசய ஆற்றலுடையனாய் எத்திசைகளிலும் இசைமிகப் பெறுகின்றான். புகழும் புண்ணியமும் உடையதை இழந்து பழியும் பாவமும் தருவதைத் தழுவி இழிவது முழுமடைமையாயுள்ளது. பொய் பேசுவது பிழையான பேடித்தனமேயாம்.

"Dare to be true, nothing can need a lie" [Herbert]

"உண்மையாகத் துணிந்து நில்; பொய் பேச வேண்டிய அவசியமே யில்லை"

என ஜார்ஜ் ஹெர்பேர்ட் என்பவர் இவ்வாறுகூறியுள்ளார்.

"Truth is as impossible to be soiled by any outward touch as the sunbeam." (Milton)

"உண்மையை எதுவும் பழுது படுத்த முடியாது; சூரிய கிரணம் போல் அது யாண்டும் ஒளி வீசியுள்ளது." என ஆங்கிலக் கவிஞராகிய மில்ட்டன் இங்ஙனம் குறித்திருக்கிறார். சத்தியத்தைக் கைப்பிடித்தவன் எத்தகைய இடர்களையும் வென்று நித்திய ஆற்றலுடன் நிலவி நிற்கிறான்.

வாயால் ஒரு பொய்யைச் சொல்லும்படி எவ்வளவோ கொடிய இடையூறுகளைச் செய்தும் சத்தியசீலனை அரிச்சந்திரன் யாதும் வழுவாமல் மெய்யையே பேணி மேன்மை மிகப் பெற்றான். தேவதேவர்களும் அவன் முன் வந்து நின்று ஆவலோடு புகழ்ந்து மகிழ்ந்தனர். இன்றும் அவனை உலகமெல்லாம் உவந்து போற்றி வருகின்றன. சாபாலி என்னும் பெரியவரிடம் ஒரு வாலிபன் படிக்க வந்தான். அவனது நிலைமையை அம்முனிவர் வினவினர். உள்ளதை யெல்லாம் அவன் ஒளியாமல் சொன்னான். உன் தந்தை பெயர் என்ன?என்றார். "நான் யாருக்குப் பிறந்தேனோ எனக்குத் தெரியாது; என் தாயை மாத்திரம் தெரியும்" என்றான். அந்த வார்த்தையைக் கேட்டதும் அம்மாதவர் மனம் மிகமகிழ்ந்தார். "நீயே உத்தமமான சத்தியவான்; உனக்கு எல்லாக் கலைகளும் எளிதே தெளிவாம்; உன்னிடமிருந்தே அரிய தவசிகளும் பெரிய உண்மைகளை உணர்ந்து கொள்ளு

வார்'' என உவந்து புகழ்ந்தார். அதன்பின் சத்தியகாமன் என்னும் பெயரோடு உயர் மகிமை பெற்று அவன் ஒளிசிறந்து நின்றான். மருவிய ஓர் உண்மையால் அரியபல நன்மைகள் வரலாயின.

இவ்வாறு சத்தியத்தைப் பேணி எத்திசையும் இசைபரப்பி நின்ற உத்தமர்களைப் பெற்றிருந்த இந்நாடு இப்பொழுது எவ்வளவு கேடு அடைந்திருக்கிறது! பொய்யர்களைப் புலையாச் சுமந்து வையம் நொந்து வருந்தி வருகிறது.

எல்லாத் தீமைகளுக்கும் பொய் மூலகாரணமாயுள்ளது. அது ஒன்று இல்லையானால் அங்கே எல்லா நன்மைகளும் பெருகி என்றும் இசை வளர்ந்து நிற்கும்.

புலையாடி மடிகின்றார்.

என்றது பொய் முதலிய தீமைகளைச் செய்து நீசமாயிழிந்து நாசமடைந்து வருதலை நினைந்து வந்தது. தீய செயல்கள் மனிதனைத் தீயனாக்கி விடுகிறது; அவை நீங்கிய அளவு தூயனாய் உயர்ந்து மிளிர்கிறான்.

> "தான்கெடினும் தக்கார்கேடு எண்ணற்க; தன்உடம்பின்
> ஊன்கெடினும் உண்ணார்கைத்து உண்ணற்க--வான்கவிந்த
> வையகம் எல்லாம் பெறினும் உரையற்க
> பொய்யோடு இடைமிடைந்த சொல்." (நாலடியார்,80)

இந்த உறுதி நலங்களை உள்ளம் கொண்டு ஒழுகிஉய்யவேண்டும்.

---

687. வஞ்சம் புரிகின்றீர் வாதுமிகச் செய்கின்றீர்
நஞ்செனவே நின்று நலிகின்றீர்—நெஞ்சிலருள்
கொண்டெவர்க்கும் இன்பம் குறியீர்! எமன்கனன்று
கண்டறுத்தல் காணீர் கதி. (எ)

இ—ள்

நெஞ்சில் அருள் இன்றி வஞ்சனைகளைச் செய்து வாயில் தீயவாதங்களைப் பேசி யாவரும் அஞ்ச நஞ்சம்போல் நலிவு செய்து வருகின்றீர்! எமன் வெகுண்டு உம்மைக் கொன்று கொண்டு போய்க் கொடிய நரகதுயரத்தில் அழுத்தி வருத்துவதை ஒருசிறிதும் நீர் கருதி உணரவில்லையே என்பதாம்.

மனமே மனிதனை இயக்கி வருகிறது. அகம் என்று அதற்கு ஒரு பெயர். புறம் வெளியே விளங்கித் தோன்றுகிறது; அகம் உள்ளே மறைந்திருக்கிறது. உள்ளே யுள்ள உள்ளத்தின்படியே உயிர் உருவாய் நிலவிவருதலால் உலகக்காட்சிகள் பெருகி வருகின்றன. புறத்தை அறம்ஆக்கிப் புகழ் இன்பங்களைத் தரவும், அதனை மறம் ஆக்கிப் பழி துயரங்களை விளைக்கவும் அகம் வல்லதாயிருத்தலால் அதன் அதிசய நிலையை அறிந்து கொள்ளலாம்.

தனிமையாக நோக்கும் போது மனிதன் இயல்பாக நல்லவன். அயலே சூழ்ந்துள்ள சூழல்களின்படியே பெரும்பாலும் அவன் உருவாகி வருகின்முன்; பண்பாடில்லாத கொடியவர்கள் கூட்டுறவால் கொடியவன் ஆகின்முன்; நல்லவர்கள் தொடர்பினுல் நல்லவனுய் மிளிர்கின்முன்.

தீவினையாளர்கள் யாண்டும் மிகுதியா யுள்ளமையால் அவரது சேர்க்கை, நோக்கு யாவும் தீயவன் ஆதற்கு ஏதுவாய் வருகின்றன. தோய்ந்தபடியே தொடர்பு வாய்ந்து விடுகிறது.

கொலை களவு முதலிய இழி தொழில்களைச் செய்தவர்களே பெரும்பாலும் சிறைச்சாலையில் நிறைந்திருக்கின்றனர்; அது போல் தீயவினைகளைச் செய்தவர்களே பிறவி ஆகிய சிறைச்சாலையில் பெருகியுள்ளனர். பழகிய வாசனைகள் வழி வழியே தொடர்ந்து வருதலால் இழி நிலைகளை நாணுமல் அவர் களிமிகுத்து உழலுகின்றனர்.

இந்த வெவ்விய கூட்டங்களின் தொடர்புகள் எவ்வழியும் இடர்களுக்கே ஏதுவாகின்றன. ஆகவேபாபகாரியங்கள்படிந்து வர நேர்கின்றன. அவ் வரவால் அவலங்கள் அடர்கின்றன.

பொய்பேசுவது எவ்வளவு இழிவு! எத்துணைத்தீமை! அதனை யாதும் கூசாமல் யாவரும் பேசுகின்றனர். எத்தனை இடர்கள் நேர்ந்தாலும் சத்தியத்தைப் பேணி உத்தம நிலையில் உயர்ந்து நின்ற அரிச்சந்திரனது சரிதையைக் கேட்டு எல்லாரும் உள்ளம் வியந்து உவந்து புகழ்ந்து வருகின்முர்.

"உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்." [குறள், 294]

என்ற பொய்யாமொழிக்கு மெய்யான சான்ருய் மேவி யுள்ள இந்த ஐயனை வையம் முழுவதும் வாழ்த்தி வருகின்றது; வரினும் பொய்யை விடாமல் மனிதர் பேசி வருகின்றனர்.

மெய் தெய்வீகமானது; கடவுளுக்கு மெய்யன் என்று ஒரு பெயர். ஆகவே பொய் பேசுகின்றவன் தெய்வ விரோதி யாய் வெய்ய பாவத்தை அடைகின்ருன். ஒரு பொய்யால் பல பிழைகள் விளைகின்றன; பழி துயரங்கள் வருகின்றன.

"He that does one fault at first,
And lies to hide it, makes it two." [watts]

"ஒரு குற்றத்தைச் செய்தவன் அதை மறைக்கப் பொய் சொல்லுகிருன்; சொல்லவே இரண்டு பிழைகளைச் செய்தவனுகி ருன்" என வாட்ஸ் என்னும் ஆங்கில அறிஞர் இவ்வாறு கூறியிருக்கிருர். பொய் புகப் புலைகள் புகுகின்றன.

பொய்தீயது ஆதலால் அதனைத் தோயாதவர் தூயர் ஆகின்ருர்.

"வாய்மை என்னும் ஈது அன்றி வையகம்
தூய்மை என்றும்ஒன்று உண்மை சொல்லுமோ?
தீமைதான் அதில்தீர்தல் அன்றியே
ஆய்மெய்யாக வேறு அறையலாவதே." (இராமாயணம்)

வாய்மையே தூய்மை; அதனை நீங்குவது தீமையேயாம் என இராமன் இன்னவாறு பரதனை நோக்கி அருளியுள்ளான். இதனல் பொய்யின் புலைநிலை நன்கு புலனும்.

நீசனே நீசன் நினையுங்கால் சொல்தவறும்
நீசனே நீசன் அவனையே---நீசப்
புலையனும் என்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனும் என்றே புகல். (நீதிசாரம்)

பொய்பேசுபவன் புலை நீசன் என இது குறித்திருக்கிறது. வஞ்சனை பொய் முதலிய தீமைகளோடு பழகாமல் ஒருவன் தூய்மையாய் ஒழுகிவரின் அரிய பல மேன்மைகள் அவனுக்கு உரிமைகளாய் வருகின்றன. உறுதி நலனைக் கருதி உயர்க.

செம்மை நெறிதழுவிச் சீர்மையுடன் வாழ்ந்துவரின்
இம்மை மறுமை இனிது.

இந்த உண்மையை உணர்ந்து நன்மை யுறுக.

688. தீய வினைஎன்னும் தீயை மடியின்கண்
நேயமாய் வைத்து நெடிதோங்கி—நோயைவிளைத்
துள்ளம் களிக்கின்ருர் உண்டநஞ்சு கொல்லுமுன்மீன்
வெள்ளம் குளிக்கும் விதம். (அ)

இ—ள்.

தீயவினை என்னும் தீயை மடியில் வைத்து நோயைவிளைத் துக் கொண்டு தீவினையாளர் அவமே அழிகின்ருர்; உண்ட நஞ்சு கொல்லும் முன் உள்ளம் களித்து வெள்ளம் குளிக்கும் மீன் போல் அவர் அழிவு நிலையில் களிமிகுத்து வருகிருர் என்க.

நல்ல எண்ணங்களை எண்ணுகின்றவன் அமுதத்தை உண் ணுகின்றவன் போல் எவ்வழியும் இன்பங்களையே எய்துகின் ருன்; தீய நினைவுகள் கொடிய துயரங்களாய் மனிதனைப் பீடித்து யாண்டும் அல்லலுறுத்தி வருதலால் அவை கொடிய நஞ்சு, நெடிய தீ என அஞ்ச நேர்ந்தன.

வறுமை பிணி முதலிய துன்பங்கள் எல்லாம் தீவினைகளாலே யே விளைந்து வருகின்றன; ஒரு பிறவியில் செய்தன மறுபிறவி களிலும் மருவி வெய்யதுயரங்களை விளைத்து வருதலால் தீவினை எவ்வளவு கொடியது என்பதை எளிதே தெளிந்துகொள்ளலாம்.

தன் உயிர்க்கு இதத்தை நாடுகின்றவன் தீமையை எவ்வழி யும் யாதும் செய்யலாகாது; இந்த விதிமுறையைப் பழகிவருப வன் அதிசயமான இன்ப நலங்களை அடைந்து கொள்ளுகிருன்.

எரிகின்ற விளக்கில் கையை வைத்துச் சிறுகுழந்தைகள் துடித்து அழுவது போல் அறியாமையால் தீவினைகளைத் தழுவி மனிதர் பரிதாபமாய்ப் படுதுயரடைகின்றனர்.

வெய்யதுயரங்கள் எல்லாம் தான் செய்த தீமைகளாலே யே வருகின்றன என்னும் உண்மையை ஒரு சிறிது உணர்ந்தா லும் எவனும் உய்திபெற நேர்வான். மடமை மருள்களால் கொடுமைகளைச் செய்து கொண்டு கடுமையான தண்டனைகளைச் சீவகோடிகள் அனுபவித்து வருகின்றன. மதிகேடான இந்த மாயமயக்கங்களில் உழன்று சீவர்கள் பாவகாரிகளாய் இழிந்து வருதலை நினைந்து நினைந்து மகான்கள் பரிந்து இரங்குகின்றனர்; ஆனவரையும் ஞான போதனைகளை அவர் செய்து வருகின்ற றனர்; வரினும் மானமனிதர் ஈனமாகவே இழிந்து போகின்ற

னர். போயினும் விடாமல் தூயவர் போதித்தருளுகின்றார்.

தன்னைத்தான் காதலன் ஆயின் எனைத்தொன்றும்
துன்னற்க தீவினைப் பால். [குறள்,209]

தனக்கு இன்னல் இழிவுகள் நேராமல் இருக்க விரும்புகின்றவன் பிறவுயிர்கட்கு யாதொரு தீமையும் செய்யலாகாதுஎனத் தேவர் இவ்வாறு உண்மையை உரிமையோடு உணர்த்தியிருக்கிறார். உயிர் துயரின்றி உயரும் வழி விழி தெரிய வந்தது.

நெஞ்சில் தவருன எண்ணங்கள் சிறிது தோன்றினாலும் பெரிய துன்பங்களை அவை விளைத்து விடுகின்றன. தன் உள்ளத்தையும் உரையையும் நல்ல நெறிகளில் பழக்கி வருபவன் எல்லா வகைகளிலும் இன்பநலங்களைக் காணுகின்ருன்; பொல்லாத பழக்கங்களுடையவன் யாண்டும் அல்லல் அவலங்களையே அடைய நேர்கின்ருன்.

"The thought of foolishness is sin: and the scorner is an abomination to men." [Bible]

"மதிகேடான தீய எண்ணங்கள் பாவம் ஆகின்றது; பழிமொழி கூறுவோன் எல்லாராலும் அருவருத்து வெறுக்கபடுகிருன்." எனச் சாலமன் என்னும் நீதிமான் இங்ஙனம் கூறியிருக்கிருர். எண்ணமும் சொல்லும் இனிமையுறின் இன்பமாம்.

இழிவான நினைவுகள் மனிதனை இழிந்தவனுக்கி விடுகின்றன; அந்த உண்மையை உணர்ந்துகொள்ளாமையால் புன்மையில் களித்து அவன் புலையாடித்திரிகின்ருன்.

உண்ட நஞ்சு கோல்லும் என்றது தான் கொண்டதீமை எப்படியும் தன்னைக் கொன்றே விடும் என்பதைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவந்தது. பழி வினைகளைத் தழுவிக் கொண்டு அழிதுயரங்களுக்கே ஆளாகி வருவது அறிவீனமாய் வளர்ந்து வருகிறது.

வயது முதிர்ந்தும் நல்ல வழிகளைப் பழகிக் கொள்ளாமல் அவலமாயுழலும் முதியரை நோக்கி நரிவெரூத்தலையார் என்னும் புலவர் ஒருநாள் பதிநலம் கூறினர். அவரது அறிவுரை பரிவு தோய்ந்து வந்துள்ளது. அயலே வருவது காண்க.

"பல்சான் றீரே! பல்சான் றீரே!
கயல்முள் அன்ன நரைமுதிர் திரைகவுள்

பயனில் மூப்பின் பல்சான் றீரே!
கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திறல் ஒருவன்
பிணிக்கும் காலை இரங்குவிர் மாதோ!
நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்! அதுதான்
எல்லாரும் உவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே." (புறம்.195)

புலவருடைய உள்ளப் பரிவும் உணர்வு நலனும் இதில் ஒளி புரிந்துள்ளன. பொருள் நிலைகளைக் கருதி உணரவேண்டும். காலன் வந்து உயிரைக் கவரும் போது சாலவும் வருந்துவீர்! நன்மையைச் செய்யாது போயினும் தீமையையாவது செய்யா திருங்கள் என்னும் உய்தியுரை உள்ளத்தை உருக்கி யுள்ளது.

---

689. இறைவன் அருளுக் கிசைந்த படியே
துறைதோறும் நீதி தொடர்ந்து—முறையே
ஒழுகி வரினே உயர்வாம் ஒருவி
வழுவின் இழிவே வரும். (௯)

இ—ள்.

இறைவனுடைய அருளுக்கு இசைந்தபடியே வாழ்க்கையி லுள்ள எல்லா வழிகளிலும் நல்ல நீதிமுறைகள் தழுவி ஒழுகி வருக; அவ்வாறு வரின் உயர் நலங்கள் பல உன்பால் விளைந்து வரும்; வழுவினால் இழிவுகள் பல நுழைந்து விடும் என்க.

உயிரினங்களுள் மனிதன் உயர்ந்தவன்; ஆயினும் குணநீர் மைகளை மருவியுள்ள அளவே அவன் பெரியவனாய் மிளிர்கின் றான். பெருமையும் சிறுமையும் தன் நடையால் வருகின்றன; இடையே எவரும் தருவன அல்ல.

தனது செயல் இயல்புகள் புனிதமாய் உயர்நலமுடையன வாயின் அந்த மனிதன் உயர்ந்து சிறந்த மேன்மைகளை அடை கின்றான். அவை மலினமாய் இழிந்து படின் அவன் தாழ்ந்து தளர்ந்து அவலமுறுகின்றான்.

மேன்மையும் இன்பமும் நல்ல நினைவுகளின் விளைவுகளே;
கீழ்மையும் துன்பமும் தீய நினைவுகளின் பலன்களே.

இனிய எண்ணங்களையுடையவர் இன்ப நிலையங்களாய் விளங்குகின்றனர்; கொடிய நினைவுகளையுடையவர் துன்பங்களில் அழுந்தித் துடித்து உழலுகின்றனர். தமக்குத் தாமே அல்லல்களை விளைத்துக் கொண்டு அவலமடைந்து வருவது கொடிய மடமையாயுள்ளது. மூடம் ஏறப் பீடைகள் ஏறுகின்றன.

தன்னைப் புண்ணியவானா உயர்த்தி இன்பங்களை அடையவும், பாவியாத் தாழ்த்தித் துன்பங்களை நுகரவும் மனிதன் வல்லவனாயிருத்தலால் அவனது நிலைமை தலைமைகளை நன்கு உணர்ந்து கொள்ளலாம். இனிமையே தனி மகிமைக்குக் காரணமாகிறது.

பிற உயிர்களுக்கு இனிய இதநலங்களைச் செய்து வருபவன் தன் உயிர்க்கே எல்லா நன்மைகளையும் செய்தவனாகின்றான். அல்லல்களைச் செய்பவன் தனக்கே அவலங்களை விளைத்துக் கொள்ளுகிறான். செய்தது சேர வருகிறது.

தன் எண்ணம் நல்லதாக மனிதன் நல்லவன் ஆகின்றான்; அது தீயதாக அவன் தீயவனாகின்றான்; ஆகவே மேன்மைக்கும் கீழ்மைக்கும் சுகத்துக்கும் துக்கத்துக்கும் தானே மூலகாரணமாயிருத்தலைக் காலக் கழிவில் அவன் உணர்ந்து கொள்ள நேர்கின்றான். உயர்வும் தாழ்வும் அவனிடமே உள்ளன.

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்--நிலையினும்
மேன்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானும் தான். (நாலடியார்,248)

இந்தப் பாசுரம் இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது.

மனிதனுடைய தத்துவங்களை இது உய்த்துணரச் செய்துள்ளது. அயலே யிருந்து யாதும் வராது; நினைவு செயல்கள் என்னும் தனது வினைகளினாலேயே யாவும் விளைந்து வருகின்றன; இவ்வுண்மையை உணர்ந்து கொண்ட அளவு மனிதன் உயர்ந்து கொள்ளுகிறான். தன் நிலைகளுக்குத் தானே காரணனாயுள்ளான்.

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்;
தானே தனக்கு மறுமையும் இம்மையும்;
தானே தான்செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி. (அறநெறிச்சாரம்,173)

தனக்கு உயர்வு தாழ்வுகளை உளவாக்குபவர் தன்னைத் தவிர வேறு யாரும் இலர் என உணர்த்தியிருக்கும் இது ஊன்றி உணரத்தக்கது. நல்வினை செய்பவன் தன் உயிர்க்கு இன்பத்தைச் செய்யும் நண்பன் ஆகின்றான்; தீவினையாளன் துன்பத்தை விளைத்தலால் தன் உயிர்க்கு அவன் கொடிய பகைவனாய் முடிகின்றான்.

"உத்தரே தாத்மநாத்மாநம் நாத்மாநம் அவஸாதயேத்!
ஆத்மைவ ஹ்யாத்மநோ பந்துராத்மைவ ரிபுராத்மந:"
[கீதை,6--5]

"ஆன்மாவை ஆன்மாவினால் உயர்த்துக; அதனைக் கீழே தள்ளிவிடாதே; ஆன்மாவே ஆன்மாவுக்கு நண்பன்; அதுவே தனக்குப் பகைவன்" எனக் கண்ணன் இன்னவாறு விசயனுக்குப் போதித்துள்ளான். போதனை ஆழ்ந்த சிந்தனையுடையது.

பொறிகளை அடக்கி நெறியே ஒழுகுபவன் தனக்கு இனிய உறவாய் அரிய மேன்மைகளை விளைத்துக் கொள்கிறான்; அல்லாதவன் தனக்கே கொடிய சத்துருவாய் அல்லல்களை ஆக்கிக் கொள்கின்றான் என்னும் உண்மையை இது இவ்வாறு உணர்த்தியுள்ளது. ஆன்ம நிலை உயர அதிசய மேன்மை வருகிறது.

தானலது யாவர்தன் மேன்மைசெய் தக்கார்?
தானலது யாவர்தன் கீழ்மை சமைப்பார்?
தானலது யாவர்தன் மெய்ப்பகை ஆவார்?
தானலது யாவர்தனக்கு உறவு ஆவார்? (பகவற்கீதை)

மேலே குறித்த சுலோகத்தின் மொழி பெயர்ப்பாய் இது வந்திருக்கிறது. நெறிதவறிக் கீழாயிழிந்து போகாமல் உயர்ந்து செல்பவனே உத்தம மகானாய் ஒளி பெற்று நிற்கின்றான்.

நீதிமுறை ஒழுகிவரின் உயர்வாம்: வழுவின் இழிவே.

இதனை விழியூன்றி நோக்கித் தெளிவோடு சிந்திக்க வேண்டும். இனிய வழிகளையே பழகி விழுமிய மேன்மைகளை அடைந்து கொள்வதே மனித சன்மத்தின் மாண்பயன் ஆகும். அரிய பிறவிக்கு உரிய பயனை உரிமையோடு மருவிக் கொள்க.

பெறலரும் பிறவியைப் பெற்று வந்துளாய்
உறலுறும் உய்தியை உறாது நிற்றியேல்
இறலுறும் இழிவுகள் எய்தும் ஆதலால்
திறலுடன் உயர்நிலை தேர்ந்து கொள்கவே.

690. தான்செய்த நல்வினையால் தார்வேந்தாய்ச் சூரபன்பன்
வான்செய் புகழோடு வாழ்ந்துவந்தான்—ஊன்செய்த
தீவினையால் பாவியெனத் தீர்ந்தழிந்தான் யார்வாழ்வார்
நாவிதனை யுண்டபின் நாடு. (௯0)

இ—ள்.

தான் பண்ணிய புண்ணிய கருமத்தால் பெரிய சக்கரவர்த்தியாய்த் தேவரும் தொழுது ஏவல்புரியச் சூரபன்மன் சிறந்து வாழ்ந்து வந்தான்; பின்பு செய்ததீவினையால் அடியோடு இழிந்து அழிந்துபோனான்; நஞ்சை உண்டவர் துயரமாய் மாள்வரே அன்றி இனியராய் உயிர்வாழ முடியாது என்பதாம்.

மனிதன் செய்கிற இனிய கருமம் தருமமாய் வருகிறது. இன்னாதது பாவமாய் விரிகிறது. முன்னது இன்ப நலங்களை அருளுகிறது; பின்னது துன்பங்களைக் கொடுக்கிறது.

அரசர், தேவர் என வரிசை பெற்று உயர்ந்துள்ளவர் எல்லாரும் தருமநீர்மையினாலேயே பெருமை அடைந்திருக்கின்றனர். ஒரு சிறு புண்ணியத்தால் அரிய பல மேன்மைகள் உளவாம் ஆதலால் அதன் அதிசய மகிமையை மேலோர் வியந்து துதி செய்துள்ளனர்.

"புண்ணியம் அணுவினால் புகழும் இன்பமும்
எண்ணிய மலையென எய்தும் ஆதலால்
விண்ணியல் அமரரும் விரத சீலரும்
நண்ணிய அதனையே நாடி நின்றனர்."

இதனால் புண்ணியத்தின் மகிமை புலனும்.

கடவுளுக்குப் புண்ணியன் என்று ஒரு பெயர் அமைந்திருத்தலால் அது எவ்வளவு மேன்மையுடையது என்பதை எளிதே தெளிந்து கொள்ளலாம்.

என்பணிந்த தென்கமலை ஈசனார் பூங்கோயில்
முன்பணிந்த தெய்வ முனிவோர்கள்--அன்பென்னும்
புண்சுமந்தோம் நந்தி புடைத்தென்னார் புண்ணியனார்
மண்சுமந்தார் என்றுருகு வார். (திருவாரூர்நான்மணிமாலை)

ஈசனைத் தெரிசனை செய்யத் தேவர்கள் திரண்டு நெருங்கினர்; அப்பொழுது அங்கே வாயில் காவலராய் நின்ற நந்திதேவர்

பிரம்பால் அடித்துக் கூட்டத்தை ஒழுங்கு செய்து விடுத்தார். அடிபட்ட அமரமுனிவர் தமக்குநேர்ந்ததை நினைந்து வருந்தவில்லை; மதுரையில் பிட்டுக்கு மண்சுமந்த போது எம்பெருமானைப் பாண்டியன் பிரம்பால் அடித்தானே! அந்த அடி பரமனை எப்படி நோகச் செய்ததோ? என அதனை எண்ணி அவர் உருகினர் என இது உணர்த்தியுளது. இதில் புண்ணியனர் என்று சிவ பெருமானைக் குறித்திருத்தல் கூர்ந்து சிந்திக்கவுரியது.

விண்ணுலக வாழ்வையும், மேலான தெய்வநிலையையும், முத்தி இன்பத்தையும் புண்ணியத்தால் அடையலாம் என்பதை இதனல் எண்ணியுணர்ந்து கொள்கிருேம்.

தான் செய்கின்ற நல்வினை ஆகிய புண்ணியம் எண்ணரிய பெருமைகளை மனிதனுக்கு விளைத்து வருகிறது. தேவர் முதல் யாவரும் அதனுலேயே அதிசய மேன்மைகளை அடைந்து கொள்ளுகின்றனர்.

"Well may your hearts believe the truths I tell;
'T is virtue makes the bliss, where'er we dwell."
William Collins)

"நான் சொல்லுகிற உண்மைகளை உங்கள் இதயம் நன்கு நம்பலாம்; நாம் எங்கே வசித்தாலும் புண்ணியமே நமக்குப் பேரின்பத்தை அருளுகிறது" என வில்லியம் காலின்ஸ் என்னும் ஆங்கிலக்கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிருர்.

"Virtue, though in rags will keep me warm." (Dryden)

"எப்படி மங்கி யிருந்தாலும் தருமமே என்னை இதமாக் காத்து வருகிறது" என டிரைடன் என்பவர் இவ்வாறு கூறி யிருக்கிருர். அரிய இன்பங்கள் யாவும் அறத்தால் வருகின்றன.

"Virtue only makes our bliss below" [Pope]

"தருமமே நமக்கு இங்கே பேரின்பம் தருகிறது" எனப் போப் என்பவர் இப்படிக் குறித்துள்ளார்.

"Virtue alone is happiness below." [Epistle]

"தருமம் ஒன்றே ஈண்டு இன்பமாயுளது" என்னும் இது இங்கே அறியவுரியது. மனித இனத்தை மகிமைப்படுத்தி வருத லால் தருமத்தை எந்த நாடும் அருமையாய் போற்றி வருகிறது.

புண்ணியபூமி என்று இந்த நாடு முன்னம் புகழ் பெற்றிருந்தது.

*நீர்அறம் நன்று நிழல்நன்று தன்இல்லுள்*
*பார்அறம் நன்றுபாத் துண்பாலேல்--பேரறம்*
*நன்று தளிசாலை நாட்டல் பெரும்போகம்*
*ஒன்றுமாம் சால வுடன். (சிறுபஞ்சமூலம்,63)*

குடிக்க நீர் உதவி, இருக்க நிழல் தந்து, உண்ண உணவூட்டிப் பலவழிகளிலும் தருமங்களைச் செய்துவரின் அவை பேரின்ப போகமாய்ப் பெருகி வரும் எனக் காரியாசான் இவ்வாறு கூறியிருக்கிறார். சீரிய உண்மை நேரே தெரிய வந்தது.

இனிய தருமத்தாலும் அரிய தவத்தாலும் சூரபன்மன் பெரிய பேறுகளைப் பெற்றான். அண்டங்கள் பலவும் ஆள நேர்ந்தான். முடிவில் செல்வக் களிப்பாலும் பல்வகைச் செருக்காலும் தீமை செய்ய மூண்டான். நல்லவர்களுக்கு அல்லல்களை விளைத்து வந்தமையால் புண்ணிய மூர்த்தியாகிய இறைவன் முருகன் ஆய் அவனை அழித்து ஒழிக்க வந்தான். "தீமையைக் கைவிட்டு நன்மையைக் கடைப்பிடித்து நட; இல்லையேல் அடியோடு அழிந்து போவாய்!" என்று நீதிமுறை கூறி ஒரு தூதுவனை விடுத்தார். அத்தூதுதன் வந்து ஓதியும் இத்தீதன் கேட்காமல் திங்கிலேயே ஓங்கி நின்றான். உடன் பிறந்த தம்பி சிங்கமுகனும் உறுதி நலம் கூறினான். அவனுடைய உணர்வுரைகள் அயலே வருகின்றன.

*பேதை வானவர் தங்களைச் சிறையிடைப் பிணித்தாய்!*
*ஆதலால் உனக்கு ஆனதுஎன்? துன்பமே அல்லால்*
*ஏதும் ஓர்பயன் இல்லதோர் சிறுதொழில் இயற்றி*
*வேதனைப்படு கின்றது மேலவர் கடனோ? (1)*

*குரவரைச்சிறு பாலரை மாதரைக் குறைதீர்*
*விரதநற்றொழில் பூண்டுளோர் தம்மை மேலவரை*
*அருமறைத் தொழிலாளரை ஒறுத்தனர் அன்றோ*
*நிரய முற்றவும் சென்று சென்று அலமரும் நெறியோர். (2)*

*அமரர் தம்பெருஞ் சிறையினை நீக்குதி ஆயின்*
*குமர நாயகன் சண்டுபோர் ஆற்றிடக் குறியான்*
*நமது குற்றமும் சிந்தையில் கொள்ளலன் நாளை*
*இமைஒடுங்குமுன் கைலையில் மீண்டிடும் எந்தாய்! (3)*

சிட்டர் ஆகியே அமர்தரும் இமையவர் சிறையை
விட்டி டாதுநீ இருத்தியேல் மேவலர் புரங்கள்
சுட்ட கண்ணுதல் குமரன்நம் குலமெலாம் தொலைய
அட்டு நின்னையும் முடித்திடும் சரதம்என்று அறைந்தான்.
(கந்தபுராணம்,சூரன் அமைச்சு 102-105)

தம்பி கூறிய இந்த நீதிமொழிகளையும் கேளாமல் சூரபன்மன் தீமையிலேயே நிமிர்ந்து நின்றான்; அதனால் அடியோடு அழிந்து ஒழிந்தான். அழிவுகள் பாவத்தின் விளைவுகளாயுள்ளன.

நல்வினையால் பல்வகை மேன்மைகளை அடைந்தான்; தீவினையால் அல்லலுழந்து அழிந்தான் ஆதலால் தீமையின் விளைவாகிய அழிவுக்கு உலகம் காணும் சான்றாய் அவன் நிலவி நின்றான்.

தீமையை நாவி என்று குறித்தது தன்னைக் கொண்டவரை அல்லலுறுத்தி அழித்து ஒழிக்கும் அதன் அவலநிலைதெரிய.

தீமை யாண்டும் அல்லலாய் அழிவே தரும்: அதனை யாதும் தீண்டாதே; எவ்வழியும் நன்மையையே நாடி நலம்பல பெறுக.

உள்ளம் தீமையா யுறினவன் உயர்வெலாம் இழந்து
தள்ள ரும்பழி தாழ்வுகள் தமையடைந் தழிவான்;
உள்ளம் நன்மையா யுறினவன் உயர்கதி எய்தி
விள்ள ரும்புகழ் ஒளியுடன் மேவியின் புறுவான்.

இதனை உள்ளம் கொண்டு உய்தி யுறுக.

இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

தீமை மிகவும் தீயது.
நஞ்சினும் கொடியது.
அதனைத் தழுவினர் இழிவே அடைவர்.
பழிபடிந்து பாழ்படுவர்.
எவ்வழியும் இழிதுயருறுவர்.
புலையும் புன்மையும் நிலையாயுழல்வர்.
எமதண்டனை எய்துவர்.
நஞ்சையுண்டவர் போல் நாசமே காண்பர்.
நல்வினை அமுதமாய் இன்பம் தரும்.
தீவினை விடமாய் அழிவே புரியும்.

சுகூவது தீமை முற்றிற்று.

---

# எழுபதாவது அதிகாரம்.

## புலை.

அஃதாவது ஊனை உண்ணும் ஈனம். புலைப்புசிப்பு மிகவும் கொடிய தீமை; அதனை ஒழித்து ஒழுக வேண்டும் என உணர்த்துகின்றமையால் தீமையின்பின் இது இங்கு வைக்கப்பட்டது.

691. புலையனெனும் சொல்லே புலால்புசிப்போன் என்னும்
நிலையை எளிதுணர்த்தி நிற்கும்—தலையான
சாதியேம் என்று தருக்குவாய் ஊனுண்டல்
நீதியோ சற்றே நினை. (க)

இ—ள்.

புலையன் என்னும் சொல் புலால் புசிப்பவன் என்னும் நிலைமையை நேரே தெளிவாக உணர்த்தி நிற்கின்றது; உயர்ந்த சாதி என்று உள்ளம் தருக்கியுள்ள நீ இழிந்த ஊனை விழைந்து உண்ணலாமா? இதனைச் சிறிது நினைந்து பார்! என்பதாம்.

உணவை ஓர்ந்து கொள்ளும்படி இது உணர்த்துகின்றது.

உண்ணும் உணவால் மனிதன் உயிர் வாழ்ந்து வருகின்றான். அந்த உணவின் நிலைமைக்குத் தக்கபடியே குணமும் செயலும் அவனிடம் மருவி வருகின்றன.

மனிதன் எதையும் ஆராய்ந்து அறிய வுரியவன்; நல்லது தீயதை நாடித் தெரிபவன். தீமையை நீக்கி நன்மையைத் தழுவி ஒழுகிவரும் அளவு அவன் விழுமியோனாய் விளங்கி வருகிறான். ஒழுக்கமும் விழுப்பமும் உரிமை தோய்ந்துள்ளன.

தனது சொல்லும் செயலும் பழக்க வழக்கங்களும் இழுக்கம் படியாமல் இதமும் இனிமையும் தோய்ந்து வரின் அவன் பெரிய மனிதனாய் வாய்ந்து அரிய மேன்மைகளை அடைந்து கொள்ளுகிறான். காரண காரியங்கள் கருதி யுணர வுரியன.

உள்ளே கொள்ளும் உணவு நல்லதாயிருத்தல் வேண்டும். சுத்தமான உணவுகள் சத்துவ சீலங்களை வளர்த்து வருதலால் அவை உத்தமங்களாய் மதிக்கப் பட்டுள்ளன. அருந்தி வரும் உணவின்படியே மனிதன் யாண்டும் பொருந்தி வருகின்றான்.

"As a man eats, so shall he become."

"ஒரு மனிதன் உண்டுவரும் உணவு எப்படியோ அப்படியே உருவாகி வருகிறான்" என்னும் இது ஈண்டு உணர வுரியது.

புலால் உயிர்க் கொலையால் வருவது ஆதலால் அதனை உண்ணுவது பழி பாவம் என வந்தது. ஆடு மாடு கோழி பன்றி பறவை முதலிய பிராணிகளைக் கொன்று அவற்றின் தசைகளைத் தின்று வருவது கொடிய வசைகளாய் நின்றது. ஊன், தசை, விடக்கு, நிணம், புலால் என்னும் பெயர்களால் அவற்றின் புலை நிலை புலனும். உற்ற நாமங்கள் ஊனங்களை விளக்கியுள்ளன.

புலையன், புலைச்சி என்னும் பெயர்கள் இழிந்த கீழ்மக்களைக் குறித்து வருகின்றன. புலாலை நிலையாக உண்பவன் புலையன் என நேர்ந்தான். சண்டாளர், நீசர், புலையர் என்னும் மொழிகள் இழிந்த பழிச் செயல்களால் விளைந்து வந்துள்ளன.

புலைப் புசிப்பு கொலைத் தொழிலோடு தொடர்ந்திருத்தலால் புலால் உண்டலை மேலோர் இகழ்ந்து வெறுத்துள்ளனர். தீய மருளான உணவு தூய அருளாளர் உள்ளங்களைத் துடிக்கச் செய்திருத்தலால் அதனை அவர் கடுத்து வெறுத்திருக்கின்றனர்.

தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறி தூன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்? [குறள், 251]

தன் உடம்பைப் பெரிதா வளர்த்தற்குப் பிற உயிர்களைக் கொன்று அந்த உடம்புகளைத் தின்பவன் அருளற்ற மருளனாய் இழிகின்றான் எனத் தேவர் இங்ஙனம் இரங்கியிருக்கிறார். சீவ வதையால் வரும் பாவஊனைச் சீவதயாபரர் பரிந்து இகழ்ந்திருப்பது அறிந்து ஆராய்ந்து தெளிந்து கொள்ள வுரியது.

உயர்ந்த சாதியார் என்று தங்களை நினைந்திருப்பவரும் புலாலை அருந்தி வருகின்றனர். அவரைப் புலையர் என்று சொன்னால் பொறுக்க மாட்டார்; வெறுத்து வைவர். உண்டு பழகியதை விட முடியாமல் ஊனமாய் உழலுகின்றனர்.

"புலையர்என்று சொன்னால் புலப்பர்: புலையை
நிலையறியா துண்பர் நிதம்." (அரும்பொருளமுதம்)

அவர் நிலை இவ்வாறு புலை படிந்துள்ளது.

புலாலை உண்டு வருபவரும் அமாவாசை முதலிய விரத தினங்களில் அதனை உண்ணுமல் ஒதுக்கி விடுகின்றனர். ஆகவே ஊன் உணவு ஈனம் என அவரும் உணர்ந்துள்ளமை தெரிகின்றது. அவ்வாறு உணர்ந்தும் பழகிய சுவையில் பழுதா யிழிந்துள்ளனர். உள்ளே செல்லும் உணவின் பொல்லாமையைச் சிந்தனை செய்து நன்கு தெளியாமையால் உண்டு களிக்க நேர்ந்தனர்.

இழுதன்ன வெண்ணிணத்த செந்தடிக்கே
 ஏட்டைப்பட்டு இரும்பில் போர்த்த
பழுதெண்ணும் வன்மனத்தார் ஓட்டைமரச்
 செவியர் கேளார் பால்போன்று
ஒழுகி அமுதூறும் நல்லறத்தை
 ஓர்கிலர் ஊன்செய் கோட்டக்குக்
கழுகுண்ண வள்ளூரமே சுமந்து
 புள்ளிற்கே புறம் செய்கின்ருர்.

(சீவக சிந்தாமணி, 1552)

தசையில் நசை கொண்டுள்ளவர் நல்லோர் கூறும் இனிய தரும நெறிகளைக் கேளார்; ஊனைத் தின்று தம் உடம்பை வளர்த்துக் கழுகுகளுக்கு இரையாய் இழிந்து கழிந்து போவர்எனச் சீவக மன்னன் இவ்வாறு வருந்தி யிருக்கிருன். தடி = தசை. வள்ளூரம் = ஊன். ஈன ஊனுல் இழி துயர்களே ஏறுகின்றன.

தின்று பழகிய பழக்கம் அதிலுள்ள தீமையைத் தெரிய ஒட்டாமல் மறைத்து வருகிறது. புலால் உண்பவர் இழிந்தவராக எண்ணப் படுகின்ருர். அதனை உண்ணுதவர் உயர்ந்தவராய் மதிப்படைந்துள்ளனர். உணவால் நேர்ந்ததுஉறுதியாய் நின்றது.

ஊன் உண்பவர் வீட்டில் மேலான சீலமுடையவர் உணவு கொள்ள மாட்டார். அதனை உண்ணுதவர்பால் யாவரும் கூசாமல் உணவருந்த நேர்கின்ருர். புலைப் புசிப்பால் இழிவும், அதன் ஒழிப்பால் உயர்வும் உளவாயிருத்தலை உலக அனுபவத்தில் கண்டு வருகிருேம். உணவு வகையால் உயர்வு தாழ்வுகள் அணவி யிருப்பது நுணுகி உணர வுரியது. கண் கூடான இந்த அனுபவங்களைக் கண்டும் புலாலை விடாமல் புசித்து வருவது புலையான பழக்கத்தால் புகுந்த பொல்லாத நிலையாயுள்ளது.

ஊன் உண்டல் நீதியோ?

என்றது உயர்ந்த சாதியேம் என்று தருக்கியுள்ளவர் ஊன்றியுணர்ந்து உண்மையை ஓர்ந்து கொள்ள வந்தது. அநீதியால் வருகிற பாவ ஊனை ஆவலோடு அருந்தி வருவது பெரிய கேவலம். அவகேடான இதனை ஒழித்து மனிதன் புனித நிலையில் ஒழுக வேண்டும். உணவின் தூய்மை உயர்ந்த மேன்மையாம்.

---

692. கொலையை வளர்த்துக் கொடுமை விளைத்து
நிலையை மிகவிழித்து நிற்கும்—புலையை
உண்டு களிப்போர் உறுபழி பாவங்கள்
கண்டு தெளியாரோ காண். (உ)

இ—ள்

கொலையும் கொடுமையும் படிந்து மனிதனது தலைமையான நிலைமையை இழித்துக் கெடுத்து வருகிற புலாலை உண்டு களிப்பவர் அதனால் நேரும் பழி பாவங்களைக் கண்டு தெளியவில்லையே; கருதித் தெளிந்து உறுதியை உணர்ந்து கொள்ள வேண்டும்.

இது புலை உணவு கொலை விளைவு என்கின்றது.

மனிதனது உயர்ந்த அறிவுக்குப் பயன் எவ் வுயிர்க்கும் இரங்கி அன்பு செய்தலேயாம். இந்தப் பண்பாடு வளர்ந்துவரும் அளவு அவன் சிறந்த மேன்மையாளனாய் விளங்கி வருகிறான். பிறவுயிர்களைத் தன் உயிர்போல் பேணி வருபவனிடம் தரும நீதிகள் யாவும் காணியாய் வந்து கனிந்திருக்கின்றன. அருள் நிலை அதிசய மகிமைகளை அருளி வருகின்றது.

தன் உயிர் வாழ்க்கை எவ்வழியும் இதம் படிந்து வர ஒழுகி வருபவன் திவ்விய கதிகளை அடைந்து கொள்ளுகிறான். கொடுமைபடியின் அந்த மனித வாழ்வு கடுமையான அவகேடாய் முடிகின்றது. வினையின் விளைவுகள் விழைந்து சிந்திக்க வுரியன.

ஊனை உண்பதில் எவ்வளவு கொடுமை ஊடுருவியுள்ளது! நேரே கொலையைச் செய்யாவிடினும் புலால் உண்பவனிடம் கொலைப் பாவம் வந்து குடிபுகுந்து கொள்ளுகின்றது. ஆகவே அவன் பாவியாய் நரக துன்பத்தை அடைய நேர்கின்றான்.

“உண்ணாமை யுள்ளது உயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யாது அளறு.” (குறள், 255)

மனிதன் ஊனை உண்ணவில்லையானல் ஆடு கோழி முதலிய பிராணிகள் சுகமாய் வாழும். அவன் உண்ணுவதால் அவை மாய்ந்து படுகின்றன; வாயில்லாத அந்தப் பிராணிகள் துடித்துச் சாகும்படி செய்வதனல் புலால் உண்டவன் நரக துன்பத்தில் ஆழ்ந்து நாசமாய்ப் போகின்முன் என இது குறித்துள்ளது. குறிப்பைக் கூர்ந்து நோக்க வேண்டும். உண்ட நரகம் மீள அவனை ஒரு போதும் வெளியே உமிழாது என்பார் அளறு அண்ணுத்தல் செய்யாது என்ருர்.

நீ ஊனை விழுங்கின் உன்னை நரகம் விழுங்கிக் கொள்ளும். அந்த நரக வேதனையிலிருந்து பின்பு நீ மீள முடியாது ஆதலால் ஊனை உண்ணுமல் உன் உயிர்க்கு உறுதி நாடி உய்தி பெறுக எனத் தேவர் பரிவோடு இதில் உணர்த்தியுள்ளார். உண்மையை ஓர்ந்து நன்மையில் சேர்ந்து கொள்ளுக. உடம்பை வளர்க்க உண்பதில் உயிரைப் பாழாக்கி விடுவது எவ்வளவு மடமை! எத்துணை மையல்! எத்தனை துயரம்! இதனை உய்த்துணர்க.

கறி தின்றவனை எரிவாய் நரகம் எரிந்து தின்று தொலைக்கும் என்றது அவனது பாவத்தீமையை நன்று தெரிந்து கொள்ள வந்தது. பிறஉயிரைவதைத்துஉண்டவன்தன்உயிர்பதைக்க நின்ருன்.

மறிப்பல கொன்றும் மடப்பிணை வீழ்த்தும்
கறிப்பல வெஃகிக் கறித்தவர் தம்மை
உறுப்பு உறுப்பாக அரிந்து அரிந்து ஊட்டி
ஒறுப்பர் சிலரை அவரும் ஒருபால். [சூளாமணி]

இங்கே ஆட்டின் கறியைத் தின்றவரை நரகத்தில் கொண்டு போய் ஆழ்த்தி அங்கே அவர்தம் உறுப்புகளை அறுத்து அறுத்து ஊட்டி யமபடர்கள் அவரைச் சித்திரவதை செய்வர் என இது உரைத்துள்ளது.

புலால் புசிப்பதில் பல உயிர்கள் கொலையுறுகின்றன; அந்தக் கொலைப் பாவத்தால் தன் உயிர் இன்னவாறு கொடிய நரக துயரங்களை அடைய நேர்கிறது.

துக்கத்துள் தூங்கித் துறவின்கண் சேர்கலா
மக்கட் பிணத்த சுடுகாடு—தொக்க
விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலங்கெட்ட
புல்லறி வாளர் வயிறு. (நாலடியார், 121)

செத்த சவங்களை மருவியிருக்கும் சுடுகாடு போல் பறவை மிருகங்களுக்குப் புலால் உண்பவர் வயிறே சுடுகாடாயுள்ளது என இது குறித்திருக்கிறது. இதனைப் பாடியவர் ஒரு சமண முனிவர். கொல்லா விரதமுடையவர் ஆதலால் புலைப் புசிப்பின் பொல்லாமையை இங்ஙனம் கொதித்துச் சொல்லினர். ஊன் உண்பவர் அறிவு கெட்ட மடையர் என வயிறு எறிந்து அவர் திட்டியிருப்பதை இதில் உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம்.

பிற உயிர்கள் அழிந்து படுகிற துயரத்தையும், அதனால் தன் உயிர்க்கு வரும் நரக துன்பத்தையும் சிந்தித்து உணராமல் ஊனை உண்டு மான மனிதர் ஈனமடைகின்றரே! என்ற இரக்கத்தினல் இப்படி அவர் கடுமையாய் நிந்தித்து மொழிந்துள்ளார்.

மனித சமுதாயம் புனிதமாய் உயர்ந்து மேன்மை அடைய வேண்டும் என்று கவிஞர் ஆர்வத்தோடு கருதி வருபவர் ஆதலால் இழி நிலைகளை வெறுத்து உரிமையோடு அவர் ஊக்கி உணர்த்த நேர்கின்றர். உணர்வுநிலை உலக நலத்தைக் கருதியுளது.

அண்மையில் காலம் சென்ற பேர்நாட்ஷா (Bernad Shaw) என்னும் ஆங்கிலக் கவிஞரைச் சுவிர்லேந்து அறிஞர் ஒருவர் சந்தித்தார். கலை நிலைகளைப் பற்றிப் பேச்சுகள் நிகழ்ந்தன. பேசி வருங்கால் இந்த உலகத்தில் "மூடர்கள் யார்?" என்று அவர் கேட்டார். "எனது நூல்களைப் படியாதவர் எல்லாரும் மூடர்களே" என்று கவிஞர் பதில் கூறினர். யாரிடமும் விநோதமாகவும் விநயத் துடுக்காகவும் பேசுபவர் ஆதலால் எதையும் நேரே தீரமாய்க் கூறி விடுவர். மனிதர்களுடைய பிழைவழிகளை மிகவும் கண்டிப்பவர். பிறருடைய இதநலங்களை ஒரு சிறிதும் கருதாமல் எவ்வழியும் சுயநலமே கருதி யாண்டும் தமக்கு ஊதியங்களையே நாடி உழல்பவர் கொடிய பாதகர் எனப் பெரிய சபையில் ஒரு முறை அவர் கூறினர். அந்த வாசகம் அயலே வருகிறது.

"A scoundrel is a person who pursues his or her own personal gratification without regard to the feelings and interests of others." (Bernad Shaw)

"பிறருடைய விருப்பங்களையும் உணர்ச்சிகளையும் கவனியாமல் தனது சொந்தச் சுகத்தையே நாடுகின்றவன் கொடிய நீசன்" என இங்ஙனம் அவர் கூறியிருக்கின்றர்.

அயல் உயிர்கள் துயருறப் புலைப்புசிப்பு பொருந்தியிருப்பது அறிந்து கொள்ள வுரியது. ஆங்கில நாட்டில் பிறந்தும் அவர் புலாலை உண்ணுமல் புனித வாழ்வை நடத்தி மனித சமுதாயத்துக்கு இனிமை காட்டியிருக்கிருர். பிற பிராணிகளைத் துடிக்கக் கொன்று அவற்றின் உடல்களைச் சுவை செய்து புசித்துத் தம் உடல்களை வளர்த்து வருவது கொடிய நீசம் ஆதலால் அது படுபாதகம் எனக் கடிய நேர்ந்தது.

"கொன்று உயிருண்ணும் விசாதி பகைபசி தீயன எல்லாம்
நின்று இவ்வுலகில்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார்.',
[திருவாய்மொழி]

ஊன் உண்போர் பகை தீ போல் பாபசாதி என நம்மாழ்வார் இதில் குறித்திருக்கிருர். பிராணிகளின் உடல்களையே தின்று வந்தாலும் அந்த உயிர்களைப் பாழ்படுத்தி வருதலால் உயிர் உண்ணும் என அவரது ஊட்டங்களை இன்னவாறு காட்டியருளினுர். இப்படி உயிர்க் கொலை உறைந்திருத்தலால் ஊன் உணவு பாவம் என உயர்ந்தார் யாவரும் இரங்கி உணர்த்தியுள்ளனர்.

"பலஉடம்பு அழிக்கும் பழியூண் உணவினர்
தவம்எனத் தேய்ந்தது துடிஎனும் நுசுப்பே." (கல்லாடம்)

ஊன் உண்போர் தவம் தேய்ந்தது போல் ஒரு பெண்ணின் இடை தேய்ந்தது எனக் கல்லாடர் இங்ஙனம் உரைத்திருக்கிருர். புலாலைப் பழியூண் என்று குறித்திருத்தலை விழியூன்றி நோக்குக.

"நோன்பு என்பதுவே கொன்றுதின்னுமை."

என்ருர் ஔவையார். புலால் உண்ணுமையே தவமாம்என இதில் குறித்திருத்தலைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

"கொன்று ஊன் நுகரும் கொடுமையை உள்நினைந்து
அன்றே ஒழிய விடுவானேல்--என்றும்
இடுக்கண் எனஉண்டோ? இல்வாழ்க்கை யுள்ளே
படுத்தானும் தன்னைத் தவம்." [அறநெறிச்சாரம்,62]

ஊன் அருந்துதல் தீமை என்று உணர்ந்துஅதனை ஒழித்து விடுவானேல் அவன் அரிய தவமுடையனுய்ப் பெரிய இன்ப நலங்களை அடைவான் என முனைப்பாடியார் இவ்வாறு பாடியிருக்கிருர்.

உற்றுயிர் ஓம்பித் தீந்தேன் ஊனெடு துறப்பின் யார்க்கும்
மற்றுரை இல்லை மண்ணும் விண்ணும் நம்அடிய அன்றே"
[சீவகசிந்தாமணி,2927]

ஒருவன் ஊன் தின்னுமல் உயிர்களை ஓம்பிவரின் அவனை வானும் வையமும் வணங்கிவரும் என இது உணர்த்தியுள்ளது.

உயிர்கள் ஓம்புமின் ஊன்விழைந்து உண்ணன்மின்
செயிர்கள் நீங்குமின் செற்றம் இகந்து ஒரீஇக்
கதிகள் நல்லுருக் கண்டனர் கைதொழும்
மதிகள் போல மறுவிலிர் தோன்றுவீர். (வளையாபதி)

ஊன் உண்ணுமல் உயிர் ஓம்பி வருபவர் மறுமையில் தேவராய் உயர்ந்த கதிகளை அடைந்து கொள்ளுவர் என இது குறித்துள்ளது. புனிதமான புண்ணிய வாழ்வு எண்ணி யுணர வந்தது.

சீவக மன்னன் ஒருநாள் ஒரு காட்டு வழியே சென்றுன்; அங்கே ஒரு வேடனைக் கண்டான். அவன் பிராணிகளை வேட்டையாடி உண்ணும் இயல்பினனாயினும் சிறிது அறிவு நலம் அவனிடம் மருவியிருந்தது. அரசனைக் கண்டதும் மரியாதையோடு வணங்கி நின்றுன். அவனது நிலைமையை நோக்கி மன்னன் இரங்கினன். புலாலை உண்ணுதே; அதனுல் உயிர்க் கொலை நேர்கிறது; பழிபாவங்கள் விளைதலால் அது உன் உயிர்க்குக் கேடாம் என்று கூறினன். ஊன் தின்னுமல் நான் எப்படி உயிர் வாழ்வது? என்று அவன் மாறிக் கேட்டான். காட்டில் தானியங்கள் உள; அவற்றை உண்டு வாழலாம்; ஊனை உண்டால் நரகத்துக்குப் போவாய்; அதனை விட்டால் சுவர்க்கத்தை அடைவாய்; எது உனக்கு இதமோ? அதைச் செய்து கொள் என்று வேந்தன் கூறவே வேடன் உணர்ந்தான்; புலால் அருந்தலை ஒழித்துப் புனிதன் ஆயினன்.

"ஊன்சுவைத்து உடம்பு வீக்கி நரகத்தில் உறைதல் நன்றே?
ஊன்தினுது உடம்பு வாட்டித் தேவராய் உறைதல் நன்றே?
ஊன்றிஇவ் விரண்டி னுள்ளும் உறுதிநீ உரைத்திடு என்ன
ஊன்தினுது ஒழிந்து புத்தேள் ஆவதே உறுதி என்றுன்."
(சீவக சிந்தாமணி 1235)

சீவகனது உணர்வுரையைக் கேட்டு வேடன் உய்திபெற்ற நிலையை இது உணர்த்தியுளது. உறுதி ஓர்ந்து உயர்வு காணுக.

புலையுணவு நீங்கின் புனிதனாய் ஓங்கி
நிலையுயர்ந்து நிற்கும் நெடிது.

693. ஈனமலம் தின்னும் இழிகோழி பன்றிகளை
மான மனிதர் மனம்கொண்டே—ஊனமுற
உண்ணுகின்றார் என்னே உணர்வு படைத்திருந்தும்
எண்ணுகின்றார் இல்லை இதை. (௩)

இ—ள்

மலத்தைத் தின்னுகின்ற இழிந்த கோழி பன்றிகளை உயர்ந்த மனிதர் உவந்து உண்ணுகின்றார்களே! நல்ல உணர்வு பெற்றிருந்தும் இந்தப் பொல்லாத புலை நிலையை உணர வில்லையே! உணர்ந்து உய்ய வேண்டும் என்பதாம்.

உண்ணுவதை எண்ணும்படி இது உணர்த்துகின்றது.

அறிவு மனிதனிடம் உயர் நிலையில் அமைந்திருக்கிறது. கண் ஒளியால் காட்சிகளைக் கண்டு கருதிக் கொள்ளுதல் போல் அறிவொளியால் அறிய பல மாட்சிகளை ஆராய்ந்து அவன் தெளிந்து கொள்ளுகிறான். சுருதி யுத்தி அனுபவங்களைக் கொண்டு நெறி முறைகளை யுணர்ந்து நீதி நிலைகளின் வழியே நீர்மையோடு ஒழுகி வருபவனே எவ்வழியும் சீர்மையாளனாய்ச் சிறந்து விளங்குகிறான். சீலம் தோயின் செவ்வி தோய்ந்து வருகிறது.

தனது உயிர் வாழ்க்கை இனிமையும் தூய்மையும் மருவி வரும்படி எவன் கருதி ஒழுகி வருகின்றானோ அவன் விழுமிய நிலையில் உயர்ந்து தனிமையான மகிமை மாண்புகளை அடைந்து கொள்கிறான். செயல் நலமுற உயர்வு ஒளி பெறுகின்றது.

ஒருவனுடைய உணவும் உடையும் சுத்தமாகத் தோய்ந்து வரின் அவன் அகமும் புறமும் உத்தமனாய் வாய்ந்து வருகிறான்.

மனிதன் எண்ணுகின்ற எண்ணங்கள் எல்லாம் பெரும்பாலும் அவன் உண்ணுகின்ற உணவின்படியே உருவாகி வருகின்றன. வித்தும் விளைவும் போல் உணவும் உணர்வும் காரண காரியங்களாய்ஒத்திருக்கின்றன. இவ்வுண்மை உய்த்துணர வுரியது.

உணர்வு நீதி நெறிகளோடு உலாவிவரின் அந்த மனிதன் மேலான நிலையில் ஒளி பெற்றுள்ளான் என்பதை உணர்த்தி வருகிறது.

"The sentiment of virtue is a reverence and delight in the presence of certain divine laws." (Emerson)

"சில தெய்வீக நெறிகளில் தோன்றுகின்ற கண்ணிய இன்

பமே புண்ணிய உணர்ச்சி" என்னும் இது ஈண்டு எண்ணி உணரத்தக்கது. தருமவுணர்வு இருமையும் இன்பம் தருகிறது.

இத்தகைய உத்தம நிலையில் உணர்வு ஒளிபெற்று வர வேண்டுமாயின் அவன் உண்ணும் உணவு சுத்தமாயிருக்க வேண்டும். சித்தசுத்திக்கு மூலகாரணம் சிந்திக்கத்தக்கது.

உணவு தூயதேல் உணர்வும் தூயதாம்.

ஊன் உணவு ஈனம்மிகவுடையது. அதனை உண்பவர் மனம் மலினமாய்த் தீய வழிகளிலேயே உழன்று வரும். தீனியின்படி சிந்தனை திரிந்து வருதலால் ஊன்உண்டல் நிந்தனையாய் நேர்ந்தது.

"படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்காது ஒன்றன்
உடல்சுவை யுண்டார் மனம்." (குறள், 253)

"வில் வேல் வாள் முதலிய கொலைக் கருவிகளைக் கையில் வைத்திருப்பவர் விலங்கு பறவை முதலிய பிறவுயிர்களைக் கொல்ல எண்ணுவது போல் ஊன் உண்டவர் மனம் பொல்லாத வழிகளிலேயே புலையாடித்திரியும்" எனத் தேவர் இவ்வாறு கூறியுள்ளார். செத்த பிணங்களைச் சுவை செய்து உண்பவர் என அவரது உணவின் புலையை உணர்த்தியுள்ளது உய்த்துணரத் தக்கது. ஊன் உணவு ஈன நினைவுகளை விளைத்து விடுகின்றது.

ஈனமலம் தின்னும் இழி கோழி பன்றி என்றது ஊன் அருந்துவோர் உவந்து தின்றுவரும் இழிவுகளை ஓர்ந்துணர வந்தது. கழிமுடையை உண்ணுவது பழிமூடையாயது.

பழகி வந்த பழக்கவாசனையால் பழி இழிவுகளை உணராமல் புலாலை உண்டு வருகின்றார். அடுத்த வீட்டில் யாராவது இறந்து போனால் அந்தப் பிணத்தை எடுத்துச் சுடுகாட்டுக்குக் கொண்டு போகும் வரையும் உணவு கொள்ளாமல் இருப்பது இந்த நாட்டு மக்களின் வழக்கமாயுள்ளது.

இப்படி ஆசாரமா யிருப்பவர் புலாலை அநாசாரமாய்ப் புசித்து வருவது விசித்திர விநோதமாயிருக்கிறது. உள்ளே சீலம் கொள்ளாமல் வெளியே கோலம் கொண்டு வருவதை ஞாலம் கண்டு நகைத்து வருகிறது.

"பிணம் கிடக்க நான்நுகரேன் என்றுநீ பேசும்
குணம்கிடக்க வேண்டியதென் கூறாய்---பிணத்தைக்

கலத்திலே இட்டுக் கலந்துநா வாரப்
புலத்திஞல் தின்ருய் புகல்." (புலான் மறுத்தல்)

ஊனை உண்டு வருபவர் உணர்ந்து சிந்திக்கும்படி இது விநயமாய் வினவியுள்ளது. உண்மையான ஆசாரமின்றி உலக ஆசாரமாய் நடந்து வருவது மடமையாய் மலிந்து வருகின்றது.

செத்தசவம் தின்னும் சிறுமதியர் தம்முடைய
ஒத்த சவநிலையை ஓராமல்---நித்தநித்தம்
ஊனை அருந்தி உணர்வு நலமின்றி
ஈனமாய் வாழ்தல் இழிவு.

ஊன உணவை உண்டு வாழும் மனிதர் ஞான நலனைக் கண்டு தெளியும்படி இது காட்டியுள்ளது. பசி நீங்க உண்பதில் சுசி ஓங்கி வரும்படி உணர்ந்து கொள்வதே உயர்ந்த மேன்மையாம். உணவு தாழ உயர்வும் தாழுகின்றது.

கல்வி செல்வம் அறிவு முதலிய நிலைகளில் உயர்ந்திருந்தாலும் புலால் உண்பவர் இழிந்தவராய்த் தாழ்ந்து படுகின்ருர்.

"தம்மினும் உயர்ந்தோர் கீழோர் தமதுஇல்லத்து அறல் உண்டாரேல்
அம்ம அங்கவரும் கீழ் என்று அவர்மனைப் புனலும் உண்ணுர்;
இம்மனிதர்கள் தாம் சீச்சீ ஈனர்தம் மலத்தை உண்டு
விம்முடற் பன்றி ஆதி விரும்பியுண்டு உவப்பது என்னே?"

தாழ்ந்த சாதியார் என்று பள்ளர் பறையரைத் தள்ளி ஒதுக்கி அவர் வீடுகளில் தண்ணீரும் உண்ண இசையாதவர் அவர்தம் மலத்தைத்தின்று வருகின்ற பன்றி கோழிகளை மனம் உவந்து தின்னுகின்ருர்களே! என்னே இது? எனப் பரிந்து கூறியுள்ள இதன் பொருளை உணர்ந்து கொள்ள வேண்டும்.

"புலையரைப் புலையர் என்னும் புத்தியற்ற மாந்தரே
புலையஞர் மலம்புசிக்க நாடும் ஈது புத்தியோ?
புலையருக்குள் ஒக்கும்உம்மை என்றுரைத்த புல்லரும்
புலையர் ஆகி நரகினுள் புகுவர்ஐயர் ஆணையே."
(சிவவாக்கியர்)

புலால் உண்பவர் புலையரினும் கீழானவர் எனச் சிவவாக்கியர் இவ்வாறு கடுமையாகப் பாடியிருக்கிருர். பிறப்பிலேயே புலைப்பட்டு இழிந்தவர் புலையர் என நின்ருர்; சிறப்பான குலத்தில் வந்தும் புலைப் புசிப்பால் தம்மை ஈனமாக்கிக் கொண்டவர்

இழிபுலையர் என நேர்ந்தார். சன்மசண்டாளரினும் கன்மசண்டாளர் கழி கேடுடையவர் என்பது தெளிவாய் வந்தது.

"பறையரைப் பறையர் என்று பறைந்திடும் மனிதர் கேளீர்
பறையர்தம் மலத்தைத்தின்ற பன்றியைப் புசிப்பது என்னோ?
கறையதே ஆகும்அந்தக் கறிதனைக் கலத்தில் இட்டு
மறையவே வைத்துத் தின்னும் மனிதரே பறையர் கண்டீர்.!(1)

புலைஎன்னும் புலைதீரப் புனல்என்னும் புனல்மூழ்கி
அலைகின்ற முழுமூடர் அறிவுஎன்ன! அறிவென்ன!
புலையன்தன் மலம்உண்ணும் எமையுண்ணும் புலையர்க்குக்
குலம்என்ன நலம்என்ன கூகூ என்றன கோழி." (சீவதயை)

தம்மைக் கொன்று தின்னும் கொலையாளிகள் ஆதலால் புலால் உண்போரை நோக்கிக் கோழி ஆடுகள் அழிதுயரோடு இவ்வாறு இகழ்ந்து கூவியிருக்கின்றன. கொலைபடிந்து வருதலால் புலைப்புசிப்புடையவர் எவ்வளவு தலைமையான அறிவாளிகளாயிருந்தாலும் அவர் நிலைமை தாழ்ந்து நீசம்படியநேர்ந்தனர்.

"மருவாணைப் பெண் ஆக்கி ஒருகணத்தில்
கண்விழித்து வயங்கும் அப்பெண்
உருவாணை உருவாக்கி இறந்தவரை
எழுப்புகின்ற உறுவர் ஏனும்
கருவாணை யுற இரங்காது உயிருடம்பைக்
கடிந்துண்ணும் கருத்தனேல் எம்
குருவாணை எமதுசிவக் கொழுந்தாணை
ஞானி எனக் கூறொணாதே," [அருட்பிரகாசர்]

ஆணைப் பெண் ஆக்கி, பெண்ணை ஆண் ஆக்கி, இறந்தவர்களை எழுப்புகிற அதிசய சித்திபெற்ற பெரிய மகானாயிருந்தாலும் புலால் உண்பானாயின் அவனை ஞானி என்று கருதலாகாது என அருட்பிரகாச வள்ளலார் உள்ளம் மறுகி இவ்வாறு உறுதி கூறியுள்ளார். இரக்கம் இல்லாத அறிவு இழிந்து படுகிறது.

அருள் அழிந்து சீவ இமிசை பெருகி வருதலால் ஊன் உண்டலை வெறுத்து உயர்ந்தோர் உள்ளங்கள் அருவருத்து இகழ்ந்துள்ளன. கருணை வளரக் கதி காட்டியுள்ளனர்.

மலம்தின்னும் பிராணிகளை மனிதன் மனம் கூசாமல் தின்னுகின்றானே! என்று ஒரு பெரியவர் பரிவோடு மறுகியிருக்கிறார்.

உண்ணாமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின். (குறள்,257)

புலால் ஓர் உடம்பின் புண்; அதனை நீ உண்ணலாமா? உணர்ந்து ஒழிக என நாயனார் இங்ஙனம் வாய் மலர்ந்துள்ளார்.

தம்புண் கழுவி மருந்திடுவர்; தாம்பிறிதின்
செம்புண் வறுத்த வறைதின்பர்--அந்தோ!
நடுநின்றுலக நயனிலா மாந்தர்
வடுவன்றோ செய்யும் வழக்கு. (அறநெறிச்சாரம்,97)

புண்ணை உண்பது அறிவீனமான புலை என இது குறித்துளது.

"ஏருத மேட்டுக்கு இரண்டுதுலை இட்டாற்போல்
பேருய் ஏனம் கோழிப் பேரிட்டு--மாருத
புன்மக்கள் வாயில் புலையர் மலம்இறைக்க
நன்மக்கள் கண்டு நகும்."

புலால் உண்பவரது இழிநிலையை இது தெளிவாக் காட்டியுளது. பாட்டின் குறிப்பைக் கூர்ந்து நோக்குக. புலையர் மலத்தை முதலில் பன்றி கோழிகளின் வயிற்றில் கொட்டிவைத்துப் பின்பு புலால் உண்போர் வாயில் தட்டுகிருர்கள் என்னும் இது எவ்வளவு அருவருப்பையும் இழிவையும் சுட்டியிருக்கிறது!

"உண்டிடும் சோற்றின் ஊடே ஓர்மயிர் எறும்பு ஈ யாதும்
கண்டுமுன் பருந்திலாய் முன்பு அயின்றதும் கான்றிட்டாயால்
மண்தனில் பன்றி ஆதி மலத்தைமுன் பழக்கத்தால் உட்
கொண்டிட விரும்பு மாறென் கூறுதி அறிவிலாதோய்!"

மனிதனது இயல்புக்கு விரோதமாய் மயலான பழக்கத்தால் ஊனை உண்ணுகிருன்; எவ்வகையினும் யாதும் பொருந்தாத அந்த ஈனப் புசிப்பை ஒழித்து மானமோடு அவன் ஒழுக வேண்டும் என இது உணர்த்தியுளது. உண்மைகளை உணர்ந்து நன்மைகளை நாடி நயம் தெளிந்து பயன் படிந்து கொள்ளுக.

---

694. கூவி அலறிக் குலைதுடிக்கக் கோழிஅசம்
ஆவி பதற அறுக்கின்றீர்—பாவிகள்என்று
எண்ணி இறைவன் இழிநரகில் தள்ளநீர்
துள்ளி விழுவீர் துடித்து. (ச)

இ-ள்.

கோழி ஆடுகள் கூவி அலறிக் குலைதுடித்து ஆவிபதற

அறுக்கின்ற மனிதர்களே! கடவுள் உங்களைப் பாவிகள் என்று இகழ்ந்து வெறுத்து இழிந்த நரகத்தில் தள்ளுவன்; நீவிர் துள்ளி அழுது துடித்து விழுவீர் என்பதாம்.

அருளும் அன்பும் மனிதனைப் பண்படுத்தி இன்ப நிலையில் உயர்த்தி எவ்வழியும் திவ்விய மகிமைகளை அருளி வருகின்றன. "அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லை" என்னும் இந்த அருள் மொழி நிறைந்த பொருள் பொதிந்தது. காரண காரிய நிலைகளைப் பலவகையிலும் கருதியுணர்ந்து உறுதி தெளிய இது உருவமைந்துள்ளது. ஓர்ந்து சிந்திக்க வுரியது.

பிற உயிர்கள்பால் இரங்கி யருள்பவன் தன் உயிர்க்கு உயர்ந்த பேரின்பத்தைச் செய்து கொள்ளுகிறான். ஆன்மதயை அதிசய மேன்மையாய் மிளிர்கின்றது. அருள் செய்துவருபவன் பரம்பொருளின் அருளைத் தனிஉரிமையா அடைந்து வருகிறான்.

"Who will not mercie unto others show,
How can he mercy ever hope to have?" [Spenser]

"ஜீவர்களுக்கு இரக்கம் காட்டாதவன் தேவ கருணையை ஒருபோதும்பெறமுடியாது" என்னும் இது ஈண்டு ஊன்றிஉணர வுரியது. பிற உயிர்கட்கு இரங்கின் தன் உயிர் உயர்கின்றது.

எல்லாம் வல்ல இறைவனே எங்கும் இரங்கியருள வுரியவன் ஆதலால் இரக்கம் அவனுடைய இனிய நீர்மையாய் மருவியுளது. அதனைப் பெற்றவர் பெரு மகிமை பெறுகின்றார்.

"The quality of mercy is not strained,
It droppeth as the gentle rain from heaven
Upon the place beneath: it is twice blessed;
It blesseth him that gives and him that takes."
[Merchant of venice]

"அருள் நீர்மை மருளில் மருவியதன்று; பரமனிடமிருந்து அமுத மழை போல் ஈண்டு அது வந்துள்ளது; அதனை உடையவரும் உற்றவரும் உயர்ந்த மகிமைகளை அடைந்து கொள்ளுகின்றார்" என இது உணர்த்தியுள்ளது. ஆங்கிலக் கவிஞரான ஷேக்ஸ்பீயர் அருள் நிலையைப் பொருள் பொதிந்த மொழிகளால் பல இடங்களிலும் வெளிப்படுத்தியுள்ளார். இரக்கம்

மனிதனைத் தெய்வம் ஆக்கி வருதலால் எந்நாட்டவரும் அதனை உவந்து புகழ்ந்து வருகின்றார். உயிர் அமுதம் உணர வந்தது.

இத்தகைய அருமையான இரக்கத்தை இழந்து விட்டுப் பிராணிகளைத் துடிக்கத் துடிக்கக் கொன்று அவற்றின் ஊன்களை மனிதர் தின்று வருவது எவ்வளவு கொடுமை! எவ்வளவு மடமை! எத்துணைத் தீமை! அந்தோ! உய்த் துணர வேண்டும்.

கூவி அலறிக் குலை துடிக்க

என்றது கோழி ஆடுகளைப் பிடித்துக் கொல்லும் பொழுது அவை பதைத்துத்துடிக்கும் பரிதாபநிலைகளை விழிதெரிய விளக்கி நின்றது. உயிரழிவுக்கு மறுகி அவை கதறி அலறுகின்றன.

"அம்மா என அலற ஆருயிரைக் கொன்று அருந்தி
இம்மானுடர் எல்லாம் இன்புற் றிருக்கின்றார்
அம்மா எனும்சத்தம் கேட்டகன்று மாதவர்க்கும்
பொம்மா நரகம் என்றால் புசித்தவர்தம் புலைஎன்னே?"

புலைப் புசிப்பாளர் ஆடுகளை வதைக்கும் போது அவைகதறுகிற சத்தத்தைக் கேட்டாலும் பாவம் ஆம் என இது காட்டியுள்ளது. உயிர்வதை உயிரைத் துடிக்கச் செய்கிறது.

இவ்வாறு எவ்வழியும் வெவ்விய துயரங்களை விளைத்துப் புனித சமுதாயத்தைப் புலைப்படுத்தி வருதலால் புலால் உண்பது கொடிய பாவம் என முன்னோர் முடிவு செய்தருளினர். இந்த உணர்வுறுதிகளை உணராமல் நாவின் நசையால் ஊனை உண்பவர் மறுமையில் கொடிய எமதண்டனைகளை அடைகின்றனர்.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண இயமன்தன் தூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே. (திருமந்திரம்)

வெந்தடி தின்ற வெந்நோய் வேகத்தால் மீட்டுமாலைப்
பைந்தொடி மகளிர் ஆடும் பந்தென எழுந்து பொங்கி
வந்துடைந் துருகி வீழ்ந்து மாழ்குபு கிடப்பர் கண்டாய்
கந்தடு வெகுளி வேகக் கடாமுகக் களிற்று வேந்தே. (1)

வயிரமுள் நிரைத்து நீண்ட வார்சினை இலவம் ஏற்றி
செயிரில் தீ மடுப்பர் கீழால் செல்நுனைக் கழுவில் ஏற்றி

மயிருக்கு ஒன்ருக வாங்கி யகைத்தகைத்து இடுவர்மன்ஞ
உயிரைப்பே துறுத்தும் மாந்தர் உயிரைப்பே துறுக்கு மாறே.

துடிக்குரற் குரல பேழ்வாய்த் தொடர்ப்பிணி யுறுத்த செந்நாய்
மடுத்திட வைர ஊசி வாள்எயிறு அழுந்தக் கௌவிப்
புடைத்திட அலறி ஆற்ருர் பொன்றினும் பொன்றல் செல்லார்
உடுப்பினம் வேட்டம் செய்தார் உழப்பவால் துன்பம் மாதோ.

வாளைமீன் தடிகள் தின்ருர் வருகென உருக வெந்த
பாளத்தைக் கொடிற்றின்ஏந்திப் பகுத்துவாய்புகுத்தல்ஆற்ருர்
ஊளைக் கொண்டு ஓடுகின்ருர் உள்ளடி ஊசி பாயத்
தாள் ஒற்றித் தப்பி வீழ்ந்தார் தறிவலை மானிற் பட்டார். (4)
(சீவகசிந்தாமணி)

மேயப் பருவம் விரும்பிய மீனினம்
காயப் பெருந்தடி காண்மின் இவைஎனத்
தீயைப் பருகிய செப்புத் திரளவை
வாயைப் பெருகப் பிளந்து மடுப்பார். (சூளாமணி)

பிறவிக் கடலகத்து ஆராய்ந்துணரின்
தெறுவதிற் குற்றம் இலார்களும் இல்லை
அறவகை ஓரா விடக்கு மிசைவோர்
குறைவின்றித் தன்சுற்றம் தின்றனராவர். [வளையாபதி]

எவ்வுயிரும் பராபரன் சந்நிதிய தாகும்
இலங்கும் உயிருடலனைத்தும் ஈசன்கோயில்
எவ்வுயிரும் எம்உயிர்போல் என்று நோக்கி
இரங்காது கொன்றருந்தும் இழிவிஞேரை
வவ்வியம தூதர் அரும் தண்டம் செய்து
வல் இரும்பை உருக்கி அவர் வாயில் வார்த்து
வெவ்விய தீ யெழு நரகில் வீழ்த்தி மாரு
வேதனைசெய் திடுவர் என ஓதும்நூலே. (சிவஞானதீபம்)

புலாலை உண்டவர் இறந்து போனபின் அடையும் நரகதுன்பங்களை இவை காட்டியுள்ளன. பாடல்களில் புதைந்துள்ள பொருள்களைக் கருத்தூன்றி உணர வேண்டும். பிறவுயிர்கள் வேதனைகள் அடையும் படி செய்த தீவினையினுல் தம் உயிர் பின்பு கொடிய துன்பங்களை அடைந்து நெடிது பதைக்க நேர்ந்தன.

வினை விளைவுகளின் உண்மைகளை உன்னியுணராமையால் மக்கள் என்றும் துக்கங்களில் துடித்து உழலும்படி யாயினர்.

தான் செய்த கருமம் நல்லது ஆயின் நன்மையாய் இன்பம் தருகிறது; தீயது ஆயின் தீமையாய்த் துன்பம் புரிகிறது. விதி நியமங்கள் எவ்வழியும் தவருமல் யாதும் மாருமல் சீவகோடிகளிடம் மேவி வருகின்றன.

பண்டுருத்துச் செய்த பழவினை வந்தெம்மை
இன்று ஒறுக்கின்றதென நினையார்—துன்புறுக்கும்
மேவலரை நோவதென் மின்னேர் மருங்குலாய்
ஏவலாள் ஊரும் சுடும். (பழமொழி161)

முன்பு செய்த தீவினை இன்று வந்து துன்புறுத்துகின்றது; இந்த உண்மையை உணராமல் அதனை நேரே நின்று செய்கின்றவரை நோவது பிழையாம் என இது குறித்துள்ளது.

"தானே புரிவினையால் சாரும் இருபயனும்
தானே அனுபவித்தல் தப்பாது—தானூறு
கோடிகற்பம் சென்ருலும் கோதையே செய்தவினை
நாடிநிற்கும் என்ருர் நயந்து." (நீதிசாரம்47)

நல்வினை தீவினை ஆகிய இருவினைகளின் பயன்களும் தம்மைச் செய்தவரைத் தப்பாமல் சென்று அடைந்து கொள்ளும் என இது குறித்திருக்கிறது. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன.

விதைத்தது விளைவாய் வருதல்போல் தான் செய்தது சேர வருகிறது. ஊனை உண்பவன் பிற உயிர்களைக் கொலை செய்தவன் ஆகின்ருன். ஆகவே அத் தீமையால் தன் உயிர் வருந்தித் தளர்ந்து நொந்து இன்னலுழந்து வர அவன் இழிந்து படுகின்ருன்.

உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிருடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். (குறள், 330)

ஓர் உடம்பிலிருந்து உயிரைப் பிரித்தவர் பின்பு உடம்பு எடுத்து உயிர் வாழும் துயர நிலையைத் தேவர் இவ்வாறு செவ்வையாக விளக்கியுள்ளார். கண்டவர் எவரும் அருவருத்து ஒதுங்கும் படியாய்க் குட்டம் முதலிய கொடிய நோய்கள் பற்றிய உடம்போடு நெடிய வறுமையில் அழுந்திப் படுதுயருழந்து இங்கே பதைத்து வருந்துபவர் யார் தெரியுமா? முன் பிறவியில் புலால் உண்பதற்காக ஆடு கோழிகளைப் பதைக்க வதைத்த பாவிகளே இப் பிறவியில் இப்படிப் பழிநோயடைந்து அழி

துயரோடு இழிவாழ்வில் அழுந்தி ஈனமாய் வருந்தி யுழல்கின்றார் எனப் புலையால்விளைந்த உண்மையை இங்ஙனம்உணர்த்தியுளது.

செயிர் = நோய், ஊனம், குற்றம்.

துயரின்றி ஒருவன் சுகமாய் வாழ விரும்பின் அவன் எவ் வழியும் யாண்டும் ஊன் தின்னலாகாது என்பது ஈண்டுச் செவ்வையாய் உணரவந்தது.

உயிரழிவும் துயரமும் கலந்து வருதலால் ஊன் உணவு பாவமாய்ப் படுதுயரங்களைப் பயக்க நேர்ந்தது. அதன் துக்கத் தொடர்புகள் தக்கபடி பக்கம் படிந்து ஒக்க வரலாயின.

அக்கேபோல் அங்கை ஒழிய விரல் அழுகித்
துக்கத் தொழுநோய் எழுபவே-அக்கால்
அலவனைக் காதலித்துக் கால்முரித்துத் தின்ற
பழவினை வந்தடைந்தக் கால். (நாலடியார்; 123)

நண்டுகளைப் பிடித்துக் காலை ஒடித்து முன்பு கொன்று தின்றவர் பின்பு விரல்கள் அழுகி வெண்குட்டம் படிந்து வெய்ய துயரமாய் இழிந்து உழல்வர் என இது உணர்த்தியுள்ளது.

இழி நரகில் துள்ளி விழுவீர்!

என்றது பழியூன் உணவினால் விளையும் அழிதுயரங்களை விழியூன்றி நோக்கி விலகி உய்யவந்தது. புலால் எவ்வழியும் இழிவுடையது; பொல்லாத தீமையது; பழகிய பழக்கத்தால் அதன் இழிவு தெரியாது போயினும் உண்மையை உணர்ந்து தெளிந்து அதனை அறவே மறந்து புனித உணவு கொண்டு இனியனாய் வாழ்ந்து புண்ணிய நிலையில் நீ உயர்ந்து கொள்ள வேண்டும்.

---

695 பெற்ற மகவைப் பிறர்வையக் கண்டாலும்
உற்ற துயரம் உணர்ந்துள்ளாய்—பற்றிநீ
தாயலறக் குஞ்சுகளைத் தான்கொன்று தின்கின்றாய்
நீயடைவ தென்னோ நினை. (ரு)

இ—ள்

உன் பிள்ளையைப் பிறர் வைதாலும் நீ உள்ளம் துடித்து வருந்துகின்றாய்! இந்த அனுபவத்தை உணர்ந்திருந்தும் தாய் அலறி அலமந்து பதறக் குஞ்சுகளைக் கொன்று தின்கின்றாயே!

நீ என்ன கதி அடைவாய்? இதனை உன்னி உணர்க.

இனங்களோடு கூடிவாழும் இயல்பு மனிதனிடம் இயல்பாய் அமைந்திருக்கிறது. தாய் தந்தை மனைவி மக்கள்பால் உரிமையும் அன்பும் மருவிப் பிரியம் பெருகிப் பேணிவருகிறான். பிள்ளைப்பாசம் எல்லாருடைய உள்ளங்களிலும் உறைந்துள்ளது. "கடந்துளோர்களும் கடப்பரோ மக்கள்மேல் காதல்" என்றதனால் புத்திர வாஞ்சையின் உயர் நிலையை நன்கு உய்த்துணர்ந்து கொள்ளலாம். மகவின் பிரியம் மிகவும் பெரியது.

பெற்றபிள்ளையிடம் இவ்வாறு பேரன்பும் பிரியமும்பெருகி வருகிற மனிதன் குஞ்சுகள் அயலே அலறித்துடிக்க அவற்றின் தாய்க்கோழிகளைப் பற்றிப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கிறான். தாய் அலற இளங்குஞ்சுகளைக் கொல்லுகிறான்; இந்தப் பொல்லாத புலைநிலை புலால்உண்ணும் பழக்கத்தால் அவனிடம் புகுந்துள்ளது. கொடுமையும் தீமையும் நெடுமையாய்ப் பழகிவரவே இரக்கமும் தயையும் அவன் நெஞ்சில் இல்லாமல் போயின. இனிய அருளை இழந்து கொடியமருளில்இழிந்துநெடிய பாவியாய் நிமிர்ந்து திரிவது நீசங்களையே பயந்துவருகிறது.

தன் பிள்ளையை அயலார் சிறிது வைதாலும் பெரிதும் உள்ளம் துடிக்கின்ற மனிதன் குஞ்சுகள் அலறக் கோழிகளைக் கொன்று தின்பது அறிவும் பரிவும் அடியோடு குடிபோன படியாம். பழகிய இழிசுவை மனிதனைப் பாழாக்கியுளது.

"அருள் ஆட்சி ஊன்தின்பவர்க்கு இல்லை" (குறள், 252) என்றதனால் அவர் உள்ள நிலை உணரலாகும்.

ஊன்உண்டு உயிர்கட்கு அருளுடையேம் என்பானும்,
தானுடம்பா டின்றி வினையாக்கும் என்பானும்,
காமுறும் வேள்வியில் கொல்வானும் இம்மூவர்
தாம்அறிவர் தாங்கண்ட வாறு." (திரிகடுகம், 36)

ஊனை உண்பவர் அருளுடையேம் என்று சொல்வது அறிஞர் இகழ்ந்து சிரித்தற்கு இடமாய் நின்றது என இது குறித்திருக்கிறது. புலைப்புசிப்பு அருள்கெட்ட கொலைப்பழியாம்; ஆகவே அதனை ஒழித்தபொழுதுதான் அருளை வளர்த்தபடியாம். அருள் வர அவல மருள்கள் ஒழிந்து போகின்றன.

"உண்ண ஊனை விரும்பி உயிர்க்கொலை
எண்ணுவான்; கொலைகண்டிரங்கான்; கொலை
பண்ணுவாரைத் தடுத்துப் பகர்கிலான்;
நண்ணுவான் இவரோடெனும் நால்வரும்."

(சிவதருமோத்தரம்)

ஊனுணவில் கொலை விளைந்துள்ள நிலைகளை இது குறித்துள்ளது.

கொலை விளைவால் வருதலால் புலாலை அருளுடைய மேலோர் யாண்டும் வெறுத்து விலகி யுள்ளனர். தண்ணளி சுரந்துவரும் அளவே மனிதன் புண்ணியவானாய் உயர்ந்து விளங்குகிறான். உள்ளம் உருகி வர உயர்கதி அருகே மருவி வருகிறது.

மனமிக உருகுகின்ற மாண்பினன் எவனோ அன்னோற்கு
உனலரு முத்தி கையின் உளதுள்ளப்; கார்மேலோர்பம்
நினைவறும் குரோதம் இன்னநீத்துநல் ஒழுக்கின்நிற்கும்
வினையினர் சரதத் தன்றோ மேதினிநிலைபெற்றுஒங்கும். (1)

ஆனதால் பிறருக்கு ஆர்வம் அளிக்கும் சத்தியமேகூறல்
மேனலமாகும் மெய்ம்மை விளம்பலின் தீங்குண்டாமேல்
மோனமாயிருத்தல் வேண்டும் மொழிமகிழ்வு இல்லதேனும்
தானலம் பிறர்க்கு நல்கின் சாற்றுதல் கடமை ஆமால் (2)

(விண்டுபுராணம்)

உள்ளம் இரங்கி எவ்வழியும் பிறவுயிர்கட்கு இதமே கருதி இனிது ஒழுகி வருப்வரே புனிதமான உயர்கதியை அடைவர் என இது உணர்த்தியுள்ளது. உண்மையை ஊன்றி உணர்ந்து கொள்ளவேண்டும். சீவ இதம் தேவ கதியாய் வருகிறது.

இன்னவாறான நன்மைகளையெல்லாம் புன்மையான புலையுணவு கெடுத்துவிடுகிறது. அந்தக் கெடுநிலையை உணர்ந்து படுபழிநீங்கி வடு ஒழிந்து வாழ்ந்துவரின், அவ்வாழ்வு வையத்திலேயே தெய்வத் திருவருளை நேரே அடைந்து கொள்ளுகிறது.

தான் சுகமாய் வாழவிரும்பி உண்டுவரும் உணவில் பிற உயிர்கள் துன்பாயழிவுறும்படி அமைவது பழிகொடுந் தீமையாம்; அதனை ஒழியவிடின் உயர்மேன்மைகள் பல உளவாம்.

"வாயில் சுவைவெஃகி மான்கொன்று மீன்கொன்று

நாய்ஒத் துழல்வார்க்கு நாவளவே-போயிழிந்தால்
இன்னாது இனிதென்று அறியார் இதற்காக
மன்னுவூன் தின்றல் வடு." (பாரதம்)

ஊன் தின்றலில் உள்ள ஊனங்களை எடுத்துக்காட்டி மான மனிதர் அதனை உண்ணலாகாது எனப் பெருந்தேவனார் இவ்வாறு அருளியுள்ளார். நீ அருந்தும் உணவு திருந்திய நீர்மையோடு பொருந்தியிருக்க வேண்டும்; புலை கொலைகள் யாதும் சேராமல் யாண்டும் அதனைச் சீர்மையோடு தேர்ந்து கொள்ளுக

---

696 ஊனருந்தி வாழ்வார் உயிர்அழிந்தார் உற்றுப்போய்
வானருந்தும் வாழ்வை வறிதிழந்தார்—ஆன
உறுதி முழுதும் ஒழிந்தார் உணரார்
இறுதி இழிவை எதிர். (சு)

இ—ள்.

ஊனைத்தின்று வாழ்பவர் தமது உயர்வான உயிர்நிலை அழிந்தார்; துறக்க வாழ்வை இழந்தார்; முத்திப்பேறு முதலிய அரிய நலங்கள் யாவும் ஒழிந்தார்; மேவிய பாவ இழிவுகளை யாதும் உணராமல் பாழே அவர் பழிபடலாயினர் என்பதாம்.

புலால் உணவால் விளையும் புலைநிலைகளை இது புலன் தெரிய விளக்கியுள்ளது. உடலைக் கொழுக்க வளர்க்க விரும்பி உயிரைப் பாழாக்கிக்கொள்வது பெரிய துயரக்காட்சியாய் நின்றது. எதனை இனிதுபேணவேண்டுமோ அதனை இகந்துவிட்டு அவமே யிழிந்து ஈனமாயுழல்வது ஞான சூனியமாய் நேர்ந்தது.

தன்னுடைய செயல்களில் தீமைபடியாமல் பாதுகாத்து வருகிறவனே உயர்நிலையை அடைகிறான். ஊன் உண்பதில் தீமைபடிந்து வருதலால் அந்த உயிர் துயர நிலைகளுக்கே தொடர்ந்து செல்கிறது. தான்செய்த வினைப்பயனை எப்படியும் அனுபவித்தே தீரவேண்டும். கரும தருமங்கள் அதிசய மருமங்களாய் மருவி விதி முறைகளில் விரவியிருக்கின்றன.

"கொன்றன அனைத்தும் அனைத்தும் நினைக்கொன்றன;
தின்றன அனைத்தும் அனைத்தும் நினைத் தின்றன"

என்றபடி வினைப்பயன் விளைந்துவருதலால் புலைப்புசிப்பின்

விளைவை உணர்ந்துகொள்ளலாம். வினையின் விளைவுகளை நுணுகி அறியாத மடமையினுல் மனிதன் அவலக்கேடுகளைச் செய்து கொள்ளுகிருன். தீய செயலால் நோயுழந்து தவிக்கிருன்.

தொட்டபழக்கம் கெட்டதாயினும் அதனை விட்டுவிட முடியாமல் தட்டழிகிருன். தன்னுடைய செயல்கள் எல்லாம் நல்லவை என்று சாதிக்க நேர்கின்ருன். சார்ந்த சார்புகளில் ஆர்ந்த ஆர்வங்கள் யாண்டும் சூழ்ந்து கொள்ளுகின்றன.

ஊனுக்கு ஊன் என்பது ஆதிகாலத்துப் பழமொழி ஆதலால் இந்த மாமிச தேகத்துக்கு மாமிசம் உண்பதே தகுந்ததாம் என ஓர் அசைவன் ஒரு நாள் வாதாடினன். அதனைக் கேட்ட அறிஞர் ஒருவர் அதற்குத் தக்க பதிலை உரைத்தார். "ஊன் உடலுக்கு ஊனே உரிமை என்றது ஈனமாம். உன் வயிற்றில் மலம் இருத்தலால் அதற்குத் தக்கபடி நீ மலத்தையே புசிக்க வேண்டும்; அவ்வாறு புசியாமல் வெவ்வேறு உணவுகளை உண்டு வருகிருய்; அது பெரிய விபரீதமாம்; இனிமேலாவது அதனை உண்டு உன் கடமையைச் செய்!" என்ருர். அவனது மடமையை இகழ்ந்து கூறிய இவ் விநய மொழிகளைக் கேட்டு அவன் மாறுவேறு கூறமுடியாமல் மறுகிப்போனன்.

"ஊனுக்குஊன் உண்ண உரியதெனின் உன்வயிற்றில்
ஈனமலம் உள்ள இயல்பினுல்—ஈனமலம்
தின்னுமல் வேறு சிறந்த உணவருந்தல்
அன்ருே அவலம் அறி."

முன்னே நிகழ்ந்த நிகழ்ச்சியை இது விளக்கியுள்ளது.

மதுவும் மாமிசமும் இழிந்த எண்ணங்களை வளர்த்து மனிதனை ஈனப்படுத்தும் ஆதலால் அவற்றை உண்ணலாகாது என முன்ஞேர் ஒதுக்கியுள்ளனர். பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்ற மனிதன் உறுதற்கு உரிய உயர்ந்த கதியை அடைந்து கொள்ளவேண்டும் ஆதலால் உணவு முதலிய நிலைகளில் ஊனங்கள் சேராமல் ஞானங்களைப் பேணி வரவேண்டியவனுகின்ருன்.

மனம்போனபடி எதையும் உண்டு பொறி வெறிகள் மீறிப் புலன்களில் இழிந்துபடின் அவன் உயர்ந்த நிலைகளை அடைய முடியாது. அருந்தலினும் பொருந்தலினும் திருந்திய சீர்மையுள்ளவரே பெருந்தகையாளராய் உயர்ந்து விளங்குகிருர்.

ஒருவனுடைய உயர்வு அவனது ஒழுக்கத்தில் ஒளிபெற்றுள்ளது. இழிந்த நிலைகளை ஒதுக்கி உயர்ந்த நலன்களைத் தழுவி ஒழுகுபவரே தெளிந்த மேலோராய்த் திகழ்ந்து மிளிர்கின்றார்.

“செயிரின் தலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரின் தலைப்பிரிந்த ஊன்.” (குறள், 258)

குற்றம் நீங்கிய உயர்ந்த அறிவினையுடையார் ஊனை உண்ணார் எனத் தேவர் இவ்வாறு உறுதி கூறியுள்ளார். காட்சியார் என்றது உண்மையைக்கண்டு தெளிந்த மேலான ஞானிகளை. எதைக்கண்டால் எல்லாம் கண்டதாமோ அதைக் கண்டவரே காட்சியார்என்னும்மாட்சியை உரிமையாக மருவியவராவர்.

அத்தகைய சிறந்த காட்சிக்கு அடையாளம் இழிந்த ஊனை உண்ணாமையே யாம் என ஈண்டு உணர்த்தியுள்ள நுட்பம் ஊன்றி உணரத் தக்கது. தூய உணவு தூயவர்க்கு ஆயது.

உயிர்பிரிந்த ஊன் என்றது செத்த பிணம் என அதன் இழிநிலையை உய்த்துணர வந்தது. புனித உணவாளர்க்கே புண்ணிய உணர்வு பொலிந்துவரும் ஆதலால் ஈன ஊனை அவர் யாண்டும் தீண்டார்; இனிய தூய உணவையே வேண்டி வருவர் என்க.

கானூறு கோடி கடிகமழ் சந்தனம்
வானூறு மாமலர் இட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உணர்பவர்க்கு அல்லது
தேனமர் பூங்கழல் சேர ஒண்ணாதே. (திருமந்திரம்)

நீச ஊனினை நீக்கினவரே ஈசனைச் சேரலாம் என இது உணர்த்தியுள்ளது. சிவனை அடைய வேண்டுமானால் சீவன் பரிபூரண சைவன் ஆகவேண்டும் என்னும் உண்மை ஈண்டு உய்த்துணர வந்தது. உறுதிநலனைக் கருதி உய்தி பெறுக.

---

697 புலிகடுவாய் செந்நாய் புலவூன் அருந்தி
வலிகடுங் காட்டுள் வசிக்கும்—பொலிவுடைய
மானுடனாய் வந்தும்நீ மாறாகி ஊனுண்ணல்
ஈனமே அந்தோ இளிவு. (எ)

இ—ள்

புலி கடுவாய் செந்நாய் ஓநாய் முதலிய கொடிய காட்டு

மிருகங்களே ஊனைத்தின்று வாழும் இயலபின; இனிய மனிதர் அதனை உண்பது அந்தோ கொடிய ஈனம் என்க.

இழிந்த பிறவிகள் பலவும் கடந்து மனிதன் மிகவும் உயர்ந்து வந்திருக்கிறான். அரிதாக அமைந்த இந்தப் பிறவி துயரங்கள் யாவும் நீங்கி உயர்கதியை அடையவே நேர்ந்துள்ளது. விதி விலக்குகளை அறிந்து மதிநலத்தோடு எவ்வழியும் செவ்வையாக அவன் ஒழுகிவரும் உரிமையைத் தழுவிவந்துளான். அல்லல் யாதும் படியாமல் நல்லதை நாடிச் செய்பவனே நலம் பல பெறுகிறான்.

"பொல்லாங்கு என்பவை எல்லாம் தவிர்" (ஔவையார்)

என்றது மனித சமுதாயத்துக்கு ஒரு நல்ல போதனையாய் வந்துளது. கொல்லாவிரதத்தில் எல்லா நலமும் இசைந்திருக்கிறது.

இவ்வாறு அல்லது கடிந்து நல்லது செய்யவந்த மனிதன் பொல்லாத புலாலை உண்பது போதம் இழந்த ஏதமாய் நின்றது. மதிகேடான பழக்கம் எப்படியோ புகுந்து ஈனப்படுத்தி யிருக்கிறது. மடமையில் மருவியது கொடுமையாய்த் தொடர்ந்துளது.

உண்ணும் உணவை மனிதன் உணர்வோடு சுவைசெய்து உண்ணுகின்றான்; மிருகங்கள் அவ்வாறு உண்ணமுடியா; கண்டவற்றைத் தின்று அவை காலம் கழிக்கின்றன. உயர்ந்த அறிவுடைய மனிதன் இழிந்த விலங்குகள்போல் ஈன ஊனைத் தின்பது எவ்வழியும் இழுக்கேயாம்.

"நாய்கழுகு கூகை நரிகாகம் ஈஎறும்பு
பேயிவைகள் ஆவி பிரிந்தவூன்—நேயமொடு
தான்அருந்தல் அல்லாது சற்கா ரியமனிதர்
தான்அருந்த லாவதோ தான். (புலால்மறுத்தல்)

விதி நியமங்களை உணர்ந்து ஒழுக உரிய மனிதன் ஊனை அருந்துவது ஈனமாம் என இது உணர்த்தியுள்ளது. இழி பிராணிகள் தின்பதை உயர் மனிதன் உண்ண நேர்ந்தது துயரப் பழியாய்த் தொடர்ந்து வந்தது. பாவத் தீமையான புலாலை உண்பதால் மேலான கதிநிலைகளை அவன் இழந்து விடுகின்றான்.

"தவகதியை வேண்டுபவர் உயிரில் சடம்
தினல்தவிர்க தவம் அழித்தாங்கு
அவகதியை வேண்டுபவர் கழுகு நரி

செயும்தொழிலே அயராநாட;
சிவகதியும் திருமால்தன் திகழ்கதியும்
அயன்கதியும் தெய்வலோகத்
துவகதியும் இகந்து எரியும் தூர்க்கதியில்
வீழ்வர் பரஞ்சோதி ஆணை.''

ஊன் உண்பதால் மனிதன் உயர்கதிகளை இழந்து துயர மான நரக வேதனைகளில் விழுகிறான் என இது குறித்துள்ளது. குறிப்புகள் யாவும் புலைப்புசிப்பின் தீமைகளை விளக்கி நிற்கின்றன. வழுவான இழிவுகளை நீங்கி விழுமியனாய் மேலான நிலைகளில் மேலும் மேலும் செல்லவுரிய மனிதன் கீழான ஈன ஊனைத் தின்று இழிந்து உழலுவது வருந்தி இரங்கத் தக்கதே.

மானுடனாய் வந்தும் என்றது அவனது ஞான நிலையை உணர்ந்து கொள்ள வந்தது. எதையும் கருதியுணர்ந்து உறுதி நலங்களை அடையவுரிய உயர்பிறவி ஆதலால் மனித சன்மம் மகிமை மிக வாய்ந்தது. அரிய நிலையில் அடைந்த இதனால் உரிய பயனை அடைந்தவனே உய்தி பெற்றவனாகிறான். பெருதவன் பிழையாளனா யிழிந்து பெருந்துயரங்களை உறுகின்றான்.

“பெறலரிய பேறாகப் பெற்றஉடம்பு இதுகொண்டே
உறலரிய உயர்நிலையை உறவேண்டும் உறாமலே
இறலரிய புலைநிலையில் ஈனமாய் இழிந்துநின்று
மறமலிய உழலுவது மதிகேட்டின் அதிகேடே.''

மதிமானாய் வந்த மனிதன் விதிமுறைகளை உணர்ந்து தெளிந்து மேலான கதி நலங்களை அடையவில்லையானால் அவன் தோற்றம் பழுதுபட்டுப் பாழாய் முடிகின்றது. தன்னைப் பாழ் படுத்தாமல் வாழ்பவன் தலைமையாய் உயர்ந்து வருகிறான்.

ஊன் உணவு தீமையாய் வருதலால் அதனை உண்பவர் உயர் நிலையை எய்த முடியாமல் இழிவுறுகின்றனர். பாவ அழுக்குப் படியாமல் பாதுகாத்து வருகிறவரே திவ்விய கதியை எய்துகின்றனர். புனிதம் வளரப் புண்ணியம் வளர்கிறது.

துறவி நிலையை மருவி விரத சீலராயிருப்பவரே உயர்கதியை அடைய உரியவராகின்றார். புலாலை எவ்வழியும் வெவ்விய புலையாகவே கருதி அவர் யாண்டும் நிலையாய் விலகுகின்றனர். மறதியால் மருவினும் அது அவர்க்குக் கொடிய கேடாம்.

"விடலரிய துப்புடைய வேட்கையை நீக்கிப்
படர்வரிய நன்னெறிக்கண் நின்றார்-இடருடைத்தாப்
பெற்ற விடக்கு நுகர்தல் கடல்நீந்திக்
கற்றடியுள் ஆழ்ந்து விடல்." (பழமொழி, 26)

ஒருவர் ஐம்புல ஆசைகளையும் வென்று அரிய தவநிலையில் இருந்தார்; இடையே உடலில் சிறிது நோய் தோன்றியது; அந்தப் பிணியை நீக்குவதற்குக் கோழி ரசம் பருகவேண்டும் என்று மருத்துவர் குறித்தார்; அவரது உரையை மறுத்து விரத நிலையிலேயே அவர் வீறுற்று நின்றார். அந்நிலையைக் குறித்து வந்த பாடல் இது. கடலை நீந்திக் கரை ஏற நேர்ந்தவர் ஒரு பசுவின் கன்றின் காலடியில் தங்கிய நீரைத்தாண்டாமல் ஆழ்ந்தது போல் உடல் நோய்க்கு விடக்கு உண்டு உயிரைப் பாழாக்கலாகாது என்பது இதன் குறிப்பாம். பிணிக்கு மருந்து என்ற நிலையிலும் கூட விடக்கைத் தீண்டலாகாது; புனித உணவையே மனிதன் உண்டு வர வேண்டும். உண்மையைக் கண்டு தெளிக.

---

698 இனிய கனிகாய்கள் எண்ணரிய கூழ்கள்
புனித நிலையில் பொலிந்தும்—மனிதரதை
உண்டு மகிழாமல் ஊனமுற ஊனருந்தல்
பண்டு புரிந்த பழி. (அ)

இ—ள்

இனிமையான கனி காய்கள் நெல் புல் முதலிய நல்ல தானிய வகைகள் நாட்டில் நிறைந்துள்ளன; இருந்தும் மனிதர் ஈனமாய் ஊனை அருந்துவது பழவினையான பழியேயாம் என்க.

உண்ண உரியன இதில் எண்ண வந்தன.

உயிர் வாழ்க்கைக்கு உணவு அவசியம் தேவையாயிருத்தலால் மனிதன் முடிவில் பயிர்களை உளவாக்க நேர்ந்தான். அவைகளிலிருந்து வரும் விளைவுகள் இனிய உணவுகளாயின.

நெல்லு, புல்லு, வரகு, சாமை, சோளம், இராகி, தினை, உழுந்து, கடலை, அவரை, துவரை, பயறு, காணம், மொச்சை, முதலாகப் பலவகைத் தானியங்கள் உள்ளன. இவை யாவும் மனிதன் உண்ண உரியன ஆகலால் பண்டம் என வந்தன.

பண்டி = வயிறு, அதில் இடுவது பண்டம் என்க.

கூழ், கூலம், பண்டம் என்பன உணவுத் தானியங்களைக் குறித்து வருவது ஊன்றி உணரவுரியது. மனிதனுடைய பசியை நீக்கி வாழ்வை எவ்வழியும் வளம்படுத்தி வருதலால் யாவரும் இவற்றை ஆவலோடு விளைத்து யாண்டும் போற்றிவரலாயினர். பயிர் வகைகள் உயிர் வகைகளுக்கு உணவுகளை ஊட்டிவருவது இனிய காட்சிகளாய் எங்கும் நீண்டு நிலவி வருகிறது.

கதிர்படு வயலின் உள்ள கடிகமழ் பொழிலின் உள்ள
முதிர்பல மரத்தின்உள்ள முதிரைகள்புறவின் உள்ள
பதிபடு கொடியின் உள்ள படிவளர் குழியின் உள்ள
மதுவன மலரில் கொள்ளும்வண்டுஎன மள்ளர் கொள்வார். (1)

முந்துமுக் கனியின் நானு முதிரையின் முழுத்த நெய்யில்
செந்தயிர்க் கண்டம் கண்டம் இடையிடை செறிந்த சோற்றில்
தந்தமில் இருந்து தாமும் விருந்தொடும் தமரி னோடும்
அந்தணர் அமுதர் உண்டி அயில்வுறும் அமலைத்து எங்கும். (2)

(இராமாயணம், நாட்டுப்படலம்)

வயல் பொழில் முதலிய இடங்களிலிருந்து நெல் முதலிய பண்டங்களைத் தொகுத்துச் சேர்த்த முறைகளையும், நெய் பால் தயிர் கனிகளோடு உணவுகளை உண்டுவந்த நிலைகளையும் இவை உணர்த்தியுள்ளன. இந்நாட்டில் பண்டிருந்த விளைவின் பெருக்கையும், உணவின் தரத்தையும் கண்டு மகிழ்ந்து இந்நாள் நிலைமையை எண்ணிக் கண்ணீர் மல்கி இங்கே ஏங்கி நிற்கின்றேம்.

நமது முன்னோர்களது சீவியநிலைகளைக் காவியங்கள்காட்டி வருகின்றன. அக்காட்சிகள் பழங்கால மாட்சிகளையும் வளங்களையும் விளக்கி நமக்கு மகிழ்ச்சிகளை ஊட்டி வருகின்றன.

ஆதியில் மனிதன் பசியைத் தீர்க்கக் கனிகாய் கிழங்குகளை உண்டுவந்தான். பின்பு உண்ணுவதைச் சமைத்துத் தின்னத் தொடங்கினன். அதன்பின் அரிசி, புல் முதலியவற்றைப் பக்குவம் செய்து உண்டுவர நேர்ந்தான். நாளடைவில் உணவு வகைகள் பெருகி வரலாயின. சுவைகளின் உணர்வுகளில் மனிதர் சுகிகளாய் உயர்ந்து சுகித்து வருகின்றனர்.

காலதேசங்களின் மாறுபாடுகளுக்குத் தக்கபடி உணவுகள் வேறுபட்டிருக்கின்றன. கடல் ஓரங்களில் வாழ்பவர் மீன்களைச்

சமைத்துத் தின்கின்ருர். காட்டில் வசிப்பவர் மிருகங்களை வேட்டையாடிப் புசிக்கின்ருர். மலேகளில் இருப்பவர் கிழங்கு காய் கனிகளைத் தின்னுகின்றனர். இன்னவாறு தம்மைச் சூழ்ந்துள்ள நிலேகளின்படியே மாந்தர்க்கு உணவுகள் வாய்ந்துள்ளன.

மது உண்பதும், மாமிசம் புசிப்பதும் அயல் நாடுகளில் இயல்பாக அமைந்திருக்கின்றன. மிகுந்த குளிர் நிறைந்த தேசங்களில் தானிய உணவுகளை உண்டு வாழ்வது சிரமம் ஆதலால் வேறு உணவுகளை அந்நாட்டவர் உண்ண நேர்ந்தனர். நேர்ந்தாலும் அவருள் அறிஞர் சிலர் புலாலும் மதுவும் பிழை பாடுடையன என்று இயற்கை நிலேகளை நோக்கி ஒதுக்கியுள்ளனர்.

இந்நாடு தட்ப வெப்பங்களில் சமநிலே யுடையது. நில வளங்கள் வாய்ந்தது; தானிய வகைகள் யாண்டும் நீண்ட விளைவுகளாய் நேர்ந்துள்ளன; ஆகவே இந்நாட்டு மக்கள் அரிசி முதலியவைகளை வரிசையாச் சமைத்து உண்ண வாய்ந்தனர்.

ஊன் அருந்துவது ஈனம் என மேலோர் உணர்ந்து விலக்கியுள்ளனர். கொலேபடிந்து வருதலால் புலாலே உண்பது புலே என இகழ்ந்தனர். அதனை உண்பவரைப் புலேயர், கீழோர் என இழித்து ஒதுக்கினர். இழிவு நிலேகள் செயல்வழி நேர்ந்தன.

"ஈவானே தெய்வம் இரப்பே இளிவரவென்று
ஆய்வானே நூலின் பயனறிவான்—பேய்வாழும்
காடே கரப்பவர்தம் இல்லம் கடும்புலேயன்
வீடே விடக்குண்பான் வீடு"

விடக்கு உண்பவன் கடும்புலேயன் என இது குறித்துள்ள கொதிப்பைக் கூர்ந்து நோக்குக. விடக்கு = ஊன், தசை. தான் உண்ணும் விடக்குக்காகப் பிற உயிர்களைத் துடிக்கக் கொல்லுதலால் புலால் புசிப்பவன் கொடிய கொலேஞன், நெடிய புலேஞன் என நேர்ந்தான். தன் உயிரைப் பாழாக்கிக் கீழே போதலால் அவன் கீழோன் என எள்ளி இழிக்கப்பட்டான்.

பிற உயிர்களுக்கு அருளுவது பெரிய புண்ணியம்; அந்தப் பெருமகிமையைப் புலால் உண்பவன் வறிதே இழந்து பாவி யாய் இழிந்து போகின்ருன்; அவனது போக்கின் புலேயை மேலோர் நோக்கி இரங்குகின்ருர். ஆக்கம் உற அறிவும்

போதிக்கின்றார். போதனை புனித நிலையை ஊட்டுகின்றது.

"அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்
உயிர்செகுத்து உண்ணாமை நன்று" (குறள், 259)

ஆயிரம் வேள்விகளைச் செய்வதினும் ஊன் உண்ணாமல் இருப்பது நன்மையாம் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். ஆயிரம் யாகம் செய்தால் இந்திரபதவி அமையும் எனக் கருமகாண்டம் குறித்துள்ளது. அதனை எதிர்நிறுத்தி அதனினும் புலால் உண்ணாமையால்வரும் புண்ணியம் பெரிதாம் என்று குறித்திருத்தலால் இதன் பெருமகிமையை உணரலாகும். புலைப்புசிப்பு மனிதனைப் புலைப்படுத்திக் கீழே தள்ளிவிடுகின்றது; அந்த ஈனப்புசிப்பை ஒழித்தவன் உயர்ந்த சீலனாய்ச் சிறந்த மேன்மைகளை எளிதே அடைந்துகொள்ளுகிறான். பிற உயிர்களுக்கு இதமாய் வாழுபவன் தன் உயிர்க்கு ஓர் உன்னதமான கதியைப் படைத்து வருகிறான். அருள் வரவு அதிசயத் திருவாயுள்ளது. புனித வாழ்வின் நிலைதெரிந்துமனிதன் உயரவேண்டும்.

---

699 புல்லன் எனினும் புலவூன் புசியானேல்
நல்லவுயர் சாதியென நண்ணுகின்றான்—வல்லபல
மேன்மை யுறினும் விடக்குண்போன் கீழ்என்னும்
பான்மை யுறுகின்றான் பார். (கூ)

இ—ள்

அறிவு கெட்ட புல்லன் எனினும் புலால் ஒன்று புசியான் ஆயின் அவன் உயர்ந்த சாதியான் என ஓங்கி நிற்கின்றான்: அறிவு நலம் வாய்ந்து அரியபல மேன்மைகள் அடைந்திருந்தாலும் ஊன் உண்பவன் இழிந்தவனா எண்ணப்படுகின்றான்; இந்தப் படுநிலை தெரிந்து பழி வரவு அறிந்து வடு நீங்கி வாழுக.

குலங்களைக் குறித்துக் காட்டியது நலங்களைக்கருதி உணர. மேல் கீழ் எனச் சாதி யாதும் இல்லை. பான்மைகள் வளர்ந்து வர மேன்மைகள் கிளர்ந்து யாண்டும் மேலா எழுகின்றன.

இயல்புகளின் நிலைகளுக்குத் தக்கபடி மனிதனுக்கு உயர்வு தாழ்வுகள் உளவாகின்றன. உயர்ந்த எண்ணங்களை உடையவன் மேலான உயர்ந்த மனிதனாய் ஒளிபெற்று நிற்கின்றான்; இழிந்த

செயல்களையுடையவன் கீழான இழிமகனாய் இழிந்து உழலுகின்றான். எண்ணும் எண்ணமும், பண்ணும் செயலும், உண்ணும் உணவுகளுக்குத் தக்கபடி உளவாகி வருகின்றன. உணவு புனிதமாய் இனியது எனின் நினைவும் செயல்களும் இனியனவாய் நிகழுகின்றன. அது இழிவாய் ஈனம் படிந்துவரின் அதனை உண்ணும் மனிதனது எண்ணமும் செயலும் இழிந்து படுகின்றன. வித்தின் படியே விளைவுகள் வெளியாகின்றன.

ஊன் உணவு மலினமாய் ஊனமே புரிதலால் ஞானசீலர் அதனை ஈனம் என விலக்கியுள்ளனர். தான் விரும்பியவற்றையெல்லாம் உண்டுகளித்து ஒழிந்துபோக மனிதன் பிறக்கவில்லை. உயர்ந்த குறிக்கோளை அடைந்துகொள்ளவே சிறந்த பிறப்பை அவன் எய்தி வந்திருக்கிறான். வரவுநிலையை உறவோடு உணருக.

உய்தி பெறுவதே உறுதியான உரிமைப்பயனும். உயிர்க்கு உறுதிபெற வந்தவன் அதனை மறந்துவிட்டு உடலையே கொழுக்க வளர்த்து ஊனமாய் அலைந்து உழல்வது ஈன மடமையாம்.

ஆடு மாடுகள் போல் கண்டபடியெல்லாம் அருந்தல் பொருந்தல்களில் இழிந்துபடாமல் பொறிவெறிகளை அடக்கி நெறிமுறைகளில் ஒழுகி வருவதே அறிவுடைய மனிதனுக்கு உரிய கடமையாம். உரிமை உணர்வது பெருமை புணர்வதாம்.

விதி நியமங்களைத் தழுவி ஒழுகிவரும் அளவே மனிதன் மதிநலமுடையவனாய் மாண்புபெற்று வருகிறான். வரம்புசெய்த வாய்க்கால் வழியே ஓடும் நீரே பயிர்களை வளர்த்துவரும்; அதுபோல் நெறிமுறையமைந்த ஒழுங்கான வாழ்வே உயிர்களை உயர்த்தியருளும். ஒழுக்கம் தவறின் இழுக்கம் ஆகும்.

நல்ல வழிகளை நம்முன்னோர் வகுத்தது பொல்லாத புலைகளையெல்லாம் ஒழித்து மனிதன் எவ்வழியும் நல்லவனாய் வாழவேயாம். நெறியான வாழ்வு நிலையான இன்பங்களை அருளுகின்றது.

இயன்றவரையும் எவ்வுயிர்க்கும் இதமாய்த் தன் வாழ்வை நடத்தி வருபவனே உயர்ந்தவன் ஆகின்றான். ஊன் உண்டலில் பிறஉயிர்கட்குத் துயர் இருத்தலால் அது பழி என்று மேலோர் தெளிந்து விலக்கியுள்ளனர். அந்த அனுபவங்களை நூல்களும் சால்புடன் விளக்கியுள்ளன. விதிவிலக்குகள் மதிநலமுடையன.

"ஊன்ஊண் துறமின்! உயிர்க்கொலை நீங்குமின்"
(சிலப்பதிகாரம்)

"ஊனைத்தின்று ஊனைப் பெருக்காமை முன்இனிதே"
(இனியவைநாற்பது)

"புலையுள்ளி வாழ்தல் உயிர்க்கு இன்னு" (இன்னநாற்பது)

"ஊன்உண்டல் செய்யாமை செல்சார்உயிர்க்கு"
(நான்மணிக்கடிகை)

"கொலைநின்று தின்றுஒழுகுவான் கடை" (திரிகடுகம்)

"உண்ணற்க நோயுறினும் ஊன்" (இன்னிசை)

"இந்நோய் நமக்குண்டென்று எண்ணுதே எவ்வுயிரும்
முன்னேவக் கொன்றுண்ணும் மூர்க்கர்தாம்-எந்நோவும்
பண்ணப் படுநரகில் பாவிகளில் பாவிகள் என்று
எண்ணப் படுவார் இவர்" (பாரதம்)

கொன்றுவிலங்கின் தசைநுகரும் கொடுமையோர் அவ்விலங்கினுடல்
துன்றுமயிர் எத்துணையாம் அத்துணையகாலம் வெந்நரகில்
ஒன்றிநுகர்வாய் புழுஒழுக உழப்பர் என்கை உணர்ந்தேயோ
கன்றுசினவெங் கொடு விலங்கும் புலவூன் தின்னக்கருதாவால். (1)

அருமகத்தன்றி ஊசுவைத்து உடலம் வீக்குவோன் அதற்கு உடன் படுவோன்
கருவியில் குறைத்தோன் பகர்ந்துளோன் கொணர்ந்தோன் வியந்துளோன் கடிகெனஏவும்
திருவிலி அதனை அட்டவன் இவர்கள் எண்மரும் தீநரகு அடைவர்
பரிவின்ஊன் விடுத்தோர் நாள்தொறும்புரவி மகம்புரிபலன் பெறுகுவரால். (2)
(காசிகாண்டம்)

புலால் உண்டலின் பழி நிலைகளையும் பாவத்தொடர்புகளையும் இவை உணர்த்தியுள்ளன. குறிப்புகள் கூர்ந்து உணரவுரியன.

இளங்கோவடிகள், பூதஞ்சேந்தனர், பெருந்தேவனர் முதலிய பழம்பெரும் புலவர்கள் எல்லாரும் ஊன் உண்டலை ஒழித்து வாழும்படி மானுடர்களுக்குப் போதித்திருப்பது மதித்து உணரத்தக்கது. மேலோர் உரைகள் மேன்மை அருள்கின்றன.

தன்னைத் தாழ்த்தித் தவறு பல செய்தலால் புலையுணவு இன்னல் என நேர்ந்தது. உயர்ந்தசாதி, தாழ்ந்த சாதி என்பன எல்லாம் புலால் உண்ணுமையாலும், அதனை உண்பதாலுமே

பெரும்பாலும் இந்நாட்டில் எண்ணப்பட்டு வருகின்றன. உண்ணும் உணவு புனிதமான அளவு மனிதன் உயர்ந்து வருகிறான். நிலைமைகளை நினைந்து தெளிந்து தலைமையில் உயர்ந்து கொள்க.

---

700 பழக்கம் படிந்து பழியூன் அருந்தி
வழக்கம் கொடிதாய் வருவீர்—இழுக்கமென
ஓர்ந்து புலையை ஒழித்துத் தலைமையில்
சேர்ந்து நிலைமின் சிறந்து. (ய)

இ—ள்

பழகிய பழக்கத்தின் தொடர்பால் பழிநிலை தெரியாமல் புலாலை அருந்தி வழக்கமாய் வருகின்றீர்! அந்த இழுக்கத்தின் ஈனநிலையை உணர்ந்து ஊன்உணவை ஒழித்துஉயர்களன்பதாம்.

உயர்வுக்கு உரிய நிலையை இது உணர்த்தியுளது.

அறிவு இச்சை செயல்கள் மனிதனுடைய வாழ்க்கைகளாய் மருவி வருகின்றன. ஒரு பொருளைப் பார்க்கிறான்; ஓர்ந்து அறிகிறான்; தனக்கு அது வேண்டும் என்று விரும்புகிறான்; பின்பு அதனை அடையவேண்டிய தொழில்கள் நிகழ்கின்றன. அடைந்துகொண்டபடியே தொடர்ந்து நடந்து வருகின்றன. நலம் தீங்குகளை நாடி அறிந்தாலும் பழகிய பழக்கத்தின்படியே மனிதன் வழக்கமாய் ஓடி வளர்ந்து ஒழுகி வருகிறான்.

சுருதி, யுத்தி, அனுபவங்கள் நெறிமுறைகளை உறுதிசெய்தற்குக் கருவிகளாய் அமைந்திருக்கின்றன. இந்த மூன்றின் சோதனைகளால் ஆன்ற போதனைகள் தோன்றி வந்துள்ளன.

புலால் உணவு இழிந்தது; தீயது என வேதம் முதலாக முன்னோர் நூல்கள் எல்லாம் இகழ்ந்து விலக்கியிருக்கின்றன. மனிதனது யுத்தியும் அதனைக் குற்றம் என்று குறித்துள்ளது. யூகமாய் ஆராய்ந்து கவனிப்பது யுத்தி என வந்தது. தனக்கு இன்பத்தை விரும்புவதே மனிதனுக்கு இயற்கையாயுள்ளது. சுகத்தைத் தான் விரும்புவது போலவே பிற உயிர்களும் தமக்கு விரும்பும் என்பதை யூகமாய் அவன் அறிந்து கொள்ளுகிறான். கொள்ளவே தனது வாழ்க்கை எவ்வுயிர்க்கும் இடையூறின்றி இதமாய் அமைந்துவரும்படி ஆய்ந்து நடக்க வேண்டியவனாகிறான். அருள் நலம் பேணி வருவதே அறிவுக்குப் பயனாகின்றது.

புலால் உயிர்க்கொலையால் வருவது ஆதலால் அதனை உண்பது பாவம் என யுத்தி உணர்த்துகின்றது; அந்தப்புத்தி போனையால் ஊன்தின்றலை ஒழித்து உயர்ந்து ஒழுகுகிருன். தான் உண்ணும் உணவால் பிற உயிர்கள் சாகும்படி நேர்கின்றனவே! எனத் தண்ணளியோடு எண்ணியுணர்ந்தால் ஊன் உண்பவர் எவராயினும் அதனை அவர் உடனே ஒழித்துவிட நேர்வர்.

நல்ல அன்னங்களை ஆராய்ந்து உண்ண உரிய மனிதன் பொல்லாத புலாலைத் தின்ன விழைவது புலைப்பழியாய் நின்றது. தின்று பழகிய பழக்கம் கொன்றுபடும் கொலைகளை ஒன்றும் உணராதபடி அவரை ஊனப்படுத்தி ஈனமாக்கியுள்ளது. மனிதன் புலால் தின்ன நேர்ந்ததால் ஆடுகளும் கோழிகளும் பன்றிகளும் மாடுகளும் நாளும் நாளும் ஆயிரக்கணக்காகச் செத்து வருகின்றன. கொலையாளிகள் அவற்றை இவ்வாறு கொல்லுவது புலால் உண்பவர் பொருட்டேயாம். புலாலை இவர் உண்ணுது ஒழியின் அக்கொலைகளை அவர் பண்ணுது ஒழிவர். புலை நுகர்வால் கொலை விளைவுகள் எங்கும் பொங்கியுள்ளன.

தினற்பொருட்டால் கொல்லாது உலகெனின் யாரும்
விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல். (குறள், 256)

ஊன் தின்பவராலேயே உயிர்க்கொலைகள் நிகழுகின்றன. அவர் தின்னுராயின் அவை நிகழா; புலால் புசிப்பவர்களாலேயே கொலைப் பாவங்கள் உலகில் நிறைந்து வருகின்றன எனத் தேவர் இங்ஙனம் இரங்கியிருக்கிருர்.

புலாலைத் தின்ற பாவமும், அப்புலாலுக்காக உயிர்களைக் கொன்ற பாவமும் மனித சமுதாயத்தை மாறி மாறி வதைத்து வருகின்றன. கொலையும் புலையும் கொடிய தீவினைகளாய்நின்றன.

“கொன்ருன்; கொலச்சொன்ஞன்; கூசஅறுத்தான்; அட்டான்;
தின்ருன்; விலக்கிடான் தின்னென்று-நின்றவனவ்
வெட்டமழல்க ளிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகில்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து” (இதிகாசம்)

ஊன் தின்பதால் விளையும் நரகதுயரங்களை இது உணர்த்தியுளது.

இவ்வாறு எவ்வழியும் வெவ்விய துன்பங்களை விளைக்கும் புலாலை மனிதன் உவந்து உண்பது ஊனப்பழியாயுளது. இயல்

புக்கும் அனுபவத்திற்கும் சிறுதும் பொருந்ாததைப் பிரியமாய் அருந்திவருவது பழகியபாழான நசையால் நேர்ந்தவசையாம்.

ஊறுகாயில் சிறிய ஒரு புழு இருந்தாலும் உண்ணக்கூசுகின்றூர்; வீசி வெளியே எறிந்துவிடுகின்றூர்; ஒரு மயிர் விழுந்திருந்தாலும் அன்னத்தை உண்ணுமல் விலக்கிவிடுகின்றூர். அத்தகைய மனிதர் செத்த சவமான ஊனைக்கலத்திலிட்டுப்பிசைந்து கண் கூசாது வாரித்தின்னுகின்றூர். இந்த ஈனத்தீனி எவ்வளவு இழிவுடையது! எத்துணை மையல் மயக்கத்தில் இது மருவி வந்துளது! ஆறறிவுடையவர் தேறி உணர வேண்டும்.

“ஊறுகா யாதி தன்னின் உதித்தஓர் புழுக்கண்டாயேல்
வேறவே வீசிச் சிந்தை மெய்மிகக் குலைந்துற் ருயால்
நாறும்ஊன் புழுத்த தேனும் நனிமிக விரும்பிஉள்ளம்
தேறிநீ உண்ணுமாறென் செப்புதி தெளிவிலாதோய்! (1)

தகருனக்கு எதிரே சிந்தத் தான்தெறித்திட்ட கோழை
புகலும் உன்மீதில் தாக்கப்பொருதுளம் குலைந்துற்ருயால்
பகர்தரும் அவற்றின் ஊனைப் பற்றிய மூளையோடும்
அகமகிழ்ந்து அயிலுமாறென்? அறைகுதி அறிவிலாதோய்! (2)

சுசி உணர்ச்சியிருந்தும் அருவருப்பில்லாமல் ஊனை அருந்துவது அறிவுபாழான அவலமேயாம் என இவை வினவி விளக்கியுள்ளன. இழிந்த பழக்கத்தால் நேர்ந்த ஈனத்தொடர்பு தெளிந்த அறிவு வந்தபோதும் ஒழிந்துபோகாமல் ஒட்டித்தொடர்ந்து ஊனப்படுத்தி வருகிறது. உண்டுபழகிய ஊனம் உணர்வையும் உண்டு கொடுமை மண்டிக் கடுமையாய் வரலாயது.

“ஆட்டைத்தின்று மாட்டைத்தின்று மனிதனையும் தின்ன வந்தான்” என்னும் பழமொழி ஊன்உண்டுவருபவரது கொடிய மாறுபாட்டு நிலைகளைக் கடுமையாகக் காட்டியுள்ளது.

சாதுவன் என்னும் வணிகன் பொருள் ஈட்டம் கருதிஅயல் நாடுகளுக்குக் கடல் கடந்து சென்றுன். இடையே கலம் உடைந்து போயது; போகவே அவன் கடலில் வீழ்ந்தான்; உடல் நிலைகுலைந்து உயிர்பதைபதைத்துத் தத்தளித்து வருங்கால் அலைகள் நடுவே நெடிய கட்டை ஒன்று வந்தது; அதனைப் பிடித்துக் கொண்டு கிடந்தான்; அலைகள் அடித்துக்கொண்டுபோய் ஒரு மலைச்சாரலில் சேர்த்தது; இறங்கி ஒரு மரநிழலில் அயர்ந்து படுத்தான். அயர்ச்சி மிகுதியால் தளர்ச்சியடைந்து கிடந்தான்.

நாகர் என்னும் ஒருவகை மலைச் சாதியர் ஆங்கு வசித்து வந்தார் ஆதலால் இவனைக் கண்டதும் நல்ல புசிப்புக் கிடைத்த தென்று உவந்து சூழ்ந்தார். கொல்ல மூண்டார்; அக்காட்டு மாக்கள் பேசும் மொழியை இவன் அறிந்திருந்தான்; அவர்களி டம் இதமாப் பேசினன்; ஆகவே கொல்லாமல் இவனை அழைத் துப்போய்த் தம் தலைவனிடம் காட்டினர். அவன் கேட்ட கேள் விக்குப் பதில் உரைத்துத் தனது அவல நிலைமையை உணர்த்தி னன். அவன் நெஞ்சம் இரங்கி "இவனுக்குக் கள்ளும் ஊனும் தருக" என அயலே நின்றவரிடம் உரைத்தான். "ஐயோ! அவை தீயன; நான் உண்ணேன்; எனக்கு வேண்டா" என்றான். இவ் வுரைகளைக் கேட்டதும் அந்நாகர் தலைவன் வியந்தான். "ஊன் உண்ணுமல் உயிர்வாழ முடியுமா?" என்று அவன் நகைத்தான். அவனுக்கு வணிகன் அறிவுநலம் கூறினன்; புலையூணல் விளையும் கொலைபாதகங்களையும்; அதனையுண்டவர் அடையும் துயர நிலை களையும் நயமாக உணர்த்தினன். "தானிய உணவுகள் கிடையாத இந்த இடத்தில் நீ ஊனை உண்டுவந்தாலும், பிற உயிர்களைக் கொல்லாமல் ஆனவரையும் அருள்புரிந்து வருக" எனப்பொருள் பொதிந்த மொழிகளால் இனிது புகன்றான்.

"உடைகல மாக்கள் உயிர்உய்ந்து ஈங்குஉறின்
அடுதொழில் ஒழிந்து அவர் ஆருயிர் ஓம்பி
மூத்துவிளி மாஒழித்து எவ்வுயிர்மாட்டும்
தீத்திறம் ஒழிக" (மணிமேகலை, 16)

"கடல் வழி வரும்பொழுது கப்பல் உடைந்து அபாயம் அடைந்து இங்கே வந்துசேரும் மக்களுக்கு யாதொரு தீங்கும் செய்யாமல் ஆதரித்தருள்; புலாலுக்காக எந்த உயிரையும் கொல் லாதே; வயது முதிர்ந்து இறந்துபட்ட விலங்குகளை வேண்டுமா னல் தின்றுகொள்; யாண்டும் தீமையின்றிவாழ்" என இங்ஙனம் சாதுவன் கூறிய போதனைகளைக் கேட்டதும் அவன் உள்ளம் உவந்து அவ்வாறே "இறுதிவரையும் உறுதியாக இந்த விரதத் தைப் பேணி வருவேன்" என்று புகன்று தன்னிடமிருந்த முத்து களையும் மணிகளையும் வாரிக்கொடுத்து இவனை ஆர்வத்தோடு அனுப்பினன். சாதுவனது போதனைகள் ஆதரவுகளை அருளின.

புலால் உண்பதால் மனிதன் காட்டுவிலங்குபோல் கொடு மை மண்டியிருப்பான்; உயிர்க்கொலைக்கு அஞ்சான்; அருள்

நலமிழந்த அவனது வாழ்வு அவலமாயிருக்கும்; ஊன் உண்போரும் உணர்வு தெளிந்தால் அதனை ஒழித்து உய்திபெறுவார் என்னும் உண்மையை இச்சரித நிகழ்ச்சியால் உணர்ந்து கொள்ளுகிறோம். அறிவு தெளிய அவலங்கள் ஒழிகின்றன.

நாற்றப் புலாலை ஏற்ற சுவை செய்து, கலத்தில் இட்டு ஒருவன் தின்னும்பொழுது இந்த ஊன் ஒரு உயிரைக் கொன்றதனால் அல்லவா வந்துள்ளது; உணர்வுடைய மனிதன் இதனை உண்ணலாமா? என்று எண்ணிப்பார்க்க வேண்டும். அவ்வாறு எண்ணுவானுயின் உள்ளம் இரங்கும்; இரங்கவே ஊன்உண்டலை ஒழிக்க நேர்வன். நெறிமுறைகளை நேர்மையோடு எண்ணி உணராமையினாலேதான் மனிதன் மண்ணாய் மடிந்து போகின்றான்.

தன்னுயிரைப்போல் பிற உயிர்களையும் பேணி ஒழுகுபவன் மனிதருள் தெய்வமாய் மருவி மிளிர்கின்றான். அவ்வாறு பேணுதவன் எவ்வழியும் உயராமல் இழிவான அவகதிகளையே அடைகின்றான். சீவ தயையால் தேவகதிகள் வருகின்றன.

"முன்னை வேதனையைவிட்டு முற்றிய அறிஞர் நெஞ்சில்
பின்னொரு விகாரமின்றி இருப்பர் இப்பிணப்புலாலை
நன்னெறி அறிந்த நாமும் நாவழி ஒழுகிக்கெட்டோம்
தின்னவே நயந்தோம் நம்போல் தீங்குளார் உண்டோவின்றே"

பழக்கத்தால் புலாலைத் தின்றுவந்தவர் பின்பு அதன் தீமையைத் தெரிந்து வருந்தி ஊனுணவை அறவே ஒழித்து உணர்வுடன் ஒழுக நேர்ந்தவர் இவ்வாறு இரங்கி உரைத்துள்ளார்.

பறவை இனங்களுள் நாரை என்பது ஒன்று. அந்த வகையுள் விசித்திரமான நாரை ஒன்று தோன்றியது. தனது சாதி நெறி தவறி வேதியன் ஒருவன் மீன் தின்னவிழைந்தான். அந்த விழைவினால் பின்பு அவன் நாரையாய்ப் பிறந்தான். பறவையாய்ப் பிறந்தாலும் பழம்பிறப்பின் விழைவினால் விளைந்த இழவை உணர்ந்து மீன் முதலிய ஊன்களை யாதும் தின்னமல் அது நீதியாய் நின்றது. அந்நிலையை அறிந்து முனிவர்களும் வியந்தனர்.

"ஒரு மீன் புலவு வாய்மடுப்பின் ஒழியும் தசைகள் அனைத்தினையும்
பரிவால் நுகர்ந்தோர் வீழ்கின்ற பாழ்வெந்நரகில்படுவர் எனும்
அருமாமறையின் பொருள்தேர்ந்தோ அந்தாமரைநாண்மலர் பொர்துளும்
விரிநீர் வாவி பயில்மீன்கள் விழுங்காதுலவும் புள்ளினமே.

புழுவும் தசையும் வெண்ணிணமும் பொதிந்த குரம்பை வீக்குதற்குக்
கழியூன்நுகர்ந்தோர் கொடு நரகில் கற்பகாலம் கிடந்தழுந்தி
விழைவின்முன்னர்த்தாம் நுகர்ந்த விலங்கும் அவர்தம்மெய்த்தசையை
அழிவெம்பசியால் பறித்தருந்தும் என்னும் பான்மை அறிந்தேயோ?'

புலால் துறந்திருந்த புள்ளினங்கள் புகழ்ந்து போற்றப்பட்டுள்ள நிலைகளை இவற்றால் நாம் உணர்ந்துகொள்ளுகிறோம்.

"புலிநாரை எண்குறவாதிகள் முன்னம் புலால்அருந்தும்
குலனுயிருந்தும் அருள்ஓம்பிமுத்தி குறுகியதென்று
உலகூடுரைப்பசொற் கேட்டும் அருளற்றுழன்றிறக்கும்
சிலர்மானுடத்தென்ன செய்வான்புவியில் செனித்தனரே"
(அருட்பிரகாசம்)

சடக்கடத்துக்கிரை தேடிப் பலவுயிர்தம்மைக்கொன்று
விடக்கடித்துக்கொண்டிறுமாந்திருந்து மிகமெலிந்து
படக்கடித் தின்றுழல்வார்கள்தமைக்கரம் பற்றிநமன்
இடக்கடிக்கும் பொழுதேதுசெய்வார் கச்சிஏகம்பனே.
(பட்டினத்தார்)

புலால் உண்பதால் விளையும் புலைத்துயரங்களை நினைந்துவருந்தியிருக்கும் இவை ஈண்டு உணர்ந்து சிந்திக்கவுரியன.

"கொன்று உண்பான் நாச்சாம்" (சிறுபஞ்சமூலம் 10)

புலால் உண்பவனது நா புலையாயிழிந்துபடும்; அது செத்த நாவேயாம் எனக் காரியாசான் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

"அலைப்பான் பிறிதுயிரை ஆக்கலும் குற்றம்;
விலைப்பாலில் கொண்டுஊன் மிசைதலும் குற்றம்;
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்;
கொலைப்பாலும் குற்றமே யாம். (நான்மணிக்கடிகை)

ஊன் உணவுக்காக ஆடுகோழிகளை வளர்ப்பதும், விலைக்கு வாங்கிப் புலாலை உண்பதும், பொல்லாத சொல்லுகளைச் சொல்லுவதும், கொல்லுவதும் கொடிய குற்றங்கள் ஆம்என விளம்பிநாகனர் இவ்வாறு விளம்பியுள்ளார்.

"இட்டஇரை ஆசையால் எய்தியமீன் தூண்டில்வாய்ப்
பட்டதென நாவிரசம் பார்த்துலகர்—கெட்ட
இருளார் உலகத்தில் எய்துவர்கள் என்றார்
அருளாரும் நெஞ்சத் தவர்." (இதிகாசம்)

தூண்டிலால் மீன்களைப் பிடித்து உண்டவர் பின்பு நரக துன்பங்களை அடைந்து நைந்து உழல்வர் என இது உணர்த்தியுளது. புலையும் கொலையும் பொல்லாத் தீமைகளாய் நின்றன.

கொன்றிலாரைக் கொலச்சொல்லிக் கூறினார்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றியாய்ப் படியிற்பிறந்து ஏழ்நரகு
ஒன்றுவார் அரன்ஆணையி துண்மையே. (க)

கொலைஅஞ்சாது ஒருவற்கு அஞ்சிக் கொன்றுளோர்
சிலர்சொல் அஞ்சிப் புலாலினைத் தின்றுளோர்
நிலையதாய் நரகத்திடை நிற்பர்என்று
அலகில் நூல் மறை ஆகமம் ஓதுமே. (பெருந்திரட்டு)

புலை உணவால் இன்னவாறு பலவகையான பழி துயரங்கள் விளைகின்றன; ஆதலால் அந்த ஈன ஊனை உண்ணுமல் ஒழித்துப்புனித நிலையில் ஒழுகிவரின் மனிதன் இனிய நலன்களை எய்த நேர்கின்றுன். ஊனம் ஒழிவது ஞானம் தெளிவதாம்.

புன்புலால் யாக்கை பொருந்தி யிருந்தும்
தன்புலை ஓர்ந்து தவநிலை காணுது
அன்பில ராகி அவமே இழிந்து
வன்புலால் உண்பது வசைதுய ராமே.

தன் பிறப்பின் நிலையை உணர்ந்து மனிதன் சிறப்பு நிலையை அடைந்துகொள்ளவேண்டும். அங்ஙனம் அடையானுயின் அவன் கடையாயிழிந்து கதியிழந்து படுகின்றுன்.

“புன்புலால் உடம்பின் அசுத்தமும் இதனில்
புகுந்து நான் இருக்கின்ற புணர்ப்பும்
என்பொலா மணியே! எண்ணிநான் எண்ணி
ஏங்கிய ஏக்கம்நீ அறிவாய்!
வன்புலால் உண்ணும் மனிதரைக் கண்டு
மயங்கியுள் நடுங்கி ஆற்றுமல்
என்பெலாம் கருக இளைத்தனன் அந்த
இளைப்பையும் ஐயநீ அறிவாய்” (அருட்பா)

புலால் உண்பவரைக் கண்டபோது மனம் கலங்கி இராமலிங்கசுவாமிகள் நடுங்கியுள்ள நிலையை இதனுல் உணர்ந்துகொள்கிறேம். அவரது சீவகாருணிய நீர்மை உரைகள் தோறும் வெளிவந்துள்ளன. உயிர் இரக்கம் உயர்கதியை உணர்த்தியுளது.

இந்த ஒரு உடம்பை வளர்க்க எவ்வளவு உயிர்களைக் கொன்றிருக்கிறான்; அவ்வளவு கொலைபாதகங்களும் புலால் உண்ணும் நசையால் விளைந்துள்ளனவே! என்று உள்ளம் உளைந்து அவர் உருகி மறுகியுள்ளமையை ஊன்றி ஓர்ந்துகொள்கிறோம்.

"கருந்தொழிலர் ஆய கடையாயார் தம்மேல்
பெரும்பழி ஏறுவ பேணார்—இரும்புன்னை
புன்புலால் தீர்க்கும் துறைவ!மற் றஞ்சாதே
தின்ப தழுவதன் கண்." (பழமொழி)

மான் மரைகளை இரையாகப்பற்றித் தின்னும் பொழுது அவை கதறிஅழுதாலும் கொடிய புலி இரங்கிவிடாது; அதுபோல் புலை விரும்பிக் கொலை புரிபவர் இரக்கம் கெட்டவர்; பழிக்கு அஞ்சாத கடையர் என இது குறித்துள்ளது. ஊன் உண்பதால் உள்ளம் கொடியதாகின்றது; ஆகவே எள்ளலடைய நேர்ந்தது.

"இனிது உண்பான் என்பான் உயிர்கொல்லாது உண்பான்"
(நான்மணி 60)

உயிர்க்கொலை நேராமல் உண்பதே இனிய உணவாம்; அல்லாதது பொல்லாத தீமையாம் என இதனால் உணர்ந்து கொள்கிறோம். புலை நீங்கிய பொழுது அது புனித வாழ்வாகின்றது.

பிற உயிர்கள் துயர் உறாமல் தன்வாழ்வை நடத்தி வருவதே நலமாம்; அவனே நல்லவனாய் நலம் பல பெறுகின்றான்.

தன்னுடல் வளர்க்க மன்னுயிர் அழிக்கும்
 தாழ்வினை ஒழியவிட்டு என்றும்
இன்னுயிர்க் கிரங்கி இதம்புரிந் தருளின்
 ஈசன் இன் அருளெலாம் எய்திப்
பொன்னுயி ராகி மணியுயி ராகிப்
 புனிதபே ரின்பங்கள்பொருந்திப்
பின்னுயிர் என்றும்பிறவியை அடையாப்
 பேறுவந்துமைஅடைந்திடுமே. (இந்தியத்தாய்நிலை)

தான் உண்ணும் உணவில் ஊனம்படியாமல் உயிர்களைப் பேணி ஒழுகிவரின் அவன் உயர்ந்த புண்ணியநீரனாய் ஒளிபெற்று மகிழ்கின்றான். அருள் நீர்மை அதிசய மேன்மை ஆகிறது.

பிற உயிர்கள் பதைத்து மாளத் தம் வயிற்றை நிரப்பிவரும் வாழ்வில் நீசம் படிந்துள்ளமையால் ஈசன் அருளை இழந்து அவன்

இழிந்து போகின்ருன். போகவே இழிபிறவிகளில் அழுந்தி அழி துயரங்களையே யாண்டும் அவன் அடைய நேர்கின்ருன்.

"உண்டவிலங்கின் உயிர்களெல்லாம் உண்டவர்போல்
பண்டை வடிவம் படிந்துமே-கொண்டுதமைத்
தின்றவரைத் தின்றுவரும் தீவினையை எண்ணிஞல்
ஒன்றியவர் உண்பரோ ஊன்."

ஊன் அருந்துவோர்க்கு உளவாம் ஈனநிலைகளை இது உணர்த்தியுளது. அநியாய உணவால் அவலக் கேடுகள் நேர்கின்றன.

புலையை ஒழித்துத் தலைமையில் நிலைமின்!

என்றது நிலைமையை நினைந்து தெளியவந்தது. புலைப்புசிப்பு புலைப்படுத்தி மனிதனைக் கீழே தள்ளிவிடுகிறது; அந்த இழிவை எள்ளி விலகி மனிதன் உயர்ந்துகொள்ளவேண்டும். சிறந்த பிறப்பை இழிந்த ஊன்உணவு ஈனப்படுத்துகிறது; அதனைஒழிந்த போது உயர்வும் ஒளியும் இயல்பாய் உளவாகின்றன.

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்" (குறள், 260)

கொல்லாமையும் புலால் உண்ணுமையும் உடையானை எல்லா உயிர்களும் திசைநோக்கிக் கைகூப்பித் தொழும் என்னும் இவ்விழுமிய மொழி உரிமையோடு கருதியுணரவுரியது. புலாலை ஒழித்துவிடு! நீ புனிதனுயுயர்ந்து புத்தேளாய்ச் சிறந்து வாழுவாய். புலை ஒழிந்து நிலை தெளிந்து நீதியோடு வாழுக.

இவ் அதிகாரத்தின் தொகைக்குறிப்பு.

புலைப்புசிப்பு புலையன் எனச் செய்யும்.
கொலைபடிந்துள்ளமையால் புலை கொடியது.
ஈனஊனை மான மனிதன் தின்னலாகாது.
உயிர்களைக் கொன்றுதின்பது ஊனமாம்.
இரங்கி அருளாதவன் ஈனன் ஆகிருன்.
உறுதிநலம் இழந்து ஒழிந்துபோகிருன்.
கொடிய விலங்காய் முடிய நேர்கின்ருன்.
உணவு தீயதேல் உணர்வும் தீயதாம்.
இழிவும் கீழ்மையும் பழியூனல் படிகின்றன.
ஊனுணவு ஒழியின் உயர்நலம் விளையும்.

எ௰-வது புலை முற்றிற்று.

# எழுபத்தோராவது அதிகாரம்.

## கொலை.

அஃதாவது பிற பிராணிகளைக் கொல்லுகிற பொல்லாத தீமை. கொலை கொடிய பழி; நெடிய பாவம்; அதனை எவ்வழியும் ஒழித்து ஒழுக வேண்டும் என ஏதுக்களைத் தெளித்து உணர்த்துகின்றமையால்; புலையின்பின் இது வைக்கப்பட்டது.

701 கொலைஎன்னும் சொல்லே குலைதுடிக்கச் செய்யும்
நிலையைச் சிறிது நினையின்—கொலையின்
பழிதீமை எல்லாம் படுகோர மாகி
விழிநேர் விளங்கும் விரிந்து. (க)

இ—ள்.

கொலை என்னும் சொல்லைக் கேட்டபோதே உள்ளம் கலங்கித்துடிக்கிறது; அந்த நிலைமையைச் சிறிது நினைந்து நோக்கின் அதன் பழியும் தீமையும் எளிதே விளங்கித் தோன்றும் என்க.

கொலையின் நிலைமையை இது உணர்த்துகின்றது.

தீமைகளுள் கொலை மிகவும் கொடியது; யாரும் அஞ்சி வருந்துவது; என்றும் துயரங்களை விளைப்பது; அதனை நெஞ்சம் துணிந்து மனிதன் செய்வது நீசத்தனமாய் நின்றது.

கள்ளன், பொய்யன், வஞ்சகன், தூர்த்தன், குடியன், கோளன் என்னும் பழிமொழிகளினும் கொலைஞன் என்பது கொடுமையான பழியாம். கொலை கொடிய பாவம். ஆதலால் அதனைச் செய்தவன் கொலைபாதகன் என்று எள்ளி இகழப்படுகிறான். பிற உயிர்களைப் பதைக்க வதைத்தவன் தன் உயிர் என்றும் பதைத்துத் துடிக்கப் படுதுயரங்களையே அடைந்து செத்து அடுநரகங்களில் வீழ்கின்றான். செய்துவரும் செயல்களின்படியே யாவும் எய்த வருகின்றன. செயல் கொடுமையாகவே மனிதன் கொடியவன் ஆகின்றான்.

கொலைபுரிந்தவனைக் கொன்று தொலைக்க வேண்டும் என்னும் விதியால் அரசாங்கமும் அவனுக்கு மரணதண்டனையைக் கொடுத்துவருகிறது. இனிய மனிதத்தன்மையை அடியோடு இழந்து கொடிய நீசக்கொடுமையை மருவியபோதுதான் கொலைநிலைக்கு ஒருவன் ஆளாகின்றான்; ஆகவே அவன் பாழாகிறான்.

அருளிரக்கம் மனிதனைத் தெய்வமாக்கித் திவ்விய மகிமைகளை அருளுகின்றன. அத்தகைய புனித நீர்மையை இழந்து கொடிய வன்கண்மையில்பழகிவருவது நெடியதீமை ஆகின்றது. தான் பழகி வருகிற பழக்கமும், தன்னைச்சூழ்ந்துள்ள சூழலும் எவ்வாறு தோய்ந்து நிற்கின்றனவோ அவ்வாறே மனிதன் வாய்ந்து வருகிறான். அயலானசூழ்வு இயல்பானவாழ்வாகிறது.

இனிய நீர்மைகளோடு பழகிவரின் அந்த மனிதன் சீவகாருணிய சீலனாய்ச் சிறந்து திகழ்கின்றான். இரக்கம் முதலிய நல்ல தன்மைகளே மனிதனை நல்லவனாக்கி எவ்வழியும் மகிமைப்படுத்தியுள்ளன. தயை கனிய உயர்கதி கனிகிறது.

தீய இயல்புகள் தீயவன் ஆக்கிவிடுதலால் அவன் அறிவு பாழாய் அல்லல் அடைய நேர்கின்றான். களவு முதலிய தீமைகளை விழைபவன் பழி இழிவுகளுக்கே ஆளாய் அழிதுயரங்களை அடைந்து வழிவழியே இழிந்து வையம் வைய உழலுகின்றான்.

நெஞ்சம் அஞ்ச வருவன பஞ்சபாதகங்கள் ஆயின; அந்த ஐந்தனுள் கொலை முந்தி நின்றது. பாவங்களுள் தலைமை எய்தி நிற்றலால் கொலையின் நிலைமையையும் கொடுமையையும் நன்கு உணர்ந்துகொள்ளலாம். கொல்லல் கொடிய அல்லல் ஆகிறது.

கொலை கொடிய பாவம் என்றதனால் கொல்லாமை பெரிய புண்ணியம் என்பது பெறப்பட்டது. பாவம் புண்ணியம் என்பன உருவங்களில் நேரே காணமுடியாதன. அறிவால் உணர்ந்து கொள்ள உரியன. பிற உயிர்களுக்குத் துயராய் வருவது பாவம் என வந்தது; இதமாய் அமைந்தது புண்ணியமாய் நின்றது. புண்ணியம் இன்பம் தருகிறது; பாவம் துன்பமே புரிகிறது.

கொலையிலே கொடிய துயரங்கள் குவிந்திருக்கின்றன; கொல்லாமையில் அவை இல்லை ஆதலால் முன்னது பாவமாய்ப் பழிஅடைந்தது; பின்னது புண்ணியமாய்ப் புகழ் மிகுந்துள்ளது.

அறவினை யாதுஎனின் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும். (குறள், 321)

அறம் யாது? பாவம் எது? என அறிய விரும்புவார்க்கு இது நன்கு தெரிய உணர்த்தியுள்ளது. கொல்லுதல் பாவங்கள் எல்லாவற்றையும் ஒல்லையில் தரும்; கொல்லாமை எல்லா அறங்

களையும் இனிது அருளும் எனத்தேவர் இங்ஙனம் கூறியுள்ளார். பல பாவங்களும் ஒரு கொலையால் வரும் என்றதனுல் அதன் கொடிய புலைநிலையும் நெடிய துயரமும் நேரே புலனும்.

கொலைபுரிந்தவன் பாவியாயிழிந்து இம்மையில் படுதுயரங்களை அடைகின்ருன்; மறுமையில் அடுநரகங்களில் அழுந்தி அலமந்துழல்கின்ருன். கொல்லா விரதமுடையவன் எல்லா நலங்களையும் எளிதே எய்தி என்றும் இன்புற்றிருக்கின்ருன்.

கொல்லுதலால் அல்லல்கள் பல வரும் ஆதலால் யாண்டும் எவ்வுயிர்க்கும் யாதொரு இடரும் கருதாமல் ஒழுகுவதே நல்லதாம். கொல்லாமை ஒன்றைக் கடைப்பிடித்து ஒழுகின் அவன் எல்லா அறங்களையும் ஒருங்கே அடைந்து கொள்ளுகின்ருன்; கொள்ளவே மேலான உயர்ந்த கதிகளை விரைந்து எய்துகிருன்.

“யானை அடியில் அடங்கா அடியில்லை;
தானதுபோல் நிற்கின்ற தன்மைதான்---ஊனுயிரைக்
கொல்லா அறத்தின் கொழுநிழற்கே உள்அடங்கும்
எல்லா அறமும் இசைந்து” (இதிகாசம்)

யானையின் காலடியில் எல்லா அடிகளும் அடங்கி அமைதல் போல் கொல்லா விரதத்தில் எல்லா அறங்களும்அடங்கியுள்ளன; இத்தகைய உத்தம நிலையைத் தழுவி ஒழுகி விழுமியனுய் உயர்ந்து மனிதன் உய்யவேண்டும் என இது உணர்த்தியுளது.

கொலையாதி நெறியகன்ற ஞானம்தானே
கூறரிய மேலானஞானமாகும்;
கொலையாதி அகன்றுஒழுகும் தவங்கள்தாமே
குற்றமிலா நற்றவம் என்றுரைக்குநூலும்;
கொலையாதி அகற்றியநல் லறங்கள் தாமே
குவலயத்தில் ஒப்பரிய அறங்கள் ஆகும்;
கொலையாதி அகன்றுபெறும் செல்வம்தானே
கூறினுயிர்க்குஇதமானவாழ்வதாமே. (சிவஞானதீபம்)

கொல்லாமையால் இன்னவாறு எல்லா மேன்மைகளும் விளைந்து வருகின்றன. இந்தத் தரும நிலையை ஒருவிக் கொலையை மருவநேரின் கொடிய துயரங்கள் பெருகிவரும் ஆதலால் அதனை யாதும் அணுகாமல் யாண்டும் அருளோடு ஒழுகிவர வேண்டும்.

702 கொல்லல் பழிபாவம் கூட்டிக் கொடுமையாய்
அல்ல லுறுநரகம் ஆக்குமால்—கொல்லாமை
புண்ணியமாய் நின்று புகழின்பம் ஊட்டுமிதை
எண்ணி அருள்செய் திரு. (௨)

இ—ள்.

கொல்லுதலாகிய தீமை பழிபாவங்களை விளைத்துக்கொடிய அழிதுயரங்களில் ஆழ்த்தும்; கொல்லாமை புகழ் இன்பங்களை வளர்த்துப் புண்ணியமாய் நின்று கண்ணிய மகிமைகளை அருளும்; ஆதலால் அந்த அருள் நீர்மையை எவ்வழியும் செவ்வையாகப்பேணி வருக; வரின் பேரின்பம் பெருகி வரும் என்பதாம்.

மனிதனுடைய உள்ளம் அல்லலை அஞ்சுகிறது; நல்லதை நாடுகிறது. இந்த அனுபவ நிலை மனித சமுதாயம் முழுவதும் பரவியுளது. தன் உயிரைப்போலவே பிற உயிர்களையும்எண்ணி ஒழுகின் அந்த ஒழுக்கம் விழுமிய மேன்மையை அருளிவருகிறது. தகுதியான நீதி உணர்ச்சியே மனிதனை எவ்வழியும் உயர்த்தி உய்திபுரிகிறது. அறிவுநலம் மனிதனுக்குத் தனி உரிமையாய் அமைந்திருப்பினும் அது நல்ல நீர்மையோடு தோய்ந்துவரும் அளவே சீர்மையும் சிறப்பும் வாய்ந்து வருகின்றது. தோயா வழி அந்த அறிவு தாழ்மையாய் இழிந்து படுகின்றது.

மணிக்கு ஒளி உயர்வு தருதல்போல் அறிவுக்கு நீதி பெருமை தருகிறது. உயிர்க்கு ஒளியாய் அமைந்துள்ள அறிவு நீதி நிலையால் உயர்ந்துவருதலால் அதன் அதிசய மகிமையை அறிந்து கொள்ளலாம். ஒத்த உயிரினங்கள் உவகையுறும்படி இதமாய் ஒழுகிவரும் அளவே மனிதன் உத்தமனாய் உயர்ந்துவருகின்றான்.

பகுத்துண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை. (குறள், 322)

தலைமையான மனிதன் இந்நிலையில் இருப்பான் என இது உணர்த்தியுள்ளது. பசித்தவர்க்கு உணவு கொடுத்து எல்லா உயிர்களையும் இனிது பேணிவரின் அது அரிய பெரிய தருமம்ஆம் எனத் தேவர் இங்ஙனம் தெளிவாக அறிவுறுத்தி யுள்ளார்.

சிறந்த மனிதப்பிறவி வாய்ந்தவன் உணர்ந்து ஒழுக வேண்டிய கடமை இங்கே நினைந்து சிந்திக்கவந்தது. இந்தக் கடமையி

விருந்து வழுவிய அளவு மடமையாய் இழிவுறுகின்றான். பிற உயிர்களுக்கு நேர்ந்த துன்பங்களை நீக்கி இன்பங்களை ஆக்கி யாண்டும் இதமாய் நடந்துவருவதே உயர்ந்த மனிதனது இயல்பாம் என்க. இனிய பான்மையே அரிய மேன்மையாய் வருகிறது.

பொருளுடையான் என்று பெயர் பெறுவதினும் அருளுடையான் என்று பெயர்பெறின் அது அவனுக்கு எவ்வளவோ மகிமையாம். இனிய நீர்மையால் இன்பங்கள் பெருகிவருகின்றன; கொடிய தீமையால் துன்பங்களே தொடர்ந்து விளைகின்றன.

உயிர்களுக்கு எவ்வழியும் இதமே செய்துவர வுரியவன் அகிதங்கள் செய்ய நேரின் அவை அநியாயத் தீமைகள் ஆகின்றன; ஆகவே அவன் நரகதுன்பங்களை அனுபவிக்கநேர்கின்றான்.

கொடிய செயல்களுள் கொலை மிகவும் கொடியது. உயிர்களைப் பதைக்கச் செய்வதால் அது நெடிய நீசமாய் நின்றது. பிறஉயிர்களுக்குச் சிறிது தீங்கு நினைத்தாலும் அது பெரிய பாவமாம்; உள்ளத்தே எண்ணினும் இவ்வாறு பாவம் விளைந்து படு துயரங்களுக்கு ஏதுவாகின்றதே! கொலைசெய்ய நேர்ந்தால் அதன் விளைவு என்னாம்? என்பதை ஓர்ந்து உணரவேண்டும்.

கொலைகாரன், பழிகாரன், பாவி என்பன எவ்வளவு இழிவான ஈனங்கள்! நீசமான இந்த ஈன நிலைகளை மான மனிதன் யாதும் மருவலாகாது. மருவின் ஈசன் அருள் ஒருவி விடும்.

கொலையால் பழிமுதலிய இழிவுகளும் அழி துயரங்களும் விளைகின்றன. விளையவே உயிர் அதோகதியில் விழுகிறது.

கொல்லாமையால் எல்லா நன்மைகளும் வருகின்றன.

உயிர்களுக்கு இடர்புரியாமல் இருப்பதே கொல்லாமையாய் வருதலால் அது எல்லா இன்பங்களையும் இனிது அருளுகின்றன.

"கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்கும்?"

என்று தாயுமானவர் இவ்வாறு உள்ளம்வியந்து உவந்து கூறியுள்ளார். அரிய தவசீலமுடையவர் அருள் நீர்மையை மனித சமுதாயம் மருவி உய்ய வேண்டும் என்று பெரிதும் உருகியிருக்கிறார். அவ் வுருக்கம் உரைகளாய் வந்துள்ளது.

கொல்லா விரதம்ஒன்று கொண்டவரேநல்லோர்; மற்று
அல்லாதார் யாரோ அறியேன் பராபரமே!" (தாயுமானவர்)

பரம்பொருளைநோக்கி உள்ளம் கரைந்து இவ்வாறு உரையாடியிருக்கிறார். இந்தச் சொல்லாடலில் அவரது அருள் நீர்மை ஒளிவீசியுள்ளது. பொருள் நிறைந்த சொல் போதம் சுரந்தது.

கொல்லாவிரதம் கொண்டவரே நல்லவர் என்றதனால் அல்லாதார் தீயவர் என்று சொல்லவேண்டும்; அவ்வாறு சொல்லவில்லை. யாரோ அறியேன் என்று அதிவிநயமாய் ஒதுங்கியிருக்கிறார். தீயோர் என்று நேரே கூறினால்கொல்லாவிரதம் கொள்ளாதவரது உள்ளம் வருந்தும்; அவ்வாறு பிறர் மனம் வருந்தப் பேசுவதும் பிழையாம் என்னும் விழுமிய நீர்மை அவர் மொழியால் ஈண்டு வெளியாயுள்ளது. கொல்லாமையைப் போதிக்க வந்தவர் தம் சொல்லாலும் அவ் விரதத்தைப் பேணி ஒழுகிவருவது காண வந்தது. இந்தப் போதனை நிலைமையைப் போதகர் பூண வேண்டும்.

கொல்லாவிரதம் கொள்ளாதவரது நிலைமையை வாயால் சொல்லவும் கூசியுள்ளபடியை இங்கே கூர்ந்து ஓர்ந்துகொள்ளுகிறோம். மேலோர் மொழிகள் மெய் ஒளிகளாய் மிளிர்கின்றன.

சீவகருணை தோய்ந்திருக்கிற அருளாளர் வாய்மொழி பொருள் பொதிந்து போதம் சுரந்து நீதிநெறிகளை நேரே வெளிசெய்துளது. உலகத்துக்குப் போதிக்க வருகிறவர் அப்போதனையின் படி தம் உள்ளமும் சாதனையடைந்திருக்க வேண்டும்; அவ்வாறு அமைந்திருப்பின் அப்போதனை அதிசய ஆற்றலுடையதாய் எவராலும் துதிசெய்யப்பெறும். இவ்வுண்மை ஈண்டு உணர வந்தது.

“கொல்லா விரதம் குவலயம்எல் லாம்ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவது என்இச்சை பராபரமே!”

உலக இச்சைகளை எல்லாம் அறவே ஒழித்துவிட்டுத் துறவியாய் யோக சமாதியில் ஒதுங்கியிருந்த தாயுமானவரது உள்ளத்தில் ஒட்டியுள்ள இச்சையை இதில் உய்த்துணர்ந்து கொள்ளுகிறோம். கொல்லாவிரதம் எல்லாஉயிர்களையும் ஒல்லையில் ஈடேற்றியருளும் ஆதலால் அதனைக் கைக்கொண்டு மனித சமுதாயம் உய்ய வேண்டும் என்று இங்ஙனம் உருகி வேண்டி யிருக்கிறார்.

பிற உயிர்களுக்கு இதங்களே கருதி எவ்வழியும் அருள் புரிந்து வருக; அதனால் அரிய பல மகிமைகள் பெருகிவரும்.

703 கொல்லாமை என்னும் குணமுடையார் பாலெளிதா
எல்லா உயர்வும் இனிதெய் தும்—நல்லார்
அவரே அரிய அறநலங்கள் கொண்டார்
எவரே அவரோ டெதிர். (௩)

இ—ள்.

கொல்லாமை ஆகிய நல்ல அருளுடையாரிடம் எல்லாமேன் மைகளும் எளிதே வந்து அடையும்; அவரே இவ்வுலகில் மிகவும் நல்லவர்; அரிய புண்ணிய நலங்களை யுடையவர்; பெரிய புனித சீலர்; அவருக்கு நிகராக யாரும் யாண்டும் இலர் என்க.

தருமம் மனிதனை உயர்த்திவருகிறது; அதனை இழந்துள்ள அளவு அவன் இழிந்துபோகின்றான். தன் உயிர் பொன்உயிராய் உயர்ந்து பேரின்ப நலங்களை அடையவேண்டின் அவன் எவ் வுயிர்க்கும் யாதொரு தீங்கும் எண்ணலாகாது. தீமை நீங்கிவரச் சேமம் ஓங்கி வருதலால் அதன் பாங்கும் பயனும் அறியலாகும்.

ஈ எறும்பு முதலிய சிறிய பிராணிகளுக்கும் சிறிதும் இடர் நேராமல் ஒரு மனிதன் கருதிஒழுகிவரின் அவன் பெரிய மகிமை களை அடைய நேர்கின்றான். ஒருவனுடைய உயர்வெல்லாம் அவனுடைய இனிய பண்பாடுகளில் மருவியுள்ளன. உண்ணும் உணவும், உடுக்கும் உடையும், படுக்கும்பாடும், நடக்கும் நடை யும் புனிதமாய் இனிமை தோய்ந்துவரின் அவன் புண்ணிய வானாய்க் கண்ணியம் தோய்ந்து கதிநலங்களை அடைகிறான். மன் னுயிர் இதம்பெற நடந்து வருபவன் தன்னுயிர் பதம்பெறப் படர்ந்து வருகிறான். சீரிய அருள் பேரின்ப நிலையமாகிறது.

"ஓரறி வுயிர்களும் ஊறு உறுமலே
சீரமை அருள்நலம் செய்து வாழ்பவன்
பேரறி வுடையவன் பெரிய நீதிமான்
பாரடை பிறவிகள் பலவும் நீங்கினன்"

பிறவுயிர்கள் துயர் உறுவகை ஒழுகிவருபவனது விழுமிய நிலைமையை இது விளக்கியுள்ளது .ஒருவன் பிறவித்துயரம்நீங்கிப் பேரின்பம் பெறவேண்டுமாயின் அவன் யாண்டும் யாருக்கும் யாதொரு இடரும் செய்யலாகாது. சிறந்த அறிவுக்குப்பயன் இழிந்த புன்மைகளை நீக்கி உயர்ந்த நன்மைகளைச் செய்து வருவதேயாம். இனிய செயல் அரிய மகிமைகளை அருளுகிறது.

சீவப்பிராணிகளுள் மனிதன் மிகவும்பெரியவன்; அரிய அறிவு நலங்கள் அமையப்பெற்றவன். இன்னவாறு தான் உயர்ந்த நிலையை அடைந்திருப்பது தாழ்ந்தவருக்கு உதவிசெய்யவேயாம். தனது அறிவையும் உயர்வையும் நல்லவழியில் பயன்படுத்தி நலம்புரிந்து வரின் அல்லல் எல்லாம் நீங்கி அதிசய இன்ப நிலைகளை அவன் அடைய நேர்கின்முன். நியமமான இந்த நெறியிலிருந்துவழுவிப் பிழைகள் செய்ய நேரின் பெருந்துயரங்களில் இழிந்து வீழ்கின்முன். உரிய நிலை நழுவிய பொழுது கொடிய பழி தழுவுகிறது.

கல்வி செல்வம் அறிவு வலிமை முதலிய உறுதி நலங்களைப் பெற்றவன் அவற்றைப்பெருமல் மறுகிப்பிழைபட்டுள்ளவர்க்கு உதவிசெய்ய வேண்டும்; அவ்வாறு செய்யின் ஆண்டவன் அவனை அதிசய மேன்மையில் உயர்த்தி யருளுகின்முன்.

உதவி உயர்வான கதிகளை அருளுகின்றது.
உதவாமை இழிவான துயர்களைத் தருகிறது.

நீ வலியனுய் உயர்ந்தது எளியவர்களுக்கு இதம்புரியவே; இந்த உரிமையான உண்மையை நீ உறுதியாக உணர்ந்து கொண்டு யாண்டும் கடமையைக் கருதிச் செய்ய வேண்டும்.

"The strong man's duty is to defend the weak, never to tyrannise over him" [Ideal]

"வலிய மனிதனுடைய கடமை எளியவரைப் பாதுகாப்பதே; ஒருபோதும் அவருக்குக் கொடுமை செய்யலாகாது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈண்டு ஊன்றி உணரவுரியது.

இடர் வகைகளுள் கொலை கொடியது ஆதலால் அதுநெடிய துயரங்களுக்கெல்லாம் நிலைக்களமாய் நின்றது. அந்நிலையில் நின்று நோக்கின் கொல்லாமையின் தலைமையை நன்கு தெரிந்து கொள்ளலாம். எந்த உயிர்களுக்கும் இடர் இழையாமையே கொல்லாமை ஆதலால் அதனை விரதமாகவுடையவர் எல்லா நன்மைகளுக்கும் இடமாய் நின்றனர். அந்நிலைமை தெரிவது தலைமை தருவதாம்.

தன் உயிரைப்போலவே பிற உயிர்களையும் எண்ணி இரங்கி இதம்புரிந்து வருவது புண்ணிய நீர்மையாய்ப் பொலிந்து திகழ்கிறது; ஆகவே அந்த அருளாளர் புண்ணியவான்களாய் உயர்ந்து பொன்னுலக வாசிகளாலும் போற்றப்பெறுகின்றார்.

தம்உயிர்போல் எவ் உயிரும் தான்என்று தண்ணருள்கூர்
செம்மையருக்கு ஏவல்என்று செய்வேன் பராபரமே!"

எல்லா உயிர்களையும் தம் உயிர்போல் எண்ணி ஒழுகும் புண்ணிய சீலருக்கு நான் ஏவல் புரியும்படியான பாக்கியம் எனக்கு என்று கிடைக்கும்? தெய்வமே! என்று தாயுமானவர் இவ்வாறு ஏங்கி மொழிந்திருக்கிறார்.

சீவர்களுக்கு இரங்கி அருள்புரிந்து வருபவர் எவ்வளவு தெய்வீக நிலையை அடைந்துகொள்ளுகிறார்! என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்து உறுதிநலனைத் தேர்ந்து கொள்ளுகிறோம்.

கொல்லா விரதம் எல்லா மகிமைகளையும் அருளுகின்றது. ஆதலால் தேவர் முதல் யாவரும் அவரை உவந்து புகழ்ந்து வருகின்றார். உயர்ந்த கதியை அவர் அடைந்து கொள்கின்றார்.

"கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள்மேல்
செல்லாது உயிர்உண்ணும் கூற்று." (குறள், 326)

எல்லா உயிர்களையும் கொன்று தொலைக்கின்ற எமனும் கொல்லா விரதியரை அணுகான்; அவர்பால் நல்லவனாகவே நடந்துகொள்ளுவான் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். இவ்வுணர்வுரை நுணுகி உணர வுரியது.

பிற உயிர்களுக்கு இடர்புரியாமல் அருள்புரிந்து ஒழுகி வருபவனுக்கு எமபயம் கிடையாது; மரண வேதனை நேராது; எவ்வழியும் மகிமைகளே நேரும்; பிறவி நீங்கிப் பேரின்பமே அவன் பெறுவான் என்னும் உண்மைகள் ஈண்டு உணர வந்தன.

அவரோடு எவரே எதிர்?

என்றது கொல்லா விரதமுடைய அவர் எல்லாரினும் மேலானவர்; அவருக்கு நிகர் எவரும் இலர்; அரிய தரும சீலர் எவரினும்அவர் பெரியர்; பேரின்ப நிலையினர்என்பது தெரியநின்றது.

சீவர்களுக்கு அருள்புரிந்து திவ்விய மகிமைகளை எய்துக.

---

704 கொல்லாமை என்பதுயிர் கோறலறல் மட்டுமன்று
சொல்லாலும் ஓர்துயரம் சூழாமல்—எல்லா
உயிர்களுநல் இன்பம் உறஒழுக லேகாண்
செயிரறுநற் சீலம் தெளி. (௪)

இ—ள்

எந்த உயிரையும் கொல்லாமல்இருப்பதால் மாத்திரம் கொல்லாமை என்னும் நல்லசீலம்அமையாது; சொல்லாலும்யாதொரு துயரும் நேராமல் ஒழுகும் புனித நிலையிலேதான் இனிது அமையும்.

ஓர் உயிரை அது வாழுகின்ற உடம்பிலிருந்து வேறு பிரித்து விடுவதே கொலை என்று கூறப்படுகிறது. உயிரை நீக்குங்கால் உடல் சிதைக்கப்படுகிறது; உயிர் பதைத்துத் துடிக்கிறது. இவ்வாறு கொடிய மரண வேதனைகள் மருவியிருத்தலால் கொலை செய்கின்றவன் நீசப் பாவி என்று ஏசப்படுகின்றான்.

மனிதக் கொலை பகை கோபம் முதலிய காரணங்களால் நிகழுகின்றது. தான் செய்த கொலையை ஒருவன் எவ்வளவு மறைத்தாலும் அது வெளிப்பட்டு விடுகின்றது. தீய பாவம் ஆதலால் தெய்வம் அதை வையம் அறியச் செய்து விடுகிறது. இயற்கை நியமம் அதிசய விசித்திரமா வியப்பை விளைத்துள்ளது.

" For murder, though it have no tongue will speak
With most miraculous organ " [Hamlet 2-2.]

" கொலைக்கு வாய் இல்லை ஆயினும் தன்னை அது அற்புதமாய் வெளிப்படுத்தும் " என்னும் இது இங்கே அறிய வுரியது.

" Murder will speak out of stone walls " [Emerson]

" கல் கோட்டையால் மறைத்து வைத்தாலும் செய்த கொலை தானாகவே உண்மையை உலகம் அறிய நன்கு சொல்லி விடும்'' என எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார்.

ஒத்த மனிதனைக் கொல்வது கொடிய கொலைக்குற்றம் ஆதலால் அங்ஙனம் கொன்றவன் சமுதாய நீதியால் கொல்லப் படுகிறான். சிரச்சேதம், தூக்கு முதலிய அரச தண்டனைகள் கொலையாளிகளுக்காக அமைந்துள்ளன. கொடுந் தீமைகளைச் செய்தவர் கடுந்துயரங்களை அடைய நேர்கின்றனர். அரசும் தெய்வமும் மனித சமுதாயத்தின் பாதுகாப்புகளாய் மருவியுள்ளன. செய்த பிழைகள் சித்திரவதைகளைச் செய்துவருகின்றன. இவ் வுண்மைகளை ஈண்டு உய்த்துணர வேண்டும்.

இத்தகைய தண்டனைகளை நேரே இங்கு அடையாமல் வேறே தெய்வ தண்டனைகளுக்குள்ளான கொலைகளை மனிதர் புலையாச் செய்து வருகின்றனர். புலால் உண்ணும் ஆசையால் கொலைகள் பல நேர்ந்துள்ளன. பறவைகளையும் மிருகங்களையும் பிடித்து வதைத்து அவற்றின் உடல்களைச் சமைத்து உண்டு வருபவர் கொலைப் பாவங்களைக் கொடுமையாச் செய்து வருகின்றனர். எளிய பிராணிகளை வதைத்து வருகிற இந்தப் பாவத்

தால் மறுமையில் அவர் கொடிய துயரங்களை அடைந்து வருந்துகின்றனர். அந்த நரக வேதனைகள் உயிரை நடுங்கச் செய்கின்றன. கொலையால் விளைவன தொலையாத துயரங்களாயின.

சிலையினால் மாக்கள் கொன்று செழுங்கடல் வேட்டம் ஆடி
வலையினால் மீன்கள் வாரி வாழுயிர்க் கூற்றம் ஆன
கொலைநரைக் கும்பி தன்னுள் கொழுந்தழல் அழுத்தி யிட்டு
நலிகுவர் நாளும் நாளும் நரகரை நாம வேலோய்! (1)
வெந்துருக் குற்ற செம்பின் விதவையுள் அழுத்தி யிட்டும்
எந்திர ஊசல் ஏற்றி எரியுண மடுத்தும் செக்கில்
சுந்தெழுந் தரைத்தும் போகச் சுண்ணமா நுணுக்கி யிட்டும்
மந்தரத் தனைய துன்பம் வைகலும் உழப்ப மாதோ! (2)
(சீவகசிந்தாமணி)

ஊன் உண்ணவிரும்பி மீன் மான் கோழி முதலிய பிராணிகளைக் கொன்றவர் மறுமையில் கொடிய துன்பங்களை அடைந்து வருந்தி அலமந்து உழல்வர் என இவை உணர்த்தியுள்ளன. புலையை விரும்பிக் கொலை புரிபவர் இவ்வாறு தொலையாத துயரங்களில் அழுந்தி அழிவதை உணர்ந்து சிந்தியாமையால் ஊனமான கொலைகளை ஈனமாகச் செய்து மக்கள் இழிந்து கழிகின்றனர். செய்த தீவினைகள் சேர்ந்து கொல்லுகின்றன.

பிற உயிர்களை வருந்தச் செய்பவர் தம் உயிரை அநியாயமாய் அவலப்படுத்தி அழித்து வருகின்றனர். அழிவு நிலை தெரியாமல் விழி மூடி இருப்பது பழி மூடமாயுள்ளது.

உயிர்களைக் கொல்லுவது மாத்திரம் கொலை அன்று; பிறர் உள்ளம் துடிக்கக் கொடிய சொல்லுகளைச் சொல்லினும் கொலையாம். துயரமான பழிச்சொல் கொலையினும் கொடியது.

இயல்பாகப் புலால் உண்ணாதவரும் கொடிய கொலை பாதகமான சூழ்ச்சிகளையும் பேச்சுகளையும் சூழ்ந்து பேசி வருகின்றனர். கோழி ஆடுகளை இவர் கொல்லாதிருப்பினும் மனித உள்ளங்களையும் புனித உயிர்களையும் கொன்று வருதலால் இப் புல்லர் பொல்லாத கொடிய கொலையாளிகளே ஆகின்றனர்.

நாங்கள் புலால் உண்ணேம்; உயர்ந்த சாதியார் என்று அவர் உள்ளம் செருக்கி நிற்கின்றார். ஊனை அருந்தாமையால் மாத்திரம் உயர்வு வந்து விடாது; யாருக்கும் இடர் புரியாமல் இனிய நீர்மையோடு ஒழுகி வரும் அளவே பெருமை தழுவி

வரும். சிறிது மருவிய பரம்பரை வழக்கத்தைப் பெரிதுபடுத்திப் பேசி உயர்வு காண முயல்வது இழிவான மடமையாம்.

"ஊன் அருந்தோம் எம்போல் உயர்நிலையார் இல்லைஎன்று
வான் அகந்தை கொண்டு வழிகின்றீர்---ஊனை
வழுக்கியுமே தீண்டாத வன்கழுதைக்கு என்சீர்?
ஒழுக்கினுல் ஆங்காண் உயர்வு."

கழுதை பரம்பரையாக என்றும் ஊன் தின்னுது; அதனுல் அதற்குப் பெருமையா? இனிய குண நீர்மைகள் நிறைந்து எவ் வழியும் செவ்வியராய் ஒழுகிவரும் நல்ல ஒழுக்கத்தாலேயே உயர்வு உண்டாம்; இவ்வுண்மையை ஊன்றி உணர்ந்துகொள்ள வேண்டும். இதமான நீர்மைகள் உயர்வாய் ஒளி புரிகின்றன.

பழகிய பழக்கத்தால் ஊனை உண்டு வருபவர் பலர் அதனை உண்ணுதவரினும் உயர்ந்த குணநலங்கள் அமைந்து யாண்டும் இதம்புரிந்து சிறந்த மேன்மையாளராய் விளங்கியுள்ளனர்.

ஊன் உண்ணேம் என்று உயர்வு காட்டிப் பிலுக்கியுள்ள வர் பலர் ஈனத் தீமைகளைத் துணிந்து செய்து ஈனர்களாகவே கழிந்து பழியும் பாவமும் படிந்து பாழாய் ஒழிந்துபோகின்றனர். ஆகவே ஊன் புசியாமையால் மாத்திரம் உயர்வு அமையாது.

"The cow does not eat meat, nor does the sheep. Are they great non-injures.?"

"மாடுகள் மாமிசம் புசியா; ஆடுகள் அதைத் தின்னு; அதனுல் அவை சீவகாருணியமுடையனவா?" என்று விவேகா னந்தர் இவ்வாறு அதிவிநயமாய் மதிதெளிய வினவியிருக்கிருர்.

இயற்கையாகப் புலர்ல் உண்ணுமை ஒன்றைக்கொண்டு எவனும் பெருமை பேசலாகாது. அவ்வாறு பேசுவது அறிவீன மான அவலமாம். புலால் புசியாத சைவர் என்று தம்மைப் பெருமையாகப் பிதற்றித் திரிபவர் வஞ்சனை சூதுகளை நெஞ்சம் துணிந்து செய்து மனிதர்களிடையே கொடிய கொலை பாதகங் களை விளைவித்து வருகின்றனர் என அவர் வெறுத்திருக்கிருர்.

"The man who will mercilessly cheat widows and orphans, and do the vilest deeds for money, is worse than any brute, even if he lives entirely on grass." [Vivekananda]

"விதவைகளையும் அனாதையான ஏழைகளையும் வஞ்சித்துப் பணத்துக்காகக் கொடிய தீமைகளைச் செய்கிறவன் ஊன் உண்ணுதவனாயினும் தீய காட்டுமிருகத்தினும் அவன் கொடிய தீயனே" என்னும் இது இங்கே கூர்ந்து ஓர்ந்துகொள்ளவுரியது.

புலால் புசியாமை ஒன்றைக்கொண்டே குலநலம் கொண்டாடுவது பிழை; சீவகருணை தோய்ந்து யாவருக்கும் இதமாய் எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டு எவ்வழியும் செவ்வியனாய் ஒழுகும் ஒழுக்கத்தாலேயேமனிதனுக்கு விழுப்பங்கள்உளவாம்.

"இகழ்தலின் கோறல் இனிதே" (நாலடி, 219)
என்றதனால் கொடுஞ்சொல்லின் கொலைத்தீமை நன்கு புலனாம்.

தன் வாயிலிருந்து வெளிவரும் சொல் எவ்வழியும் பயனுடையதாய்ச் செவ்விய இனிமை தோய்ந்து வரவேண்டும். பிறர் உள்ளம் நோகும்படி பேசின் அதுவும் ஒரு வகையில் கொலையாம். பழிமொழிகளால் உயிர் அழிதுயர்களை அடையும் ஆதலால் பொல்லாத சொல்லை யாண்டும் சொல்லலாகாது.

"கொல்லாமல் சொல்லாலே கொல்லும் கொடியரே
பொல்லாக் கொலைஞர் புலை."

இந்நிலையை உணர்ந்து நெஞ்சம் தெளிந்து யாண்டும் எவரிடமும் இனிய நீர்மையோடு பேசி அரிய சீர்மைகளைப்பெறுக.

---

705 இன்பம் உறவிழைந்து எல்லா உயிர்களுமே
புன்பாடு நீடிப் புரிகின்ற—துன்பம்நீ
எத்துணையும் எவ்வுயிர்க்கும் என்றுமே செய்யற்க
ஒத்துதவி செய்க வுணர்ந்து. (௫)

இ-ள்.

தாம் நல்ல இன்பங்களை அடையவேண்டும் என்றே எல்லா உயிர்களும் ஆவலோடு யாண்டும் முயன்று வருகின்றன; அத்தகைய நிலையிலுள்ள சீவர்களிடம் யாதொரு துன்பமும் எத்துணையும் செய்யலாகாது; எவ்வழியும் ஒத்து உதவிசெய்வதே உத்தமம்; அவ்வாறே என்றும் செய்துவருக என்பதாம்.

சீவர்களுடைய வாழ்வுகளில் அவலக் கவலைகளே தொடர்ந்திருக்கின்றன. பசித்துயர் முதலியன இயல்பாகவே பற்றியிருத்தலால் அவற்றை நீக்கி வாழவேண்டிய பொறுப்பு நீண்டு நின்

றது. அதனால் உழைப்புகள் நேர்ந்தன. உழைப்பும் பிழைப்பும் காரண காரிய உரிமையில் தொடர்ந்திருக்கின்றன. துன்பச் சூழல்களைக் களைந்து நாளும் இன்பம் காண முயன்று வருவது வாழ்க்கைப் போராட்டமாய் வளர்ந்திருக்கிறது. உடலைப்பேண ஓடி உழைப்பதில் உயிருக்கு உரிய உறுதிநலங்களை மனிதன் மறந்துவிடுகிறான். குடும்ப இடும்பைகள் எவ்வழியும் நெடும்ப டர்களாய் விரிந்து யாண்டும் நெடிது நீண்டு நிற்கின்றன.

பொருளுடையவன் மேலும் பொருளை நாடி உழல்கின்றான். செல்வம் இருந்தும் பிள்ளைப்பேறு இல்லையே! என்று சிலர் உள் ளம் கவல்கின்றார். அறியாமை மண்டிப் பொறிவெறி கொண்டு யாண்டும் சீவர்கள் வறியராயுழந்து சிறியரா யிழிந்து படுகின்ற னர். உடல் நோயும் பசிநோயும் காமநோயும் கடல் அலைகள் போல் ஓயாமல் அடல்புரிந்து அடர்ந்து வருகின்றன.

''அன்ன விசாரம் அதுவே விசாரம்; அது ஒழிந்தால்
சொன்ன விசாரம் தொலையா விசாரம்; நல்தோகையரைப்
பன்ன விசாரம் பலகால் விசாரம்; இப்பாவி நெஞ்சுக்கு
என்ன விசாரம் வைத்தாய் இறைவா! கச்சி ஏகம்பனே.''

மனித வாழ்வின் நிலைமையைப் பட்டினத்தார் இப்படிப் பரிந்து காட்டியிருக்கிறார். இன்னவாறு இன்னல் இடர்களோடு மன்னியுழல்கின்ற சீவர்களுக்கு இரங்கி இதம்புரிவதே யாவ ருக்கும் உரிய கடமையாம். பரிவு தோய்ந்துவரும் அளவே அறிவு தோய்ந்ததாம். பிறவுயிர்கட்கு இரங்குவது பேரறமாகிறது.

இரக்கம் இதம் உதவி உபகாரம் என்னும் உரைகள் உயி ரினங்களின் நிலைமைகளை விளக்கி உயர்ந்தாருடைய தலைமை களைத் துலக்கியுள்ளன. பரிதாப நிலைகளில் பரிந்து வருந்தி இழிந்து திரிகின்ற பிராணிகள்பால் இரங்கியருளவே உயர்ந்த பிறப்பை மனிதன் அடைந்திருக்கிறான். உபகாரம் செய்து வரும் அளவு பயனுடைய பிறவியாய் அவன் உயர்நிலையை அடைகிறான். உயிர் ஊதியமான அந்த உதவி நலனை இழந்த போது பிறந்து வந்த பிறப்பு பிழையாய் இழிந்து போகின்றது.

சீவர்களுக்கு நேர்ந்த இடர்களை நீக்கி இதம்புரிந்துவரும் இயல்பு எந்த மனிதனிடம் இனிது அமைந்திருக்கிறதோ அவன்

தெய்வீக நிலையில் உயர்ந்து திவ்விய மகிமைகளை அடைந்து கொள்ளுகிருன். சீவ இதம் தேவ பதம் தருகிறது.

உபகார நீர்மை உன்னத மேன்மையாளரது பான்மையாய் அமைந்து புகழ் புண்ணியங்களின் தெளிவாய் விழுமிய ஒளிவீசியுளது. அதனுல் அரிய பல மகிமைகள் விளைகின்றன.

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதாது உலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று. (நன்னெறி, 10)

தன்னலம்கருதாமல் பிறர்க்கு உதவிபுரிவோரே பெரியோர்; அவர் விழுமியோராய் உன்னதநிலையில் உயர்ந்து சந்திரன்போல் ஒளிவீசியுள்ளார் என இது உணர்த்தியுள்ளது. திங்கள்நிலையை எடுத்துக்காட்டிப் பெரியோர் இயல்பைக் குறித்திருப்பது இங்கே கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணரத்தக்கது.

கற்றவர் கடவுள்தானம் சேர்ந்தவர் களைகண் இல்லார்
அற்றவர் அந்தணாளர் அன்றியும் அனைய நீரார்க்கு
உற்றதோர் இடுக்கண் வந்தால் உதவுதற்கு உரித்தன்றாயின்
பெற்றதன் உடம்பு தன்னுல் பெறுபயன் இல்லை மன்னே. (சூளாமணி)

பெற்ற பிறவிக்குப் பயன் பிறர்க்கு உதவிபுரிவதே என இது உரைத்துளது. இன்னவாறு உதவிபுரியவே உரிமையுடன் மனித உருவில் வந்தவர் அவ்வுதவியைச் செய்யாமையோடு ஒழியாமல் வேறே இன்னலும் செய்ய நேர்ந்தால் அது எவ்வளவு மடமை! எத்துணைக்கொடுமை! உய்த்துணரவேண்டும்.

உதவிசெய்பவர் பிறவிப் பயனைப் பெற்ற பெரியவர் ஆகின்ருர். உதவாதவர் இருந்தும் இறந்தவராய் இழிந்துபடுகின்ருர். இடர் செய்பவர் கொடிய நரகராய் அடுதுயர்க்கே ஆளாகின்ருர். செயல் இனியதாயின் சீவன் புனிதமாய் உயர்கின்றது.

உபகாரம் உய்தி தருகின்றது; அபகாரம் அதோ கதியில் ஆழ்த்துகின்றது. சொல்லும் செயலும் பயன்பட்டு வருநிலையிலேயே மனிதன் நயனுடையனுய் வியன்பெற்று நிற்கின்ருன். மேலோர் பெரியோர் என்னும் பேர்கள் மனித சமுதாயத்தில் மகிமை மிகுந்துள்ளன. இனிய இயல்புகள் அரிய உயர்வுகளை அருளி வருகின்றன. இன்னதைன இழிதுயர்களே தருகின்றன.

சொல்லான் அறிப ஒருவனை; மெல்என்ற
நீரான் அறிப மடுவினை; யார்கண்ணும்
ஒப்புரவி னான்அறிப சான்றாண்மை; மெய்க்கண்
மகிழான் அறிப நறா. (நான்மணிக்கடிகை, 78)

மனிதர் நிலைகளை அளந்து அறிதற்குச் சில கருவிகளை இது வரைந்து காட்டியுளது. ஒருவன் சான்றோன் என்பதை அவனது உபகார நீர்மையால் உணர்ந்துகொள்ளலாம் என விளம்பி நாகனார் இங்ஙனம் தெளிவாக நன்கு விளம்பியிருக்கிறார்.

யாருக்கும் யாண்டும் அகிதம் செய்யாதே; எவ்வழியும் இதமாய் உதவியே செய்; அதனால்அரிய மேன்மைகளும் பெரிய நன்மைகளும் இனிய இன்பங்களும் உனக்கு உளவாம்.

---

706 உள்ளம் பதற உயிர்துடிக்க வெவ்வுதிர
வெள்ளம் பெருக விளித்தல்தான்—எள்ளலுறும்
வன்கொலைஎன் றெண்ணல் வசைபிறர்நோர் வைதாலும்
புன்கொலை யாகும் புலை. (௬)

இ—ள்.

பிராணிகள் உள்ளம்பதறி உயிர்துடித்து அலற இரத்தவெள்ளம் சிந்தும்படி கொல்லுதல்தான் கொலை என்று எண்ணாதே; பிறர் அல்லலுறும்படி அவலமாக் கடிது சொல்லினும் அதுவும் கொடிய கொலையாம் என்க.

கொலை என்னும் சொல் தலைமையாக உயிர் வதையைக் குறித்து வருகிறது. உயிர்களின் துயரங்களை நோக்கியே பாவம், பழி என்னும் பயங்கர நாமங்கள் வந்துள்ளன. எங்கே இமிசை தோன்றுகிறதோ அங்கே பாவம் தோன்றுகிறது. பாவம் என்பது பவநோயைத் தருவது என்னும் ஏதுவான் வந்தது.

சொல்லாலும் செயலாலும் எண்ணத்தாலும் இடர்கள் விளைகின்றன. இந்த மூன்றையும் நல்ல வழிகளில் செலுத்தினால் நன்மைகள் பல உளவாகின்றன. அந்த மனிதன் நல்ல தருமவான் ஆகின்றான். தீயவழிகளில் செலுத்தினால் தீங்குகள் விளைகின்றன; விளையவே அவன் தீயவனாயிழிகின்றான். மனம் மொழி

மெய்களைப் பழுதுபடுத்தாமல் வாழ்பவனே நல்ல பாக்கியவான்; அல்லாதவன் பொல்லாதவனாய்ப் புலையுறுகின்றான்.

"சொல்லால் வரும்குற்றம், சிந்தனையால்வரும் தோடம், செய்த
பொல்லாத தீவினைப் பார்வையிற் பாவங்கள், புண்ணிய நூல்
அல்லாத கேள்வியைக் கேட்டிடும் தீங்குகள், ஆயவும், மற்றும்
எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே!"
(பட்டினத்தார்)

அல்லலான பிழைகள் சொல் முதலியவற்றால் விளையும் என இதனால் அறிந்துகொள்ளுகிறோம். எந்த வகையிலும் யாதொரு பிழையும் நேராமல் தன்னைப் பாதுகாத்து ஒழுகி வருகிற நீதிமானே தீது நீங்கிய திவ்விய புருடன் ஆகின்றான்.

ஒரு பிராணியைப் பிடித்து மனிதன் கொல்லும்பொழுது அதன் உள்ளம் பதறுகிறது; உயிர் துடிக்கிறது; வெருவி அலறுகிறது; உதிரம் வழிகிறது; அந்த அல்லல் நிலைகளை விழி எதிரே கண்டும் உள்ளம் இரங்காமல் மனிதன் கொல்லுவது அவனது கொடுமையையும் மடமையையும் தீய பழக்கத்தையும் விளக்கி நிற்கிறது. மானச மருமங்கள் இதில் மருவியுள்ளன.

ஊனை உண்டுவருகிற ஈனப்பழக்கத்தால் பிறவுயிர்கள் படும் துயரங்களை உணர முடியாமல் குருடுபட்டுக் கொடுமைகளைச் செய்ய நேர்கின்றான். தனது சுகத்தையும் நலத்தையுமே எவ் வழியும் ஆவலாய் நாடி உழல்கின்றவன் பிறருடைய சுக துக்கங்களை ஒரு சிறிதும் கருதாமல் அறிவழிந்து போகின்றான். சுய நலத்தால் மனம் மழுங்கி மதிமருண்டு போதலால் அந்த மனிதன் பழி பாவங்களுக்கு அஞ்சாமல் எதையும் துணிந்து செய்து தனக்கு ஊதியத்தையே விழைந்து கொள்கிறான்.

"Familiarity with exploitation is benumbing" [Kirby]

"தன்னலமே கருதிவரும் பழக்கம் மனத்தைத் திமிர் ஆக்கி விடுகிறது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு அரியவுரியது. சுயநலமுடையவன் சுரணை கெட்டு அயலார் நிலைகளை அறியாமல் அவலக்கேடுகளைச் செய்கிறான். பிறர்க்குச்செய்கிறகேடு தனக்கே கொடிய துயரமாய் வருதலை அவன் அறியாமல் அழிகிறான்.

தன்னைப்போல் பிறரை எண்ணி ஒழுகுபவன் பெரியவன்; அவ்வாறு எண்ணாது இழிபவன் சிறியவன். பெருமையும் சிறுமையும் அருளிலும் மருளிலும் முறையே மருவியுள்ளன. சிறிய பிராணிகளிடமும் கருணைபுரிந்து ஒழுகிவரின் அவ்வரவு பெரிய மேன்மைகளை அருளி வருகிறது. சீவ தயையால் மனிதன் மாதவன் ஆகின்றான். பரிவு பெரிய தவமாகிறது.

"உயிர்க்கு உறுகண் செய்யாமை தவம்" (குறள், 261)

என்றது பொருள் பொதிந்த அருள்மொழி. கொடி செடிகள் வாடுவதைக் கண்டாலும் அருளாளர் உளம் அனுதாபமாய் வாடுகின்றது. பரிந்து இரங்குவது பரம நீர்மையா யுள்ளது.

உயிர் நீங்கிய ஒரு பிரேதத்தை எடுத்துக்கொண்டுபோய்ச் சுடுகாட்டில் வைத்துச் சிலர் சுட்டனர். அப்பொழுது அவ் வழியே சென்ற இராமலிங்க சுவாமிகள் அதனைக் கண்டார். உள்ளம் உருகி மறுகியது. "ஓர் உயிர் நெடுநாள் வாழ இடமாயிருந்த இவ்வுடலை மண்ணில் மரியாதையோடு புதைக்கக் கூடாதா? இப்படித் தீயிலிட்டுச் சுட்டெரித்துச் சாம்பலாக்க வேண்டுமா?" என்று துடித்துச் சென்றார். புலையும் கொலையும் நீங்கி உலகம் என்று நலம் அடையுமோ? என்று பரிந்து வருந்தினார். அந்தப் பரிதாப நிலையில் நெடிது மறுகி நெஞ்சம் உருகினார்; பல பாடல்கள் பாடினார். சில அயலே வருகின்றன.

புலைத்தொழிலே புரிகின்றீர்! புண்ணியத்தைக்
  கருங்கடலில் போக விட்டீர்!
கொலைத்தொழிலில் கொடியீர்! நீர் செத்தாரைச்
  சுடுகின்ற கொடுமை நோக்கிக்
கலைத்தொழிலில் பெரியர்உளம் கலங்கினர்; அக்
  கலக்கமெலாம் கடவுள் நீக்கித்
தலைத்தொழில்செய் சன்மார்க்கம் தலையெடுக்கப்
  புரிகுவதுஇத் தருணம் தானே. (1)

பிறந்தவரை நீராட்டிப் பெருகவளர்த்
  திடுகின்றீர் பேயரேநீர்
இறந்தவரைச் சுடுகின்றீர் எவ்வணம்சம்
  மதித்தீரோ? இரவில் தூங்கி

மறந்தவரைத் தீமூட்ட வல்லீரால்
நும்மனத்தை வயிர மான
சிறந்தவரை எனப்புகழச் செய்துகொண்டீர்!
ஏன்பிறந்து திரிகின்றீரே? (2)

குணம்புதைக்க உயிர் அடக்கம் கொண்டது
சுட்டாலும் அதுகொலையாமென்றே
வணம்புதைக்க வேண்டுமென வாய் தடிக்கச்
சொல்கின்றேன் வார்த்தைகேட்டும்
பிணம்புதைக்கச் சம்மதியீர் பணம்புதைக்கச்
சம்மதிக்கும் பேயரேநீர்
எணம்புதைக்கத் துயில்வார் நும்பால் துயிலற்கு
அஞ்சுவரே இழுதை யீரே! (3)

கட்டாலும் கனத்தாலும் களிக்கின்ற
பேயுலகீர் கலைசோர்ந்தாரைப்
பொட்டாலும் துகிலாலும் புனைவித்துச்
சுடுகின்றீர்! புதைக்க நேரீர்
சுட்டாலும் சுடுமதுகண்டு உமதுஉடம்பு
துடியாதுஎன்? சொல்லீர் நும்மைத்
தொட்டாலும் தோடமுறும் விட்டாலும்
க்தியிலைமேல் சூழ்வீ ரன்றே. (4)

அணங்கெழுபேர் ஓசையொடும் பறையோசை
பொங்கக் கோரணிகொண்டந்தோ
பிணம்கழுவி எடுத்துப்போய்ச் சுடுகின்றீர்
இனிச்சாகும் பிணங்களே!நீர்
கணம்கழுகு உண்டாலும் ஒருபயன்உண்டே
என்னபயன் கண்டீர் சுட்ட
எணங்கெழுஞ்சாம்பலைக் கண்டீர் அதுபுன்செய்
எருவுக்கும் இயலாதன்றே. (5)

கடுகுஆட்டுக் கறிக்கிடுக தாளிக்க
எனக்கழறிக் களிக்காநின்ற
சுடுகாட்டுப் பிணங்காள்! இச்சுகமனைத்தும்
கணச்சுகமே சொல்லக் கேண்மின்
முடுகாட்டுக் கூற்றுவரும் சாவீரால்
சாவதற்கு முன்னே நீவிர்
இடுகாட்டுப் பிணங்கண்டால் ஏத்துமினோ
எமையும் இவ்வாறு இடுகஎனறே. (6)

(அருட்பா)

இராமலிங்கருடைய மனநிலையும் சீவ தயையும் இந்தப் பாசுரங்களால்வெளியாகியுள்ளன. உயிர்நீங்கியசவத்தினிடமும் அவர் மனம் உருகி மறுகி இரங்கியிருப்பது கருதியுணர வுரியது.

அசரப் பொருள்கள் மீதும்அருள்நிலை பரவி எழின் அங்கே ஓர் உயரிய பரநிலை ஒளிவீசுகின்றது. மலர்ந்த பூவைப் பறிக்கவும் மாதவரது மனம் கூசுகின்றது. அந்த அழகும் பசுமையும் அழிந்து போமே! என்று அவர் இரங்கி அயர்கின்றனர்.

உயிரைக் கொல்லுதல்தான் கொலை என்று கருதலாகாது; பிறர் உள்ளம் அல்லலுறும்படி சொல்லினும் அதுவும் ஓர் கொலையாம். வசையாகப் பேசினுலும், வைதாலும் வெய்ய துயரமாகும் ஆதலால் அவ்வாறு எவரையும் யாதும் பேசலாகாது.

சொல்லாலும் அல்லல் நேராமல் நல்ல அருளோடு நாடி ஒழுகி வருக. அது அரிய பல மேன்மைகளை அருளி வரும்.

---

707 என்றும் துயரம் உறாமல் இனிதிருக்க
நன்றோர் உபாயம் நயப்பினே—கன்றிநீ
யாதும் பிறவுயிர்க் கல்லல் புரியற்க
ஈதேமெய் யின்ப நிலை. (எ)

இ—ள்.

எவ்வழியும் யாதொரு துயரமும் நேராமல் யாண்டும் சுகமாய் நீ வாழ விரும்பின் பிற உயிர்களுக்கு ஒரு சிறிதும் அல்லலை நீ கருதலாகாது; இதுவே நல்ல இன்ப வாழ்வுக்கு இனிய உபாயம்; இந்த வழியே ஒழுகி அந்தமிலின்பம் அடைக.

தாம் சுகமாய் வாழவேண்டும் என்று விரும்பாத மனிதர் யாரும் இலர். யாவரும் சுக வாழ்வையே ஆவலோடு அவாவி வருகின்றனர். வரினும் கருதிய சுகம் கிடையாமல் பெரும்பாலும் மக்கள் மறுகி யுழலுகின்றனர். எண்ணிய இன்பம் எய்தாமல் ஏங்குவதும், எண்ணாத துன்பம் எய்தி வருந்துவதும் மனித வாழ்வின் பாங்குகளாய்ப் படிந்துள்ளன. சுகமும் துக்கமும் வினைகளால் விளைகின்றன. நல்வினை சுகத்தை அருளுகிறது; தீவினை துக்கத்தைத் தருகிறது. இந்த மூல காரணங்களைச் சரியாகத் தெரியாமையினலேதான் பரிதாபங்கள் பெருகி வருகின்றன. பிழைகள் பீழைகளை விளைத்து விடுகின்றன.

பிற உயிர்களுக்கு அல்லல் நேராமல் நல்ல சீலமாய் ஒழுகி வரின் அவன் எவ்வழியும் உயர்நலங்களேயே அடைகிருன்; அவ்வாறு ஒழுகாமல் வெவ்விய தீமைகளை விளைத்துவரின் யாண்டும் அல்லலும் இழிவும் அவலமுமே தொடர்ந்து வருத்துகின்றன.

தான் விரும்புகிறபடியே பிறரும் சுகநலங்களை விரும்புவர்; அந்த விருப்பங்களுக்கு இடர் புரியலாகாது என்னும் உணர்ச்சி மனிதனுக்கு உயர்ச்சியாயிருக்கவேண்டும். இந்தச் சமநோக்கு மனித சமுதாயத்தில் சரியாக அமர்ந்துவிட்டால் பெரிய இன்ப வாழ்வு அங்கே இனிது அமைந்து நிற்கும். துன்பத்தொடர் பெல்லாம் அன்பு நலம் அற்ற அவலச் செயல்களாலேயே படர்ந்திருக்கின்றன. அன்பு நீங்கிய அளவே துன்பம் ஓங்கியது.

தன்னை ஒருவன் இகழ்ந்து பேசினும், இன்னல் செய்தாலும் தன் உள்ளம் துடிக்கிறது; உயிர் பதைக்கிறது; இந்த அனுபவ உணர்வையுடைய மனிதன் பிறர்க்கு இடர்செய்ய நேர்வது என்ன மதியீனம்! அறியாமையால அல்லல்களைச் செய்து மனித சமுதாயம் எல்லையில்லாத துயரங்களை அடைந்து இழிந்து உழலுகின்றது. துன்பங்களை விளைத்துத் துடித்து அழிவது மடமையாம்.

பிறர்க்குச் செய்த சிறிய இடர்கள் தனக்குப் பெரிய படர்களாய் வருகின்றன. இந்த மருமத்தை நன்கு உணர்ந்தவன் தீய கருமத்தைக் கனவிலும் கருதான்.

"தன்னைத்தான் ஆக்கஎண்ணித் தான்பிறிது ஒன்றைக் கொல்வான்
தன்னைத்தான் கொல்லுகின்ருன்; தன்உயிர் விடுத்தும் ஒன்று
தன்னைத்தான் கொல்லாதான்காண் தன்னைமுன் நோக்குகின்ருன்
தன்னைத்தான் நோக்கு கின்ற தத்துவர் இட்டம் ஈதால்.

(சிவப்பிரகாசம்)

பிறிது ஒன்றைக் கொல்லுகின்றவன் தன்னையே கொல்லுகின்ருன் என்னும் இது ஈண்டு உன்னி உணரவுரியது. செய்த தீவினையாளன் எவ்வழியும் உய்தியிலனுய் உறுதுயர் உழந்துபடுகின்ருன். தான் புரிந்த வினை தன்னையே வளைந்து கொள்கிறது.

ஓர்உயிர்தன்னைக் கோறல்செய் தோர்கள்
உயிரினை அவ்வுயிர் எய்திச்
சோர்வுறக் கொல்லும்; ஆதலால் கோற
லாதல்மற்று ஒழிந்திட வேண்டும்

தேரிடின் சிவனுலயத்தின்ஓர் புழுவா
யினும் உயிர்செகுத்தவர் திரைசெய்
வார்கடல் உலக முழுதும் செகுத்த
பாவத்தை அடைகுவர் அன்றே.
(இலிங்கபுராணம்)

யான்உயிர் வாழ்தல் எண்ணி எளியவர்தம்மைக்கொல்லின்
வானுயர் இன்ப மேலால் வருநெறி திரியும் அன்றி
ஊனுயிர் இன்பம்எண்ணி எண்ணமற்று ஒன்றும் இன்றி
மானுயிர் வாழ்வு மண்ணில் மறித்திடும் இயல்பிற்றன்றே.
(யசோதரகாவியம்)

பிறவுயிர்களைக் கொல்லுவதால் தனக்கு விளையும் அழிவு நிலைகளை மனிதன் உணர்ந்து யாண்டும் இனியனுய் வாழவேண்டும் என இவை உணர்த்தியுள்ளன. எவ்வுயிர்க்கும் யாதும் அல்லல் புரியாமல் எவ்வழியும் நீதிமானுய் நெறியுடன் வாழுக.

———

708 வாய்மொழியால் மற்றோர் மனம்துடிக்க வைதாலும்
தீயகொலை என்றே தெளிமினோ—நேயமறக்
கொன்றவுயிர் அப்பொழுதே குப்புறுமாலவ்வுயிர்தான்
நின்றுதுயர் கூரும் நினைந்து. (அ)

இ—ள்.

மற்றவர் மனம் துடிக்கும்படி கொடிய சொல்லை வாயால் சொல்லினும் அதுவும் ஒரு தீயகொலையாம்; கொலை அப்பொழுதே உயிரைப் போக்கிவிடும்; புலையான சொல்லோ உள்ளத்தில் நிலையாய் நின்று நாளும் சித்திரவதை செய்யும்; இக்கொலைநிலையின் கொடுமையை உணர்ந்துஉடனேகடிக; அவ்வாறு கடிந்து ஒழுகின் எவ்வழியும் இன்பம் தொடர்ந்துவரும் என்பதாம்.

கொல்லும் கொலையினும் புலையாகச் சொல்லும் சொல் மிகவும் கொடியது என்றதுஅதன் உயிர் வேதனையை உணரவந்தது.

தலையை வெட்டுதல், உடலைச் சிதைத்தல், முதலிய செயல்களால் கொலைகள் நிகழ்கின்றன. அவ்வாறு கொல்லப்பட்ட மனிதன் அப்பொழுதே இறந்து போகிருன்; அதன்பின் யாதொரு துன்பமும் தெரியாது. கொடிய பழிச்சொல் உடலை

அழியாதாயினும் உள்ளத்தை வதைத்து உயிரைத் துடிக்கச் செய்கிறது; அதனால் அது நெடிய அல்லலான பொல்லாத கொலையாம். தீயினால் சுடுவதினும் வாயினால் சுடுவது கொடிய துயரமாய்நெடிதுநீண்டுள்ளது. நிலைமையைநினைந்துசிந்திக்கவும்.

கொலை உடனே உயிரை நீக்கிவிடுகிறது; அத்தோடு துயரமும் தொலைந்தது. கொடுஞ்சொல் நெடுந்தீயாய் நிலைத்து நின்று நெஞ்சை எரித்து என்றும் அழிதுயரே செய்யும் ஆதலால் அது பழியான அவலக் கொலையாய் வந்தது.

வாளினால் கொல்லும் கொலையினும் வாயினால் சொல்லும் வசைமொழி நீள நின்று நெடுந்துயர் புரிகின்றது; சாகும் வரையும் உள்ளத்தை வேகச்செய்து உயிரை வதைத்து வரும்ஆதலால் அது கொடிய சித்திரவதையினும் நெடிய கொலையாய் நேர்ந்தது.

விதுரன் நல்ல நீதிமான்; சிறந்த வில் வீரன். அந்த மதிமானைத் துரியோதனன் ஒருநாள் இகழ்ந்து பேசினான். பாண்டவர்களுக்கு உதவியாகத் தன்பால் தூதுவந்த கண்ணனை உபசரித்து விருந்து புரிந்தான் என்ற கோபத்தால் அப்பெருந்தகையை அவன் பிழைபடப் பேசிய மொழிகள் கொடிய கொலையினும் துயரமாய் மூண்டு நெடிது துடிக்கச் செய்தன.

முதல்விழைந்து ஒருவன் உடனியைந்த பொருள்
பற்றி இன்புற முயங்கினும்
அதிகமஎன்ற பொருள் ஒருவன் வேறுதரின்
அவனையே ஒழிய அறிவரோ
பொதுமடந்தையர் தமக்கு மண்ணில் இது
புதுமை அல்லஅவர் புதல்வனும்
விதுரன்இன்று அவனொடுறவு கொண்டது ஓர்
வியப்பை என்சொலி வெறுப்பதே!

துரியோதனன் கூறிய வசைமொழிகளை இது வரைந்து காட்டியுள்ளது. பிறப்பை இளித்துப் பிழை தெளித்து நின்றது.

விதுரன் திருதராட்டிரனுக்குத் தம்பி முறையினன். தந்தை ஒருவன்; தாய் மூவர். அம்பிகை, அம்பாலிகை என்னும் அரசகுல மங்கையர் வயிற்றில் திருதராட்டிரனும், பாண்டுவும் முறையே பிறந்தனர். அனங்கனி என்னும் தாசி வயிற்றில்

விதுரன் பிறந்தான். முன்னவன் குருடன்; அடுத்தவன் பாண்டு ரோகி; பின்னவனுன இவன் அழகு அறிவு முதலிய நலங்கள் எல்லாம் அமையப் பெற்றிருந்தான். தனது தமையன் மகன் என்ற உரிமையால் துரியோதனனுக்கு அரிய ஆதரவுகள் கூறி விதுரன் அமைச்சுத் துணையாய் அமர்ந்து வந்தான். தன் எண்ணத்துக்கு மாருய்க் கண்ணனை உபசரித்தான் என்றே அன்று இவ்வண்ணம் இவனை வைதான். அரசவையில் வைத்துத் தன்னைத் தாசிமகன் என்று ஏசியதைக் கேட்டதும் விதுரன் உள்ளம் கொதித்தது; உயிர் பதைத்து; விரைந்து எழுந்து தன் வில்லை முறித்து எறிந்து இன்ருேடு என் உறவு ஒழிந்தது என்று உருத்து மொழிந்தான். அப்பொழுது அவன் உரைத்த மொழிகள் வெப்பமும் வெறுப்பும் விரிந்து வீரத்திறலோடு வெளிவரலாயின. அவை இங்கே உன்னி உணர வுரியன.

இன்னவாறு இவன் உரைத்தபோது அவன்
எழுந்திருந்து வசை என்னைநீ
சொன்ன வாய்குருதி சோர வாள்கொடு
துணித்து நின்முடி துணிப்பன்யான்
மன்னவா குருகுலத்திலே ஒருவன்
மைந்தன் ஆருயிரை வௌவினுன்
என்ன வானவர் நகைப்பரே! எனை
உரைத்த நாவுடன் இருத்தியோ? (1)

சொல்இரண்டு புகலேன் இனிச்சமரில்
நின்றுவெங்கணை தொடேன்எனு
வில்இரண்டினும் உயர்ந்த வில்லதனை
வேறிரண்டுபட வெட்டினுன்
மல்லிரண்டினையும் இருவ ராகிமுன்
மலைந்தகாளமுகில் வந்துதன்
இல்லிரண்டுதினம் வைகுதற்குலகில்
எண்ணிலாத தவம் எய்தினுன். (2)

அந்த வில்லினை முறித்தவில்லி தனது
ஆலயம்புகுத அச்சுதன்
சந்தவில்லும் அரன்வில்லும் ஒப்பதொரு
தாமவில்லினை முறிப்பதே

முந்த வில்லியரில் எண்ணும் வில்லுடைய
　　விசயன் வந்தமரில் முடுகினுல்
எந்த வில்லி எதிர் நிற்கும் வில்லி இனி
　　என்று காவலர் இரங்கினுர். (3)

காரணைத்தும் விடு தாரை யன்னபல
　　கணைகள்ஏவி அமர் கருதும்வில்
வீரனைப் பழுதுரைத்த நீபகையை
　　எங்ஙனே தனிகொல் வெல்லுவாய்?
பாரனைத்தும் இனி ஐவர் ஆளும்வகை
　　பண்ணுவித்தனை அழிந்ததுஉன்
பேரனைத்தும்என உள்ளழிந்துசில
　　பேசினுன் உயர் பிதாமகன். (பாரதம்)

துரியோதனன் விதுரனை இகழ்ந்து பேசியபோது அம்மதிமான் விரைந்து எழுந்து "என்னைப் பழித்துப் பேசிய நாவை அறுத்து எறிந்து தலையைத் துணித்து வீழ்த்துவேன்; அது செய்யாமல் பொறுத்துள்ளேன்; இனிஉன்னேடுஎனக்கு உறவில்லை" என்று வெறுத்துரைத்துத் தன் வில்லை ஒடித்து எறிந்துவிட்டு விதுரன் தனது அரண்மனைக்குப் போனதும், அங்கிருந்த அரசர் மறுகி நின்றதும், நல்ல நீதிமானைப் பொல்லாத வசைமொழியால் உள்ளம் கொதிக்கச் செய்தாய்! அதனுல் உன் அரசுக்கு அழிவு நேர்ந்தது, பேருக்கும் இழிவு வந்தது என்று வீடுமர் அவனை நோக்கி இரங்கி மொழிந்துள்ளதும் ஈண்டு உணர்ந்து கொள்கின்றேம். ஒரு பழிமொழியில் அழி துயரங்கள் பல விளைந்தன.

இராச சபையில் வைத்துத் தன்னை வேசை மகன் என்று கூறிய அந்த வசைமொழி விதுரனுடைய உள்ளத்தை ஓயாமல் தகித்துவந்தது. ஒருவனை இழிவாகப் பழித்துப் பேசுவது கொல்லுகின்ற கொலையினும் கொடியது; தொலையாத துன்பமுடையது என்பதை உலகம் அவன்பால்உணர்ந்து தெளிந்தது.

வாய்மொழி கொடுமையாய் வரின் அவன் கொடியவனுய் இழிவுறுகின்றுன். அது இனிமை ஆயின் அந்த மனிதன் புனிதனுய் உயர்ந்து தனி மகிமைஅடைகிறுன். நல்லது பேசி நலம்பல அடைய உரிய வாயைப் பொல்லாத தாக்குபவன் புலையாயிழிந்து தொலையாத துன்பங்களை அடைய நேர்கின்றுன்.

அரிய உறுதித் துணையாய் அமைந்திருந்த சிறிய தந்தையை வறிதே இகழ்ந்து பேசியதால் அந்த வில் வீரனுடைய ஆதரவை அடியோடிழந்து துரியோதனன் குடியோடு அழிந்து தொலைந்தான். குலைதுடிக்கப் பேசினான் குலம் துடிக்க அழிந்தான்.

இன்சொல் எவரையும் உறவாக்கி இன்பம்தருகிறது; புன்சொல் எவ்வழியும் வெவ்விய பகைகளை விளைத்து வெந்துயர் புரிகின்றது. உரையின் நலன் அளவே உயர்வுகள் உளவாகின்றன.

இன்சொலான் ஆகும் கிளைமை; இயல்பிலா
வன்சொலான் ஆகும் பகைமைமன்---மென்சொல்லின்
ஆய்வினான் ஆகுள் அவ்வருளி னுமனத்தான்
வீவிலா வீடு பெறும். (நான்மணிக்கடிகை)

இனிய சொல்லால் வரும் உறுதிநலங்களை இது உணர்த்தியுளது.

சிதைவுரையான்; செற்றம் உரையான்; சீரில்லார்
இயல்புரையான்; ஈனம் உரையான்---நசையார்க்கும்
கூடுவது ஈவானைக் கொவ்வைபோல் செவ்வாயாய்!
நாடுவர் விண்ணோர் நயந்து, (ஏலாதி)

யாருக்கும் அல்லல் நேராமல் நல்ல வார்த்தைகளையே பேசிவரின் அவனைத் தேவர்கள் ஆசையோடு விரும்பி மகிழ்வர் எனக் கணிமேதையார் என்னும் பெரியார் இவ்வாறு கூறியுள்ளார்.

சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையும் இன்பம் தரும். (குறள், 98)

பிறர் மனம் நோகாதபடி இனிய மொழிகளை இதமாகப் பேசி வருபவன் இம்மை மறுமை ஆகிய இருமையிலும் இன்பம் பெறுவான் எனத் தேவர் இங்ஙனம் குறித்துள்ளார்.

தன் உயிர்க்கு அமிர்தமாய் இன்பம் தருகிற இத்தகைய நல்ல உரைகளைப் பேசிப் பழகாமல் பொல்லாத புலைமொழிகளைப் பேசி இழிவது எவ்வளவு மடமை! எத்துணைப் பரிதாபம்! உய்த்துணர வேண்டும். உணர்வின் நிலையை உரை உணர்த்துகிறது.

வாயினால் சொல்லுகிற கொடிய சொல் கையினால் கொல்லுகிற கொலையினும் கொடியதாம்; ஆதலால் அவ்வாறு பேசலாகாது. பேச்சை நயமாப் பேணிவரின் மாட்சி வியனா மருவி வரும். எவ்வழியும் இனியமொழிகளையே பேசி இன்பம்பெறுக.

709 எல்லா உயிரும் இறைவனுரு வாதலினல்
பொல்லாக் கொலைநீ புரியிறே—வல்ல
பரமனையே கொன்ற படுபா தகனய்
நரகம் புகுகின்றய் நாடு. (கூ)

இ—ள்.

எல்லா உயிர்களும் இறைவனுடைய உருவங்கள் ஆதலால் பொல்லாதகொலைகளைச் செய்தால் பரமனையே கொன்றகொடிய கொலைபாதகனய்ப் பழி அடைந்து இழி நரகம் புகுவாய்; இந்த வுண்மையை உணர்ந்து நன்மையை நாடுக என்பதாம்.

உலகில் காணப்படுகிற பொருள்கள் உயிர் உள்ளன, உயிர் இல்லாதன என இருவகையுள் அடங்கியிருக்கின்றன. அளவிடலரிய நிலையில் யாண்டும் பெருகி யுள்ளன; அவை தோன்றி மறைந்து மீண்டும் மீண்டும் விளைந்து வருகின்றன. உயிர் உடையது சரம், உயிர்இல்லாதது அசரம்என மருவியிருத்தலால் சராசரம் என யாவும் நிலவி நிற்கின்றன. பரந்த பொருள்களும் அவை நிறைந்துள்ள இடங்களும் அண்டசராசரங்கள் என அமைந்துள்ளன. இவ்வாறு இசைந்துள்ள எல்லாப் பொருள்கள் உள்ளும் எங்கும் தலைமையான ஓர் அதிசயப் பொருள் என்றும் நித்தியமாய் நிலைத்துள்ளது. அதனையே கடவுள்என்றும், பரம்பொருள் என்றும், இறைவன் என்றும் பல பெயர்களால் வழங்கி வருகின்றனர். பரிபூரணன் என்னும் ஒரு பெயரால் அவன் எங்கும் நிறைந்து நிற்கும் நிலையை நன்கு உணர்ந்து கொள்கிறேம்.

எறும்புமுதல் யானை ஈருகவுள்ள சர வருக்கங்களையும், துரும்புமுதல் பெருங்கிரிவரையுள்ள அசர வருக்கங்களையும் காண நேருந்தோறும் ஆங்கு உயிர்க்கு உயிராய் உள் உறைந்துள்ள பரம்பொருளை ஊன்றி ஓர்ந்து கொள்ளவேண்டும். மெய்யான இத்தகைய தெய்வக் காட்சியுடையவரே மேலான ஞானிகள் ஆகின்றர். உண்மையை உணர்வதே உயரிய ஞானமாம்.

சீவர்களிடம் கருணை கூர்ந்து ஒருவன் ஒழுகிவரின் அவனிடம் தேவ ஒளி பெருகி வருகிறது. மன்னுயிர்களைப் பேணி வருபவன் தன்னை உண்மையாகப் போற்றி வருபவன் ஆதலால் அவன்பால் ஈசன் உவகை கூர்ந்து வாசம் புரிகின்றன். உயிர்களுக்கு ஊறு புரியாமல் ஓம்பி வருவது உயிர்க்கு உயிரான பரமனை உழு

வலன்போடு நேரேதொழுது வருவதாம்; ஆகவே அந்த மாதவ னிடம் மாதேவன் மகிழ்ந்து என்றும் ஆதரவாய் விளங்குகிறான்.

"கொல்லாத மாதவர்கள் உள்ளமே கோயிலாக்
கொண்டிலங்கு அருள் நிதியமே!"

எனப் பரமபதி இவ்வாறு துதிகள் பல பெற்றிருத்தலால் கொல்லா விரதிகளுடைய மகிமை மாண்புகளை உய்த்து உணர்ந்துகொள்ளலாம். அருளியல்பு அதிசய நலங்களை அருளுகிறது.

இனிய இயல்பால் மனிதன் புனிதனாய் உயர்கின்றான்.
இன்னாத செயலால் அவன் இழிந்து படுகின்றான்.

எல்லாப் பிராணிகளுள்ளும் மனித இனம் உயர்ந்தது; அந்த மனித சமுதாயத்துள் கொல்லாமை முதலிய நல்ல நீர்மைகளை யுடையவர் எல்லாவகையிலும் உயர்ந்தவராகின்றார்; ஆகவே எவ் வழியும் சிறந்து ஒளிமிகுந்து உயர்கதிகளை அடைகின்றார்.

பிறந்த பிறப்பைச் சிறந்ததாக உயர்த்திப் பெரு மகிமை களை அருளி வருதலால் கொல்லாமை அருந்தவ நிலையமாய்ப் பொருந்தியுள்ளது. அதனால் அரியபல நன்மைகள் விளைகின்றன.

கொல்லாமை ஆகிய இந்த விரத ஒழுக்கமுடையவர் நல்ல வராய் உயர்ந்தார்; அல்லாதவர் பொல்லாதவராய் இழிந்தார்.

"ஊற்றமிகும் சராசரத்துள் உயர்ச்சி சரம்;
சரத்துள்நரர்; நரர்தம் உள்ளும்
ஏற்றமும் தாழ்ச்சியும்உள; பல்உயிர் செகுத்துஉண்டு
உடலை வளர்த்திடும்கீழ்; அம்மேல்
சாற்றும்உயிர்க் கொலைபுரிதல் துயர்நெடுநாள்
என்றும்உடல் தான்பொய் என்றும்
தேற்றமிக்கு ஏன்றுஉயிர் தமைவீட்டினும் அவற்றின்
உயிர்புரக்கும் தீதி லோரே." (கொலைமறுத்தல்)

மனித சாதியுள் உயர்ந்தவர் இவர், தாழ்ந்தவர் இவர், என இது வரைந்து காட்டியுளது. புலால் உண்ணும் நசையால் உயிர் களைக் கொல்பவர் இழிந்த கீழ்மக்கள்; அங்ஙனம் கொல்லாமல் அருள்புரிந்து வருபவர் உயர்ந்த மேன்மக்கள் என்று குறித்திருத் தலால் கொலையின் பழியையும், கொல்லாமையின் ஒளியையும் தெளிவாய் உணர்ந்து வழிமுறைகளைத் தேர்ந்து கொள்ளலாம்.

ஆடு கோழிகளைக் கண்டால் அவை பரமனுடைய உருவங்கள் என்று பாவித்து இதம்செய்தருளுக; அங்ஙனமின்றி அதம் செய்து உண்டால் பரமனையே கொன்ற பாதகன் ஆவாய்; ஆகவே படுதுயரங்களும் அடுநரகங்களும் உன்னை நெடிது வருத்தும்; இவ்வுண்மையை உணர்ந்து நன்மையை நாடிக்கொள்ளுக.

கொல்லிடு குத்துஎன்று கூறிய மாக்களை
வல்லிடிக் காரர் வலிக்கயிற்றால் கட்டிச்
செல்லிடு நில்என்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே. (திருமந்திரம், 198)

தன் கையால் கொல்லாமல் வாயால் கூறி அயலானை ஏவினும் அவன் கொலைப் பாவியாய்த் தீவாய் நரகினை அடைந்து தீரா நோயனாய் வருந்துவன் எனத் திருமூலர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

கொன்றவன் குறைத்தவன் கொணர்ந்து விற்றவன்
ஒன்றிய பொருள்கொடுத்து உவந்து கொண்டவன்
நன்றிது என்றவன் நாவில் பெய்தவன்
என்றிவர் அறுவரும் நரகம் எய்துவார். (குண்டலகேசி)

கொன்றுயிர் நடுங்கச் சென்று கொலைத்தொழில் கருவிஏந்தி
நின்றெறி நுடங்கு கண்ணால் பாவமே நினைந்து செத்தார்
சென்றெறி நரகில் வீழ்வர் செவ்வனே துன்பம் அஞ்சி
நன்றியில் கொலையின் நீங்கி நற்றவம் புரிமின் என்றான்.
(சூளாமணி)

கொலையால் நேரும் அழிதுயரங்களை விழிதெரிய விளக்கி மனிதன் யாண்டும் கொலைநீங்கி வாழவேண்டும் என இவை உணர்த்தியுள்ளன. தான் செய்யும் கொலை தன் உயிர்க்குத் தொலையாத துன்பங்களை விளைத்தருளுதலால் கொலை ஒழிந்து வாழ்வதே தலைசிறந்த வாழ்வாம். நிலை தெளிந்து கொள்க.

---

710 எந்த உயிர்க்கும் இடர்சிறிதும் நேராமல்
முந்த ஒழுகும் முறையினரே—வந்த
பிறவிப் பெரும்பயனைப் பெற்றார் பிறவா
அறவர் அவரே அறி. (ய)

இ—ள்.

புழு பூச்சி முதலிய எந்த உயிர்களுக்கும் யாதொரு இடரும் நேராமல் அருள்புரிந்து ஒழுகும் இனிய நீர்மையாளரே பிற

விப் பயனைப் பெற்ற பெரிய புண்ணிய சீலர்; அரிய கண்ணிய நீரர்; இவ்வுண்மையை ஓர்ந்து உய்தி பெறுக என்பதாம்.

தான் சுகமாக வாழ விரும்புகின்றவன் எந்த உயிருக்கும் யாண்டும் யாதொரு துயரும் செய்யலாகாது. இந்த நியமம் தவறிநடந்தால் அந்த மனிதவாழ்க்கையில் அல்லல்கள்தொடர்ந்து அவலங்கள் புகுந்து அழிகேடுகள் படர்ந்து கொள்ளுகின்றன.

தாம் செய்த செயல்களின் பலன்களை அனுபவியாமல் யாரும் அயலே மீறிப் போகமுடியாது. இயற்கை நியதியின் படியே யாவும் இயங்கி வருகின்றன. மனிதனுடைய எண்ணங்கள் நல்லனவாயின் நலமான இன்பங்கள் பலன்களாய் வருகின்றன; அவை தீயனவாயின் தீமையான துன்பங்கள் செழித்து வளர்ந்து எவ்வழியும் வெவ்விய அவலங்களை விளைத்து நிற்கின்றன.

"In the soul of man there is a justice whose retributions are instant and entire." (Ethics)

"மனிதனுடைய சீவனில் ஒரு நீதியிருக்கிறது; அதனுடைய கரும பலன்களை உடனே முழுவதும் அதற்கு அது ஊட்டிவிடுகிறது" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணரவுரியது. அரிய வேத வாக்கியம்போல் இதுபோதனை புரிந்துள்ளது.

தாம்தாம்முன் செய்தவினை தாமே அனுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே---வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்று
வெறுத்தாலும் போமோ விதி. (நல்வழி)

செய்த வினைப்பயன்கள் சீவர்களை எவ்வழியும் வந்து சேர்ந்துகொள்ளும்; அவற்றை அவர் அனுபவித்தேயாக வேண்டும் என இது உணர்த்தியுள்ளது. இனிய வினைகளைச் செய்தவன் இன்பங்களை நுகர்ந்து மகிழ்கிறான்; கொடிய செயல்களைச் செய்தவன் துன்பங்களை அனுபவித்துத் துயரில் உழல்கின்றான்.

ஒருவன் நல்ல கருமங்களைச் செய்யின் அவன் நல்லவனாய் உயர்கின்றான். தீயவினைகளைச் செய்யின் தீயவனாய் இழிகிறான்.

He who does a good deed, is instantly ennobled.
He who does a mean deed, is by the action itself contracted.
[Emerson]

"நல்வினைசெய்பவன் அதனால் உடனே மேன்மை அடைந்து ஒளிபெறுகின்றான்; தீவினை செய்பவன் அதனால் தாழ்ந்து இழி

வுறுகின்ருன்'' என எமர்சன் என்னும் அமெரிக்க அறிஞர் இவ்வாறு கூறியுள்ளார். வினையின் விளைவுகள் விழிதெரிய வந்தன.

தன் உயிர்க்கு நன்மையை நாடுகின்றவன் மறந்தும் தீமையை நாடான்; எவ்வழியும் நல்ல எண்ணங்களையே எண்ணி வருபவன் புண்ணிய சீலனுய்ப் பொலிந்து திகழ்கின்ருன்.

எல்லா அல்லல்களும் நீங்கி என்றும் அழியாத நல்லநிலையை அடைந்துகொள்வதே உயர்ந்த மனிதப் பிறவியின் பயனும். அரிய பெரிய அந்த இனிய பேற்றைப் பெற உரியவன் யாண்டும் அருள்நலம் பேணிப் புனிதனுய் ஒழுகி வரவேண்டும்.

கொல்லான் பொய்கூருன் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்கம் உடயான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையில் நின்ருனே. (திருமந்திரம்)

மேலான கதியை அடைய உரிய மனிதனது புனிதநிலைகளை இது உணர்த்தியுள்ளது. கொலை முதலிய தீமைகள் யாதும் இலனுய் எவ்வுயிர்க்கும் இதமாய்த் தண்ணளிபுரிந்து ஒழுகிவருபவன் புண்ணிய நீரனுய் உயர்ந்து பேரின்பநிலையை அடைகிருன்.

கொல்லான் கொலைபுரியான் பொய்யான் பிறர்பொருள்மேல்
செல்லான் சிறியார் இனம்சேரான்---சொல்லும்
மறையிற் செவியிலன் தீச்சொறகண் மூங்கை
இறையிற் பெரியாற்கு இவை. (ஏலாதி)

கொலை முதலிய தீமைகளின்றி வாழ்பவரே தலைமையான நிலையினர் என்னும் இது இங்கே நினைந்து சிந்திக்கத் தக்கது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

கொலை பழிபாவம் உடையது.
நரக துயரங்களைத் தருவது.
கொல்லாமை புகழ் இன்பங்களை அருளும்.
சொல்லாலும் அல்லல் செய்யலாகாது.
எவ்வழியும் நல்லதே செய்யவேண்டும்.
பிறருடைய மனம் நோகாமல் நடப்பதே அறநலமாம்.
இதம்புரிவதால் இன்பம் விளைகிறது.
இடர் செய்வதால் படர் வருகிறது.
இரங்கி அருள்பவன் உயர்ந்த கதியை அடைகிருன்.
அருள் ஒழுக்கம் அதிசய ஆனந்தமாம்.

எக-வது அதிகாரம் முற்றிற்று.

# எழுபத்திரண்டாவது அதிகாரம்.

## பழி.

அஃதாவது இழிவான செயல் இயல்களால் விளையும் வசை. இசை பெற வந்த மனிதன் வசையுற வாழலாகாது என இது உணர்த்துகின்றது. புலை கழிந்து கொலை ஒழிந்து பழி நீங்கி வாழவேண்டும் என்னும் குறிப்பால் அவற்றின்பின் இது வைக்கப்பட்டது. வைப்பு முறை உய்த்து உணரத் தக்கது.

711 பழிபாவம் என்னும் பழிச்சொல் மனிதன்
இழிநிலையை நேரே எடுத்து—வழியோடு
காட்டும் அதனிலையைக் கண்டு தெளிந்தாரேல்
வீட்டுநிலை காண்பார் விரைந்து. (க)

இ—ள்.

பழி பாவம் என்னும் இழிமொழிகள் மனிதனது இழிவையும் அழிவையும் விழி தெரிய நேரே விளக்கி நிற்கின்றன; அந்த இழிந்த நிலையை அறிந்து தெளிந்தவர் உயர்ந்த வீட்டு நெறியை விரைந்து காண விழைந்து வியனிலையில் விளங்குவார் என்க.

பிறந்த மனிதன் சிறந்தவனாய் உயர்ந்துகொள்ளவேண்டும்; அவ்வாறு உயர்ந்தபோதுதான் அப்பிறப்பு சிறப்புடையதாம். அங்ஙனமின்றி வீணே நிற்பின் அப்பிறவி ஈனமாய் இழிவுறும். பறவை விலங்குகளைவிட உயர்ந்த பிறவியில் வந்த மனிதன் ஒரு பயனுமின்றிவறிதே வளர்ந்துநின்றுஇறந்துபோவதுஇழிந்த போக்காம். இழிவு நேராமல் விழுமிய நிலையில் ஒழுக வேண்டும்.

"காதவழி பேர் இல்லான் கழுதை"

என்பது பழமொழியாய் வந்துள்ளது. தான் பிறந்த ஊரைச் சுற்றிச் சிறிது தூரமாவது தன் பேர் துலங்கும்படி செய்ய வில்லையானால் அந்த மனிதன் ஒரு கழுதைப் பிறப்பாம் என நிந்தித்திருத்தலால் பேர் சீர்பெறாத வாழ்வு எவ்வளவு இழிவுடையது! எத்தனை பழி படிந்தது! என்பது எளிது தெளிவாம்.

உருவம் தோன்றிய போது அங்கே பெயரும் தோன்று கிறது; தனக்குப் பெற்றோர் இட்ட அப்பெயரை மற்றோரும்

உவந்துபேசிப் புகழ்ந்துவரும்படி ஒருவன் நடந்துவரின் அவன் சிறந்த புகழ் ஆளன் ஆகின்ருன்; பிறப்புக்கு உரிய அச்சிறப்பை அடையாதிருந்தால் அவன் பிறவிப் பயனை இழந்தவனுகிருன்; அந்த இழவோடு தொலையாமல் இழிந்து பழியும் செய்ய நேரின் அவன் இழிமடையனுய்க் கழிந்து அழிவினையே அடைகின்ருன்.

பழி என்னும் சொல் காரணக்குறியாய் வந்துளது.

உலகத்தார் இகழ்ந்து பழிப்பது எதுவோ அது பழி என நேர்ந்தது. உள்ளம்வெறுத்துப் பேசுவதால்அதன் உருவம் தெரியலாம்.

களவு செய்தல், பொய்பேசல், கொலைபுரிதல், பிறர் மனைவியரை விரும்பல் முதலிய தீமைகள் யாவும் பழிகள் ஆதலால் இவற்ருேடு பழகினவர் பழியாளராய் இழிவுறுகின்றனர். தமக்கு இழிவையும் ஈனத்தையும் துயரையும் தருகிற பழி வினைகளைத் தழுவிமனிதர் பாழ்படுவது முழுமடமையாய் முடிந்துளது.

தன்னைப் பிறர் மதிக்கவேண்டும் என்றே எவனும் எண்ணுகிருன். இந்த ஆசை இயல்பாக அமைந்திருந்தும் மயலாயிழிந்து அவமானங்களைச் செய்துஅவமதிக்கப்படுவது அதிசய வியப்பாயுள்ளது. வினைவிளைவுகள் தெரியாமல் வீணே விளிவுறுகின்றனர்.

தனக்கு நேருகிற இழிபழிகளை எண்ணி நோக்காமல் விழிகண் குருடராய் அழிதுயரங்களைச் செய்துகொள்ளுவது அவல வாழ்வாகிறது. ஆகவே எவ்வழியும்அது வெவ்வியபழி தருகிறது.

உயிருடையனுயினும் பழிபட நேரின் அவன் செத்தவனே ஆகின்ருன். அவனது வாழ்வு நடைப்பிணம்போல் நகைப்புக்கு இடமாய் நவை பல படிந்து அவமானமாய் இழிவுறுகின்றது.

வசைஒழிய வாழ்வாரே வாழ்வார்; இசைஒழிய
வாழ்வாரே வாழா தவர். (குறள் 240)

தம்பால் பழிநேராமல் வாழ்பவரே உயிரோடு வாழுகின்ருர்; அங்ஙனமின்றிப் பழிபட வாழ்பவர் உயிர் இருந்தாலும் செத்தவரே யாவார் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிருர். பழி ஒருவனைச் செத்த சவமாக்கிச் சீரழித்துவிடும்; இந்தப்பேரிழவைச் சேரலாகாது என்பது இதில் உய்த்து உணர வந்தது.

வசை = பழி. இசை = புகழ்.

வசை வராமல் பாதுகாத்து எவ்வழியும் இசை பெற்று வாழ்வதே இன்பவாழ்வாம். மேன்மையான அந்த இனிய வாழ்வை அடைய விரும்பினவன் கீழ்மையான இழிவுகளை எவ்வகையானும் யாதும் யாண்டும் தீண்டலாகாது.

பழிவினைகள் இழிவையும் அழிவையும் தரும்; ஆதலால் அவற்றை அணுகாமல் வாழ்வதே அறிவுடைமையாம். எள்ளல் இளிவுகளை எதிர் அறிந்து விலக்கி உள்ளம் தெளிந்து வாழ்பவர் உயர்ந்த மேன்மக்களாய்ச் சிறந்து ஒளிபெற்றுள்ளனர்.

கள்ளன்மின் களவாயின யாவையும்;
கொள்ளன்மின் கொலை கூடிவரு மறம்;
எள்ளன்மின் இலர்என்று எண்ணி யாரையும்;
நள்ளன்மின் பிறர் பெண்ணொடு நண்ணன்மின். (க)

பொய்யன்மின் புறங்கூறன்மின் யாரையும்
வையன்மின் வடிவல்லன சொல்லிநீர்
உய்யன்மின் உயிர்கொன்று உண்டு வாழுநாள்
செய்யன்மின் சிறியாரொடு தீயன. (உ)
(வளையாபதி)

பழியான செயல்களை இவை வரைந்து காட்டியுள்ளன.

இத்தகைய இழிவுகளில் யாதும் இழியாமல் உத்தமனாய் உயர்ந்துகொள்ளவேண்டும். புகழுக்கு உரிய மூல காரணத்தை ஒருவன் போற்றிவரின் அது தானாகவே அவனை நாடி ஓடிவரும். உரிமையைச் செய்து கொள்ளாமல் பெருமையை அடைய விரும்பின் அது பிழையிடைப்பட்டுச் சிறுமையாய் முடியும்.

ஈனமான இழிந்த நிலைகளில் இருந்துகொண்டே தம்மை உயர்ந்தவராகப் பிறர் மதிக்கவேண்டும் என்று பலர் மதி கெட்டுத் திரிகின்றனர். மதிகேடு மானக் கேடாய் நின்றது.

"Men the most infamous are fond of fame,
And those who fear not guilt yet start at shame." (Churchill)

"மிகுந்த பழியுடையவரும் புகழை அவாவி அலைகின்றனர்; பழிக்கு அஞ்சாத அவர் மேலும் இலச்சை கெட்டு அவமானமாய் இழிந்து உழலுகின்றனர்" எனச் சார்லஸ் சர்ச்சில் என்பவர் இவ்வாறு குறித்திருக்கிறார். வினைசை வெட்கக்கேடாகிறது.

இகழ்ச்சிகளைத் தழுவிக்கொண்டே புகழ்ச்சியை விழைவது எவ்வளவு பேதைமை! பழி வழிகளை அடியோடு விலகியபோது தான் புகழ் அவனை விழிதிறந்து பார்க்கிறது. அந்தப் பார்வையைக் கூர்மையாயுணர்ந்து நேரே சீர்மையில் உயர்ந்து கொள்க.

ஈன நினைவால் இழிபழிகள் ஏறுமே
மானவினை செய்க மதித்து.

இதனை நினைவில் இருத்தி நிறைபுகழ் காணுக.

---

712 பல்லோர் வெறுத்துப் பழிக்கப் படுவதே
பொல்லாப் பழியாம் பொருந்தற்க—எல்லாரும்
போற்றி மகிழும் புகழ்வினையை எஞ்ஞான்றும்
ஆற்றி வருக அமர்ந்து. (உ)

இ—ள்.

பலரும் வெறுத்து இகழ்ந்து பேசுவது பழி என வந்தது; அந்த இழிநிலையை மருவாமல் புகழுக்கு உரிய உயர்வினைகளைச் செய்து வருக; அவ்வாறு வரின் இசையும் இன்பமும் பெருகி வரும்; இவ்வுண்மையை உணர்ந்து உய்தி பெறுக என்பதாம்.

மனிதன் மனச்சான்று உடையவன். அந்த மன உணர்ச்சி புனித நிலைகளில் பழகி இனிது வளர்ந்து வரின் அந்த மனிதன் தெய்வத்தேசை அடைந்து கொள்ளுகிறான். மனமே சாட்சியாக எவன் நடந்து வருகிறானே அவன் அரிய ஒரு நீதிமானாய் நிலவுகிறான்; பெரிய மகிமைகள் எல்லாம் அவனிடம் உரிமையாக வந்து அடைகின்றன. இந்தநியதியை இழந்தபோது மனிதன் இழிந்து படுகிறான். இழிநிலை தெரியாமல் அழிதுயருறுகிறான்.

அரச தண்டனைக்கு அஞ்சியும், தெய்வ தண்டனைக்குப் பயந்தும், ஏதாவது ஓர் ஊதியம் கருதி நசை மிகுந்தும் நடந்து வரும் நடைகள் எல்லாம் கடையர்களுடையன என்று இழிக்கப்பட்டுள்ளன. கீழ்மை நீங்க மேன்மை ஓங்குகிறது.

அச்சமே கீழ்களது ஆசாரம் எனக் கீழ்மக்களுடைய நிலைமைகளைத் தேவர் இப்படிக் குறித்துக் காட்டியுள்ளார். அடி, உதை, சிறை முதலிய கொடிய தண்டனைகளுக்கு அஞ்சி ஒழுங்காய் நடந்து வருவது இழிந்த மக்களின் நிலை என்றதனால்

உயர்ந்த மக்கள் தம் உள்ளமே சான்ருய் ஒழுகி வருவார் என்பதுஉணரவந்தது. மனச்சான்றேஅரிய சான்ருண்மையாம்.

இத்தகைய உயர் நிலையில் நில்லாது போயினும் இழி நிலையி லும் கூட இல்லாமல் இழிந்து போவது பழி நிலையாய் நின்றது.

உயர்ந்தோர் உள்ளமே சான்ருய் ஒழுகி உயர்கின்ருர்.

இழிந்தோர் அச்சமே ஆசாரமாய் அலமந்து திரிகின்ருர்.

இந்த இருவகையிலும் சேராமல் ஈனமாய் இழிந்து உழலு பவர் பழியாளராய்ப் பாழ்பட்டு நிற்கின்ருர். நல்ல அறிவுடைய மனிதப் பிறவியை அடைந்தும் மேலும் உயராமல் கீழ்போவது பாழான படுதுயரமாயுள்ளது. கீழ்மை தாழ்மையே தருகிறது.

பல்லோர் வெறுத்துப் பழிக்கப்படுவது பழி.

என்றது பழி என்னும் மொழிக்குப் பொருளை விளக்கியது.

பிழையான வழிகளில் இழிந்து செல்பவரையே உலகர் இகழ்ந்து பேசுகின்ருர். பொது மக்களுடைய வெறுப்புக்கும் இகழ்ச்சிக்கும் ஆளாகாமல் வாழ்பவனே ஆனவரையும் நல்ல ஆளாய் மேன்மையடைந்து நலம் பல பெறுகின்ருன்.

தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிறரால் கருதற்பாடு உணர்ந்து---தான்பிறரால்
சாவ எனவாழான் சான்ருேரால் பல்யாண்டும்
வாழ்க எனவாழ்தல் நன்று. (சிறுபஞ்சமூலம்)

ஒருவன் சிறந்தவனுய் வாழ வேண்டிய வகையை இது வரைந்து காட்டியுள்ளது. காட்சி கருதி நோக்கத் தக்கது.

தான் பிறந்த குடியை நினைந்து, இழிந்த செயல்களை ஒழிந்து, தனக்கு எவ்வழியும் யாதும் இளிவு நேராதபடி பாதுகாத்து ஒழுகி வருபவனே உயர்ந்த ஆண்மகனுய் ஒளி பெறுகின்ருன்.

இவன் செத்து ஒழிய மாட்டானு? என்று பிறர் வெறுத்து வையும்படி ஒருவன் உயிர் வாழலாகாது; இவன் நீண்ட ஆயு ளோடு பல்லாண்டு வாழவேண்டும் என்று சான்ருேர் உவந்து வேண்டும்படி ஒருவன் இனியனுய் வாழ வேண்டும்; மனித வாழ்வில் அதுவே புனிதமான பெரிய மகிமை வாழ்வாம்.

தீய காரியங்களைத் துணிந்து செய்பவனையே பலரும் இகழ்ந்து பழிப்பர்; அந்தப் பழிநிலை அவனது பாவத்தை அளந்து

காட்டுகிறது. பழியும் பாவமும் புகையும் தீயும் போல் நெருங்கிய தொடர்புடையது. ஒருங்கிய உறவாய் உறைந்திருப்பது.

குழித்துழி நிற்பது நீர்தன்னைப் பல்லோர்
பழித்துழி நிற்பது பாவம்---அழித்துச்
செறுவுழி நிற்பது காமம் தனக்கொன்று
உறுவுழி நிற்பது அறிவு. (நான்மணிக்கடிகை, 30)

குழியில் நீர்பெருகி நிற்பது போல் பழியுள் பாவம் பெருகி நிற்கும் என இது குறித்திருக்கிறது. பழி பாவம் என இரண்டும் ஒரு தொகையாய் வழங்கப்படுதலால் இவற்றின் நிலைகளையும் புலைகளையும் நேரே உணர்ந்து கொள்ளலாம்.

பழிக்கு நாணுகிற உணர்ச்சி மனிதனுக்கு உயர்ச்சியை அருளுகிறது; அது மழுங்கிய அளவு அவன் இழிந்து படுகிறான்.

பழிஅஞ்சான் வாழும் பசுவும் பரிவினால்
கொண்ட அருந்தவம் விட்டானும் --- கொண்டிருந்து
இல்லஞ்சி வாழும் எருதும் இவர்மூவர்
நெல்உண்டல் நெஞ்சிற்கோர் நோய். (திரிகடுகம், 79)

பழிக்கு அஞ்சாதவன் உருவில் மனிதனாயினும் ஒரு மிருகமே; அவன் நல்ல நெல் அன்னம் உண்பது நவையாம் என நல்லாதனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

பழி வழிகளை நாணி விலகாதவன் எவ்வழியும் இழிநிலையாளனாய் ஈனம் உறுகின்றான்; இவ்வாறு இழிந்து போகாமல் தெளிந்து விலகிச் சீர்மையா ஒழுகிஉயர்ந்து கொள்ளவேண்டும்.

---

713. இழிவு தருஞ்செயல் எள்அள வேனும்
அழவுதரு நஞ்செனவே அஞ்சி---விழுமியநாண்
ஆழ்வார் அகல்வார் அகத்துநாண் இல்லாதார்
வீழ்வார் பழிமேல் விரைந்து. (ங)

இ---ள்

இழிவான செயல் எள் அளவே ஆனாலும் அது கொடிய நஞ்சு என்று அஞ்சி மேலோர் அதனை விலகி வாழுவார்; கீழோர் அதனை விழைந்து தழுவி மகிழ்ந்து கொள்ளுவார் என்பதாம்.

உயர்வு இழிவு என்னும் மொழிகள் மேன்மையையும் கீழ்மையையும் முறையே உணர்த்தி வருகின்றன. இனிய நீர்மைகள் மேன்மையை அருளுகின்றன; கொடிய தீமைகள் கீழ்மையைத் தருகின்றன. நெறிமுறையே நீதியோடு ஒழுகி வருகிற மனிதன் பெரியவனாய் உயர்கின்றான்; அவ்வாறு இல்லாதவன் சிறியவனாய் இழிகிறான். பெருமையும் சிறுமையும் செயல்வழி வருகின்றன.

*ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்*
*எய்துவர் எய்தாப் பழி.* (குறள், 137)

ஒரு மனிதன் மேன்மை பெறுவதும், பழி அடைவதும் எதனால் என்பதை இது விழி தெரிய விளக்கியுள்ளது. மிருகங்களைப் போல் இழிந்து நில்லாமல் மனிதன் உயர்ந்த நிலையில் பிறந்திருக்கிறான். அறிவுடையனாய்ப் பிறந்துள்ள தனது பிறப்புக்கு ஏற்ப நெறிமுறையே அவன் ஒழுகி வர உரியவன்; அவ்வுரிமையில் வழுவிய போது இழிவும் பழியும் அவனைத் தழுவிக் கொள்கின்றன. நிலை தவறின் புலை புகுந்து துயர் புரிகின்றது.

ஒளி ஒழிய இருள் புகுதல் போல் ஒழுக்கம் ஒழிய இழுக்கம் வருகிறது. பிழைபாடான இழிவுகளில் இழியாமல் மனிதன் ஒழுகிவரும் அளவே அவனுக்கு உயர்வுண்டாகிறது; வழுவின் அவ்வளவிலேயே பழியும் துயரும் பெருகி விடும் என்க.

நஞ்சு என அஞ்சி என்றது இழிவான செயல் அழிவே தரும் ஆதலால் அதனைக் கொடிய விடம் என்று கருதி ஒழிய விட வேண்டும் என்பது உணர வந்தது. பழிக்கு அஞ்சுகின்ற அச்சம் ஒருவனை உச்ச நிலையில் உயர்த்தியருளுகின்றது.

அச்சமும் நாணமும் நல்ல ஒழுக்கத்தின் உறவுகளாயமைந்துள்ளன. மேலான நன்மைகளை அருளுகின்ற இவை இல்லாத போது அங்கே பொல்லாத தீமைகள் புகுந்து கொள்ளுகின்றன.

பழிக்கு அஞ்சாதவரே எதையும் துடுக்காகத் துணிந்து செய்ய நேர்கின்றார். பலரும் பரிந்து வருந்தும்படி ஒரு பெண்ணின் ஆடையைப் பண்டு ஒருவன் விரைந்து உரிந்து மானபங்கம் செய்தானே! அது எவ்வளவு ஈனம்! எவ்வளவு பழி!

*துச்சா தனனன்று சூழ்ந்தொன்றும் பேணாமல்*
*அச்சபையில் கற்புடையாள் ஆடைதனைக்---கொச்சையுறப்*

பற்றி யுரிந்தான் படுபழியர் நாணுவரோ
குற்றம் புரிந்து கொளல்.

துரியோதனன் தம்பி துச்சாதனன். மிக்க துடுக்கன். துரோபதையை அரசவையில் நிறுத்தி யாதும் கூசாமல் அவளது துகிலை உரிந்தான்; உடையை அவிழ்த்த அக் கடையனை உலகம் கொதித்து வைதது; அதனால் கொடிய பழியும் நெடிய பாவமும் அவனுக்கு நேர்ந்தன. முடிவில் அவன் குடியும் அடியோடு அழிந்தது. படியிலும் பல துயரங்கள் படிந்தன.

துரோபதை உரைத்தது.

அரசவையில் எனைஏற்றி அஞ்சாமல்
துகில் தீண்டி அளகம் தீண்டி
விரைசெயளி யினம்படிதார் வேந்தர்எதிர்
தகாதனவே விளம்பு வோரைப்
பொருசமரில் முடிதுணித்துப் புலால்நாறு
வெங்குருதி பொழிய வெற்றி
முரசறையும் பொழுதல்லால் விரித்தகுழல்
இனிஎடுத்து முடியேன் என்றாள்.

தன்னை அவமானப் படுத்திய அந்தப் பழிகாரன் குடி அடியோடு அழிந்தபோதுதான் தன் கூந்தலை முடிப்பேன் என்று துரோபதை இவ்வாறு சபதம் கூறி விரதம் பூண்டுள்ளாள்.

வீமன் குறித்தது.

வண்டாரும் குழல்பிடித்துத் துகில்உரிந்தோன்
உடற்குருதி வாரி அள்ளி
உண்டாகம் குளிர்வதன்முன் இக்கரத்தால்
புனல்உண்ணேன்; ஒருகால் என்கைத்
தண்டால்வெம் புனல்ஏற்றி மீதெழுந்து
விழுந்திவலை தண்ணீர் ஆகக்
கொண்டாவி புரந்திடுவன் இதுவிரதம்
எனக்கு எனவும் கூறினனே.

வீமன் இவ்வாறு வீர சபதம் கூறியிருக்கிறான். சபத நிலை எவ்வளவு கடுமையுடையது என்பதைக் கருதிக் காணவேண்டும்.

துச்சாதனன் செய்த இழி பழியால் கொடிய பாவத்தை அடைந்து அந்தக் குடி அடியோடு அழிந்தது. செல்வக்குடியில்

பிறந்தும் நல்ல அறிவில்லாமையால் பொல்லாங்கே புரிந்து புலைப் பழி மிகுந்து புல்லனா யிழிந்து பொன்றி ஒழிந்தான்.

"அச்சம்உள் அடக்கி அறிவுஅகத்தில்லாக்
கொச்சை மக்களைப் பெறுதலின் அக்குடி
எச்சம்அற்று ஏமாந்து இருக்கை நன்றே." (நறுந்தொகை)

பழி விளைக்கும் இழி பிள்ளைகளைப் பெறுவதினும் பெறாமல் இருப்பது நல்லது என இது குறித்துள்ளது. அஞ்ச வேண்டியதற்கு அஞ்சாமல் நெஞ்சம் துணிந்து நீசப் பழிகளைச் செய்பவன் நாசத் துயர்களை விளைத்து நரகத்தையே அடைகின்றான்.

கெட்ட பழக்கங்களால் நாணம் நைந்து போகிறது; போகவே இலச்சையின்றி இழிபழிகளில் மனிதன் செல்ல நேர்கின்றான். அந்தஇழிந்த பழக்கம் மிகுந்தபோது பழி தீமைகளில் கூச்சம் இன்றி எவ்வழியும் களித்து வெவ்வினையோடு திரிகிறான்.

"Small habits well pursued betimes
May reach the dignity of crimes." [Hannah More]

"சிறிய இழி பழக்கங்கள் உரிய பொழுதோடு தொடர்ந்து வளர்ந்து பெரிய பழிகள் ஆகின்றன" என ஹன்னாமோர் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

கெட்ட காரியங்களில் வெட்கம் அடைந்து சிறுபோதே அவற்றை விட்டு ஒழிக்க வேண்டும். ஈனப் பழக்கங்கள் மானத்தைக் கெடுத்து ஈனன் ஆக்கி விடும் ஆதலால் அவை யாதும் அணுகாமல் தன்னைப் பாதுகாத்து ஒழுகி வருவது ஒருவனுக்கு என்றும் நல்லதாம். நன்மை வளரப் புன்மை ஒழிந்து போம்.

---

714. நாணிழந்தார் எல்லா நலனும் ஒருங்கிழந்து
சேணிகந்த இன்பச் செலவிழந்து—மாணமைந்து
நின்ற உயிரும் நிலையழிந்து நீணிரயம்
ஒன்ற ஒழிவர் உழந்து. (௪)

இ—ள்

பழிநிலைக்கு நாணாதவர் அரிய நலங்களை ஒருங்கே இழந்து மறுமை நலனும் ஒருவி இழிவர்; உயிரும் நிலைகுலைந்து போய் நரக துயரங்களில் அழுந்தி அவர் வருந்துவர் என்பதாம்.

மனிதனுடைய உயர்வுக்கு உரிய இனிய இயல்புகளுள் நாணம் தலை சிறந்தது. தன்னைக் காணியாக் கொண்டவனைக் கோடி நலங்கள் கொள்ளும்படி பீடும் பெருமையும் தருவது. பட்டி மாடுகள் புகாதபடி தடுத்து வேலி பயிரைக் காத்து வருதல்போல் கெட்ட தீமைகளை விலக்கி நாண் உயிரைக் காத்து வருகிறது. இதனையுடையவர் எல்லா மேன்மைகளையும் எளிதே அடைந்து யாண்டும்பெருமையாய் உயர்ந்துகொள்ளுகின்றனர்.

ஊண்உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. (குறள், 1012)

ஒத்த பிறப்பினையுடைய மக்களுள் நாணுடைமையை உரிமையாக அடைந்தவரே தனிமையான சிறப்பினை அடைகின்றார் என இது உணர்த்தியுளது. பொன்னினும் மணியினும் உயர்வாகப் போற்றி நாணை அரிய பூண் ஆகப் புனைந்து கொள்ள வேண்டும் என்பார் நாணுடைமை என்றார். இந்த அணி இல்லையானால் அந்த மனிதன் உயிர் அழகு குன்றி அவலட்சணமாய் இழிந்து நிற்கின்றான். அவலநிலை அல்லல் தோய்ந்து நின்றது.

நாண்வேலி, நாண்உடைமை எனத் தேவர் குறித்திருக்கும் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன. தன்மையும் தகவும் நன்மைகளை நோக்கி நலம் பல துலக்கி வந்திருக்கின்றன.

பழிபாவங்கள் நேராமல் தன்னைப் பாதுகாத்து விழுமியனுக்கி வருதலால் ஒருவனுக்கு நாணம் உயிரின் அணியாய் ஒளி மிகுந்துள்ளது. ஆன்ம அழகு அதிசய எழிலாய் அமைந்தது.

தீய காரியங்களைச் செய்ய நாணி உள்ளம் கூசி ஒதுங்கும் ஒடுக்கமே நாணம் ஆதலால் அதனையுடையவர் எவ்வழியும் தூயவராய் மேன்மைகளையே அடைகின்றார். இத்தகைய நாணம் இல்லாதவர் வீணராய் விரிந்து வெய்ய பழிகளைச் செய்ய நேர்கின்றார். நேரவே பாவிகளாய் இழிந்துஅவர் பாழ்படுகின்றனர்.

எவன் பழிபாவங்களைச் செய்ய நாணுகின்றானோ அவன் புகழ் புண்ணியங்களை அடைய உரியவனாகிறான். தீமைக்கு அஞ்சிய அளவு நன்மைக்கு வருகின்றான். நல்லோர் எவ்வழியும் பொல்லாத பழிகளை அஞ்சி ஒழுகுதலால் அவர் வாழ்வு புகழால் பொலிந்துபுண்ணியத்தால்உயர்ந்து கண்ணியமாய்விளங்குகிறது.

கடைஎல்லாம் காய்பசி அஞ்சும்; மற்றுஏனை
இடைஎல்லாம் இன்னாமை அஞ்சும்,—புடைபரந்த
விற்புருவ வேல்நெடுங் கண்ணாய்! தலைஎல்லாம்
சொற்பழி அஞ்சி விடும். (நாலடியார், 297)

பொதுமக்கள் பசி வறுமைகளுக்கு அஞ்சுவார்; தலைமக்கள் பழிக்கு அஞ்சுவர் என இது குறித்துள்ளது. உத்தமர், மத்திமர், அதமர் என உலக மக்களை மூன்று வகையாக வகுத்து அவருடைய நிலைமை தலைமைகளை உணர்த்தியிருப்பது உய்த்து உணரத் தக்கது. பழி அச்சம் விழுமிய உச்சம் ஆகிறது.

உயர்ந்த மனிதனாக ஒருவன் ஆக வேண்டுமானால் இழிந்த பழிகளை யாதும் அணுகாமல் நீதியோடு அவன் ஒழுகி வர வேண்டும். அந்த ஒழுக்கம் அதிசய நிலையில் உயர்த்தி வரும்.

தன் வாழ்வில் புகழ் விளைந்துவர எவன் வாழ்ந்து வருகின்றானோ அவனே உயர்ந்த ஆண்மகன்; சிறந்த பேன்மகன்; அல்லாதவன் இழிந்தவனாகியே கழிந்து போகின்றான்; உயிர் இருந்தாலும் அவன் அழிந்தவனே ஆகின்றான்.

எவ்வளவு அழிதுயரங்கள் நேர்ந்தாலும் பழி வழிகளில் இழியாமல் விழுமியோர் ஒழுகி வருதலால் அவர் புகழ் ஒளி மிகுந்து புண்ணிய பதிகளாய் உயர்கதிகளை அடைகின்றார்.

வழிகெட வரினும் தத்தம் வாழ்க்கைதேய்ந்துஇறினும் மார்பம்
கிழிபட அயில்வேல் வந்து கிழிப்பினும் ஆன்றோர் கூறும்
மொழிகொடுவாழ்வது அல்லால் முறைகெடப்புறம்நின்றார்க்கும்
பழிபட வாழ்கிற்பாரும் பார்த்திபர் உளரோ பாவம்!
(இராமா, மாயாசனக, 66)

தன் தந்தையாகிய சனகன் போலவே மாய வடிவம் பூண்டு வந்து இராவணனோடு இசைந்து வாழும்படி தன்னை வேண்டிய வஞ்ச வேடனை நோக்கிச் சீதை இவ்வாறு கூறியுள்ளாள். பெற்ற தந்தை என்றே முற்றும் நம்பிப் பரிதபித்துத் துடித்தவள் அவனுடைய பழிமொழியைக் கேட்டதும் விழி சிவந்து வெகுண்டு இப்படித் தெளிவோடு விளம்பி நின்றாள்.

குடி அழிந்து குலம் அடியோடு ஒழிய மூண்டாலும், உடல் சிதைந்து உயிர் போக நேர்ந்தாலும் அரசர் பழிபட வாழார்

என அப் பதிவிரதை கூறியுள்ள வீரமொழிகளை விழியூன்றி நோக்கி வியந்து மகிழ்கின்றோம். உத்தம பத்தினியினுடைய உணர்வுரை உலக உள்ளங்களுக்குப் புத்தொளி தந்து தத்துவ நிலைகளை விளக்கி அரிய புனிதங்களை விளைத்துள்ளது.

பழி அடைபவர் எவ்வளவு இழிவினர்! அதனை அடையாதவர் எத்துணை உயர்வினர்! என்பது இங்கே உய்த்துணரவந்தது.

நெறிகேடான இழிசெயல்களைச் செய்வதனாலேயே பழிகள் வருகின்றன; இழிவான அப்பழிகளை அடைந்தவர் ஈனர்களாய் இழிந்து அழிகின்றார். அந்த அழிவு நேராமல் உயர்க.

பொல்லாத பழியால் புலைப்பட்டு அழியாமல் நல்ல புகழை நாடி வாழுக. அதனால் எல்லா மகிமைகளையும் எய்தலாகும்.

---

715. பல்லோர் இகழும் பழிச்செயலைப் பண்பில்லாப்
பொல்லார் தழுவிநின்று பொங்குவார்—எல்லாரும்
எள்ளி ஒதுங்கும் இழிமலத்தைப் பன்றிநாய்
அள்ளி விழுங்கும் அமர்ந்து. (ரு)

இ—ள்

பலரும் வெறுத்து இகழுகின்ற பழிச்செயலைப் பொல்லாத இழிமக்கள் தழுவி நின்று களிக்கின்றார்; அருவருப்பான ஈன மலத்தைப் பன்றி நாய் விழைந்து விழுங்குவதுபோல் அவர் நுழைந்து புகுந்து அழுந்தி உழலுகின்றார் என்பதாம்.

நல்ல அறிவுடையனாய்ப் பிறந்திருந்தும் பொல்லாத இழி பழக்கங்களால் மதியழிந்து மனிதன் பழி பாவங்களை அடைந்து அழி துயரோடு அவலமுற நேர்ந்தான். இசையும் இன்பமும் பெற உரியவன் வசையும் துன்பமும் மருவி அழிவது பரிதாபமாய் நின்றது. பழகிய இழிவுகள் படுதுயரங்களாயின.

உலகம் அருவருத்து வெறுப்பதைத் தன் உள்ளமும் அறியும்; ஆயினும் எள்ளலான பழக்க மிகுதியால் ஈன நிலைகளில் துணிந்து இறங்கி விடுகிறான். கள்ளத்தனங்களைக் கடுந் துணிவோடு செய்வது நெடும் பழக்கத்தால் நேர்ந்தது. ஒரு முறை தீமையைச் செய்ய நேரின் உள்ளம் மழுங்கிப் போகிறது;

போகவே பின்பு மானமும் நாணமும் இன்றி ஈனங்களில் துணிந்து புகுந்து மனிதன் மடிந்து போகின்ருன்.

பிறனுடைய மனையாளை விழைந்து புகுந்தால் அறம் அழியும்; புகழ் ஒழியும்; கேண்மை தொலையும்; பெருமை பாழாம்; இன்னவாருன இழவுகள் எய்துவதை அறிந்தும் யாதும் நாணுமல் அயலாளைத் தழுவிக் களித்து அவலமாய் அழிந்து கழிகிருன்.

பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்
இகவாவாம் இல்இறப்பான் கண். (குறள், 146)

பிறன் இல்லாளிடம் செல்பவனுக்கு வரும் அல்லல்களைத் தேவர் இவ்வாறு எடுத்துக் காட்டி யிருக்கிருர். பழி முதலிய இழி துயர்கள் அடைவதை அறியாமல் விழிகண் குருடனுய் அழிவுறுகின்ருன். நிலைமையை நினையாமல் நீசம் அடைகின்ருன்.

தன் மனையாளைப் பிறன் தழுவக் கண்டால் உள்ளம் கொதித்து அவனைக் கொல்லப் பாய்கின்ருன்; அத்தகைய அனுபவமுடைய மனிதன் அணுவளவும் சிந்தியாமல் யாதும் கூசாமல் அயலான் இல்லை அணுகுவது எத்தகைய மடமை! எவ்வளவு கொடுமை! இதனை ஈண்டு உய்த்துணர வேண்டும். உடலின் சிறு தினவுக்காக உயிரைஅடர்நரகில் தள்ளுகின்ருயே! பேதையே! என்று ஒரு காமுகனை நோக்கி ஓர் மேதை இரங்கியிருக்கிருர்.

இவ்வாருன பழிகளில் வீழ்பவன் பாழ் படுகின்ருன்.

பழிபடாமல் வாழ்கின்ற வாழ்வே வாழ்வாம். அவ்வாறு வாழ்பவரே விழுமிய மேலோராய் விளங்கி வருகின்ருர்.

பழிஅஞ்சிப் பாத்தூண் உடைத்தாயின் வாழ்க்கை
வழிஎஞ்சல் எஞ்ஞான்றும் இல். (குறள் ,44)

ஒரு மனிதனுடைய வாழ்வு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் தேவர் இவ்வாறு உணர்த்தி யிருக்கிருர். பழி யாதும் இல்லாமல் நல்ல வழிகளில் பொருளை ஈட்ட வேண்டும்; அங்ஙனம் ஈட்டிய பொருளைப் பிறர்க்கும் வகையா ஊட்டி உதவித் தான் உண்டு உயிர் வாழ வேண்டும்; அத்தகைய வாழ்வு உத்தமமாய் ஒளி சிறந்து என்றும் நித்தியமாய்ப் பெருகி நிலைத்து வரும் என்றதனுல் இதன் உயர்வை உணர்ந்து கொள்கிருேம்.

பழி கலவாததே விழுமிய வாழ்வாம்; பரம புனிதமாய் உயர்ந்து அது ஒளி சிறந்து திகழும். பொருள் எவ்வளவு மிகுந்திருப்பினும் அது பழி புகுந்திருப்பின் எவ்வழியும் இழிந்ததேயாம்.

பழிமலைந்து எய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை. (குறள், 657)

பழி வழியில்வரின் அச்செல்வம் இழிவாம் என இது விழி தெரிய விளக்கியுளது. கள்ளம் வஞ்சம் கபடம் முதலிய பிழை வழிகளில் பொருளைச் சேர்த்து ஒருவன் பெரிய செல்வனாய் வெளியேமினுக்கியிருப்பினும் அந்த இருப்பு நிந்தை மிகவுடையதே.

யாதும் பழி யுருதபடி தம்மைப் பாதுகாத்து அமைதியா யிருக்கும் விழுமியோரிடமுள்ள வறுமை அந்தப் பழியாளனுடைய செல்வத்தினும் கோடி மடங்கு மகிமையுடையதாம். பழியால் வந்த ஆக்கம் துயரத்தையே விளைத்து அவனை நரகத்தில் தள்ளி விடும் ஆதலால் அது இப்படி எள்ளப்பட்டது.

பழி வழியில் வந்த பொருள் முதலில் இனிமையாய்த் தோன்றினும் பின்பு சிறுமையும் துன்பமுமே தரும்; ஆகவே அந்தப் பழி ஆக்கம் எவ்வழியும் அழி துயரமே என்று கருதி அதனை அடியோடு ஒழிய விட வேண்டும்.

"Bread of deceit is sweet to a man; but afterwards his mouth shall be filled with gravel." (Bible)

"வஞ்சனையால் வந்த உணவு ஒரு மனிதனுக்கு முதலில் சுவையாயிருக்கும்; பின்பு அவன் வாய் மண்ணையும் கல்லையும் விழுங்கும்" என்னும் இது இங்கே எண்ணி உணர வுரியது.

பழி வினையால் எதையும் செய்யலாகாது; அவ்வாறு செய்யாதவரே தெய்வத் திருவருளையடைந்து உய்தி பெறுகின்றார். உயர்வும் இன்பமும் வரும் வழியை இதனால் உணர்ந்து கொள்கிறோம். இன்பம் பொருளில் இல்லை; புண்ணியத்தில் உள்ளது.

பழி படியின் அந்த மனிதன் இழிந்த கீழ்மகன் ஆகிறான்.

அது படியாவிடின் அவன் உயர்ந்த சான்றோனாய் ஒளி மிகுந்து நிற்கின்றான். கீழ்மை ஒழிய மேன்மை விளைகின்றது.

இழிந்த காரியங்களைச் செய்ய நாணுகின்ற நாணமே

மனிதனை உயர்ந்தவனுக்கி வருகிறது. மேலோனுடைய மனம் மொழி மெய்கள் கீழ்மையில் படியா ஆதலால் அவை என்றும் செம்மை தோய்ந்து சீர்மை வாய்ந்து சிறந்து திகழ்கின்றன.

கருமங்கள் இனியனவாயின் அங்கே புகழ் மணம் வீசுகின்றது; கொடியனவாயின் நெடியபழி நாற்றம் பரவுகின்றது.

பழியா வருவது மொழியாது ஒழிவது. (நறுந்தொகை,76)

வசையாக வருவதை வாயாலும் பேசலாகாது என அதிவீரராமன் இவ்வாறு பேசியிருக்கிறர். பழி புகாமல் எவ்வழியும் தன்னை ஒருவன் பாதுகாத்துவரின் அவன் புகழ்மகன் ஆகின்றன். அவ்வாறு ஆகாதவன் இழி மகனுய் இழிந்து படுகின்றன். புகழ் மனிதனைத் தெய்வம் ஆக்குகிறது; பழி அவனை ஈன மிருகமா இழித்துத் தள்ளுகிறது. உண்மையுணர்ந்து உய்தி யுறுக.

---

716. கள்ளுண்டல் பொய்த்தல் களவாடல் சூதுகொலை
எள்ளுண்ட காமம் இவைமுதலாத்—தள்ளுண்ட
பொல்லா தனபுரிதல் புன்பழியாம் அன்னதயல்
செல்லாதே தீமை தெளி. (சு)

இ—ள்

கள் களவு பொய் சூது கொலை முதலிய இழி நிலைகள் பழி பாவங்களைத் தருவன; அவற்றைச் சிறிது அணுகினும் பெரிய தீமைகள் விளைந்து விடும் ஆதலால் அவற்றின் அருகே செல்லாதே; அவ்வாறு வாழ்வதே யாண்டும் நல்லதாம் என்க.

நல்ல வழிகளில் பழகி வருபவனே எவ்வழியும் நலம் மிகவுடையனுய் உயர் நிலையை அடைகிருன். அல்வழி புகின் அவலமே அடைந்து அலமருகின்ருன். இழி பழக்கங்கள் மனிதனை ஈனன் ஆக்கி விடுதலால் அவன் மானம் மரியாதைகளை இழந்து மடிந்து போகிருன். அழிவு நிலையில் விழுவது முழுமடமையாம்.

கள்ளைக் குடித்தால் மதி மயங்குகிறது; மயங்கவே அறிவு கேடனுய் மனிதன் தீய காரியங்களைச் செய்ய நேர்கின்ருன்; நேரவே பழியும் பாவமும் அடைந்து அவன் அழிவுறுகின்ருன். குடியால் குடிகெடுதலால் அதற்குக் குடி என்று ஒரு பெயரும் வந்தது. என்னைக் குடித்தவனது உயிரையும், குடியையும் ஒருங்

கே குடிப்பேன் எனக் குடி கொடி கட்டி உள்ளது; அவ்வுண்மையை உணராமல் வடிகட்டிய முட்டாள்கள் அதைக் குடித்து அடியோடு அழிகின்றாரே! என்று ஒரு பெரியவர் பரிந்து இரங்கியுள்ளார்; அந்தப் பரிவு நிலை ஈங்கு அறிந்து கொள்ள வுரியது.

பொய் என்னும் சொல் பொள்ளலுடையது, அழிவு நிலையது என்னும் பொருளில் அமைந்தது. பொய் பேசுவது கொடிய பாதகம். பொய் பேச ஒருவன் இசைந்தான் ஆனால் அவன் களவு கொலை முதலிய பாதகங்கள் எதையும் செய்யத் துணிந்து விடுவான். பழி பாவங்களுக்கெல்லாம் மூல காரணமாய்ப் பொய் வழி கோலி வருதலால் அது கொடிய பாவமாய் நின்றது.

பொய் பேசாத அளவு மனிதன் புனிதன் ஆய் உயர்கின்றான்; அதைப் பேசிய அளவு அவன் நீசனாய் நாசமே அடைகின்றான். பொய் வெய்ய துயரங்களிலேயே வீழ்த்தி விடுகிறது.

சத்தியம் ஈசனுக்கு வடிவம்; ஆகவே அசத்தியத்தின் நிலையை நன்கு அறிந்து கொள்ளலாம். பெய் பேச நினைந்த போதே நெஞ்சம் நிலை குலைந்தது; நா பாழ்பட்டது; உயிர் நாசமாயது. இந்த நாச நிலைகளை உணராமல் நீசமாய்ப் பொய் பேசி மனிதன் அழிந்து படுவது பாசமயக்கின் நீடுதுயராய் நின்றது.

மெய் இனிய அமுதமாய் என்றும் இன்பமே அருளுகிறது.

பொய் கொடிய விடமாய் யாண்டும் துன்பமே தருகிறது.

பழியும் துன்பமும் தருவதை விழி தெரியாமல் தழுவி அழிவது முழு மூடமாயுள்ளது. புலையான பொய் ஒழிந்தவர் தலையான மேன்மைகளை நிலையாக நேரே எய்துகின்றனர்.

பொய்யாமை அன்ன புகழ்இல்லை; எய்யாமை
எல்லா அறமும் தரும். (குறள், 296)

பொய் பேசாமல் ஒருவன் பழகிவரின் புகழ்கள் யாவும் புண்ணியங்கள் எல்லாம் அவனைப் பொருந்தி நிற்கும் என்னும் இது ஈண்டு நன்கு நினைந்து சிந்திக்கத் தக்கது.

அரிய பல புகழ்களையும் பெரிய புண்ணியங்களையும் பொய்யாமை தரும் என்றதனால் கொடிய பல பழிகளையும், நெடிய

பல பாவங்களையும் போய் கொடுத்து விடும் என்பது அடுத்து அறியப்பட்டது. பாவியாய் நீ பாழ்படலாமா?

பொய் பேசிய போதே அந்த நாக்கு ஆற்றலை இழந்து விடுகிறது. ஒரு முறை பொய் பேசினவனைப் பின்பு எவரும் நம்புவதில்லை. அவன் உயிரோடு செத்த சவமாகவே சீரழிந்து வீழ்கின்றான். வாய் பொய்த்த போதே வாழ்வுகள் செத்தன.

தன் ஆன்மாவை நாசப்படுத்தும் நீசப் பொய்யைப் பேசின வன் பரமான்வின் திருவருளை அடியோடு இழந்தவனாயழிந்தே போகிறான். பொய்யால் விளையும் புலைகள் அடவிடலரியன.

பொய்யனை நீசன் மெய்யனை ஈசன் தொடர்பை இழந்து போனமையால் அவன் வெய்ய நரக துயரங்களையே அடைந்து ஐயோ! என்று அலமந்து யாண்டும் அவலமாய் உழல நேர்ந்தான்.

"பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே!
பொய்இலா மெய்யர் அறிவில்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவரவு அற்ற பொருளே!" (தாயுமானவர்)

பொய்யர் காணாதது; மெய்யர் காணும் பொருள் எனப் பரம்பொருளைத் தாயுமானவர் இவ்வாறு உள்ளம் உருகித் துதித்திருக்கிறார். பொய் பேசுவோர் எவ்வளவு நீசமான நாசங்களை அடைந்து அழிகின்றார் என்பதை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம். ஒரு சிறு பொய்யால் உயிர் பாழாகிறது.

"The least admixture of a lie will instantly vitiate the effect" (Emerson)

"கலப்பான சிறிய ஒரு பொய்யும் மனிதனுடைய மேன்மையை உடனே பழுது படுத்தி விடும்" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு நன்கு அறிய வுரியது.

நீசமான பொய்யைக் கூசாமல் பேசி மனித சமுதாயம் நாசமடைகிறதே! பொய் பேசாமல் சீவியத்தை நடத்த முடியுமா? என்று இந்நாளில் பலர் பேசவும் நேர்ந்துள்ளனர். சமுதாயம் எவ்வளவு மோசமாய்ப் பழுதுபட்டுள்ளது என்பதை இது

தெளிவாக வெளிப்படுத்தி நிற்கிறது.

வாய்மை தப்பினோர்கள் இந்த மானிலத்தில் ஈனராய்த்
தீய்மையுற்று மேலுளோர் பழிக்கவே திரிந்துபின்
தூய்மையற்ற கும்பியுள் துளைந்து அழுங்குவார் என
வாய்மனுப் பகர்ந்த வேத சாகைமுற்றும் அறையுமே.

(பிரமோத்தரகாண்டம்)

பொய்யர் பழி நரகு அடைவர் என இது குறித்துள்ளது.

களவு பொய் சூது முதலிய பழி நிலைகளை நீங்கி விழுமியோனாய் வாழுக. அவ்வாழ்வு எவ்வழியும் தெய்வீக இன்பமாம்.

---

717\. கள்ளன் எனும்பேர்தான் காதிலுறக் கேட்டாலும்
உள்ளம் கசந்துள் உளையுமே—கள்ளப்
பழிமக்கள் அந்தப் படுவினையைச் செய்தேன்
அழிகின்றார் அந்தோ அவம். (எ)

இ—ள்

கள்ளன் என்னும் பெயரைக் காதில் கேட்டாலும் உள்ளம் உளைந்து உயிர் வருந்துகிறது; பொல்லாத இழிவான அந்தக் களவைச் செய்து மனிதர் பழியடைந்து பாழாய் அழிவது கொடிய பரிதாபம் என்பதாம்.

இழிவான செயல்களால் மனிதன் பழிபாவங்களை அடைந்து பாழாகின்றான். கள்வன், திருடன், சோரன் என்னும் மொழிகள் பழியான பெயர்களாய் இழிவு குறித்து வந்துள்ளன. பிறர் வருந்தி ஈட்டி வைத்துள்ள பொருளைக் கரவாய்ப் புகுந்து கவர்ந்து போபவன் கள்வன் என நேர்ந்தான். ஆகவே சமுதாயத்துக்கு அவன் எவ்வளவு கொடிய தீய நோய் என்பது எளிது தெளிவாம். ஈனச் செயலால் மானம் மரியாதைகளை அடியோடு இழந்து அவன் குடியோடு இழிந்து அழிந்தான்.

களவு அழகைக் கெடுக்கும்.

என்பது பழமொழி. கள்ளன் என ஒருவனைச் சுட்டிச் சொல்லின் அது எள்ளல் இளிவுகளைக் கட்டிக் காட்டி ஈன நிலையை நீட்டி நிற்கும். எல்லாரும் வெறுத்து இகழுகின்ற பொல்லாத களவைத் தழுவி இழிவது அவலக் கேடாய்நின்றது.

உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கொள்வேம் எனல். (குறள், 282)

களவை மனதால் நினைத்தாலும் பாவம் எனத் தேவர் இவ்வாறு பரிந்து கூறியிருக்கிறார். தீதே என்ற ஏகாரத்தில் தொனித்திருக்கும் தொனிப் பொருளை நுனித்து உணர வேண்டும். நெஞ்சால் நினைத்தாலும் அந்த உயிரை நாசப்படுத்துகிற நீசத் தீமையைக் கூசாது செய்கின்றாரே! ஐயோ! எவ்வளவு மதியீனம்! எத்துணைக் கேடு! என்று தெய்வப் புலவர் பரிதவித்திருக்கிறார். பழி நிலையில் இழிந்து பாழாய் அழிகின்றாரே! என்று அவரது அழிவு நிலைக்கு இரங்கி யிருப்பது நுணுகி உணர வந்தது.

களவினால் பழியும் துயரமுமே அன்றி வேறு யாதொரு பலனும் கிடையாது. அதனால் ஒரு வேளை பொருள் சேர்ந்தாலும் அது விரைந்து அழிந்து அவலக் கேடாகவே முடிந்து விடும்.

"Thefts never enrich" (Emerson)

"களவுகள் ஒருபோதும் செல்வத்தை உண்டாக்கா" என எமர்சன் இவ்வாறு கூறியிருக்கிறார். தன்னை வஞ்சித்துக் கவரும் கள்வனைச் செல்வம் எள்ளி வெறுத்து இகழ்ந்து போதலால் அவன் ஏமாந்து ஈனத் துயரங்களையே அடைந்து நிற்கின்றான். திருடு அறிவைக் குருடு படுத்தி விடுதலால் அந்த உயிர்வாழ்வு எவ்வழியும் இருளாய் மருள்மண்டி மயலுழந்தே உழலுகின்றது.

"குற்றம் உள்ள நெஞ்சம் குறுகுறுக்கும்" என்னும் பழமொழியால் கள்ள மனத்தின் அல்லல் நிலையை அறிந்து கொள்ளலாம்.

"Suspicion always haunts the guilty mind:
The thief doth fear each bush an officer." (King Henry 6)

"குற்றமுள்ள மனத்தைச் சந்தேகம் எப்பொழுதும் வேட்டையாடுகிறது; தன்னைப் பிடிக்க வருகிற காவலாளி என்று புல்புதர்களையும் கண்டு கள்ளன் அஞ்சுகின்றான்" என்னும் இது இங்கு அறியவுரியது. நெஞ்சம் கலங்க நெடுந்துயர்களாகின்றன

அல்லலும் திகிலும் அச்சமும் கள்ளனை எப்பொழுதும் கொல்லாமல் கொல்லுகின்றன; அப்படியிருந்தும் அந்தப் பொல்லாத பழியில் இழிந்து புகுந்து அவன் புலையாடி அலைகின்றான்.

களவு நிலையில் அகப்பட்டால் கள்ளன் அடியும் மிதியும் பட்டு அவமானம் அடைகிறான்; அரச தண்டனையுறுகிறான்; மறுமையில் கொடிய நரக வேதனையில் அழுந்தி நைந்து படுகிறான். களவால் இவ்வாறு பழி துயரங்கள் தொடர்ந்து அடர்ந்து வருதலால் அதனை ஒழிந்து ஒழுகும்படி மேலோர் பரிந்து உணர்த்தியுள்ளனர். உரைகள் ஒளி புரிந்து வந்துள்ளன.

முளரிமுக நாகமுளை எயிறுழுது கீற
அளவில்துயர் செய்வர்இவண மன்னவர்கள் நாளும
விளைவரிய மாதுயரம வீழகதியுள் உய்க்கும்
களவுகட லுககக் கடிந்திடுதல் சூதே. (சீவகசிந்தாமணி)

பிளவுகெழு வெழுநரகம் எரிகொளுவல் ஈர்தல்
உளையவுடல் தடிவொடுறு துயரம விளைவிக்கும்
கிளையறவு தரும்அரிய புகழினை அழிக்கும்
களவுநனி விடுதல்அறம் என்று கருதென்றான்.
(சாந்தி புராணம்)

களவினால் இவ்வாறு அளவிடலரிய துயரங்கள் உளவாகின்றன; அப் பழி நிலையில் இழியாமல் வாழ்வதே நலமாம் என இவை குறித்திருத்தலைக் கூர்ந்து நோக்குக. கள்ளரை யானைக் காலில் இடுவதும், அதன் கொம்பால் குத்திக் கொல்லச் செய்வதும் பண்டு இந்நாட்டில் அரச தண்டனையாயிருந்து வந்துள்ளமையை நாகம் எயிறு உழுது கீற என்றதனால் அறிந்து கொள்ளுகிறோம். இழிவும் அழிவும் களவால் விளைகின்றன.

எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு. (குறள், 281)

கள்ளாமை வேண்டும் கடிய வருதலால்;
தள்ளாமை வேண்டும் தகுதி யுடையன்;
நள்ளாமை வேண்டும் சிறியாரோடு; யார்மாட்டும்
கொள்ளாமை வேண்டும பகை. (நான்மணிக்கடிகை, 87)

இவற்றை ஈண்டு உள்ளி உணர வேண்டும்.

எள்ளல் இழிவுகள் நேராமல் நல்ல மேன்மையை ஒருவன் அடைந்து வாழ வேண்டும் ஆனால் கள்ளாமையை விரதமாகக் கருதிப்பேணி உறுதியோடு யாண்டும் அவன் ஒழுக வேண்டும்.

———

718. இல்லாளை அஞ்சும் இழுதையும் ஏதிலான்
நல்லாளை நாடும் நடலையும்—கல்லாமல்
காலம் கழிக்கும் கலதியும் இம்மூவர்
ஞாலம் பழிக்கும் நவை. (அ)

இ—ள்

தனது மனைவிக்குப் பயந்து நடக்கும் பேயனும், பிறனுடைய மனையாளை விரும்பிக் களிக்கும் தீயனும், கல்லாமல் காலத்தைக் கழிக்கும் மூடனும் இவ்வுலகில் பழி நிலையங்களாம்; அவ்வாறு பழிபடாமல் வாழ்வதே விழுமிய வாழ்வாம் என்க.

ஒரு மனிதனது வாழ்க்கைக்கு இனிய துணையாய் இருப்பவள் மனைவி. வாழ்க்கைத் துணை என அவளுக்கு ஒரு பெயர் அமைந்திருத்தலால் அவளது நிலைமையும் நீர்மையும் தெரியலாகும். வீட்டிலிருந்து எல்லாக் காரியங்களையும் நன்கு நடத்துபவள் ஆகலால் இல்லாள் என நேர்ந்தாள். இந்த இல்லாள் நல்லாளாய் அமைந்தபோதுதான் அந்தக் குடும்பம் உயர்ந்து விளங்கும். அன்பு நலம் சுரந்து கணவனும் மனைவியும் பண்பு படிந்துவரின் வாழ்வு இன்பமாய்ப் பெருகி வரும். மாறுபடின் துன்பமாம். தன்பால் மரியாதையோடு பணிந்து ஒழுகி வரவுரிய மனைவியிடம் ஒருவன் அஞ்சி ஒடுங்க நேர்ந்தால் அவன் பஞ்சை ஆகின்றான். அச்சம் என்ற குறிப்பால் அவளது நச்சுத்தன்மையும் இவனது கொச்சை நிலையும் அறிய வந்தன. இவ்வாறு இல்லாளை அஞ்சுகின்றவன் நல்லது யாதும் செய்ய முடியாமல் அல்லலுழந்து எவ்வழியும் இழிந்து அவலமுறுகின்றான்.

இல்லாளை அஞ்சுவான் அஞ்சும்மற்று எஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். (குறள், 905)

இல்லாளை அஞ்சுகின்றவனது இழி நிலையைத் தேவர் இங்ஙனம் விழி தெரிய விளக்கியிருக்கிறார். மனைவிக்குப் பயந்தவன் பெற்ற தாய்க்குக் கூடச் சோறு போட மாட்டாமல் மாறுபட்டு மறுகி நிற்கின்றான். பெண்டாட்டி வாய்க்குப் பயந்து பேடியாயுள்ளவர் இந்நாட்டில் கோடியாயுள்ளனர். பிழைபாடான இப்பழி நீங்கி ஆண்மகன் ஆண்மையோடு மேன்மையாய் வாழ வேண்டும். அவ் வாழ்வே இனிய வாழ்வாம்.

அயலானுடைய மனையாளை ஒருவன் மயலாய் விரும்புவது கொடிய பழியாம். நெறிகேடான இந்த விழைவால் பலதீமைகள் விளைகின்றன. மனித சமுதாயம் நீசமாய் நாசமடைவதற்கு விபசாரமே மூலகாரணமாயுள்ளது. பிறனுடைய மனைவியை ஒருவன் விழைய நேரின் அவனுடைய மனைவி அயலானைத் தழுவ நேர்கின்றாள். தலைமையான நிலையிலுள்ளவர் தவறு செய்வது பலரையும் பழிச்செயல்களைச் செய்யத் தூண்டுவது போலாம். ஒரு பழி பல பழிகளுக்கும் வித்தாய் விரிகிறது. தொத்து நோய் போல் அது விரைந்து பரவித் தேசத்தைப் பாழாக்கி விடுகிறது. கெட்ட நடத்தைகளால் மனித இனம் கெட்டுக் கேடாய் மாய்ந்து போகிறது. கேடுகள் நாடுகளை நாசம் செய்கின்றன.

பெண்மை கற்பால் பெருமை பெறுகிறது; ஆண்மை சீலத்தால் மேன்மை அடைகிறது. கற்பும் சீலமும் இருபாலையும் அற்புத நிலையில் உயர்த்துகின்றன. இந்தப் புனித நீர்மைகளை மருவி வரும் அளவே மனித மரபு மாண்பாய் உயர்ந்து வருகிறது. வழுவிய பொழுது பழியும் பாவமும் தழுவி இழிவுறுகின்றது. உறவே எவ்வழியும் அழிவுகள் விளைகின்றன.

தருமநீதிகளை உணர்ந்து நெறி நியமங்களோடு ஒழுகி வருபவர் விழுமியராய் விளங்கி மிளிர்கின்றார். சிறந்த தன்மைகள் அமைந்த போதுதான் மனிதன் உயர்ந்தவன் ஆகின்றான். ஒழுக்கத்தால் உயர்கின்றான்; இழுக்கத்தால் இழிகின்றான்.

கல்வி நல்ல அறிவுகளை நல்கி மனிதனை மகிமைப் படுத்துகின்றது; அதனை இளமையிலிருந்தே பழகித் தெளிந்து கொள்வது சிறந்த மேன்மையாம். கல்லாது கழிந்து நின்றால் பொல்லாத மிருகமாய் அவன் இழிந்து படுகின்றான்.

பழி நிலையாளரை இழுதை முதலிய இழி மொழிகளால் வரைந்து குறித்தது அவருடைய ஈன நிலைகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள. குறிப்பு மொழிகள் கூர்ந்து நோக்க வுரியன.

இழுதை = பேதை, பேடி, பேயன்.

நடலை = கபடன், தீயவன், தூர்த்தன்.

கலதி = மூதேவி, மடையன், முட்டாள்,

அறிவும் ஆண்மையும் நெறியும் நீர்மையும் புகழ்ஒளி பரப்பி உயர் நலங்களை விளைத்து வருகின்றன. இந்த உயர்ந்த பண்புகளை உரிமையாக வுடையவர் பெருமைகள் மருவிச் சிறந்த மேன் மக்களாய் உயர்ந்து யாண்டும் சீரும் சிறப்பும் பெறுகின்றார்.

மேலான நல்ல தன்மைகளை இழந்தவர் கீழாயிழிந்து பாழா யழிந்து யாண்டும் அல்லல்களையே அடைகின்றார்.

புல்லர் கயவர் புலையர் கடையரெனப்
பல்லவர் கூறும் பழிமொழிகள்---அல்லல்
வழியி லிருந்து வளர்ந்து கிளர்ந்த
பழியின் விளைவே படிந்து.

பழி இயல்புகள் படிந்தபோது கயவர், கடையர் முதலான இழி மொழிகளால் மனிதர் இகழப்படுகின்றார். யாதொரு இழி வும் நேராமல் எவ்வழியும் தம்மைச் செம்மையாகப் பேணி வரு பவரே நன்மையாளராய் உயர்ந்து நலம் பல பெறுகின்றார்.

---

719. நல்ல பொழுதெல்லாம் நாசமாம் நன்பொருள்போம்
அல்லல் பலவந் தடையுமால்—புல்லனெனும்
சொல்லும் பழியும் தொடருமே சூதென்னும்
வல்வினையைத் தொட்ட வழி. (கூ)

இ—ள்

சூது என்னும் தீதினைத் தொடின் நல்ல பொழுது நாச மாம்; செல்வம் அழிந்து போம்; அல்லல்கள் பல அடர்ந்து வருத்தும்; சூதன் கபடன் அற்பன் என்னும் இழிபழிகள் தொடர்ந்து கொள்ளும்; அழிதுயர்கள் விரைந்து வரும் என்க.

சூதாடல் என்பது ஒருவகை விளையாட்டு. சூது, சதுரங்கம், சொக்கட்டான், தாயம் எனப் பல பிரிவுகளாய் இது மருவியு ளது. பொருளைப் பந்தயமாக வைத்து ஆடுவது ஆதலால் கொடிய கேடுகளுக்கெல்லாம் இது நெடிய நிலையமாயது. செல் வம் அழிவதோடு பேராசை பெருங்கோபம் வஞ்சகம் கபடம் முதலிய இழி துயரங்கள் யாவும் இதனால் விளைந்து வருகின்றன.

கள் உண்டவன் வெறிகொண்டு விழுதல்போல் சூதாடலைத் தோய்ந்தவன் அறிவும் திருவும் இழந்து அவலம் உறுதலால் கள்

ளூர், சூதும் தொடர்பாய்க் கலந்து எண்ண வந்தது. பழிபாவங்களை விளைத்துப் பல வழிகளிலும் அழி துயரங்களைச் செய்வது ஆதலால் சூது கொடிய தீது என்று கடிய நேர்ந்தது. தமக்குக் கேடு தருவதைக் கூடிக் குலாவுவது மூடமயக்கமாய் மூண்டு நின்றது. அவல ஆசையால் கவலைகள் ஆயின.

அமைதியான மனமே சுகத்தை அனுபவிக்கத் தகுதியாகின்றது. புனிதமான அந்த மனத்தைச் சூது புலைப்படுத்தி விடுகிறது; விடவே சூதன் என்றும் ஏதனாய்த் துன்பத்தையே அடைகின்றான். நீதிநெறி விலகிய தீதர்களே சூதர்களாய்த் துயரங்களை அனுபவித்தலால் அவர் பேதைப் பதர்களாய் நின்றனர்.

"சூதர் கழகம் அரவம் அருக்களம்
பேதைகள் அல்லார் புகாஅர்; புகுபவேல்
ஏதம் பலவும் தரும்." (ஆசாரக்கோவை, 98)

அறிவு பாழ் போன மூடர்களே சூதாடலை விருப்புவர்; அதனால் அழி துயரங்களே உளவாம் என இது உணர்த்தியுளது. ஏதம் = கேடு, துன்பம். பழிகேடுகள் சூதால் விளைகின்றன.

சூதாட்டத்தில் ஒருவன் மனம் புகுந்தால் பின்பு அவன் எதையும் விரும்பான்; அதுவே நாட்டமாய் அழி கேட்டையே காண்பான். உலகன் என்பவன் சூதாடலையே மிகவும் பழகினவன்; அதனை ஆடிக் கொண்டிருக்கும் போது அவனுடைய தாய் இறந்து போனாள்; அந்த இழவுச் செய்தியைச் சிலர் வந்து சொன்னார்; அதனைக் கேட்டும் அவன் எழுந்து போகவில்லை; சூதிலேயே அழுந்தியிருந்தான்.

ஈன்றதாய் செத்தாள் என அறிந்தும் பேராமல்
ஊன்றியசூ தாடி உலகனின்றான்--- ஆன்ற
அறிவுபாழ் போன அழிமகனுக் குண்டோ
உறுதிநலம் ஏதேனும் ஒன்று.

சூதாட நேர்ந்தவன் எவ்வளவு பேதையாய் இழிந்து அழிந்து போவான் என்பதை இதனால் நன்கு தெளிந்து கொள்கிறோம். வாழ்வை நாசம் செய்வதால் சூது நீசம் என நின்றது.

சூதாட்டத்தால் பொருள் அழிகிறது; மருள் விளைகிறது; பொழுது பழுதே பாழாகிறது. அருமையான காலத்தை அவலமாக் கழிப்பது எவ்வளவு அவகேடு! நவீன சூதாட்டமாக இக்

காலத்தில் சீட்டு ஆட்டம் நேர்ந்திருக்கிறது. பிரான்சு தேசத்திலி ருந்து ஓர் ஆண்டில் மட்டும் ஒரு கோடி ரூபாய்களுக்குச் சீட்டுக் கட்டுகள் இந்தியாவுக்கு வந்திருக்கின்றன. அந்தக் கேட்டுக் கட்டுகளால் இந்த நாட்டு மக்கள் எப்படிக் கெட்டு வருகின்றார்! என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம்.

குடிகாரன், கள்வன், பொய்யன் என்பதுபோல் சூதாடி என்னும் பெயரும் இழிவு குறித்து வருகிறது. பழியான இந்தச் சூதாட்டத்தில் சகுனி மிகவும் வல்லவன். பொல்லாத வஞ்சக னை அவன் பலவகையான சூழ்ச்சிகளைச் செய்து தருமரை நயமாக அழைத்துத் தன்னோடு பொழுது போக்குக்காகச் சிறிது நேரம் சூது ஆடும்படி சுமுகமாய் வேண்டினன். அவனு டைய குறிப்பை அறிந்த தருமன் சூதாடலை எள்ளி இகழ்ந்து உள்ளம் நொந்து கூறினன். அவ்வுரைகள் அயலே வருகின்றன.

அடியும்ஆண்மையும்வலிமையும்சேனையும்அழகும்வென்றியும்தத்தம்
குடியும் மானமும் செல்வமும் பெருமையும் குலமும் இன்பமும்தேசும்
படியு மாமறை ஒழுக்கமும் புகழும்முன் பயின்ற கல்வியும் சேர
மடியுமால் மதியுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ? மனம்வையார்.

குழகராய் இளமடந்தையர்க்கு உருகுவோர் குறிப்பிலாமையினாலும்
பழகுவார் மிகச் சிந்தைநோய் தாங்களே படுக்குமாறு உணராமல்
அழகு பேரறி வாகவே கொண்டவர் அறத்தொழில் புரியாமல்
கழகம் ஆடவும் பெறுவரோ? இதனினும் கள்ளுணல் இனிதன்றே.(2)

மேதகத்தெரி ஞானநூல் புலவரும் வேத்துநூல் அறிந்தோரும்
பாதகத்தில் ஒன்று என்னவே முன்னமே பலபடப் பழித்திட்டார்;
தீதகப்படு புன்தொழில் இளைஞரிற் சிந்தனை சிறிதின்றித்
தோதகத்துடன் என்னையோ சகுனிதன் சூதினுக்கு எதிர் என்றான். (3)
(பாரதம்)

சூதாடலால் நேரும் பழி துயரங்களைக் குறித்துத் தருமன் இவ்வாறு பரிந்து உரைத்திருக்கிறான். தோதகன் என்று சகுனி யைச் சுட்டியிருப்பது அவனுடைய கெட்ட நிலை தெரிய வந்தது.

தோதகம் = வஞ்சனை, கபடம்.

மிகவும் தீதான செயல் என்று சூதாடலை இங்ஙனம் தருமன் இகழ்ந்து ஒதுங்கியும் சகுனி வலிந்து புரிந்த வஞ்சச் சூழ்ச்சியால் அதில் புகுந்தான். அதனால் அரசிழந்து அருந் துயருழந்து தம்பியரோடு கானகம் போய் வெம்பி வருந்தினன்.

பாரதத் துள்ளும் பணயம்தம் தாயமா
ஈரைம் பதின்மரும் போர் எதிர்ந்து ஐவரொடு
ஏதில ராகி இடைவிண்டார் ஆதலால்
காதலரொடு ஆடார் கவறு (பழமொழி, 52)

சூதாட்டத்தின் அழிகேடுகளை விழிதெரிய விளக்கி அதனை யாண்டும் தீண்டலாகாது என இது உணர்த்தியுள்ளது. உறுதி யுண்மைகளைக் கருதியுணர்ந்து வாழ்வதே பெரிதும் நன்மையாம்.

---

720. நீதியொடு முன்னுள் நிலவலயம் ஆண்டநளன்
சூதொருகால் தீண்டச் சுடர்முடிபோய்—காதலுறும்
இல்லாளும் நீங்க இடர்கோடி எய்தினன்
ஒல்லாதோ பொல்லா துறின். (ம)

இ—ள்

இந்த உலகத்தை நீதிமுறையோடு ஆண்டு முன்பு அரசு புரிந்து வந்த நளமகாராசன் ஒரு முறை சூது ஆட நேர்ந்தான்; அதனால் மணிமுடி துறந்து நாடு இழந்து மனையாளையும் பிரிந்து கொடிய பல துயரங்களை அடைந்தான்; பொல்லாத பழிச் செயல் ஒன்றால் அல்லல் பல நேரும் என்பதை உலகம் அவன்பால் உணர்ந்து தெளிந்து உருகி நின்றது என்பதாம்.

நெறி நியமங்களோடு ஒழுகிவரும் அளவே மனிதன் உயர்ந்து வருகிறான். அந்நிலை வழுவினால் பல துயரங்கள் புகுந்து கொள்கின்றன. வழி விலகியபோதே அழிவுகள் நேர்கின்றன.

நளன் நிடத நாட்டு மன்னன். மாவிந்தம் என்னும் நகரிலி ருந்து அரசு புரிந்தவன். சிறந்த நீதிமான். நேர்மையும் கருணை யும் நெறியும் உடையவன். இத்தகைய உத்தமன் கால வேற்று மையால் புட்கரன் என்னும் சிற்றரசனோடு ஒருமுறை சூதாட நேர்ந்தான். "ஐயோ! அது தீது!" என்று மந்திரிகள் தடுத்தார்.

ஐயநீ ஆடுதற்கு அமைந்த சூது மற்று
எய்துநல் குரவினுக்கு இயைந்த தூது; வெம்
பொய்யினுக்கு அருந்துணை; புன்மைக்கு ஈன்றதாய்;
மெய்யினுக்கு உறுபகை; என்பர் மேலையோர். (1)

சீலம்நல் தருமம்மெய் சிதைக்கும் தெண்திரை
வேலைமுற் றிருநிலக் கிழமை வீழ்த்திடும்
மாலுறுத் திடுங்கவறு ஆடல் மன்ன கேள்
கோலிழுக்கு அரசர்தம் கொள்கைத்து என்பவே. (2)

எள்ளுக சூதினை இகலி வென்றதூஉம்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற அமைத்திடும் உணவை ஓர்கிலாப்
புள்ளினம் அருந்தின போலும் என்பவே. (நைடதம்)

அமைச்சர் இவ்வாறு சூதாடலின் தீமைகளை எடுத்து உரைத்தும் நளன் கேளாமல் அதனை ஆடினன். அதனால் அரசினை இழந்து அடவியில் அலைந்து அல்லல் பல அடைந்தான்.

"வல்லாடு ஆயத்து மண்ணரசு இழந்து
மெல்லியல் தன்னுடன் வெங்கான் அடைந்தோன்."
(சிலப்பதிகாரம்)

சூதால் நளன் அல்லல் உழந்த நிலையை நூலோர் பலரும் இங்ஙனம் குறித்துள்ளனர். பெரிய மதிமான்; அரிய போர் வீரன்; சிறிது வழுவிப் பிழைசெய்ய நேர்ந்தமையால் விழுமிய நிலைமை குலைந்து பழியும் துயரும் படிந்து பரிந்து நொந்தான்.

அல்லல் பல தருவது ஆதலால் சூது பொல்லாதது என நல்லோரால் எள்ளப்பட்டது. அதன் பழி விளைவுகளையும் பாவத்தையும் நுனித்து நோக்கி விழுமியோர் வெறுத்திருக்கின்றனர்.

சிறுமை பலசெய்து சீரழிக்கும் சூதின்
வறுமை தருவதொன் றில். (குறள், 934)

சூதாட நேர்ந்தால் பொருள் அழிந்துபோம்; புகழ் ஒழிந்து போம்; உயர்ந்த மேன்மைகள் யாவும் இழிந்துபடும். சிறுமையும் வறுமையும் சேர வரும் எனத் தேவர் இங்ஙனம் குறித்திருக்கிறார்.

உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானம் சிதைக்கும்--மருவும்
ஒருவரோடு அன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து. (1)

அறத்தைவேர் கல்லும் அருநரகில் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்--மறத்தையே
பூண்டுவிரோதம் செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து. (2) (நளவெண்பா)

முன்னர் விளையாடி முட்டுவார் முட்டினுல்
தன்மை திரிந்து சலமதோன்றும்---பின்னர்
மிகாதோ வெகுளி வெகுண்டால்அச் சூது
தகாதோ தகுவதோ தான். (பாரதம்)

ஓதலும் ஓதி உணர்தலும் சான்ருேரால்
மேதை எனப்படு மேனமையும்---சூது
பொரும்என்னும் சொல்லினுல் புல்லப் படுமேல்
இருளாம் ஒருங்கே இவை. (அறநெறிச்சாரம்)

சூதின் தீமைகளை இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளையும் குறிப்புகளையும் கூர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

மனிதன் மன அமைதியுடன் புனிதமாய் வாழவேண்டும்; அந்த வாழ்வால் இன்பமும் புகழும் இனிது பெருகிவரும். இனிமையான வாழ்வு நெறி முறைகளால் நேர்ந்து வருதலால் அதனைத் தனியுரிமையாக அடைய விரும்புகின்றவன் தவமுன பிழை வழிகளில் யாண்டும் மறந்தும் இறங்கலாகாது.

சூதால் வஞ்சனை விளைகிறது; பொருளாசை விரிகிறது; மருளும் மையலும் பெருகி எவ்வழியும் வெய்ய துயரங்களே தொடர்ந்து அடர்கின்றன. அவலக் கவலைகளையே விளைப்பது ஆதலால் அதனோடு யாதும் பழகாமல் விலகி விடுதலே நல்லது.

வசை படியாமல் வாழ்வதே வாழ்வாம்; அது படிய நேரின் அவ்வாழ்வு தாழ்வாய் இழிந்து படும். தன் வாழ்வில் பழி படிந்தபொழுது அம்மனிதன் இருந்தும்இறந்தவனாய் இழிவடைந்து கழிகின்ருன். அழிவு நிலையை அறியாதிருப்பது அவலமாம்.

நல்ல கருமங்களையே நாடிச்செய்து நெறிமுறையே மனிதன் ஒழுகி வரவுரியவன்; அரிய நிலைமையில் வந்துள்ள தனது பெரிய தலைமையை மறந்து சிறிய புலைகளில் இழிந்து படுவது கொடிய மடமையாம். மடமை நீங்கிய வாழ்வே மகிமையாகும்.

இசைபெற வந்த இனிய பிறப்பை
வசைபெற வைத்து வழுவாய்---நசையுழந்து
நினறு திரிதல் நெடுநீசமாம் அதனுல்
என்றும் துயரே எழும்.

நீ இசைபெறவே வந்துள்ளாய்; வசைபெறலாகாது; அது சேர நேரின் இழிவும் துயரும் வழிவழியே உன்னை வருத்தி அழிக்கும் என இது உணர்த்தியுள்ளது. வந்த வரவு தெரிந்து

வசை ஒழிந்து வாழ்பவனே எந்த வகையிலும் இசைமிகப் பெற்று இன்ப நலங்களை எய்துகின்றான்.

தன்னை நல்லவன் என்று பிறர் புகழ்ந்து சொல்லவேண்டும் என்னும் ஆசை எல்லார் உள்ளங்களிலும் உறைந்திருக்கிறது; இருந்தும் நல்ல வழிகளில்செல்லாமல் பொல்லாத இழிவுகளையே விழைந்து செய்து புலைப்பழிகளையடைந்து பொன்றிமுடிகின்றார்.

தமக்கு நேர்கின்ற அழி துயரங்களை அறிந்துகொள்ளாமல் இழிபழிகளில் விழுந்து தவிப்பது ஈனமூடமாயுள்ளது. மதியும் மானமும் உடைய மேன்மக்கள் பழிநிலைகளை எவ்வழியும் அணுகார்; யாண்டும் புகழ் நலங்களைப் பேணிப் புண்ணிய நிலைகளை மருவி எவ்வழியும் செவ்வியராய் அவர் சிறந்து வாழுவார்.

பாவமும் ஏனைப் பழியும் படவருவ
சாயினும் சான்றவர் செய்கலார்; சாதல்
ஒருநாள் ஒருபொழுதைத் துன்பம் அவைபோல்
அருநவை ஆற்றுதல் இன்று. (நாலடி, 295)

சான்றோர் இயல்பை இது குறித்துள்ளது.

இறந்துபட நேர்ந்தாலும் பழிபாவங்களை அவர் செய்ய இசையார் என்றதனால் அவரது மனநலமும் மதிமாண்பும் இனிது புலனும். சால்புடைமை சாலவும் மேன்மையாம்.

பழிபடாமல் வாழ்பவரே ஒளிமிகப்பெற்று உயர்ந்து திகழ்கின்றார்; புனிதமான அந்த நிலையில் வாழ்ந்து வருவதே என்றும் இனிதாம். அல்லதை நீக்கி நல்லதை நோக்கி வாழுக.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பழி என்னும் சொல் இழிவு மிகவுடையது.
மேலோர் இகழ்ந்து பழிப்பது பழி என வந்தது.
மனிதன் அதனை மருவலாகாது.
மருவின் இருமையும் இழிவாம்.
பழிபடியின் அழிவு அடையும்.
இழிசெயல்களால் அது எழுகின்றது.
ஈன வழிகளில் இழியலாகாது.
மானம் மரியாதைகளை மருவி வரவேண்டும்.
இசை தழுவின் வசை ஒழியும்.
பழி நீங்கி வாழ்வதே விழுமிய வாழ்வாம்.

எஉ-வது அதிகாரம் முற்றிற்று.

# எழுபத்து மூன்ருவது அதிகாரம்.

## பாவம்.

அஃதாவது தீய வினைகளால் விளையும் தீமை. உயிரைத் துய ரப்படுத்தி எவ்வழியும் அல்லல் அழிவுகளைத் தருகிற பொல்லாத பாவத்தை யாண்டும் யாதும் தீண்டலாகாது என இது உணர்த் துகின்றது. பழியோடு படிந்து வருவது ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது. வைப்பு முறை உய்த்து உணரத்தக்கது.

721 இன்பம் கருதி இயலும் மனிதஇனம்
துன்பம் மருவித் துடித்தல்தான்—என்பயனென்று
எண்ணி ஒருவன் இடர்நீங்கி வாழுமேல்
பண்ணுமோ பாவம் படிந்து. (க)

இ—ள்

எவ்வழியும் இன்ப சுகங்களையே நாடி மனிதக் கூட்டம் இயங்கி வருகிறது; வரினும் துன்பங்களை அடைந்து துடிக்கின் றன. அதற்குக் காரணம் என்ன? என்று ஒருவன் கருதி உணர் வான் ஆனுல் பின்பு யாண்டும் அவன் இடர் செய்யான்; எவ் வழியும் இனியதே செய்து உயர்ந்து உய்வான் என்பதாம்.

உண்மை நிலைகளை ஊன்றி உணராமையினுலேயே மனிதன் புன்மையடைந்து புலையுறுகின்ருன். அறியாமை, மடமை, அஞ் ஞானம் என்னும் மொழிகள் மனிதன் மதிகேடனுய் மறுகியுழ லும் இழி நிலைகளை வெளியே தெளிவாக விளக்கி நிற்கின்றன. கெட்ட நினைவுகளால் கேடுகள் விளைவதை உய்த்துணராமல் ஊனமா யுழல்வது யாண்டும் கொடிய ஈனமேயாம்.

ஏதேனும் துன்புற நேரின் எவனும் அஞ்சி அலமருகின் ருன். இன்புறவரின் உள்ளம் உவந்து கொள்ளுகின்ருன். இந்த அனுபவ நிலைகள் மனித சமுதாயத்துள் யாண்டும் மருவியுள் ளன. இன்ப நலங்களையே என்றும் இயல்பாக அவாவியுள்ள மனிதன் அதற்குரிய மூலகாரணங்களை எவ்வழியும் மறவாமல் செவ்வையாய்ச் செய்து வரவேண்டும்.

துன்பங்கள் யாவும் தீவினைகளிலிருந்து விளைந்து வருகின் றன. வித்தும் விளைவும் நன்கு உய்த்து உணர வுரியன.

இன்பங்கள் எல்லாம் நல்வினைகளிலிருந்து உளவாகின்றன.

தாம் செய்த வினைப்பயன்கள் தம்பால் வந்து சேருதலால் மக்கள் அந்த வினைப்பயன்களை அனுபவிக்க நேர்ந்துள்ளனர்.

இந்த உண்மையை உணர்ந்துகொள்வதே மனிதனுக்கு முதன்மையான நன்மையாம். ஆகவே மெய்யறிவாளனாக அவன் வெய்ய துயரங்களை நீங்கிச் செய்யனாய் உய்தி பெறுகின்றான்.

மனிதனுடைய வாழ்வும், அவன் அடைகிற சுகதுக்கங்களும் அவன் செய்த வினைகளின் வழியே வந்துள்ளன. வேறு எந்த வகையிலிருந்தும் அவை வரவில்லை. தன் சொந்த விளைவையே துய்க்க வுரியவனாய் எந்த மனிதனும் இங்கு வந்திருக்கிறான்.

நல்ல சுகபோகங்களை நல்வினையே நல்கிவருதலால் அதனைச் செய்தவன் சிறந்த பாக்கியவானாய் உயர்ந்து இன்ப நலங்களை நுகர்ந்துவருகிறான். விதைத்தவன் அதன்விளைவுகளை அடைகிறான்.

நல்வினைப்பின் அல்லால் நறுந்தா மரையாளும்
செல்லாள் சிறந்தார்பின் ஆயினும்---நல்வினை தான்
ஓத்தும் ஒழுக்கமும் தானமும் உள்வழி
நீத்தல் ஒருபொழுதும் இல். (அறநெறிச்சாரம், 124)

செல்வத்தின் அதி தேவதையான இலட்சுமி நல்வினையாளரையே நயந்து நிற்பள்; அவர் பின்னேயே எப்பொழுதும் தொடர்ந்து செல்வள்; பிறரைத் திரும்பியும் பார்க்கமாட்டாள்; இவ்வாறு திருவை வசப்படுத்தியுள்ள நல்வினைதான் யாது? எனின் உண்மையறிவும் ஒழுக்கமும் உபகாரமுமேயாம் என இது உணர்த்தியுள்ளது. தூலம் சூக்குமம் காரணம் என மனிதனுக்கு மூன்று சரீரங்கள் அமைந்திருத்தல்போல் உபகாரம் முதலிய மூன்றும் நல்வினைக்கு உருவங்களாம்; ஆகவே அந்த உண்மை ஈண்டு நுண்மையாக உணர வந்தது.

செல்வம் முதலிய பல்வகை நலங்களையும் உதவி நல்வினை இன்பங்களை ஊட்டும்; வறுமை முதலிய சிறுமைகளைத் தந்து தீவினை துன்பங்களைக் கூட்டும் ஆதலால் அல்லலான பாவத்தை மனிதன் யாதும் அணுகலாகாது. அணுகின் அவலமேயாம்

நல்வினை அடைந்த காலை நனிநலம் திளைப்பர்; நன்மை
அல்வினை அடைந்த காலை அல்லலில் துளைவர், எல்லாம்

தொல்வினை வழிய தாகும் தோன்றனு பவங்கள் தந்தம்
புல்வினை யால்என்று எண்ணல் புலமையோ ரிடத்தின்றாமால்.
(குசேலர்)

தான் செய்த நல்வினையினால் ஒருவன் இன்பம் அடைகிறான்; அல்வினையால் அல்லல் உறுகிறான் என வினையின் விளைவுகளை விழிதெரிய விளக்கி இது தெளிவாக உணர்த்தியுளது.

தான் சுகமாய் இனிது வாழவேண்டும் என்று விரும்புகிறவன் அவமான காரியங்களைச் செய்யலாகாது. செய்தால் வெய்ய துயரங்கள் தொடர்ந்து வருத்தும்; அப்பொழுது ஐயோ! என்று அழுது பதைப்பதால் யாதும் பயன் இல்லை; முன்னதாகத் தீதுசெய்யாமல் ஒதுங்கி வாழ்வதே இனிய உய்தியாகும்.

பாவம் என்னும் சொல் பயங்கரமானது; கொடிய துயரங்களைத் தருவது என்னும் குறிப்பினையுடையது. மனிதன் செய்கிற தீய செயல்களே பாவமாய்ப் பழுத்து வருவதால் அது நோய்களை விளைத்து நொந்து தவிக்கச் செய்கிறது.

தீவினை மறமே செடியே அகமே
துரிதம் கலுடம் பாவம் ஆமே. (பிங்கலம்)

பாவத்தின் பெயர்கள் இங்ஙனம் குறிக்கப்பட்டுள்ளன.

கொடிய தீமைகளின் பிண்டமே பாவம் என நின்றது. பிறர் அஞ்சி வருந்தத்தக்க துன்பங்களைச் செய்பவர் பாவிகளாய் வருதலால் அவர் யாவராலும் வெறுக்கப்பட்டு அடுநரகங்களை அடைந்து படுதுயரங்களையே உறுகின்றார்.

பொல்லாத பாவத்தோடு ஒருவன் பழக நேர்ந்தபோதே நல்ல இயல்புகள் எல்லாம் அவனைவிட்டு விலகிவிடுகின்றன. விடவே விடத்தினும் கொடியனாய் விரிந்து எத்திறத்தும் துயர் விளைத்து இழிந்து படுகிறான்.

அறத்தைத்தின்று அருங்கருணையைப் பருகிவேறு அமைந்த
மறத்தைப் பூண்டுவெம் பாவத்தை மணம்புணர் மஞ்ஞளர்
நிறத்துக் காரன்ன நெஞ்சினர் நெருப்புக்கு நெருப்பாய்ப்
புறத்துப் பொங்கிய பங்கியர் காலனும் புகழ்வார்.
(இராமா, மூலபலம், 6)

மூலபலத்தில் சேர்ந்துள்ள அரக்கர் சிலரை இது குறித்து வந்துள்ளது. அருள் அறம் யாதும் அறியாதவர்; கோபத்தோடு

கொலைகளே புரிபவர்; பாவத்திலேயே புரண்டுகளிப்பவர் எனக் கவி அவரை இவ்வாறு விளக்கியிருக்கிருர். பாவத்தை மணம் புணர் மணுளர் என்று குறித்திருக்கும் குறிப்பு கலைச்சுவை தோய்ந்து உவப்பு வாய்ந்து வியப்பை விளைத்துள்ளது.

பாவம் கொடிய துயரங்களை விளைத்து உயிரைப் பாழ்படுத்தும்; அதனோடு சிறிதும் பழகலாகாது; இனிய நீர்மைகளையே பழகிப் புனிதனுய் உயர்ந்து தனிமகிமைகளை உரிமையா அடைக.

---

722 அல்லல் உயிர்கள் அடைய வருவவெலாம்
பொல்லாத பாவமாப் பொங்கியே—எல்லா
வழியும் துயரை வளர்த்துக் கொடிய
அழிநரகில் தள்ளும் அது. (உ)

இ—ள்

உயிர்கள் அடைகிற துயரங்களுக்கெல்லாம் பாவமேயாண்டும் மூலகாரணமாய் மூண்டுள்ளது; அது எவ்வழியும் அல்லல்களை விளைத்து வருத்திக் கொடிய நரகில் உயிரைத் தள்ளிவிடும்.

மனிதனிடமிருந்து செயல்கள் நிகழ்கின்றன. அவை நல்லவை தீயவை என அயலே அளந்து சொல்லப்படுகின்றன. பிற உயிர்களுக்கு இதமாய் வருவன நல்லவை ஆகின்றன; இடராய் நேர்வன தீயவை என நின்றன. நன்மையும் தீமையும் அவற்றின் தன்மைகளால் அமைந்து வருகின்றன.

ஒருவனுடைய செயல் இனியது ஆயின் அவன் புனிதனுயுயர்கின்ருன்; இன்பநலங்கள் யாவும் அவனுக்குத் தனி உரிமைகளாய் அமைகின்றன. செயல் கொடியது ஆனல் அவன் பாவியாயிழிகின்ருன்; துன்பங்கள் எல்லாம் அவனைத் தொடர்ந்து கொள்கின்றன.கொள்ளவேவேதனைத்தீயால்வெந்துதவிக்கிருன்.

இன்பமும் துன்பமும் தனது செயல் இயல்களால் விளைந்துவருதலால் தானே அவற்றிற்கு மூலகாரணன் ஆகின்ருன்; ஆகவே அவற்றைப் பூரணமாக அவன் அனுபவிக்க நேர்கின்ருன். அந்த வினைப்போகங்களை நுகரவே பிறவிகள் அவற்றின் நிலைகளுக்கு ஏற்ப விரிந்து வந்துள்ளன. வினைவிளைவுகளும் நுகர்வுகளும் பெரிய அதிசய மருமங்களாய் மருவி நிற்கின்றன.

இந்தப் பிறவியில் ஒருவன் செல்வம் முதலிய சிறப்புகளை அடைந்து சிறந்த போகங்களை நுகர்ந்துவரின்முன்னமே அவன் நல்ல வினைகளைச் செய்தவனாகின்றான்; வறுமை முதலிய சிறுமைகளை அடைந்து துயரங்களில் அழுந்திவரின் முன்பு பொல்லாத தீவினைகளைச் செய்தவன் என்று தெரிய வருகின்றான்.

இன்பம் இடர்என்று இரண்டுற வைத்தது
முன்புஅவர் செய்கையி னாலே முடிந்தது;
இன்பம்அது கண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம் அறியாரே. (திருமந்திரம், 267)

முன்பு பிறவுயிர்களுக்கு இரங்கி இதம் செய்தவன் பின்பு பெரிய பாக்கியவானாய் இன்பங்களைப் பெறுகின்றான்; அங்ஙனம் இதம்புரியாமல் கொடுமை செய்து வந்தவன் வறியனாயிழிந்து துன்பங்களை அடைகின்றான். வினைவிளைவுகளின் இந்த நியமங்களை உலக அனுபவங்களால் அறிந்தும் உள்ளம் இரங்கி நல்லது செய்யாமல் பலர் மடமையாய் மடிந்து போகின்றாரே என்று திருமூலர் பரிந்து வருந்தியுள்ளதை இதனால் அறிந்து கொள்கிறோம். பேதைகள் என்றது தமக்கு வருகிற ஏதங்களை உணராமல் இழிந்து போதலை நினைந்து வந்தது. அல்லல் நேராமல் தனக்கு நல்லதை நாடிக்கொள்ளுகின்றவன் அறிவாளி ஆகின்றான்; அல்லாதவன் அறிவிலியாய் அவலமடைகின்றான்.

பிறர் அல்லல் உறும்படி ஒருவன் செய்ய நேர்ந்தால் அது பொல்லாத பாவமாய்ப் பொங்கி வருகிறது. வரவே எல்லாத் துயரங்களும் அதனால் விளைந்து யாண்டும் அவலங்களைச் செய்கின்றன. செய்த தீவினை வெய்ய துயரங்களாய் வருகிறது.

சொல்லும் செயலும் நல்லனவாக அமையவேண்டுமானால் தன் உள்ளத்தை ஒருவன் பண்படுத்த வேண்டும். உள்ளம் நல்லதானால் எல்லாம் நலமாம்; அந்த மனநலம் அரிய பல மகிமைகளை அருளிவரும். அகம் இனிதாகவே யாவும் இன்பமாம்.

நல்ல மனமுடையவன் எல்லா மேன்மைகளையும் எளிதே எய்துகிறான்; அது பொல்லாதது ஆனால் அவன் அல்லலே அடைகிறான். சுகமும் துக்கமும் அகநிலையால் அமைகின்றன.

மேலான கதிகளை அடையவுரியவர் முதலில் தம் உள்ளத்தை நல்லதாக்கிக்கொள்கின்றார். பொல்லாத வழிகளில் யாதும்

செல்லாதபடி அதனை அடக்கி ஆண்டுவருபவரே யாண்டும் பெரி யோராய்நீண்டுவருகிருர்.மனம்அடங்கமகிமைகள்வருகின்றன.

பழக்க வாசனைகளாலும் அடுத்துள்ள சூழல்களாலும் மனம் தவருன புலைகளில் செல்ல நேரும்; அங்ஙனம் நேருங்கால் அதனைத் தடுத்து நல்ல நிலையில் நிறுத்தவேண்டும்; அவ்வாறு நிறுத்த வல்லவரே நெறியுடைய மேலோராய் நிலைத்து விளங்கு கிருர். நீதி நெறியே செல்ல நேரின் அல்லல்கள் நீங்குகின்றன.

நல்ல நெறியில் ஒழுகிவந்த ஒருகுலமகன் ஒருநாள் ஓர் அழ கிய மங்கையைத் தனியே கண்டான்; இளமையும் எழிலும் இனிய நலனுமுடைய அவளைக் கண்டதும் ஆசைமீக் கொண் டான்; தையலை நோக்கி மையலால் மயங்கிய அவன் உடனே தன் உள்ளத்தை அடக்கினன்; அயலான் மனைவியாகிய அவ ளைத் தழுவினுல் பழியும் பாவமும் விளையுமே! என்று உணர்ந்து பயந்து நெஞ்சைத் திருத்தி நெறியே சென்ருன். தன் மனத்தை நோக்கி அதுபொழுது அவன் மதிநலம் கூறித் தெருளுற அருளி யது அதி விநயமாய் வந்தது. அயலே வருகின்றது காண்க.

பழியொடு பாவத்தைப் பாராய்நீ கன்றிக்
கழிபெருங் காமநோய் வாங்கி---வழிபடாது
ஓடுமனனே! விடுத் தென்னை விரைந்துநீ
நாடிக்கொள் மற்ருேர் இடம். (அறநெறி)

"பழிபாவங்களை விளைக்க நாடுகின்ற மனமே! என்னேடு கூடியிராதே; அயலே ஓடிப்போய்விடு" என உருத்து உரைத் திருக்கும் இது நுனித்து உணரத்தக்கது. உள்ளத்தை நல்ல வழிப்படுத்தி இவ்வாறு நன்கு பாதுகாத்து வருபவரே தீது நீங்கித் தமக்கு இனியராய் எங்கும் உயர்ந்து வருகின்ருர்.

அல்வழியில் செல்வதால் அல்லலே வரும்; பழிவிரிந்து அழி துயரங்களைச் செய்யும்; இழிசெயல்கள் ஈனனுக்கிவிடும்ஆதலால் அவன் பாவியா யிழிந்து ஆவி பதைத்து அலமந்து வருந்துவன்.

"Evil pursueth sinners: but to the righteous good shall be paid." [Bible]

"தீமைகள் பாவிகளைத் தொடரும்; நீதிமான்களுக்கு நல்ல பலன்கள் வரும்." என்னும் இது இங்கே அறியவுரியது. பாவம்

நரக துயரங்களைத் தரும் ஆதலால் அதனை ஒருவி வாழ்வதே உயிர்க்கு உய்தி செய்வதாம். உறுதி ஓர்ந்து உயர்வு பெறுக.

---

723 தன்னுயிர்க்கு நன்மை தனைநாடி நின்றவன்
மன்னுயிர்க்கோர் தீமை மறந்தேனும்—பின்னுயிர்த்துச்
செய்யான் செயலெல்லாம் செய்ய நலமாகி
வையம் மகிழ வரும். (௩)

இ—ள்

தன் உயிர்க்கு நன்மையை நாடுகின்றவன் பிற உயிர்கட்கு யாதும் தீமையைச் செய்யான்; எவ்வழியும் நன்மைகளையே நாடிச்செய்து உலகம் உவந்து மகிழ உயர்ந்து வருவான் என்க.

அறிவு மனிதனுக்குத் தனி உரிமையாக இனிது அமைந்திருக்கிறது. நன்மை தீமைகளை நாடி அறிந்து தன் வாழ்க்கையைச் செம்மை செய்துகொள்ள அது உதவிபுரிகிறது. தனது அனுபவங்களால் நிலைமைகளை நுணுகி உணர்ந்து புனிதமான வழிகளில் ஒழுகி வருபவன் எவ்வழியும் இனியனாய் உயர்கின்றான்.

நல்லது செய்வதால் இன்பமும் பெருமையும் வலிமையும் வருகின்றன. தீயது செய்வதால் துன்பமும் சிறுமையும் எளிமையும் விளைகின்றன. எளியனாய் இழிந்துபோக எவனும் விரும்புவதில்லை; வலியனாயுயர்ந்து கொள்ளவே யாவரும் ஆவலோடு விழைந்துவருகின்றனர். தன்னுடைய இந்தஇச்சைநிறைவேறிப் பலனுக்குவரவேண்டுமானால்அதற்குத்தகுதியானவினைகளை அவன் செய்து வரவேண்டும். வித்தியபடியே விளைவுகள் வருகின்றன.

கெட்ட விதை கேடான பலன்களைத் தருகின்றது.
நல்லவிதை நன்மையான விளைவுகளை அருளுகின்றது.

தான் கேடுசெய்தால் தனக்கே கேடாய் அது ஓடிவருகிறது; நன்மை செய்தால் நல்லதாய் இன்பம் சுரந்து எவ்வழியும் இதம்புரிகிறது. செய்த வினைகளுக்கு நேரான பலன்களையன்றி மாறானவைகளை யாரும் யாண்டும் அனுபவிக்க முடியாது.

ஆலமது நல்குமவர் ஆரமுதம் உண்ணும்
பாலுடையர் ஆவதும் படிக்கண் உளதாமோ?
சால மதுரக்கனிகள் தாம்நுகரு வாரோ
ஞாலமிசை எட்டிமரம் நட்டவர்கள்தாமே? (சேதுபுராணம்)

வினைப்பயன்களின் நிலைகளை இது விளக்கியுள்ளது.

தான்செய்த செயல்களின் அளவே பலன்கள் மனிதனுக்கு விளைந்து வருகின்றன. அந்த வினைகளின் விளைவுகளையே அவன் அனுபவிக்க நேர்கின்முன். அயலாக யாதும் அவனை அணுகாது ஆதலால் கருதிய இன்பம் கிடையாதபோது மறுகிமயங்குகிருன்.

தேகபோகங்கள் பலவகை நிலைகளில் அமைந்துள்ளன. இனிய சுவை நுகர்வுகள் யாவும் நல்வினையினுலேயே நன்கு வருகின்றன. இந்தப் பிறப்பில் எவ்வளவு நல்லவனுயிருந்தாலும் முந்திய பிறப்பில் உபகாரம் முதலிய இதங்களை உயிர்களுக்கு இரங்கி உரிமையோடு அவன் செய்யாதிருந்தால் செல்வம் முதலிய வளங்கள் அவனைச் சேர முடியா. ஆகவே வருந்தி உழைத்தே அவன் அருந்தவேண்டும்.

குசேலர் மிகவும் நல்லவர்; கல்வியில் தேர்ந்தவர்; சிறந்த அறிவாளி; உயர்ந்த பண்பாடுகள் அமைந்தவர்; தெய்வபத்தி நிறைந்தவர்; இவ்வளவு மகிமைகள் மருவியிருந்தும் அவர் வறுமையால் வருந்தினுர். அவருடையபிள்ளைகள் பசித்துயரால் வாடினர்; காய்ச்சிய கூழைத் தாய் பகுத்துக்கொடுக்கு முன் அவர் பதைத்துத் துடித்தனர். அப் பதைப்புகள் பரிதாபமுடையன.

ஒருமகவுக்கு அளித்திடும் போது ஒரு மகவு
கைநீட்டும்; உந்திமேல் வீழ்ந்து
இருமகவும் கைநீட்டும்; மும்மகவும்
கைநீட்டும்; என்செய் வாளால்?
பொருமிஒரு மகவுஅழும் கண்பிசைந்தழும்
மற்று ஒருமகவு புரண்டு வீழாப்
பெருநிலத்தில் கிடந்தழும் மற்று ஒருமகவு
எங்ஙனம் சகிப்பாள்? பெரிது பாவம்!

குசேலருடைய பிள்ளைகள் பட்டுள்ள பரிதாப நிலைகளை இதனுல் அறிந்து கொள்கிறோம். இது எவ்வளவு துயரம்! இதனைக் கண்டு வருந்திய மனைவியை நோக்கி அப் பெரியவர் ஆறுதலாத் தேறுதல் கூறினுர். அவ்வுரைகள் யாவும் உணர்ந்து சிந்திக்கவுரியன. சில அயலே வருகின்றன.

மக்களுக்கு இரங்கி வாடும் மடத்தகை அணங்கு கேட்டி!
தக்கமுற் பவத்தில் ஆன்ற தருமம் நன்கு இயற்றினோர்கள்

ஒக்கஇப் பவத்தில் இன்பம் ஒருங்குஅனு பவிப்பர்; இன்றேல்
மிக்கவெந் துயரத் தாழ்வர் இதற்கு உளம் மெலிதல் என்னே?

தேற்றமுற் பவத்தில் செய்த தீங்குநன்கு எனும்இரண்டும்
ஆற்றல்சால் கருமம் என்பர்; அக்கரு மத்தை நோக்கிச்
சாற்றும் இப்பிறப்பில் தக்க தரித்திரம் செல்வம் நல்கிப்
போற்றுவன் உயிரை எல்லாம் பொலிசுடர்த் திகிரி வள்ளல். (2)

மைந்தர்கள் தம்மைப் போற்ற வளநிதி வேண்டும் என்றாய்!
நந்திய பறவை கானம் நயந்துறை விலங்கு முன்னு
வந்தபல் உயிர்க்குச் சேம வைப்புண்டோ? வருவாய் உண்டோ?
எந்திடத் தேனும் போய் ஒன்று இரப்பது தானும் உண்டோ?

அல்லது நாளைக்கு என்செய் வாமஎனும் கவலை உண்டோ?
எல்லையில் ஒன்றினால் ஒன்று இடிப்புண்டு வாழ்தல் உண்டோ?
ஒல்லுமவ் உயிர்கள் தம்முள் உணவிலாது இறந்ததுஉண்டோ?
சொல்லரி பரந்த உண்கண் துடியிடைப் பேதை மாதே! (4)

கல்லினுள் சிறுதே ரைக்கும் கருப்பை அண்டத்துயிர்க்கும்
புல்லுண வளித்துக் காக்கும் புனத்துழாய்க் கண்ணி அண்ணல்
ஒல்லுநின் மைந்தர்க் காவாது ஒழிவனோ; ஒழியான் உண்மை;
மெல்லியல்! கொண்ட துன்பம் விடுவிடு மறந்தும் எண்ணல்!

(குசேலோபாக்கியானம்)

வறுமையை நினைந்து மறுகிய மனைவியை நோக்கிக்குசேலர் இவ்வாறு தேற்றியிருக்கிறார். உரைகள் அவருடைய உள்ளத் தெளிவையும் ஞான நிலையையும் நன்கு விளக்கி யுள்ளன. இவ்வளவு பெரிய நல்லவர் நல்குரவால் நைந்தது பழவினைப் பயன் என்று தெரிந்தது. அந்தப் பிறப்பில் அவர் புரிந்து வந்த புண்ணியத்தால் எண்ணரிய செல்வங்களை எய்தி மகிழ்ந்தார். இன்ப நலங்கள் யாவும் நல் வினைகளால் வருகின்றன என்பதை இங்கே அறிந்து கொள்கிறோம். இனிய வினைகள் இன்பங்களை அருளும்.

செய்த வினையின் விளைவுகளை அன்றி வேறு யாரும் யாதும் அயலே எய்த இயலாது; இது தெய்வ நியமமாயுள்ளது. தன் உயிர்க்கு நல்லதை நாடுகின்றவன் அல்லலான காரியங்களை யாண்டும் செய்யலாகாது; எவ்வழியும் நல்ல கருமங்களையே பழகி வர வேண்டும். அந்த நல்ல பழக்கம் நலம் பல தருகிறது.

இனியநல் வினையினல் இன்பம் எய்துவர்;
துனிசெய் தீ வினையினல் துன்பம் தோய்குவர்;
மனிதர்இம் மரபினை மறந்து தீயராய்ப்
பனிதுயர் படிவது பாவம் ஆகுமே.

பாவம் படியாமல் பாதுகாத்து ஒழுகுக.

---

724. உரையும் செயலும் ஒருநிலை யின்றிப்
புரையும் பிழையும் புரியின்—கரைகடந்த
துன்பக் கடலில் துடித்துநீ வீழ்ந்தாய்காண்
இன்பமே காணுய் எதிர். (ச)

இ—ள்

சொல்லும் செயலும் நேர்மையோடு தோய்ந்து நல்லனவா யிருக்க வேண்டும்; அங்ஙனமின்றிப் பொல்லாதனவாய்ப் பிழை புரியின் எல்லையில்லாத துன்பங்களை அடைந்து நீ வருந்த நேர்வாய்; இந்த உண்மையை உணர்ந்து நன்மையை விரைந்து தெளிந்து யாண்டும் செம்மையாய்ஒழுகி உயர்ந்துகொள்க என்பதாம்.

பேசுதற்கு வாய், எண்ணுதற்கு நெஞ்சு, செய்தற்குக் கைகள் மனிதனுக்கு நன்கு அமைந்திருக்கின்றன. இந்த மூன்று நிலைகளால் வாழ்க்கை இயங்கி வருகிறது. உயிர் விளக்கமான இவை திருந்திய பண்போடு அமைந்துவரின் அந்த மனிதன் பெருந்தகையாளனாய் உயர்ந்து வருகிருன்; பிழைகள் மலிந்தால் பழிநிலையாளனாய் இழிந்து பாழ்படுகின்ருன்.

வாயிலிருந்து வருமொழி இதமும் இனிமையும் நேர்மையும் தோய்ந்திருக்க வேண்டும். அவ்வாறு அமைந்துவரின் அம் மொழியாளன் ஒளியும் இன்பமும் எய்தி எவ்வழியும் திவ்விய மகிமைகளை அடைந்து சிறந்து திகழ்கின்ருன்.

தன்னைப் புனிதன் ஆக்கிப் புண்ணிய போகங்களை அருளுகின்ற சத்தியத்தை ஒருவன் பேணி வராமல் பிழையா யிழந்திருப்பின் அது எவ்வளவு பழி! எத்தனை அழிவு! அசத்தியன் உயிரோடிருந்தாலும் செத்த சவமே; சீவ ஒளியில்லாத அந்த நடைப்பிணம் பாவப் படுகுழியில் நெடிது புதைக்கப் பட்டுளது.

பொய்யால் பாவங்கள் யாவும் வருகின்றன.
மெய்யால் புண்ணியங்கள் எல்லாம் விளைகின்றன.

எவன் பொய் பேசக் கூசுகிருனே அவனிடம் தெய்வத் தேசு ஒளி வீச நேர்கிறது; ஈசன் அருள் அவனை நோக்கி வரு கிறது. ஒரு சத்திய விரதம் அரிய பல மகிமைகளை அருளி அற் புத சித்திகளைத் தருகிறது. தரும நிலையமாய் அது தழைக்கிறது.

பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று. (குறள், 297)

ஒருவன் யாண்டும் பொய்பேசாமல் எவ்வழியும் மெய் யையே பழகி வருவான் ஆயின் அவன் பெரிய புண்ணியவான் ஆகின்ருன்; வேறு யாதொரு தருமமும் அவன் செய்ய வேண் டிய தில்லை; எல்லா இன்ப நலங்களும் அவனுக்கு தனி உரிமை யாய் அமைகின்றன எனத் தேவர் இங்ஙனம் கூறியிருக்கிருர்.

மெய் தலைமையான அறம் என்றதனுல் பொய் புலையான பாவம் என்பது பெறப்பட்டது. பழி பாவங்களை விளைத்து அழி துயரங்களைத் தருகிற பொய்யை மனிதன் தழுவி வாழ்வது முழு மடமையாம். எவ்வளவு பெரியவனுயிருந்தாலும் பொய் அவனைப் புலையனுக்கி நிலைகுலைத்து அவல நிலையில் ஆழ்த்தி விடுகின்றது. படுபாதகமாய் அடுநாகத்தில் தள்ளிவிடும் ஆதலால் பொய் கொடிய நீசம் என மேலோர் அதனை அஞ்ச நேர்ந்தனர்.

பொய் பேசுபவர் புலையாயிழிந்து எவ்வழியும் அழிவே அடைகின்ருர். குடிகேடு தெரியாமல் அடியோடு முடிகின்ருர்.

சலந்தலைக் கொண்டன ராய தன்மையார்
அலந்திலர் செருக்களத்து அஞ்சினுரலர்
புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணுர்
குலங்களின் அவிந்தனர் குரங்கினுல் என்ருர்.

(இராமா, கிங்கரர், 58)

பலசாலிகளான அரக்கர் பல்லாயிரம் பேர் திரண்டு வந் தார்; அனுமானேடு போராடி அழிந்து போனுர். அந்த அழிவு நிலையை இந்தவாறு விளக்கியருளினுர். பொய்ச்சாட்சி சொன் னவனுடைய குலம் நாசமாய் அழிந்து போனது போல் மூண்டு வந்த நிருதர் முழுவதும் மாண்டு போயினுர் என்றது அழிவுநிலை யின் எளிமை தெரிய வந்தது. பொய்யர் பெரிய செழிப்பாய்த் தழைத்து நின்ருலும் இருந்த இடமும் தடந்தெரியாமல் விரைந்து

அழிந்து போவர் என்னும் உண்மையை இங்ஙனம் இது உணர்த்தியுள்ளது. உணர்வுரை ஓர்ந்து சிந்திக்கத் தக்கது.

இப்படி நாசப்படுத்துகின்ற நீசப் பொய்யை மனிதன் பேசலாமா? பொய் பேசினல் நீசன் ஆவாய்; நாசமாய்ப் போவாய்! என்று மேலோரும் நூலோரும் பரிந்து போதித்தும் அறிந்து திருந்தாமல் அவமே அழிந்து போவது அஞ்ஞான இருளின் மருளாயுள்ளது. மடமையால் மடிந்து போகின்றார்.

மிருகங்களை விட மனிதன் பெரியவனு யிருப்பது வாய் பேசும் வாய்ப்பினுலேயாம்; இந்த வாயை நல்ல வழியில் பயன் படுத்தி நலம்பல பெருமல் பொல்லாத பொய்யைப் பேசி புலை யாயிழிந்து போனல் மீண்டு எந்த வழியில் அவன் உயர்ந்து வர முடியும்? இதனை ஈண்டு நன்கு சிந்தனை செய்ய வேண்டும்.

வாய்பேச மாட்டாது மாடு மனிதனே
வாய்பேசும் வாய்ப்போடு வந்துள்ளான்---வாய்பேசி
நல்லது காணுமல் நாசமாய்ப் போகின்ருன்
பொல்லாத பொய்பேசப் போய்.

நீசமான இந்த நாசப் போக்கு ஒழிந்த போதுதான் மனிதன் ஈசன் அருளை எய்த முடியும். மெய் ஈசனுக்கு வடிவம் ஆதலால் அதனை இழந்த அளவு அவன் நாசமே அடைகின்ருன்.

பொய் மனிதனைப் பாவி ஆக்கிப் படுதுயர்களைச் செய்யும்; மெய் தருமவானுக்கி இருமையும் இன்பங்களை ஊட்டி யருளும். இந்த உண்மையை ஊன்றி உணர்ந்து நன்மையை நாடிக் கொள்பவர் எம்மையும் இனியராய் இன்பம் பெறுவர்.

மெய்யே சிறந்த பெருநலமாம்; மெய்யே எவையும் நிலை பெறுத்தும்;
மெய்யால் அழல்கால் கதிர்பிறவும் தத்தம் தொழிலின் விலகாவாம்;
மெய்யே எவைக்கும் இருப்பிடமாம்; மெய்யே மெய்யே சிவமாகும்;
மெய்யே பிரம பதமும்எனப் புகன்ருன் வினைதீர் காசிபனே.
(காஞ்சிப் புராணம்)

உவமம் தீர்ந்திடு வாய்மை ஒன்றே உறின் உலகில்
தவமும் தானமும் ஒருங்குறச் செய்தலின் தலையாய்ப்
பவமகன்று நான்மறைமுடி வாகிய பரம
சிவன் அரும்பதம் பெறும்படி உயர்த்திடும் தெரியின்.
(திருக்கூவப் புராணம்)

மெய்யின் மகிமைகளை இவை விளக்கி யுள்ளன. பொருள் நிலைகளைக் கருதிக் காணுக. பொல்லாத புலையான பொய்யைப் பேசி அல்லலுருதே; எல்லாத் தருமங்களுக்கும் நிலையமான சத்தியத்தையே பேசி யாண்டும்உத்தமனு உயர்ந்து கொள்ளுக.

---

725. உள்ளம் சிறுகுவ உள்ளற்க; உள்ளிப்பின்
கள்ளம் புரிந்து கழியற்க;—எள்ளிஎன்றும்
நோவ உரையற்க; நோதக்க செய்தக்கால்
பாவ விளைவாம் பழி. (ரு)

இ—ள்

நீ சிறுமையுறும்படியான எண்ணங்களை உன் உள்ளத்தில் எண்ணுதே; கள்ளம் யாதும் புரியாதே; யாரையும் எள்ளி இகழ்ந்து பேசாதே; பிறர் அல்லல் உறும்படி ஏதேனும் செய்தால் பழியும் பாவமும் விளைந்து உன்னை அழிதுயர் செய்யும்.

மனத்தின் வழியே மனிதன் வெளி வருகின்றுன். அவனுடைய வாழ்வின் நிலைகளுக்கெல்லாம் மூலகாரணமா யிருப்பது நினைப்பே. அது நல்ல நீர்மையோடு நிலவிவரின் அந்த மனிதன் எல்லா மேன்மைகளையும் எளிதே எய்தி ஒளிமிகுந்து உயர்ந்து திகழ்கின்றுன்; அது பொல்லாதது ஆனுல் அவன் புலையாயிழிந்து நிலை குலைந்து தாழ்கின்றுன். தீய நினைவு தீயவனுக்கி விடுகிறது.

புண்ணியவான் என உயர்ந்து வாழ்வதும், பாவி என இழிந்து தாழ்வதும் எண்ணத்தால் இசைந்து வருதலால் அதன் உண்மை நிலைகளை நுண்மையாக உணர்ந்து கொள்ளலாம். மனத்தைச் சரியான முறையில் நெறியே பழகிவரின் அவன் பெரிய பாக்கியவான் ஆகின்றுன். வனத்தில் போய்த் தனித்திருந்து அரிய தவங்களைச் செய்தாலும் மன நிலையை மாண்போடு பேணுன் ஆயின் அவன் மகிமையிழந்து போகின்றுன்; அதனைப் புனித நிலையில் பேணி வருபவன் எங்கிருந்தாலும் அரிய மேன்மைகளை அடைந்து பெரிய இன்பங்களை நுகர்கின்றுன்.

இல்லின் இருந்தே ஐம்பொறியும் எல்லாம் நுகரும் காலத்தும்
செல்லும்வழிமெய்ம்மொழிமனத்தைச்செல்லாதடக்கின்எழுபிறப்பும்
நல்ல பயனேயாம் ஏனை நல்ல வினை தீவினை ஆகா
அல்லல் அறுக்கும் அறக்கடவுள் அடுக்கும் அமரருல குறுமே.
(விநாயக புராணம்)

நல்ல நினைவுகளைப் பழகி மனத்தை நன்கு பண்படுத்தி வருபவன் அரிய பல நன்மைகளை உரிமையா அடைகிறான்; தருமதேவதை யும் அவன்பால் பிரியம் மீதூர்ந்து அருள்புரிந்து வரும் என்பதை இங்கே அறிந்து பொருள்நிலைகளை ஊன்றி உணர்ந்துகொள்கிறோம்.

மனம் நெறி முறையே மருவிவரின் தரும நலங்கள் தழைத் துவருகின்றன; நெறிகேடாய்ச் செல்லின் பாவத் தொடர்புகள் படர்ந்துகொள்கின்றன; அது படர்ந்தால் அவ்வுயிர் வாழ்வு துயர் வாழ்வாய் இழிந்து எவ்வழியும் அவலமாய் அழிந்துபோ கிறது. பழி பாவங்களும் அழிதுயரங்களும் மனக்கேட்டால் வருதலால் அந்தக்கேடு எவ்வளவு கொடியது! என்பது எளிதே தெளியலாம். நல்ல எண்ணங்களை எண்ணி வருகிற உள்ளம் செழிப்பும் வளர்ச்சியும் உரமும் உறுதியும் ஒளியும் பெற்று உயர்ந்து வருகிறது; கெட்ட நினைவுகளை மருவிவரின் சிறுமையும் தளர்ச்சியும் மருளும் மயக்கமும் மெலிவும் உடையதாய் நலி வடைந்து நைந்து எவ்வழியும் அது இழிந்து படுகிறது.

இனிய அமுதம் உண்பதுபோல் புனித நினைவுகள் மன திற்கு அதிசய ஆற்றல்களை அருளி வருகின்றன; பொல்லாத எண்ணங்கள் கொடிய நஞ்சுபோல் நெஞ்சை நிலைகுலைத்து நீச மாக்கி விடுகிறது. அதனால் நாசங்களே விளைகின்றன.

உள்ளம் சிறுகுவ உள்ளற்க!

என்றது பொல்லாத நினைவுகள் உன் உள்ளத்தில் எழாத படி போற்றி ஒழுகுக என்பதாம். இழிவான எண்ணங்கள் தோன்றியபொழுதே உள்ளம் ஒளி இழந்துவிடுகிறது; தெய்வத் திருவருளும் விலகிப் போகிறது; போகவே பரிதாப நிலையில் அது பாழ்படுகிறது. பாழான மனம் பழி துயரமாகிறது.

நல்ல எண்ணத்தால் ஆத்துமசத்தி வளர்கிறது; அதனால் அற்புத சித்திகள் விளைகின்றன; கெட்ட எண்ணத்தால் நெஞ் சம் பாழாய் நீசம் அடைகிறது; அடையவே ஈசன் அருளை இழந்து யாண்டும் அவலமாய் நாசமே யுறுகிறது.

உயிரின் இனிய துணையாயுள்ள உள்ளத்தைப் புனிதமாகப் போற்றி வருபவன் ஆற்றல் மிகுந்து பெரியவனாய் உயர்கின் றான்; அவ்வாறு போற்றாதவன் ஏற்றம் இழந்து சிறியவனாய் இழிகின்றான். உயர்வும் இழிவும் நினைவின்நிலையால் நிகழுகின்றன.

பொய் களவு புலை முதலிய பாவங்கள் படிந்தால் தேவ கோபம் மூளுகிறது; அதனுல் கொடிய துயரங்கள் மூண்டு நெடிய இழிவாய்ச் சீவன் அழிய நேர்கின்றது.

பொய்யினேன் புலையினேன் கொலையினேன் நின் அருள்
புலப்பட அறிந்து நிலையாப்
புன்மையேன் கல்லாத தன்மையேன் நன்மைபோல்
பொருளலாப் பொருளை நாடும்
வெய்யனேன் வெகுளியேன் வெறியனேன் சிறியனேன்
வினையினேன் என்று என்னைநீ
விட்டுவிட நினைவையேல் தட்டழிவ தல்லாது
வேறுகதி ஏது? புகலாய்!
துய்யனே மெய்யனே உயிரினுக்கு உயிரான
துணைவனே இணை ஒன்றிலாத்-
துரியனே துரியமும் காணு அதீதனே
சுருதி முடி மீதிருந்த
ஐயனே அப்பனே எனும்அறிஞர் அறிவைவிட்டு
அகலாத கருணை வடிவே
அண்டபகி ரண்டமும் அடங்கஒரு நிறைவாகி
ஆனந்த மான பரமே. (தாயுமானவர்)

ஈசனது நிலையையும், நீசப் புலைகளையும் இப்பாசுரம் நேரே காட்டியுள்ளது. தாயுமானவர் புனித எண்ணங்களையுடைய புண்ணிய சீலராயிருந்தும் உலகில் நிகழுகின்ற பாவ நிலைகளைத் தன் மேல் இட்டுக்கொண்டு பரமனிடம் இவ்வாறு பரிந்து மன்ருடியிருக்கிருர். பரிசுத்த நீர்மைகளைப் பழகிப் பரமாத்தும சித்தியை அடையவேண்டும் என்று அவர் தூண்டியிருப்பதை ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்கின்ருேம். மனம் மொழி மெய்கள் பழுதுபடாதபடி பழகி நாளும் இனிது பேணி இன்பம் பெறுக.

---

726 பாவி பழிகாரன் பாதகன் என்றுபேர்
மேவி யழிநரகில் வீழ்கின்ருர்—ஆவி
பதறப் புரிந்த படுதீமை யாளர்
கதறி அழுவர் கலுழ்ந்து. (சு)

இ-ள்.

பிற உயிர்கள் வருந்தும்படி ஒருவன் தீமை செய்தால் அவன் பாவியாய் இழிவுறுகின்ருன்; பழிகள் படிகின்ருன்;

அதனல் அழிதுயரங்கள்பல அடைகின்ருன்; முடிவில் அடுநரகி லும் விழுந்து கொடிதாய் அழுது துடிக்கின்ருன் என்பதாம்.

தன்னை இழிவாக இகழ்ந்து சொல்லும் பழி மொழிகளை எந்த மனிதனும் விரும்பான். உயர்வாகப் புகழ்ந்து பேசவேண் டும் என்றே யாவரும் யாண்டும் அவாவி நிற்கின்றனர். இந்த நிலைமையைச் சிந்தனை செய்து பார்த்தால் மனித தத்துவம் ஓரளவு தெளிவாகத் தெரியலாகும். பிறவிகள்தோறும் பழகி வந்துள்ள பழக்க வாசனைகளால் மனித இனம் கட்டுப்பட்டு மறுகியுழல்கின்றது. வாசனை வசமாய் மனம் செல்லுதலால் நல்லது தீயதை நாடி அறிய முடியாமல் 'அது ஓடுகின்றது. பொல்லாத வழிகளில் செல்லலாகாது என்று அறிவு தடுத்தா லும் அத்தடைகளை மீறி மனம் தாவிப்போகிறது. வாசனை வய மான மனதுக்கும், யோசனை மிகவுடைய அறிவுக்கும் ஓயாத போராட்டம் உள்ளே எப்பொழுதும் நடந்துகொண்டிருக்கிறது.

அறிவு ஒளியுடையது; ஆன்ம விழியாயுள்ளது; மேன்மை யான நிலைகளை ஆயவல்லது; நல்ல வழிகளையே நாடிச் செல்வது.

மனம் சலனம் உடையது; தெளிவில்லாதது; எதையும் விரைந்து பற்றுவது; பொறியின்பங்களில் நெடிது பழகி வெறி கொண்டு திரிவது. இந்த மனத்தை அறிவால் அடக்கி எந்த மனி தன் நெறியே ஒழுகி வருகின்ருனே அந்த மனிதனே பெரிய மகானய்ப் பேரின்ப நலங்களை நேரே அடைய நேர்கின்ருன்.

தன் நெஞ்சை நல்ல வழிகளில் ஒருவன் பழக்காது விடின் அது பொல்லாத புலைகளில் பொங்கிச் செல்லும்; செல்லவே அல்லலும் பழிகளும் அடர்ந்துவரும். பழியான செயல்களில் கூசி ஒடுங்காமல் நீசமாய் மனம் நிமிர்ந்து சென்றபோதுதான் பாவங்கள் விளைந்து வருகின்றன. அவ்விளைவால் கொடிய துய ரங்கள் நெடிது வளர்ந்து எவ்வழியும் வெவ்விய அவலங்களே விரிகின்றன. செயல் பழியாயபோது துயர் ஒழியாது வருகிறது.

தீமையான காரியங்களைச் செய்கின்றவன் பாவி ஆகின் ருன். இந்தப் பெயர் நீசமான நெடிய பழிகளை விளக்கியுள்ளது.

பாவத்தைச் செய்கின்றவன் தன் உயிர்க்குக் கொடிய ஆபத்தைச் செய்தவனுகின்ருன். இம்மையில் வறுமை பிணி

முதலிய துயரங்கள் புகுந்து சிறுமைப்படுத்தி வருவதும் மறுமையில் நரக துன்பங்களைத் தருவதும் பாவத்தின் பலன்களேயாம்.

ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும்
தான்புக்கு அழுந்தும் அளறு. (குறள், 835)

பாவத்தைச் செய்கின்றவனைப் பேதை என்று குறித்துத் தேவர் அதி விநயமா இதில் இகழ்ந்திருக்கிறார். ஏழு சன்மம் ஆனாலும் வெளிவர முடியாத கொடிய நரக துன்பத்தை ஒரு நொடியில் மடையன் செய்துகொள்வான் என்னும் இது பரிகாசமும் பரிதாபமும் மருவி அரிய அறிவின் சுவை பெருகிவந்துளது.

ஊழிகாலம் ஆனாலும் மீளாமல் நரகவாசம் செய்யும்படியான காரியத்தை மூடன் ஒரே செயலில் அதி விரைவாகச் செய்து கொள்ளுவான் என்றது அவனது நீச நிலையையும் நாச விளைவையும் நன்கு தெரிந்து கொள்ள வந்தது.

தன் உயிர்க்கு இதத்தைச் செய்துகொள்பவன் மதிமான்; அகிதத்தைச் செய்து அவலமடைபவன் மதிகேடன். பாவம் கொடிய துயரங்களை விளைக்கும் ஆதலால் அறிவாளிகள் அதனை அஞ்சி விலகிவிடுகின்றனர். அறிவிலிகள்கொஞ்சிமடிகின்றனர்.

ஆவியொடு காயம் அழிந்தாலும் மேதினியில்
பாவிஎன்று நாமம் படையாதே-மேவியசீர்
வித்தார முங்கடம்பும் வேண்டாம் மடநெஞ்சே!
செத்தாரைப் போலே திரி. (1)

வேதத்தின் உட்பொருள் மண்ணாசை மங்கையை விட்டுவிடப்
போதித்த வன்மொழி கேட்டிலையோ? செய்த புண்ணியத்தால்
ஆதித்தன் சந்திரன் போல வெளிச்சம தாம்பொழுது
காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே. (2)

மனையாளும் மக்களும் வாழ்வும் தனமும்தன் வாயில்மட்டே;
இனமான சுற்றம் மயானம் மட்டே; வழிக்கு ஏது துணை?
தினையாம் அளவு எள்ளளவாகினும் முன்பு செய்த தவம்
தனையாள என்றும் பரலோகம் சித்திக்கும் சத்தியமே. (3)

தாயாரும் சுற்றமும் பெண்டிரும் கைவிட்டுத் தாழ்ந்திடும்நாள்
நீயாரு நானார் எனப்பகர்வார் அந்த நேரத்திலே
நோயாரும் வந்து குடிகொள்வரே கொண்ட நோயும்ஒரு
பாயாரும் நீயும்அல்லால் பின்னைஏதுநட் பாம்உடலே? (4)

ஒழியாப் பிறவி எடுத்தேங்கி ஏங்கி உழன்ற நெஞ்சே!
அழியாப் பதவிக்கு அவுடதம் கேட்டி அநாதியனை
மழுமான் கரத்தனை மால்விடையானை மனத்திலுன்னி
விழியால் புனல்சிந்தி விம்மி அழு நன்மை வேண்டுமென்றே. (5)
(பட்டினத்தார்.)

தம் நெஞ்சை நோக்கிப் பட்டினத்து அடிகள் இப்படிப் பேசியிருக்கிறார். பேச்சுகள் பாடல்களாய் ஆடல்கள் புரிகின்றன. எவ்வளவு தெளிவான உண்மைகள் இவ்வளவு எளிதான மொழிகளில் வெளி வந்துள்ளன! நல்ல அனுபவ ஞானி ஆதலால் உரைகளில் சீவ ஒளிகள் எழில் வீசி மிளிர்கின்றன. இப் பாசுரங்களை மனனம் செய்து கொண்டு நாளும் யாவரும் வேத கீதமாக ஓதி வர வேண்டும். ஓதிவரின், பாவம் நீங்கும்; புண்ணியம் ஓங்கும். ஆவி அழிய நேர்ந்தாலும் பாவி என்று நாமம் படையாதே! என்றது அரிய சீவபோதமாய் இனிது மேவிநின்றது.

நித்திய அநித்திய நிலைகளை நினைந்து சித்த சுத்தியோடு உத்தம காரியங்களைச் செய்துவரும்படி தத்துவ போதனைகளை மேலோர்கள் வரைந்து வைத்து மறைந்து போயுள்ளனர். உயர்ந்தோர் உரிமையோடு உணர்த்தியுள்ள அறிவு நலங்களைக் கருதிவரின் அரியபல மேன்மைகள் நேரே பெருகி வரும்.

பாவம் கொடியது; நெடிய நரக வேதனைகளைக் கொடுப்பது ஆதலால் அது யாதும் உன்னை அணுகாமல் பாதுகாத்து ஒழுகுக. அந்த ஒழுக்கம் அதிசய பதவிகளை நன்கு அருளும்.

---

727 பொல்லாச் செயல்கள் புலையாய் மனிதனை
எல்லா நிலையும் இழிவுறுத்தி—அல்லல்
பலவும் தருமே படுபாவி என்று
நிலைபெறுதல் நீசம் நினை. (எ)

இ—ள்.

பொல்லாத செயல்கள் மனிதனைப் புலையனுத் தாழ்த்தி எல்லா வழிகளிலும் இழிவுகளைச் செய்து யாண்டும் அல்லல்களை விளைத்து அடுதுயரங்களில் ஆழ்த்தும் ஆதலால் நீசமான அப் பாவப் புலைகளைத் தீண்டாமல்நீங்கி உய்யவேண்டும் என்பதாம்.

இது, பாவி ஆய்ப் பாழாகாதே என்கின்றது.

தான் செய்கின்ற செயலின்படியே மனிதன் மருவி வருகிருன். உயர்வும் தாழ்வும் இன்பமும் துன்பமும் புகழும் பழியும் கருமங்களின் விளைவுகளாய்க் கலித்து வந்துள்ளன. அந்த வினையின் விளைவுகளையே அனுபவிக்க நேர்ந்து எவ்வழியும் உயிரினங்கள் இசைந்துநிற்கின்றன. கருமநுகர்வு இருமையும்மருவுகிறது.

நல்ல கருமங்களைச் செய்தவன் எல்லா வகைகளிலும் உயர்ந்து இன்ப நலங்களை எய்துகின்முன். பொல்லாங்குகள் புரிந்தவன் யாண்டும் இழிந்து அல்லலே அடைகிருன். நிலத்தில் விதைத்த வித்தின்படியே விளைவுகள் வெளி வருகின்றன; அது போல் உலகத்தில்செய்த வினையின்படியே பலன்கள்விரிந்து எழுகின்றன. கரும விளைவுகள் மனிதரைக் கவர்ந்து கொள்கின்றன.

ஒருவனுடைய உருவ நிழல் அவனை விடாது தொடர்தல் போல் அவன் செய்த வினையின் பலனும் உயிரைத் தொடர்ந்து யாண்டும் நீங்காமல் மூண்டு அடர்ந்து கொள்கின்றது.

தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயாது அடியுறைந் தற்று. (குறள், 208)

பிறர்க்குத் தீங்கு செய்தவன் தப்பாமல் கெடுவான் என்பதைத் தேவர் இப்படி அற்புதமா விளக்கியிருக்கிருர். உடலின் நிழலை உவமை கூறியது ஊன்றி உணரவுரியது. நிழல் நெடிது நீண்டு நின்ருலும் முடிவில் அதன் அடியையே அடையும்; அவ்வாறே வினையின் விளைவும் எவ்வழியும் தொடர்ந்து உயிரை ஒட்டி உருத்து வருத்தும் என்பது உய்த்துணர வந்தது.

வருதிரை மணலினும் வளியினுல் திரள்
சருகிலை போலவும் சாயை போலவும்
மருவிய வினைவசம் வருவதல்லது இங்கு
ஒருவர்கண் உறவொரு நாளும் இல்லையே.
(மேருமந்தர புராணம்)

செய்த வினையின் நிலைமைக்குத் தக்கபடியே போகங்கள் பொருந்தி வருகின்றன என இது இங்ஙனம் உணர்த்தியுள்ளது.

தனக்கு இன்பத்தைத் தருகிற நல்ல கருமங்களைச் செய்யாமல் அல்லல்களை விளைக்கின்ற பொல்லாத வினைகளை ஒருவன்

செய்வது புலை மூடமாயிழிந்துள்ளது. தீவினையாளர் பாவிகளாயிழிந்து தம் உயிரையே படுதுயர்ப்படுத்திப் பாழாக்கி வருதலால் ஆத்மகாதகர் என அவல நிலையை அவர் அடைந்து நின்றார்.

மன்னுயிர்க்கும் தன் உயிர்க்கும் ஒருங்கே இன்னலை விளைத்துப் பாவியர் பழிநரகில் அழி துயரமாய் உழலுகின்றனர்.

நீசம் நினை என்றது தனக்கு நாசத்தையே விளைத்துக் கொண்டு யாதொரு கவலையுமின்றிக் களித்து வாழுகின்றாயே! அந்த நீசமான அவல நிலையை ஓர்ந்து சிந்தித்து உறுதியுணர்ந்து உய்தி பெறுக என்று உண்மை தெளிய உணர்த்தி நின்றது.

ஊன்றிய உணர்ச்சியும், ஆன்ற குறிக்கோளும் மனிதனுடைய வாழ்வை இனிய நிலையில் உயர்த்தி வருகின்றன. தன் உயிர்க்கு இதத்தை நாடி ஒழுகுபவன் எவ்வுயிர்க்கும் அகிதத்தை நாடாமல் யாண்டும் அருள்புரிந்தே வருகின்றான். அந்த வரவால் அரிய பல இன்பங்கள் அவனிடம் பெருகி வருகின்றன.

கருணைபுரிந்து சத்தியம் பேசி வருபவன் உத்தமனாய் உயர்கின்றான்; பேச்சும் செயலும் பிழைபடின் எச்சும் இழிவும் வாழ்வில் நுழைந்து விடுகின்றன. ஈன இளிவுகள் நேராமல் மானமாக மருவி வாழ்வதே யாண்டும் ஞான வாழ்வாம்.

செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை;
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை;
இல்லை எனினும் பெரிதுளன் எம்இறை
நல்ல வரன்நெறி நாடுமின் நீரே. (திருமந்திரம்)

சிந்தையை நல்ல வழியில் செலுத்தி வாய்மையைப் பேணிவரின் தெய்வத்திருவருள் சேரும்; பேரின்பம் நேரும் எனத் திருமூலர் இவ்வாறு குறித்திருக்கிறார். மனிதன் இனிது வாழ்ந்து புனித நிலை அடையும் வகையை மேலோர் உரிமையோடு உணர்த்தியுள்ளனர். உணர்ந்து ஒழுகுபவர் உயர்ந்த கதியையுறுகின்றார்.

துன்பத் தொடர்புகள் தோயாமல் இன்பம் ஓங்கிவர ஒருவன் எண்ணி ஒழுகிவரின் அது புண்ணிய வாழ்வாம். அந்த வாழ்வையுடையவனே மேலான ஆன்ம நலனை அடைந்தவனாகின்றான்.

---

728 துன்பம் வறுமை தொடராமல் எவ்வழியும்
இன்பம் பெருகிவர எண்ணினே—முன்புநீ
பாவத் தொடர்பேதும் பற்ருமல் பார்த்தருள்க
ஆவிக் கமுதம் அது. (அ)

இ—ள்.

துன்பம் வறுமை முதலிய சிறுமைகள் தொடராமல் எவ்வழியும் இன்ப நலங்கள் பெருகிவர விரும்பினல் பாவத்தொடர்பை அடியோடு ஒழித்து விடுக; அது ஒழியின் சீவன் தேவ அமுதங்களை நுகர்ந்து திவ்விய மகிமைகளை எய்தும் என்பதாம்.

இன்பமும் துன்பமும் மனித வாழ்வை எவ்வழியும் தொடர்ந்து நிற்கின்றன. தான் செய்த கருமங்களின் விளைவாகவே இவை அவனை மருவி வருதலால் வினைப்போகங்கள் என விளம்ப நேர்ந்தன. போகங்களை நுகரத் தேகங்கள் வந்தன.

துயரக் கூறுகளில் வறுமை மிகவும் கொடியது. அது வந்து பற்றினல் எத்தகைய மனிதனும் சிறுமை அடைந்து சீரழிய நேர்வான். தீயில் அகப்பட்ட புழுவைப்போல் அந்த நோயில் அகப்பட்டவன் நொந்து தவிப்பான். பசித் துயரோடு பழி இழிவுகளால் வாடி வதங்கும் அவனது பரிதாப நிலை மிகவும் கொடியதாம். மிடி பாய்ந்த குடி இடி வீழ்ந்த படியாம்.

நெருப்பினுள் துஞ்சலும் ஆகும் நிரப்பினுள்
யாதொன்றும் கண்பாடு அரிது. (குறள், 1049)

தீயைக்காட்டிலும் வறுமை கொடியது என்று தேவர் இதில் காட்டியிருக்கிருர். எண்ணுதன எண்ணிக் கண் உறக்கம் இன்றிக் கடுந்துயருழந்து நெடுங் கவலையால் நிலைகுலைந்தழிவான் ஆதலால் மிடியனது அவல நிலை அடு தீயினும் கொடியதாய் நின்றது. வறுமை வழியே சிறுமைகள் செறிந்து வருகின்றன.

"வறுமைதான் வந்திடில் தாய்பழுது சொல்லுவாள்;
மனையாட்டி சற்றும் எண்ணுள்;
வாக்கில் பிறக்கின்ற சொல்எலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்;
சிறுமையொடு தொலையா விசாரமே அல்லாது
சிந்தையில் தைரியம் இல்லை;

செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாம்;
செல்வரைக் காணின் நாணும்;
உறுதிபெறு வீரமும் குன்றிடும்; விருந்துவரின்
உயிருடன் செத்த பிணமாம்;
உலகம் பழித்திடும்; பெருமையோர் முன்புசென்று
ஒருவரொடு செய்தி சொன்னல்
மறுவசனமும் சொலார்; துன்பினில் துன்பமிது
வந்தணுகி டாதருளுவாய்!"

வறுமையால் நேரும் அவல நிலைகளை விளக்கிக் கொடிய துன்பமாகிய அது அணுகாதபடி என்னைப் பாதுகாத்தருள் என முருகக் கடவுளை நோக்கி ஒரு புலவர் இவ்வாறு உருகி வேண்டியிருக்கிருர். இல்லாத நிலை பொல்லாத புலையாம்.

"மிடியிட்ட வாழ்க்கையால் உப்பிட்ட கலம்எனவும்
மெய்யெலாம் உள்ளுடைந்து
வீறிட்ட செல்வர்தம் தலைவாயில் வாசமாய்
வேதனைகள் உற வேதனும்
துடியிட்ட வெவ்வினையை ஏவினன் பாவிநான்
தொடரிட்ட தொழில்கள்எல்லாம்
துண்டிட்ட சாண்கும்பி யின்பொருட் டாயதுன்
தொண்டர்பணி செய்வது என்றே?" (தாயுமானவர்)

மிடியுற்றபோது மனிதன் அடையும் இழிவு நிலைகளை இது காட்டியுள்ளது. இத்தகைய கொடிய துயரங்கள் நீங்கி உய்ய வேண்டுமே! என்று தாயுமானவர் இறைவனை நோக்கி மறுகியிருக்கிருர். புண்ணியசீலரான அவர் தன்னைப் பாவி என்று குறித்து நொந்தது பிறவித் துயரங்கள் வருத்துவதை நினைந்து வந்தது. வறுமைத் துயரால் வாழ்வு பாழாய் விடுகின்றது.

பாவத்தின் பலனுய்த் துன்பங்கள் விளைந்து வருகின்றன; நோய் வறுமை ஆபத்து முதலிய பலவகை உருவங்களில் மருவி நின்று கொடிய துயரங்களைச் செய்து அவை நெடிது தொடர்கின்றன. இந்த அல்லல்கள் ஒருவனை அணுகாமல் விலகவேண்டின் பொல்லாத பாவத்தை அவன் நணுகாமல் ஒழுக வேண்டும். அவ்வாறு ஒழுகி வரின் விழுமிய இன்பம் பெருகி வரும்.

தன் வாழ்வில் தீமை படியாமல் பாதுகாத்து வருபவன் சிறந்த சேம நலங்களை விரைந்து அடைந்துகொள்கிறான். பாவப் புலை ஒழிந்தபோது அங்கே சீவ ஒளி திகழ்ந்து வருகிறது; அதனால் திவ்விய மகிமைகள் விளைந்து செவ்வி சுரந்துமிளிர்கின்றன.

ஆவிக்கு அமுதம் அது என்றது பாவம் நீங்கிய அளவில் சீவனுக்கு உண்டாகும் திவ்விய இன்ப நிலையை விளக்கி நின்றது. கொடிய விடம்போல் பாவம் நெடிய துயர்களைச் செய்கின்றன; இனிய அமுதம்போல் தருமம் அரிய பல சுகங்களை அருளுகின்றன. அறத்தை எவ்வழியும் துணையாகக் கருதி நெறியே ஒருவன் வாழ்ந்துவரின் இம்மை மறுமை என்னும் இரண்டு நிலைகளிலும் நன்மையுடையனாய்ச் செம்மையானமேன்மைகளை அவன் எய்தி மகிழ்கின்றான். தருமம் தழுவி வரும் அளவு விழுமிய பெருமைகள் நேரே கெழுமி வருகின்றன.

அறம்திறம்பாது நாளும் அரும்பொருள் காமம் துய்ப்போர்
சிறந்தஇவ் வுலகம் தன்னில் அளப்பரும் செல்வம் எய்தி
மறங்கிளர் வடிவேல் உண்கண் வானவர் மகளிரோடும்
உறங்கிடாது இன்பம் துய்க்கும் உலகினில் இனிது வாழ்வார்.
(கூர்மபுராணம்)

தருமமே தனித்த ஞான்று தக்கதோர் துணைய தாகும்;
தருமமே பொருள்கள் நாலும் தந்திடும்; வருணநாலும்
தருமமெய்யாகச் செய்யும் சமயம் ஆறுடனே மற்றும்
தருமமே காக்கும் வேந்தர் தடமுடி இடறும் தாளாய்!
(திருப்பரங்கிரிப்புராணம்)

அறநெறியே ஒழுகுவோர்க்கு உளவாம் பெருமைகளை இவை உணர்த்தியுள்ளன. எவ்வழியும் பெரு மகிமைகளை அருளுகின்ற இனிய தருமத்தைப் பேணி வருபவரே பேரின்பத்தைக் காணியாகக் காணுகின்றார். அந்த இன்பக் காட்சி அதிசய மாட்சியாம். பாவம் துன்ப நிலையம்; அதனைவிலகி இன்பநலம் பெறுக.

---

729 கெட்ட வழியில் கிளர்ந்துவரு வோன்குடிதான்
பட்ட மரம்போலப் பாழ்பட்டு—முட்ட
அழிந்து படுமே அவகேடு சூழ்ந்தால்
எழுந்து வருவார் எவர். (௯)

இ—ள்.

கெட்ட வழியில் கிளர்ந்து வரும் குடி பட்ட மரம்போல்

விரைந்து பாழ்பட்டு வெந்து அழியும்; அவகேடுகள் அயலே சூழ்ந்தபின் யாரும் உவகையாய் வாழ முடியாது என்க.

நல்லவழி கெட்டவழி என இரண்டு நெறிகள் ஏற்பட்டுள் ளன. சீவ யாத்திரை செய்கின்ற மாந்தர் இந்த வழிகளில் தொடர்ந்து போய்க்கொண்டே யிருக்கின்றனர். தன் அடியில் நடந்து செல்பவர் முடிவில் எப்படியாவது பேரின்ப வீட்டை அடையும்படி செய்வது எதுவோ அது நல்ல வழி. அவ்வாறு செய்யாமல் அயலே போக்கி அலைக்கழித்து அல்லல் இழைத்து அவலப்படுத்துவது எதுவோ அது பொல்லாத கெட்ட வழியாம்.

முன்னது முத்திநெறி; பின்னது மூடநெறி. முதல்வழியில் செல்பவர் உத்தமராய் உயர்ந்து போகின்றார்; பின்னதில் போப வர் பித்தராயிழிந்து பெருந்துயருழந்து வருந்தி அழிகின்றார்.

நெறிமுறையே ஒழுகுபவன் காலால் நடந்து செல்பவனைப் மேலான நிலையை எய்துகிறான்; நெறி தவறினவன் உடலால் புரண்டு செல்வன்போல் அடுதுயரங்களையே அடைகிறான். வழி விலகிய போதே பழி பாவங்கள் அவனை நன்கு பற்றிக்கொள் ளுகின்றன; கொள்ளவே எவ்வழியும் அல்லல்களையே கண்டு அழி துயரங்களையே அவன் அடைய நேர்கின்றான்.

தமக்கு விளைகின்ற நன்மை தீமைகளை நாடியறிந்து நல்ல நெறியிலேயே எவரும் செல்லவேண்டும்; அவ்வாறு செல்லாத வர் அல்லலுக்கே ஆளாகின்றார். மனிதனுடைய அறிவுக்குப் பயன் புனித நிலையை அடைவதேயாம். அந்தப் பேற்றை இழந் தவர் பேதைகளாயிழிந்து பீழைகள் படிந்து பிழைபடுகின்றனர்.

"செம்மைநலம் அறியாத சிதடர்"

என அவலப் பேதைகளைக் குறித்து மாணிக்கவாசகர் இவ்வாறு கவலையோடு கூறியிருக்கிறார். ஞானசூனியராய் ஈனமடைதலால் சிதடர் என்றார். சிதடு = குருடு. கண் இழந்த குருடர் வழிதெரி யாமல் தடுமாறித் தட்டழிதல்போல் அறிவிழந்த மூடர்கள் உரிய நெறியை உணராமல் பரிதாபமாய் வறிதே யுழலுகின்றனர்.

தன் உயிர்க்கு நன்மையை நாடி நடவாமல் புன்மையில் ஓடி இழிபவர் புலைத்துயரங்களையே அடைகின்றார். இனிய நீர்

மைகளால் மனிதனுக்கு இன்பமும் புகழும் வருகின்றன; கொடிய இயல்புகளால் துன்பமும் பழியும் தொடர்கின்றன.

உள்ளத்தில் அன்பு முதலிய பண்புகள் அமையின் அந்த மனிதனைச் சூழ்ந்து இன்ப நலன்கள் விளைகின்றன. இனிய கற்பகப் பூஞ்சோலையாய்ச் செழித்துத் தழைத்து அவன் சிறந்து விளங்குகிறான். அன்பின்றி உள்ளம் கடுமையாய்க் கொடுமை புகின் அவன் நெடுமையாய்த் துன்பங்களையே அடைய நேர்கின்றான். பழிபாவங்கள் சார்ந்து பாலைவனம்போல் படுகூடேறி அவனுடைய வாழ்வு கடுமையாய்ப் பாழ்படுகின்றது.

கெட்டவழியில் கிளர்வோன் குடி
பட்ட மரம்போல் பாழ்படும்.

என்றது அவலமான அழிவு நிலைகளை விழிதெரிந்து தெளிவடைய வந்தது. பாவத் தீ பற்றியதால் குடி பட்டழிந்தது.

இலை தளிர் கிளை தழை அரும்பு மலர் காய் கனி முதலியன நிறைந்து குளிர் நிழலோடு குலாவி நிற்கும் நறும் பூம்பொழில் போல் புண்ணியவான் குடி பொலிந்து விளங்குகிறது; வறுமை சிறுமை பிணி முதலியன பெருகிப் பாவியின் குடும்பம் படுதுயரடைகின்றது. அழி துயர்கள் பழி வழியால் வருகின்றன.

"வறியவன் இளமை போல் வாடிய சினையவாய்ச்
சிறியவன் செல்வம்போல் சேர்ந்தார்க்கு நிழலின்றி
யார்கண்ணும் இகந்துசெய்து இசைகெட்டான் இறுதிபோல்
வேரொடு மரம் வெம்ப விரிகதிர் தெறுதலின்,
அலவுற்றுக் குடி கூவ ஆறின்றிப் பொருள் வெஃகிக்
கொலையஞ்சா வினைவரால் கோல்கோடியவன் நிழல்
உலகுபோல் உலறிய உயர்மர வெஞ்சுரம்." (கலி, 10)

இலை தழையின்றிக் காய்ந்து கரிந்துநிற்கும் பாலைவனத்து மரங்களைக் குறித்து இது உரைத்துள்ளது. வறியவன் இளமை போல் கிளைகள் வாடி, சிறியவன் செல்வம்போல் நிழல் இன்றி, கெட்டவன் வாழ்வுபோல் கேடுமண்டி, கொடுங்கோல் அரசன் குடிகள்போல் உலர்ந்து வெப்பி மரங்கள் மறுகி நின்றன எனப் பெருங்கடுங்கோ என்னும் புலவர் பெருமான் இவ்வாறு நிலைமைகளை விளக்கியிருக்கிறார். உவமை நிலைகள் ஊன்றி உணரவுரியன.

பிற் உயிர்கள்பால் ஒருவன் செய்கிற தீமை பாவமாய் நிமிர்ந்து அவனுக்கே கொடிய துயரங்களைத் தருகிறது. துன்ப விளைவுகளைத் தெரிந்துகொள்ளாமல் அறிவு பாழ்போய் அவகேடு களைச் செய்து அவலங்களை அடைந்து மறுகி அழிகின்றார்.

தன் அழிவுக்குத் தானே வழிகோலிப் பழிபாவங்களைப் புரிந்து பாழாய் மனிதன் அழிந்து படுவது மாய வெறியாய் மருவியுள்ளது. தீயவினை தீவிடமாய் நோயையே புரிகிறது.

தெள்ளமுதைத் தள்ளிவிட்டுத் தீயவிடம் மாந்துதல்போல்
உள்ளமின்றித் தீமை யுறல்.

நல்ல தருமத்தை எவ்வழியும் நாடிக்கொள்; பொல்லாத பாவத்தை யாதும் அணுகாமல் புனிதனாய் உயர்ந்து புகழ் பொதிந்து நில். அந்த நிலை அதிசய இன்பங்களை அருளி வரும்.

---

730 புண்ணியன் என்னும் புகழ்போம் பழிவளரும்
கண்ணியங்கள் எல்லாம் கழிந்தொழியும்-எண்ணியபுன்
பாபஞ் சிறிது படியின் படுதுயர்கள்
தாபமாய்ச் சூழும் தகித்து. (ய)

இ—ள்.

பாவம் சிறிது புகுந்தால் புண்ணியன் என்னும் கண்ணிய மானபேர் ஒழிந்துபோம்; புகழ் அழிந்துவிடும்; பழி வளர்ந்து எவ்வழியும் அழிதுயரங்களே அடர்ந்து வருத்தித் தொடர்ந்து தகித்துச் சுடுநரகில் தள்ளிப் படுநாசம் செய்யும் என்பதாம்.

இது பாப நிலையின் புலைகளை உணர்த்துகின்றது.

இனிய நீர்மைகள் தோய்ந்துவரும் அளவு மனிதன் மகிமை வாய்ந்து வருகிறான். உள்ளே நல்ல பண்பு இல்லையானால் வெளியே பொல்லாதவனாய் விரிகின்றான். கெட்ட எண்ணங்களை யுடையவன் கேடு செய்வன் ஆதலால் தீயவன் கொடியவன் பாவி எனப் பழியான இழி பெயர்களை அடைந்து எவ்வழியும் தாழ்ந்து வீழ்ந்து படுதுயரங்களில் அவன் உழல நேர்கின்றான்.

தான் செய்த பாவம் தன்னைவிடாது வருத்தும்; உடல் இறந் துபோனாலும் உயிரைத் தொடர்ந்து புகுந்து துயரைப் புரிந்து நிற்கும். எவ்வழியும் தப்ப முடியாமல் வெவ்விய துன்பங்களை

விளைத்துவரும் ஆதலால் தீவினை கொடிய தியினும் நெடிய கூற்றினும் கடிய விடத்தினும் கொடிது என முடிவாய் நின்றது.

பாய பல் பகைக்கும் தப்பிப் பாரிடை உய்யலாகும்;
மேயவக் கதிசென்றாலும் விளிதரா துடங்கு சென்றே
ஆயநன் றனைத்தும் கொன்று அங்கு அருந்துயர் பலவும்நல்கும்;
தீயவல் வினையின் யாதும் செய்யற்க ஏம கண்டா!
(விநாயக புராணம்)

செய்த பாவம் ஆனது உயிரை விடாது சென்று துயர்கள் பல செய்யும்; அதனை யாதும் செய்யாதே எனத் தன் மகனுக்கு ஓர் அரசன் இவ்வாறு உரிமையோடு அறிவுபோதித்திருக்கிறான்.

கொன்றுயிர் நடுங்கச் சென்று கொலைத்தொழில் கருவி ஏந்தி
நின்றெறி நுடங்கு கண்ணால் பாவமே நினைந்து செத்தார்
சென்றெறி நரகில் வீழ்வர் செவ்வனே துன்பம் அஞ்சி
நன்றியில் கொலையின் நீங்கி நற்றவம் புரிமின் என்றான்.
(சூளாமணி)

பிற உயிர்களை நடுங்கும்படி செய்தால் நீ நடுங்கி வருந்தி நரக துன்பங்களை அடைவாய்! ஆதலால் பாவத்தை யாண்டும் யாதும் செய்யாதே என இது உணர்த்தியுளது. ஒவ்வொரு மனிதனும் செவ்வையாய் உணர்ந்து வெவ்வினை நீங்கி உய்யும்படி உறுதி நலங்களை மேலோர் உரிமையோடு குறித்திருப்பதுகூர்ந்து சிந்திக்கவுரியது. மனித சமுதாயம் ப.கிமையுற மதிகள் வந்தன.

தருமவான், புண்ணியவான் என்று தன்னை உலகம் உவந்து பேசும்படி ஒருவன் நடந்து வந்தால் அவன் இந்த வையகத்திலேயே வானகத்தின் பேரின்பத்தை அடைந்தவனாகின்றான்.

நெஞ்சம் புனிதமாய் நெறி முறையோடு ஒழுகி வருபவன் விழுமிய மேலோனாய் விளங்கி வருகிறான். தரும தேவதை அவனிடம் மருவி மிளிர்கிறது; அரிய பல மேன்மைகள் அவனுக்கு உரிமையா யமைகின்றன. தெய்வத் திருவருள் சுரந்து வருதலால் எவ்வழியும் அவன் உயர்ந்து விளங்கி ஒளி வீசி நிற்கின்றான்.

"நல்வினையுடைய நீரார் நஞ்சு உணின் அமுதம் ஆகும்;
இல்லையேல் அமுதும் நஞ்சாம்; இன்னதால் வினையின் ஆக்கம்.'
(சிந்தாமணி)

நல்வினையாளர்க்கு நஞ்சும் அமுதமாம்; தீவினையாளர்க்கு அமுதமும் நஞ்சாம் என இதில் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. பாவம் மிகவும் தீயது; எவ்வழியும் வெவ்விய துயரங்களையே விளைப்பது; அதனோடு யாதும் பழகலாகாது என்னும் உறுதி நிலையை இங்கே நன்கு உணர்ந்து கொள்கின்றோம்.

இழிந்த பலபிறவிகளையும் தப்பி உயர்ந்த மனிதப் பிறவிக்கு வந்திருக்கிறாய்; இந்த அரிய பிறவியில் உரிய நல்வினைகளைச் செய்து புண்ணியவானாய் உயர்ந்து புத்தேளுலகத்தை அடைய வேண்டும்; அங்ஙனம் அடையாமல் தீவினைகளைச் செய்து பாவியாயிழிந்து நரக துன்பங்களில் விழுவது எவ்வளவு அழிவு! எத்துணை இழிவு! உய்த்து உணர்ந்து உண்மை தெளிய வேண்டும்.

“வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்
உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றொளி தீயின் முனிகின்ற வாறே.” (திருமந்திரம்)

ஆயுள் கழிந்து நாளும் ஒழிந்து போகிறது; அந்த அழிவு நிலையை உணர்ந்து தம் உயிர்க்கு உறுதி நலனை விரைந்துகொள்ளாமல் வீணே மாந்தர் மாய்ந்துபடுகின்றார்; பாவிகளாய் இழிந்துபோகாமல் உயர்ந்து உய்தி பெறவேண்டும் என்று திருமூலர் இவ்வாறு உருகி வேண்டியிருக்கிறார்.

நல்ல அறிவுடையனாய் உயர்ந்த பிறப்பில் வந்துள்ள மனிதன் தன் உயிர்க்கு அல்லல் நேரா வகையில் ஆய்ந்து தேர்ந்து நெறி நியமங்களோடு ஒழுகி வரவேண்டும்; பண்போடு வாழ்ந்து வருகிற அந்த வாழ்வு என்றும் இன்ப நிலையமாய் ஏய்ந்து வரும். அவ்வாறின்றிப் பொறி வெறி மண்டி நெறிகேடாய் நடந்தால் இறுதியில் அவலத் துயரங்களையே அனுபவிக்க நேரும்.

ஆதன் பெருங்களி யாளன் அவனுக்குத்
தோழன்மார் ஐவரும் வீண்கிளைஞர்—தோழர்
வெறுப்பனவும் உண்டெழுந்து போனக்கால் ஆதன்
இறுக்குமாம் உண்ட கடன். (அறநெறி, 129)

ஆன்ம நலனை மறந்து தேக போகங்களிலேயே களித்திருந்த மனிதன் முடிவில் அடையும் துயர நிலைகளை இது உணர்த்தியுள்ளது. உரைக் குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து உணரத்தக்கன.

ஓர் ஊரில் ஒரு செல்வன் இருந்தான். பெருங்குடியன்; அவனுக்கு நண்பராய் ஐந்துபேர் அமைந்திருந்தனர்; தின்பதும் குடிப்பதுமாகிய களியாட்டங்களிலேயே அவர் மூண்டு நின்றனர்; உறவுரிமையாளர்போல் ஒட்டியிருந்து பல வழிகளிலும் உண்டு களித்து வந்தனர்; அதனால் அவனது செல்வம் எல்லாம் தொலைந்தது; கடனும் மிகுந்தது; அந்தக் கடனைத் தீர்க்க முடியாமல் சிறையில் போயிருந்து துயரங்களை அடைந்து செத்தான்; மறுபடியும் இழி பிறப்பில் பிறந்து அழிதுயரங்களையே நுகர்ந்து அலமந்து நொந்தான். அறிவுகெட்ட அந்த மடையன் கெட்ட பழக்கங்களால்தனக்குத் துன்பத்தைத் தானேவிளைத்துக்கொண்டதுபோல் மனிதனும் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்புல இச்சைகளில் அழுந்தி மனம்போனபடியெல்லாம்போய் பாவங்களைச் செய்துகொண்டு அவற்றின் பலன்களான துன்பங்களைத் தொடர்ந்து நுகர்ந்து இழிந்து உழலுகின்றான். இந்த உண்மையை உருவக அணியில் இக்கவி சுவையாக விளக்கியிருக்கிறது. காட்டிய கருத்துகள் கருதிச் சிந்திக்க வந்தன.

ஆதன் = அறிவிலி, குருடன். ஞானக்கண் இல்லாமல் ஈனமாயழிந்துபட்ட இழிநிலை தெரிய ஆதன் என்றார். ஐவர் வீணர் என்றது ஐம்பொறிகளை. நெறிகேடான வழிகளிலேயே வெறிகொண்டு சென்று வினைகளை அவை விளைத்து விடுகின்றன; அந்த வினைத்துயரங்களை சீவன் தனியே அனுபவிக்க நேர்கின்றான்.

பிறர் மனம் நொந்து வருந்தும்படியான காரியங்களைச் செய்வது பாவமாய் வருகிறது; அதன் பலன்கள் பற்றித் தொடர்ந்து செய்தவனைச் சித்திரவதை செய்கின்றன. மாடு பன்றி முதலிய இழி பிறவிகளில் உழந்தும், கொடிய நரக துன்பங்களை நுகர்ந்தும் பாவிகள் நெடிது வருந்தி நீசமாயுழலுகின்றனர். ஒருபிறவியில் செய்தது வருபிறவியிலும் வந்து வருத்துகிறது.

நட்பிடைக் குய்யம் வைத்தான், பிறர்மனை நலத்தைச்சேர்ந்தான்
கட்டழல் காமத்தீயிற் கன்னியைக் கலக்கி னானும்,
அட்டுயிர் உடலம் தின்றான், அமைச்சனாய் அரசு கொன்றான்,
குட்டநோய் நரகம் தம்முள் குளிப்பவர் இவர்கள் கண்டாய்.

(சீவக சிந்தாமணி)

நண்பனை வஞ்சித்தவன், பிறன் மனைவியைத் தழுவினவன், கன்னியைக் கெடுத்தவன், பிராணிகளைக் கொன்று ஊன் தின்றவன், அரசனுக்கு அவகேடு செய்தவன் ஆகிய இவர் இம்மையில் கொடிய நோய்களால் வருந்தி மறுமையில் நரக துன்பங்களையும் அடைந்து நைந்து படுவர் என இது நன்கு குறித்துள்ளது.

உள்ளம் கொடியார், உயிர்க்கொலை காதலர்,
வெள்ளம் கொடியன மேவிப் பிறன் பொருள்
கொள்ளும் கொடுமைக் குணத்தின் மனித்தரும்
நள்ளலர்ச் சாய்த்தோய்! நரகம் அடைவார். (சூளாமணி)

உள்ளம் கொடியராய்த் தீமைகள் செய்பவர் துன்ப வெள்ளத்தில் ஆழ்ந்து துடிப்பவர் என இது உணர்த்தியுளது. நரகம் என்பது துயரம் நிறைந்த இடம். தீவினைகளைச் செய்த சீவர்கள் இறந்துபோனபின் பூதசார சரீரங்களை மருவி வேதனைகளை அனுபவித்து வெந்து தவிக்கும் கேதபூமியாய் அது ஏதமடைந்துள்ளது.

மன்றுபறித்து உண்டோரும் வழக்கல்லாது
உரைத்தோரும் மனையாள் தன்னோடு
ஒன்றியுடன் வாழாதே ஓராதே
பரதாரம் உவந்துள்ளோரும்
கொன்றுடலம் தின்றோரும் கோட்சொல்லித்
திரிவோரும் கோலிச் செய்த
நன்றிதனை மறந்தோரும், நரகத்தின்
இடைக்கிடந்து நடுங்கக் கண்டான். (1)

கற்றவரைக் காய்ந்தோரும், கைபிடித்த
காதலியைக் கனன்றுளோரும்,
பெற்றவர்தாம் பசி கூரப் பெருவயிறு
வளர்த்தோரும், பேணித் தம்மோடு
அற்றவருக்கு அறுதோரும், அந்தணரை
இகழ்ந்தோரும், அமரில் ஆண்ட
கொற்றவனை விட்டோடும் கொடியோரும்,
கும்பியிடைக் குளிப்பக் கண்டான். (2)

கோபத்தால் வினைஎண்ணிக் குடிகேடு
சூழ்ந்தோரும், குலத்தால் வந்த
தாபத்தால் இரந்தோரைத் தாமடர்ந்து
வைதழிக்கும் தயாவிலோரும்,

ஆபத்தால் அபயம்என்றே அடைந்தோரை
விட்டோரும் ஆதியாய
பாபத்தாரும் பலரைப் பழிப்போரும்
படுநரகில் பதைப்பக் கண்டான். (3)

[இராமாயணம்]

இராவணன் வெற்றிவீரனாய்த் திக்குவிசயம் செய்தபோது எமலோகத்துக்குப் போனான். அப்பொழுது அங்கே ஓரிடத்தில் அவன் நேரேகண்ட காட்சிகளை இவை காட்டியுள்ளன. இங்கே குறித்திருக்கிற பாவங்களையும் அவற்றைச் செய்தவர் படுகிற நரக துயரங்களையும் கருதிக் காண்பவர் எவரும் உள்ளம் மறுகி இரங்குவர். செய்த தீவினை தீயாய் வதைக்கிறது.

பாபத்தார் பலர் படுநரகில் பதைப்பக் கண்டான் என்றதனால் அங்கே அவர் பட்டிருக்கின்ற அடு துயரங்களை அறிந்துகொள் கிறோம். பாவம் செய்தால் இப்படி அவல நிலைகளில் அழுந்தி அழிதுயரங்களை அனுபவிக்க நேரும் ஆதலால் அதனை ஒழிந்து ஒழுகுங்கள் என உலக மக்களுக்கு நூல்கள் உணர்த்திவருகின் றன. உண்மையை ஓர்ந்து உணர்ந்தவர் நன்மை யுறுகின்றனர்.

பொல்லாத பாவம் புலைநரகாம்; புண்ணியமோ
எல்லா மகிழ்வுக் கிடம்.

அல்லதை ஒல்லையில் விலக்கி ஒழி; நல்லதை நாடிச் செய்து நலம் பல பெறுக. அப் பேறு பேரின்பமாம்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பாவம் மிகவும் கொடியது.
அடுதுயர் புரிவது.
அல்லலே தருவது.
நரகில் தள்ளி நாசம் செய்வது.
பிறவித் துன்பங்களைப் பெருக்கி விடுவது.
அதனை அணுகினால் அவலமேயாம்.
ஆவி அலமந்து அழியும்.
பாவி என்று பாழ் படலாகாது.
தீய நஞ்சு என அதனை அஞ்சி விலகுக.
புண்ணியம் புரிந்து புகழ்மிகப் பெறுக.

எஅ வது அதிகாரம் முற்றிற்று.

# எழுபத்து நான்காவது அதிகாரம்.

## புகழ்.

அஃதாவது அரிய செயல்களால் எய்தும் இனிய இசை. ஒருவனுடைய பேர் சீரும் சிறப்புமாய் உயர்ந்து யாரும் உவந்து பேச ஒளி வீசி வருவது புகழ் என வந்தது. பழி பாவங்கள் நீங்கிய விழுமியோர்பால் விளைவது ஆதலால் அவற்றின் பின் இது வைக்கப்பட்டது. வைப்பு நிலை உய்த்து உணர வுற்றது.

731. உற்ற பிறவிக் குரியபயன் ஒண்புகழே;
பெற்றவனே எவ்வழியும் பேறுடையான்—மற்றவன்
மானுடனாய் வந்தாலும் மாண்பிழந்து போனமையால்
ஊனுடம்பே இல்லை உயிர். (க)

இ—ள்.

அரிய மனிதப் பிறவிக்கு உரிய பயன் இனிய புகழே; அதனைப் பெற்றவனே சிறந்த நிலையில் பிறந்தவன் ஆகின்றான்; அங்ஙனம் பெறாதவன் பிறந்திருந்தும் பிறவாதவனாய் இழிந்து போகின்றான்; இழிபழி தெளிந்து உயர்ந்து கொள்க என்பதாம்.

பிறவிகளுள் மனிதப்பிறப்பு உயர்ந்தது. மிருகம் பறவை முதலியன சிறந்த அறிவு நலம் அமையப் பெறாதன ஆதலால் அவை இழிந்தனவாய் நின்றன. நன்மை தீமைகளை நாடி அறிந்து உண்மை தெளிந்து உறுதியான உயர் நிலைகளை அடைய வுரிய தகுதி வாய்ந்துள்ளமையால் மனித மரபு வேறு பிராணி வர்க்கங்களினும் மேன்மையான மதிப்பு மிகுந்து நின்றது. சீவ கோடிகளுடைய செயல் இயல்கள் அதிசய விசித்திரங்களுடையன. யூகித்து உணர்வதில்உயர்ச்சிகள் வேகித்து விளைந்துள்ளன.

யூக விவேகங்களும் இனிய பண்பாடுகளும் மனித சாதியை மகிமைப் படுத்தி வருகின்றன. அரிய கருமங்கள் உரிய பயன் களோடு மருவி வரும்பொழுது அவை பெரிய தருமங்களாய்ப் பெருகி நின்று யாண்டும் பேர் பெற்று நீண்டு நிலவு கின்றன.

ஒரு மனிதனை உலகம் புகழ்ந்து போற்ற வேண்டுமானால் அவனிடம் சிறந்த தன்மைகள் அமைந்திருக்க வேண்டும். உயர்ந்த நீர்மையாளரை எவரும் வியந்து போற்ற நேர்கின்

றனர். அரிய நீர்மைகளைக் கொண்டே தெய்வங்களையும் மனிதர் பெருமையாப் பேசி வருகின்றனர். புகழால் உயர்ந்த தெய்வங்களை ஆசையோடு பூசனைகள் புரிந்து வழிபடுகின்றனர். கீர்த்திகள் வார்த்தைகளால் துதிக்கப் படுதலால் அவை கீர்த்தனைகள் என வந்தன. புண்ணிய நீர்மைகளை எவரும் கண்ணியமா எண்ணி இன்புறுகின்றனர். புகழ் மணம் கமழ்ந்து வருதலால் அவை உயரொளி வீசி எவ்வழியும் திவ்வியமாய் உலாவி வருகின்றன.

"மன்னுயிர் முதல்வனை ஆதலின்
நின்னோர் அனையைநின் புகழொடும் பொலிந்தே;
நின்ஒக்கும் புகழ் நிழலவை
பொன் ஒக்கும் உடையவை
எண்ணிறந்த புகழவை எழில் மார்பினவை." (பரிபாடல்)

திருமால் இவ்வாறு புகழப்பட்டுள்ளார்; அளவிடலரிய புகழ்களையுடையவர்; புகழ் ஆகிய நிழலிலே பொலிந்து விளங்குபவர் என்றதனால் புகழ் எவ்வளவு உயர்வுடையது; எத்துணை மகிமை வாய்ந்தது! என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம். தேவ தேவனும் புகழால் சீவ ஒளி மேவித் திவ்வியமாய் விளங்குகின்றான். பரமனுக்கும் புகழ் பரிசு தந்து வரிசை செய்துள்ளது.

இத்தகைய புகழை மனிதன் ஓரளவாவது நேரே சம்பாதித்துக் கொள்ள வேண்டும். வித்திலிருந்து விளைவுகள் தோன்றுதல் போல் நல்ல குணங்களிலிருந்தே புகழ்கள் தோன்றுகின்றன. புகழை விளைக்கத் தக்க இனிய நீர்மைகளை எவ்வளவுக்கு எவ்வளவு மனிதன் மருவி வருகின்றானோ அவ்வளவுக்கு அவ்வளவு அவன் புனிதமான மகிமையுடையவனாய் உயர்ந்து திகழ்கின்றான். பெற்ற புகழின் அளவைக் கொண்டே ஒருவன் பிறந்த பிறப்பு மதிக்கப் படுகிறது. எவன் புகழ் பெறவில்லையோ அவன் பிறப்பு பழிபட்டதாய் இழிந்து எவ்வழியும் பாழ்படுகின்றது.

தோன்றின் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று. (குறள், 236)

மனிதன் என்று ஒருவன் பிறந்தால் புகழுக்கு உரிய குணங்களோடு அவன் பிறக்க வேண்டும்; அங்ஙனம் இல்லையானால் அவன் பிறப்பதை விடப் பிறவாமல் ஒழிந்து போவதே நல்லது எனத் தேவர் இங்ஙனம் வரைந்து கூறியிருக்கின்றார்.

உரையில் மருவியுள்ள பரிவும் வேகமும் ஊன்றி உணர வுரியன. மனிதன் புகழுடையவனாக வேண்டும் என்னும் ஆவல் தேவர் உள்ளத்தில் ஊடுருவியுள்ளதை உரைகள் உணர்த்தி நிற்கின்றன.

அருமையான சிறந்த மனிதப் பிறப்பில் பிறந்தும் அதற்கு உரிமையான புகழை அடைந்து கொள்ளாமல் வறிதே ஒருவன் நெடிது வளர்ந்திருப்பது பெரிய பழியாம்; பழியான அவன் மனித உருவில் மருவியிருப்பது அதற்கு ஓர் இழிவாம்; ஆகவே அவனது இருப்பு வெறுப்பாயது; உயிரின் பயன் இல்லாத அவன் இருப்பதினும் இல்லாமல் மறைந்து விரைந்து ஒழிந்து போவதே நல்லது என்பார் தோன்றாமை நன்று என்றார்.

இழிந்த ஆடு மாடுகளாய்ப் பிறந்திருப்பின் அவை புகழ் அடைய வில்லை என்று யாரும் இகழ்ந்து சொல்லார்; உயர்ந்த அறிவுடைய மனிதனாய்ப் பிறந்திருந்தும் அதற்குத் தகுந்த பயனை அடையானாயின் அவன் வாழ்வு மிகவும் கடையாம் என்க.

மனிதப் பிறப்புக்கும் புகழுக்கும் உள்ள உறவுரிமையை மேலே வந்துள்ள அருமைத் திருக்குறளால் நன்கு உணர்ந்து கொள்கிறோம். புகழை உரிமையாகப்பெறுவதே பிறவிப்பயனாம்.

பிறந்த பிள்ளை சிறந்த குணமுடையதாயின் பெற்றோர்க்கு மகிழ்ச்சி; அந்தக் குடிக்கும் பெருமையாம்; உலகில் தோன்றிய மனிதன் ஆன்ற புகழுடையனாயின் மனித சமுதாயம் இனிது மகிழும்; அந்த நாட்டுக்கும் ஏற்றமான நன்மையாம்.

ஒருவனுடைய குணமும் செயலும் இனியனவாயின் பிறர்க்கு அவை மகிழ்ச்சியைத் தருகின்றன; தரவே உள்ளம் உவந்து அவர் அவனைப் புகழ்ந்து பேசுகின்றார். அவ்வாறு புகழ் மொழிகளால் ஒளி பெற்று விளைந்து வந்தது எதுவோ அது புகழ் என வந்தது. உலக வழக்கு உயர்வாய் நிலவியது.

புகழை எவரும் எளிதில் அடைய முடியாது; அரியன செய்பவரே அதனை அடைய நேர்கின்றார். நல்ல பலனைப் பெற விரும்பினவர் அல்லலுக்கு அஞ்சாமல் ஆண்மையோடு முயன்ற போதுதான் யாண்டும் உயர்ந்து மேன்மை யுறுகின்றார்.

"The heart that is soonest awake to the flowers
Is always the first to be touch'd by the thorns"
(Thomas Moore)

"இனிய மலர்களை விரைந்து பெற விரும்பினவன் முதலில் முள்ளுகளால் தாக்கப்படுகின்றான்" என்னும் இது இங்கே நோக்கவுரியது. அருமையுடையது எளிமையில் அமையாது.

பெரும் பிரயாசையால் அடைதலினாலேதான் புகழ் அருமையும் பெருமையும் இனிமையும் உடையதாய் யாண்டும் மருவியுள்ளது. வேண்டி அடைந்தது வியன் சுவை நீண்டது.

"Sweet is pleasure after pain" (Dryden)

"உற்ற வருத்தத்திற்கு பின்பு தான் பெற்ற சுகம் பெரிதும் இனிமையாயிருக்கிறது" என ட்ரைடன் என்னும் ஆங்கில அறிஞர் உழைப்பின் சுவைநுகர்ச்சியை இங்ஙனம் குறித்திருக்கிறார்.

"No pains, no gains."

"உழைப்பு இன்றேல் ஊதியம் இல்லை"

என்பது பழமொழி வழக்காய் வந்துள்ளது.

உடலுக்கு ஊதியம் ஆன பொருளை அடைவதினும் உயிருக்கு ஊதியமான புகழை அடைவது மிகவும் அருமையாம். அரிய ஆண்மையுடைய விழுமிய மேன்மையினரே புகழை அடைய நேர்கின்றார். புகழ் பெறுவது வித்தகத் திறலாய் விளங்கியுளது.

உண்மையான புகழைப் பெற முடியாதவரும் வெறும் புகழ் மொழியால் உள்ளம் உவந்து கொள்ளுகின்றார். புகழ்ச்சியான வார்த்தை எந்த மனிதனுக்கும் மகிழ்ச்சியை விளைத்து விடுகின்றது. இகழ்ச்சியாளனும் அதற்கு ஏங்கி நிற்கின்றான்.

"Praise enough to fill the ambition of a private man." [Cowper]

"ஒரு மனிதனுடைய அந்தரங்க ஆசையைப் பூர்த்தி செய்யப் புகழ்ச்சி மொழி ஒன்றே போதும்" எனக் கவுப்பர் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் ஆய்ந்து கூறியிருக்கிறார்.

ஆன்ம தாகத்தை அடக்கி ஆனந்தம் புரிந்து வருதலால் புகழில் ஏதோ ஒரு தனியான இனிமை மருமமாய் மருவியுள்ளது என அனுபவ நிலையில் நுணுகி இனிது உணர்ந்து கொள்கிறோம்.

Fame is the spur that the clear spirit doth raise. (Milton)

"புகழ்ச்சி மனிதனுக்கு எழுச்சியை ஊட்டும் கருவியாயுள்ளது" என மில்ட்டன் இவ்வாறு குறித்திருக்கிருர். ஒருவனைப் புகழ்ந்து கூறின் அவன் விரைந்து காரியம் செய்ய நேர்கின்ருன்.

தன் தகுதிக்கு மிஞ்சிய காரியத்தையும் புகழின் நசையால் மனிதன் செய்யத் துணிகின்ருன். புகழ் மொழி கூறித் தூண்டியபொழுது பேடியும் வீரன் போல் போரில் மூண்டு பாய்ந்து மாண்டுபட நேர்கின்ருன். அதில் ஒரு மாய மோகம் மருவியுளது.

"Folly loves the martyrdom of Fame." (Byron)

"புகழ் மருவிய மரணத்தை மடையனும் அடைய விரும்புகிருன்" என ஆங்கிலக் கவிஞராகிய பைரன் இங்ஙனம் பாடியிருக்கிருர். இசையின் நசையால் இனிய உயிரையும் விடுகிருன்.

மனித சமுதாயத்துக்கும் புகழுக்கும் உள்ள உறவுரிமையும், அதன்பால் அது கொண்டுள்ள ஆவலும் மோகமும் செயல் இயல்களால் பலவகைகளிலும் தெரிய வந்துள்ளன.

தன்னை உரிமையாக உடையவனை மண்ணுலகமும் விண்ணுலகமும் பெருமையாக எண்ணித் துதிக்கும்படி செய்தருளுதலால் புகழ் எவ்வளவு மகிமையுடையது! என்பதை எளிதே உணர்ந்துகொள்ளலாம். சிறந்த பிறவிப் பேருகவும், உயர்ந்த உயிர் ஊதியமாகவும் புகழ் உவந்து போற்றப்பட்டுள்ளது. அதனை அடைந்துகொள்ளுவதில் அரிய பல பொருள்களையும் இனிய உயர் நிலைகளையும் பெரியோர் துறந்து விடுகின்றனர்.

"புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்" (புறம்)

என விழுமிய மேலோரது நிலைமையைக் குறித்து இளம் பெருவழுதி என்னும் பழம்பெரும்புலவர் இவ்வாறு விளம்பியிருக்கிருர்.

இத்தகைய புகழைப் பெற்றவர் எத்தகையோரும் வியந்து போற்ற யாண்டும் வித்தகராய் விளங்கி நிற்கின்றனர். அரிய புகழ் பெரிய மாட்சியாய் ஆட்சி புரிகிறது.

"புகழ்ச்சியான் போற்ருதார் போற்றப்படும்"

(நான்மணிக்கடிகை)

புகழுடையானைப் பகைவரும் போற்றுவர் என இது புகழ்ந்திருக்கிறது. பொன்னினும் புகழ் வலியுடையதாய் மன்னியுளது.

இன்னவாறு புகழ் மனிதனுக்கு அதிசய மகிமையாய் அமைந்திருத்தலால் அதனை எவரும் உரிமையோடு மருவிக்கொள்ளவேண்டும். ஒருவனுடைய உருவத் தோற்றத்துக்கு இட்ட பெயர் புகழோடு ஒட்டியபொழுது அது உயர்வாய் ஒளிவீசுகின்றது. பேர் சீரோடு சேரின் பாரோடு படர்கின்றது.

ஊரும் நாடும் உலகமும் புகழ நேரின் அந்தப் பேர் பெருங் கீர்த்தியாய் விளங்க நேரும். நாடு புகழ ஒருவன் பீடு பெருது போயினும் தோன்றிய ஊர் அளவாவது புகழ்பெற வேண்டும். அதுகூடப் பெருன் ஆயின் அவன் தோற்றம் ஏற்றம் இழந்து தூற்றப்படும். உயிர்ப் பயன் இழந்தது துயர்ப்பட நேர்ந்தது.

**ஊன் உடம்பே உயிர் இல்லை.**

என்றது புகழ் இல்லாத புலையைப் புலப்படுத்தி நின்றது. புகழ் பெறவில்லையானல் அந்த மானுடன் வாழ்வு ஈனமா இழிந்து கழிகின்றது. உயிரின் ஒளியான புகழை அடையாதபோது அந்த மனிதன் உருவோடு உலாவித் திரிந்தாலும் ஒரு நடைப் பிணமேயாவன். புகழ் பெருதவன் பழிபடிந்து பாழடைந்தான்.

உன் பிறப்பின் பெருமையை இழந்து சிறுமையாய்ப் போகாதே; சிறப்பான புகழை விரைந்து அடைந்து கொள்ளுக.

---

732. சீரும் சிறப்பும் செயலியல்க ளாகிவரின்
பேரும் புகழும் பெருகியே—யாரும்
உவந்து புகழ உலகம் முழுதும்
நிவந்து நிலவும் நிலைத்து. (உ)

இ—ள்.

தன்னுடைய குணம் செயல்கள் சீரும் சிறப்பும் அமைந்துவரின் அவனிடம் பேரும் புகழும் பெருகி வரும்; அதனல் உலகம் புகழ்ந்து மகிழ அவன் உயர்ந்து விளங்குவான் என்க.

இது புகழ் விளையும் புலன் உணர்த்துகிறது.

எண்ணம் சொல் செயல் என்னும் இந்த மூவகை நிலைகளாலேயே மனித சாதி இயங்கி வருகிறது. இம்மூன்றனுள்ளும் செயலே தலைமையாயுள்ளது. ஒருவனது நிலைமையை அளந்து அறிவதற்கு இது சிறந்த கருவியாய் எங்கும் விளங்கி நிற்கிறது.

ஒருவனிடம் இதமான இனிய செயல்கள் நிகழ்ந்துவரின் மனித இனத்துள் அவன் தனி நிலையில் உயர்ந்து திகழ்கிறான். உலகமும் அவனை உவந்து புகழ்ந்து வருகிறது. பயனும் பண்பும் உடைய மனிதனை எவரும் வியனாக வியந்து பேசி வருதலால் அவனது பேரும் புகழும் திசைகள்தோறும் விரைந்து பரவ நேர்கின்றன.

அயிந்தன் என்பவன் ஒரு சிறந்த அறிஞன்; பெருந்தன்மையாளன்; பேருபகாரி; ஆலஞ்சேரி என்னும் ஊரினன். நிறைந்த நிலபுலங்களையுடையவன்; இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இருந்தவன். அந்நாளில் சங்கப் புலவர்களைப் பாண்டிய மன்னன் அன்போடு ஆதரித்து வருங்கால் நாட்டில் கொடிய பஞ்சம் தோன்றியது. அது நெடிது நீண்டு நின்றமையால் சங்கத்தார் அங்கங்கே பிரிந்துபோக நேர்ந்தனர். அவருள் சிலர் இவனை வந்தடைந்தனர்; அந்தப் புலவர்களைக் கண்டதும் இவன் பெருமகிழ்ச்சிகொண்டு உரிமையோடு உவந்து உபசரித்தான்; தன்பால் இருந்தருளும்படி அன்பால் வேண்டினான். அவரும் ஆண்டு இசைந்திருந்தார். மதிநலமுடைய அவரை மிகவும் மரியாதையோடு இவன் பேணி வந்தான். பஞ்ச நிலையால் புலவர் பிரிந்துபோனதை நினைந்து வழுதி வேந்தன் வருந்தித் தன்பால் வந்தருளும்படி தூதரை ஏவினான். அவர் பல இடங்களிலும் தேடி அலைந்து முடிவில் இவனிடம் வந்து அரசன் ஏவியதை உரைத்தார். காவலன் ஆணையை அறிந்ததும் பாவலரை இவன் ஆவலோடு தொழுது வணங்கிப் பரிசில் பல தந்து வரிசை செய்து அனுப்பினான். அவர் அரசனை வந்து கண்டார். அவரைக் கண்டதும் பாண்டியன் ஆர்வம் மீதூர்ந்து அளவளாவினான். இவ்வளவு காலமும் எங்கிருந்தீர்கள்? எவ்வாறு வாழ்ந்தீர்கள்? என்று அன்புரிமையோடு அவரது சேம நலங்களை விசாரித்தான். வேந்தன் அவ்வாறு வினவியபோது புலவர்கள் இந்த உபகாரியின் நிலைமையை உள்ளம் உவந்து உரைத்தார். பாவலர் ஆதலால் பாவால் மொழிந்தார். அது அயலே வருவது காண்க.

“காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி
வேலையும் குளனும் வெடிபடச் சுவறித்
தந்தையை மக்கள் முகம் பாராமல்
வெந்த சாகம் வெவ்வேறு அருந்திக்
குணமுள தனையும் கொடுத்து வாழ்ந்த

கணவனை மகளிர் கண் பாராமல்
விழித்தவிழி எல்லாம் வேற்றுவிழி ஆகி
அறவுரை இன்றி மறவுரை பெருகி
உறைமறந்து ஒழிந்த ஊழி காலத்தில்
தாய் இல்லவர்க்குத் தாயே ஆகவும்
தந்தை இல்லவர்க்குத் தந்தையே ஆகவும்
இந்த ஞாலத்து இடுக்கண் தீர
வந்து தோன்றினன் மாநிதிக் கிழவன்
நீலஞ் சேரும் நெடுமால் போல்பவன்
ஆலஞ் சேரி அயிந்தன் என்பான்
தன்குறை சொல்லான் பிறர்பழி உரையான்
மறந்தும் பொய்யான் வாய்மையும் குன்றான்
இறந்து போகாது எம்மைக் காத்தான்
வருந்தல் வேண்டாம் வழுதி
இருந்தனம் இருந்தனம் இடர்கெடுத்தனனே."

(சங்கப்புலவர்)

அயிந்தனைக் குறித்துச் சங்கத்தார் இங்ஙனம் கூறியிருக்கின்றனர். மன்னனும் அவனை வியந்து மதித்து நயந்து மகிழ்ந்தான். நேர்ந்த பஞ்சத்தின் நிலையையும், அல்லலான அந்தக் காலத்தில் புலவர்களை அவன் உரிமையோடு போற்றி வந்துள்ள வகையையும், அவனுடைய குண நலங்களையும் இதனால் அறிந்து மகிழ்கிறோம். கவியைக் கருதிக் காணுவார் அரிய பல சுவைகளை உணர்ந்து உரிய நிலைமைகளை ஓர்ந்து உவந்து கொள்ளுவார்.

மறந்தும் பொய்யான்; இறந்து போகாது எம்மைக் காத்தான் என்றது அவனது உத்தம நிலையையும் உபகார நீர்மையையும் அரிய பல சீர்மைகளையும் நன்கு உணர்த்தியுள்ளது.

ஈகை இயல்பும், இனிய பண்பாடும் மனிதனை அதிசய நிலையில் உயர்த்தியருளுகின்றன. அங்ஙனம் உயர்ந்தவனை உலகம் என்றும் உவந்து போற்றுகின்றது. அயிந்தன் மறைந்து பதினெட்டு நூற்றாண்டுகள் ஆயின. இன்றும் அவனை வியந்து புகழ்கின்றோம்; விழைந்து மகிழ்கின்றோம். புகழ்ச்சியும் மகிழ்ச்சியும் பொங்கிவரப் புனித நிலையில் அவன் பொலிந்து நிற்கின்றான். யாதும் நிலையில்லாத உலகில் புகழ் நிலைத்து நிலவுகின்றது.

சிறந்த புலவர்கள் உவந்து பாடும்படியான புகழை ஒருவன் அடைந்துகொள்வான் ஆயின் அவன் என்றும் நித்திய சீவனாய் நிலைத்து வாழ்கின்றான். ஒருவனது பிறப்பின் தோற்றம் புகழால் சிறப்பாய் ஏற்றம் பெறுகிறது. அப்பேறு பெற்றவர் என்றும் அழியாத விழுமிய நிலையில் நன்றாக நின்று நிலவுகின்றார்.

உற்ற ஊனுடம்பு இடையே அழிந்துபோகிறது; பெற்ற புகழ் எஞ்ஞான்றும் அழியாமல் யாண்டும் மேன்மையாய் நீண்டு நிற்கிறது; ஆகவே அது அதிசயமாய்த் துதிசெய்ய வந்தது.

ஒருவனது இரண்டு யாக்கை ஊன்பயில் நரம்பின் யாத்த
உருவமும் புகழும் என்றாங்கு அவற்றினுள் ஊழின்வந்து
மருவிய யாக்கை ஈங்கே மறைந்துபோம் மற்ற யாக்கை
திருவமர்ந்து உலகம் ஏத்தச் சிறந்துபின் நிற்கும் அன்றே.
(சூளாமணி)

உடல் அழிந்துபோம்; புகழ் அழியாது என இது உணர்த்தியுள்ளது. இத்தகைய விழுமிய புகழை மனிதன் அடைந்து கொள்ளவேண்டும். அது புனித போகமா யினிமை புரியும்.

---

733. மண்ணில் பிறந்த மகன்கீர்த்தி மானால்
விண்ணில் பிறந்த விரிகதிர்போல்—எண்ணும்
உலகமெலாம் ஓங்கி ஒளிர்வான் மனுவின்
திலகமே யாவன் தெளி. (௩)

இ—ள்.

இம்மண்ணுலகில் பிறந்த ஒருவன் கீர்த்தியுடையவன் ஆனால் விண்ணுலகில் விளங்கும் சூரியன்போல் எங்கும் பேர் ஒளி வீசிப் பெருமையாய் விளங்குவான்; மனித இனத்தின் இனிய திலகமாய் அவன் தனியே உயர்ந்து மிளிர்வான் என்க.

அறிவுடைய அரிய பிறப்பை மனிதன் மருவி வந்துள்ளான்; அங்ஙனம் வந்தவன் உரிமையாய் அடைய வுரியது இனிய புகழேயாம். உற்றபிறப்பு பெற்றபுகழால் பெருஞ்சிறப்படைகிறது.

மகன் என்னும் சொல் அதன் தகவு தெரிய வந்தது. மனிதன் எதையும் அடையலாம்; உயர்கதிகள் எல்லாம் அவனுக்காகவே அமைந்திருக்கின்றன. மகன் சிறிது உயர்ந்தால் மகான்

ஆகலாம். அந்த உயர் ஆக்கத்தை அதன் பெயர் அமைதி துலக்கி நிற்கிறது. மானவன் நிலை மகிமை மிக வாய்ந்தது.

குணங்களால் உயர்ந்த போதுதான் மனிதன் உண்மையான உயர்ச்சியை அடைகிறான். ஏற்றம் என்று புகழுக்கு ஒரு பெயர். கீழ்மை நீங்கி மேன்மையில் ஓங்கி மேலே ஏறிப்போவது ஏற்றம் என ஏய்ந்தது. அந்த ஏற்றம் பெறுவதே இசைமையாம்.

*ஏற்றம் கியாதம் இசை மேம்பாடு*
*சீர்த்தி கீர்த்தி சொல்திகழ் புகழாம்;*
*மீக்கூற்று என்று விளம்பவும் பெறுமே.* (பிங்கலந்தை)

புகழுக்கு இவ்வாறு பெயர்கள் அமைந்துள்ளன. பரியாய நாமங்கள் சரியான காரணங்களைக் கருதி வந்திருக்கின்றன. கீர்த்தி, சீர்த்தி என்பன சிறந்த புகழை வரைந்து காட்டியுள்ளன. மேலாக வியந்து கூறுவது மீக்கூற்று என வந்தது.

*"ஊற்றமாம் சீர்த்தி கீர்த்தி ஒளிபுகழ் மீக்கூற்றும்பேர்*
*மேற்றிகழ் சீர்த்தி கீர்த்தி மிகுபுகழ் இருபேராமே,"*
(நிகண்டு)

புகழுக்கு உரிய பெயர்களை இங்ஙனம் அறிந்துகொள்கிறோம். நெடிய பெரிய புகழையே சீர்த்தி என்று தனியே விதந்து சொல்ல வேண்டும் என்பதும் ஈண்டுத் தெரியவந்தது.

"சீர்த்தி மிகுபுகழ்." (தொல்காப்பியம், சொல், உரி, 15)

என ஆசிரியர் தொல்காப்பியனாரும் இவ்வாறு குறித்துள்ளார்.

தக்க பொருளைத் தகுதியான சொல்லால் தகவோடு கூற வேண்டும் என மேலோர் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. உரிய இடத்தில் உரிய சொல் வைப்பது அரிய கலையாய் அமைந்துள்ளது ஆகலால் அங்ஙனம் வையாதாரை வெய்யர் எனக் கலையின் தெய்வம் கடுத்து வைது வெறுத்து விடுகிறது.

"மனு என்னும் வயங்கு சீர்த்திக் குன்று ஒன்று தோளான்."
என ஆதி மனுவைக் குறித்து இங்ஙனம் சிறப்பாக ஓதியுள்ளார்.

*"தகவுடையோர் சிந்தையினும் சென்னியினும்*
*வீற்றிருக்கும் சீர்த்தியான்."* (இராமா, குக, 32)

பரதனை இவ்வாறு கவிச்சக்கரவர்த்தி குறித்திருக்கிறார்.

"ஓதினர் சீர்த்தி உயர்ந்த பரஞ்சுடர்." (இரா, இரணி, 165)

திருமாலின் அரிய பெரிய புகழைச் சீர்த்தி என்னும் வார்த்தையால் வார்த்து விளக்கியுள்ளார். பரம நீர்மைகள் சீர்மைகளாய்ச் சிறந்து திகழ்தலால் சீர்த்தி என வந்தது. இனிய இயல்புகள் எவராலும் புகழ்ந்து போற்றப்படுகின்றன. அந்தப் புகழ் மாலைக்கு மொழிகள் இனிய நறுமலர்களாய் மருவியுள்ளன.

தேவாரம், திருவாய்மொழி, பாமாலை, புகழ்மாலை, கீர்த்தி மாலை எனத் தெய்வத் துதிகள் கிளர்ந்துவந்துள்ளன. கீர்த்தித் திரு அகவல் என மாணிக்கவாசகர் பாடியிருக்கிறார். புகழ்ச்சியை நோக்கியே உயர்ச்சிகளும் உணர்ச்சிகளும் தோன்றியிருக்கின்றன. உயர்ந்து விளங்குவதை உலகம் புகழ்ந்து வந்துள்ளது.

இருவரே புகழ்ந்து ஏத்தற்கு இனியராம்
ஒருவ ரேதுணை என்றுணராய் நெஞ்சே!
வருவ ரேகொடுங் காலர்கள் வந்துஎதிர்
பொருவரே அவர்க்கு என்கொல் புகல்வதே? (1)

புகழும் கல்வியும் போதமும் பொய்யிலா
அகமும் வாய்மையும் அன்பும் அளித்தவே
சுகவிலாசத் துணைப் பொருள் தோற்றமாம்
ககன மேனியைக் கண்டன கண்களே. (2)

கண்ணுள் நின்ற ஒளியைக் கருத்தினை
விண்ணுள் நின்று விளங்கிய மெய்யினை
எண்ணி எண்ணி இரவும் பகலுமே
நண்ணு கின்றவர் நான்தொழும் தெய்வமே. (3)

(தாயுமானவர்.)

சிவபெருமானை நினைந்து தாயுமானவர் இப்படி உவந்து துதித்திருக்கிறார். துதிமொழிகளில் அவரது பரிபக்குவ நிலை தெரிய வருகிறது. உருகிய அன்பு உயர் பேரின்பம் அருளுகிறது.

அரிய புகழை மருவிய பொழுது மனிதன் பெரிய தெய்வமாய்ப் பெருகி எழுகின்றான். புகழ் அடைந்தவரின் அதனோடு புண்ணியமும் தொடர்ந்து வருதலால் புகழாளன் புண்ணியவானுயுயர்ந்து விளங்குகிறான்; ஆகவே விண்ணும் அவனை வியந்து மகிழ்கிறது. வானுலகமும் புகழை விழைந்து வாழ்த்துகிறது.

நிலவரை நீள்புகழ் ஆற்றின் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு. (குறள், 234)

இந்த நிலவுலகில் ஒருவன் நிலைத்த புகழைச் செய்யின் அந்த வானுலகம் தன்பால் மேவியுள்ள தேவர்களைப் பேணாது; இவனையே ஆவலோடு நோக்கிப் போற்றி நிற்கும் எனப் புகழின் ஏற்றத்தை இது உணர்த்தியிருக்கிறது. புலவர்=தேவர்.

தாம் பண்ணிய புண்ணிய பலத்தால் தேவர் விண்ணுலக வாழ்வை அடைந்துகொண்டார். இம்மண்ணுலகில் நெடிய புகழைச் செய்பவர் கீர்த்தியால் இங்கே நிலையாய்ப் பெருமை பெறுகின்றார்; அவ்வுலகிலும் தலைமையாய் உரிமையுறுகின்றார். பழைய தேவர்கள் தம் புண்ணிய பலனை அனுபவித்துக் கழிந்து கிழவர் ஆயினர் ஆதலால் இளமையோடு புதிதாய் இந் நிலவரையிலிருந்து வரவுரிய புகழாளரை அதிக ஆவலோடு புத்தேள் உலகம் எதிர்பார்த்திருக்கும் என்பது இங்கே உய்த்து உணர வந்தது.

புகழால் இங்கும் அங்கும் எங்கும் இன்பமும் மதிப்பும் உளவாம்; காலம் உள்ள பொழுதே கருத்தோடு விரைந்து அதனை நன்கு செய்து புகழாளனாய்ப் பொங்கி உயர்ந்துகொள்க.

---

734. நல்ல மணமுடைய நன்மலர்போல் நானிலத்தில்
வல்ல புகழுடைய மானிடனை—எல்லாம்
உடைய பரமன் உகந்து முகந்து
புடையே இருத்தும் புனைந்து. (ச)

இ—ள்.

நல்ல வாசனையுடைய இனிய பூவை மனிதர் பிரியமா உவந்து பேணுதல்போல் புகழுடைய ஒருவனை எல்லாம் உடைய ஈசன் இனிது விழைந்து தன்பால் அணைத்து அன்பால் அருள் புரிவான்; அந்த அதிசய இன்ப நிலையை அடைக என்பதாம்.

கல்வி செல்வம் முதலிய நலங்கள் மனிதனை உயர்த்துகின்றன; ஆயினும் புகழ்போல் அவை உயர் மகிமை புரியா. தரும நீர்மையின் சாரமாய் அது மருவி வருதலால் உயிர்க்கு உயர் மேன்மை புரிகிறது. பூவுக்கு வாசம்போல் மனிதனுக்குப் புகழ். புகழ்மணம் கமழ்ந்தபொழுது அந்த மனிதனை யாவரும் உவந்து

பாராட்டுகின்றனர். புகழ் இல்லையேல் மணம் இழந்த மலர் போல் அவன் மாண்பிழந்து படுகின்றான். மணம் என்றது மனம் கவரும் குணம் கருதி வந்தது.

புகழ் எவர்க்கும் உவகை தருகிறது. அதனை ஆவலோடு அவாவி உழல்வது சீவ சுபாவமாயுள்ளது. தன்னைக் குறித்துப் பொய்யாகப் புகழ்ந்து சொன்னாலும் அந்தப் புகழ் மொழியைக் கேட்டு எவனும் மெய்யாக உள்ளம் உவந்து கொள்கிறான்.

பேடியைப் பார்த்து "நீ நல்ல சுத்தவீரன்" என்றால் அவன் உள்ளம் களித்துத் துள்ளுகிறான். கொடிய உலோபியை நோக்கிப் பெரிய வள்ளல் என்று சொன்னால் அவனும் நெடிய உவகை கூர்கின்றான். இழி பழியில் இழிந்திருப்பவரும் புகழை விழைந்து கொள்வதால் அதன் விழுமிய நிலையை உணர்ந்து கொள்கிறோம். அதிசய இனிய அமுதமாய் அது தனியேயுளது.

புகழ்ந்து பேசினால் எவரும் வணங்கி வசமாய் வருகின்றனர். தனியே இருக்கும்போது யாதும் கொடாத உலோபி நாலு பேரிடையே "செல்வப்பிரபு! வள்ளல்!" என்று துதித்துச் சொன்னால் பொருளைக் கொடுக்க நேர்கின்றான். வெளிப் பகட்டான போலிப் புகழுக்காகப் பெரும் பொருளை வாரி வீசுகின்றவரையும் நேரே கண்டு வருகிறோம். புகழில் மனிதர் கொண்டுள்ள ஆவல் அதிசய மருமமாய் மருவி அதன் உயர்நிலையை விளக்கியது.

புகழ்ச்சி விருப்பன் எனச் சிவபெருமானைச் சிவப்பிரகாச சுவாமிகள் அதி விநயமாத் துதித்திருக்கிறார். துதிமொழி மதி நலங் கனிந்து பத்திச்சுவை சுரந்து வித்தகமாய் வெளிவந்துளது.

"நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ!
மனம்நின்று உருக்கும் மதுர வாசக!
கலங்குறு புலனெறி விலங்குறு வீர!
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை ஏனும் உணரான்; அஃதான்று
கைகளோ முறிபடும் கைகள்; காணின்
கண்களோ ஒன்று காலையில் காணும்
மாலையில் ஒன்று வயங்கித் தோன்றும்
பழிப்பின் ஒன்று விழிப்பின் எரியும்
ஆயினும் தன்னை நீபுகழ்ந்து உரைத்த

பழுதில் செய்யுள் எழுதினன் அதனல்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி அறியா என்பணி வானே,"

(நால்வர் நான்மணி, 24)

இந்தப் புகழ்ச்சிப் பாடலின் உல்லாச விநோதத்தை ஊன்றி உணர வேண்டும். ஒரு கலையும் உணரான்; கண்களும் கைகளும் சரியாயில்லை; அப்படியிருந்தும் திருவாசகத்தைப் பேராசையோடு ஈசன் எழுதிக்கொண்டார். தன்னைப் புகழ்ந்து பாடிய நூல் ஆதலால் அதனை உலகம் எல்லாம் உவந்து காணவேண்டும் என்னும் நசையினலேயே அவ்வாறு விழைந்து செய்தார்; ஆகவே அவர் புகழ்ச்சி விருப்பன் போலும் என இகழ்ச்சிச் சுவையில் கவி புகழ்ந்து பாடியுள்ள இதை வியந்து காணுகிறேம். புகழ் ஈசனையும் வசஞ்செய்யும் மகிமை யுடையது.

வேதம் முதலிய கலைகள் யாவும் ஏதும் அறிய முடியாத அதிசய நிலையில் மருவியுள்ள பரம்பொருள்; சூரியன் சந்திரன் அக்கினி என்னும் ஒளிகளை விழிகளாக வுடையவர்; மலரினும் மெல்லிய மிருதுவான கைகள் வாய்ந்தவர்; அத்தகைய திவ்விய நிலையினர் தமது அன்பன் வாய்மொழியை மன்பதை அறிந்து உய்யவேண்டும் என்னும் கருணையினல் தன் கையால் எழுதியருளினர் என்னும் குறிப்பு இதில் கூர்ந்து உணரவுள்ளது. புகழ் நிலையை மருவி இனிய கலைச்சுவையோடு கனிந்து வந்துள்ள இந்தக் கவியைக் கருதிக் காண்பவர் அறிவின் சுவையை மாந்திப் பெரிதும்மகிழ்வர். ஓர்ந்துஉணரும்அளவுஉணர்வுதெளிகிறது.

புகழை எவரும் விரும்புவர்; எதையும் துறந்துபோன துறவியரும் புகழில் நசைகொண்டிருந்த உண்மையைச் சரிதங்கள் காட்டியுள்ளன. அதிசய வசியமாய் அது துதிகொண்டுள்ளது.

யாவரும் ஆவலோடு புகழை அவாவி அலையினும் அதனை உரிமையாக நேரே அடைந்து கொள்பவர் மிகவும் அரியர்.

பெரிய நீர்மையோடு அரிய காரியங்களைச் செய்து முடிப்பவரையே புகழ் உரிமையாய் நாடி அடைகிறது. அவ்வாறு செய்யாதவர் வேறு எவ்வாற்றனும் அதனை அடைய முடியாது.

ஏதேனும் ஓரளவு புகழ்பெற வேண்டும்; அங்ஙனம் பெருதவர் பிறந்தும் பிறவாதவராய் இழிந்து ஒழிந்து போகின்றர்.

புகழ் பெற்றவர் இவ்வுலகில் பிறந்த பயனைப் பெற்றவராய்ச் சிறந்து திகழ்கின்றார்; மேலும் உயர்ந்த கதிகளை அடைந்து கொள்கின்றார். அவரது பேரும் பேறும் நிவந்து நிலவுகின்றன.

சேற்றுவளர் தாமரை பயந்த ஒண்கேழ்
நூற்றிதழ் அலரின் நிரைகண்டு அன்ன
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை எண்ணுங் காலை
உரையும் பாட்டும் உடையோர் சிலரே;
மரையிலை போல மாய்ந்திசினோர் பலரே;
புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்
வலவன் ஏவா வான வூர்தி
எய்துப என்பதம் செய்வினை முடித்தெனக்
கேட்பல் எந்தை சேட்சென்னி நலங்கிள்ளி!
தேய்தல் உண்மையும் பெருகல் உண்மையும்
மாய்தல் உண்மையும் பிறத்தல் உண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகத்து
வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்
வருந்தி வந்தோர் மருங்கு நோக்கி
அருள வல்லை யாகுமதி! அருளிலர்
கொடாமை வல்லர் ஆகுக
கெடாத துப்பினின் பகைஎதிர்ந் தோரே. (புறம், 27)

புகழ்ப் பேற்றின் அருமை பெருமைகளை விளக்கி வந்துள்ள இந்தப் பாசுரம் கருதியுணரத் தக்கது. சோழ மன்னனை நோக்கி முதுகண்ணன் சாத்தனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியுள்ளார். குறித்த கருத்துகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

"இவ்வுலகில் சிலரே மிகவும் அரிதாகப் புகழினைப் பெறுகின்றார்; புலவர் பாடும் படியான உயர்ந்த புகழை அடைந்தவர் தானாகவே விரைந்து செல்லும் தெய்வ விமானத்தில் ஏறிப் பர கதிக்குப் போகின்றார்; அத்தகைய புகழை நீ அடைந்துகொள்ளவேண்டும்; அதனை அடையும் வழிகளுள் கொடையே தலைமை யானது; ஆதலால் உன்பால் வருந்தி வந்தவர்க்கு அன்பால் இரங்கி உதவுக; அந்த ஈகையால் உனக்குச் சிறந்த கீர்த்தியும், உயர்ந்த வெற்றியும், நிறைந்த மகிழ்ச்சியும் உளவாம்" எனப்

புலவர் பெருமான் அரசர் பெருமானுக்கு இவ்வாறு அறிவுறுத்தியிருக்கிறார். உயிர் வாழ்வின் உயர்வுகள் இதில் உணர வந்தன.

புகழை எளிதாக அடைதற்கு இனிய வழி ஈதலே என்பது இங்கே தெரிய வந்தது. வறுமையால் வாடி வந்தவரது பசித் துயரங்களை நீக்கி உயிர்களுக்கு ஈதல் இன்பம் புரிகிறது; புரியவே அதனால் புகழ் விளைந்து வந்து அந்த உதவியாளனுக்கு உயர் பதம் அருளுகிறது. ஈந்தவன் மாந்தருள் மகிமை யுறுகின்றான்.

"ஈதல் உள்ளமொடு இசை வேட்குவையே."

(மதுரைக்காஞ்சி, 205)

பாண்டிய மன்னனை நோக்கி மாங்குடி மருதனார் இவ்வாறு பாடியிருக்கிறார். இசை விளைந்துவரும் இயல் தெரிய வந்தது.

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. (குறள், 231)

உயிர்க்கு ஊதியம் புகழ்; அது ஈதலால் வருகிறது; அந்த ஈதலைச் செய்து இசைபெற்று வாழுக எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். மனிதன் புகழ் பெறவில்லையானால் உயிரின் பயனை இழந்தவனாகின்றான்; ஆகவே அவன் இருப்பின் இழிவு தெரிய வந்தது. ஊதியம் = இலாபம், பயன். உயிர்க்கு ஊதியம் பெற்றவர் உயர்கதி பெறுகின்றார்; அங்ஙனம் பெறாதவர் இழி நிலையில் தாழ்கின்றார். புகழை ஈட்டிப் புனித நிலையை நாட்டுக என மனிதனுக்கு மதியூட்டி இது கதி காட்டியுள்ளது.

ஈட்டு நன்புகழ்க்கு ஈட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொள்மின் விரைந்தெனக்
கோட்டி மாக்களைக் கூவ்வ போல்வன
கேட்டிலன் முரசின் கிளர் ஓதையே. (இராமா, பள்ளி, 31)

புகழை ஈட்டுதற்காக ஈட்டிய பொருள்கள் யாவையும் யாவர்க்கும் வாரிக் கொடுத்தார்; அந்த ஈதலை அறிவித்தற்காகக் கொடை முரசங்கள் அயோத்தியில் முழங்கி வந்தன என இது காட்டியுள்ளமையால் அங்கே புகழ் விளைந்துள்ளமை காண்க.

ஈகைக்கும் புகழுக்கும் உள்ள தொடர்பை இதனால் அறிந்துகொள்ளுகிறோம். அழியும் இயல்பினதான பொருளை வழங்கி அழியாத புகழை அடைந்துகொள்பவர் விழுமியோராய் விளங்

கிவருகின்றனர். அங்ஙனம் அடையாதவர் பிறவிப் பயனை இழந்து மடையராயிழிந்து கடையராக் கழிந்து ஒழிகின்றனர்.

அழியும் பொருள்கொடுத் தேசங்கமத்திற்கு அழிவில்பொருள்
பழியும் பவமும் இலாதெய்த லாயும் பயனிலவாய்க்
கழியும் படிநெடு நாள்நீத்து அமுதம் கமர்உகுத்தேற்கு
ஒழியும் பவம்உள தோகர பீடத் துறைபவனே. (நிரஞ்சனமாலை)

அழியும் பொருளைக் கொடுத்து அழியாத புகழை அடையாமல் பழி படிந்திருந்தேனே; எனது பாவப் பிறவி ஒழியுமா? என்று கவி மறுகியிருக்கிறார். உயிர் ஊதியம் உணர வந்தது.

புகழ் மருவிய பொழுது மனிதன் ஒளிமிகுந்த மணிபோல் உயர்ந்து திகழ்கிறான். இவ்வுலகில் இசைபெற்றவனை அவ்வுலகும் ஆசையோடு உவந்துகொள்கிறது. ஈசன் அருளும் அவனுக்கு இனிது வருகிறது. வரவே அவன் தேசுமிகுந்து தெய்வமாகிறான்.

சேரமான் சிறந்த கொடையாளி; அதனால் பெரும் புகழுடையனாய் அவன் விளங்கி யிருந்தான். சிவபரம் பொருளும் அவனை உவந்து அருள்புரிந்து வந்தது. மதுரையில் எழுந்தருளியிருந்த சோமசுந்தரப் பெருமான் அவனுடைய பெருமையை உலகம் அறிய வேண்டி ஓர் உபாயம் புரிந்தார். பாணபத்திரர் என்னும் புலவர் ஒருவர் வறுமையால் வருந்தியிருந்தார். பரமன் அவரது கனவில் தோன்றி "நீ நாளை என்னிடம் வா! ஓலை ஒன்று தருகிறேன்; அதனைச் சேரனிடம் சேர்; பெருந்திருவாளனாய்ச் சிறந்து வாழ்வாய்" என்று மொழிந்தருளினார். புலவர் விழித்தார்; பரமன் கருணையை வியந்து விழிநீர் சொரிந்தார். விடிந்து எழுந்தார்; நீராடி நியமம் முடித்து நேரே கோவிலுக்கு வந்தார்; சுவாமி சந்நிதியுள் விரைந்து புகுந்து விழைந்து தொழுதார்; ஓலைச் சுருள் ஒன்று எதிரே விழுந்தது; அடங்கா மகிழ்ச்சியோடு அந்த முடங்கலை எடுத்தார்; கண்ணில் ஒற்றிக் கண்ணீர் மல்கி உள்ளம் உருகி வெளியே வந்தார். குறித்தபடியே சேர நாட்டை அடைந்து அரசனிடம் கொடுத்தார்; மன்னன் கண்டான்; உன்னி உருகினான்; அரியணையிலிருந்தபடியே விரைந்து எழுந்து திசை நோக்கித் தொழுதான்; கண்ணீர் மாலை மாலையாய் மார்பில் வழிந்து ஓடியது; புலவரது அடியில் விழுந்து நெடிது தொழுதான்; பின்பு வரிசை பல செய்து பொன்னும் மணியும் பொதி

யில் ஏற்றிக் காவலர் சிலரைக் காப்புக்கு அமைத்துப் புலவரைப் போற்றித் தலைவாசல் வரையும் வெளியே வந்து அளியோடு அனுப்பினான். அரசன் உரிமையைப் பரமனிடம் கூறிப் பாணர் உருகினார். மதுரைப்பரமன் எழுதிய மதுரப்பாசுரம் அயலேகாண்க

“மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவு பால்நிற வரிச்சிறகு
அன்னம் பயில்பொழில் ஆலவாயில்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படிஎனப் பாவலர்க்கு
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க!
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன்; தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப்பதுவே”

(ஆலவாயுடையார்)

பாடலில் பதிந்துள்ள பொருள்களின் நயங்களை ஊன்றி உணர்ந்துகொள்ளவேண்டும். பரமன் பாணர்க்கு நேரே அருள்புரிந்திருக்கலாம்; அவ்வாறு செய்யாமல் இவ்வாறு ஒரு சீட்டுக்கவி கொடுத்துச் சேரனிடம் அனுப்பியிருப்பது திருவிளையாடலாயுள்ளது. பாவலர்க்கு உரிமையின் உதவி ஒளிதிகழ் சேரலன் என்றதனால் அவனது ஈகையும் புகழும் இனிது அறிய வந்தன. புகழுடையானை உகந்து முகந்து பரமன் புடை இருத்தும் என்பதை உலகம் அந்த வேந்தன்பால் உணர்ந்து மகிழ்ந்தது.

---

735 கொடைவீரம் கல்வி குணமென்னும் நான்கின்
இடையே புகழ்விளைந் தெய்தும்—உடையவற்றுள்
ஒன்றானும் தன்கை உறாதார் உறாரென்றும்
பொன்றாது நிற்கும் புகழ். (5)

இ-ள்

கொடை வீரம் கல்வி சீலம் என்னும் இந்த நான்கின் வழியே புகழ் விளைந்து வருகிறது; கூறிய இச்சீரிய நீர்மைக

ளுள் ஏதேனும் ஒன்றை உடையவரே புகழை அடைய நேர்கின்றார்; யாதும் இல்லாதார் ஏதும் இலராய் இழிந்து போகின்றார்.

அரிய புகழ் விளையும் பெரிய நிலைகள் இங்கே தெரிய வந்தன. காரண காரியங்கள் கருதி உணர உரியன.

பிறர்க்கு உபகாரமாகப் பொருளைக் கொடுப்பது கொடை என வந்தது. சீவர்களுக்கு இதமாய் எவ்வழியும் ஓகை புரிந்து வருதலால் ஈகை உயர்ந்த மகிமையா ஒளி மிகுந்துள்ளது. தாம் வருந்தி ஈட்டிய பொருளை மெலிந்தவர்க்கு இரங்கி ஊட்ட உதவுவது உயர்ந்த பண்பாடு ஆதலால் உலகம் கொடையை உவந்து பாராட்டி வருகிறது. போற்றும் புகழ் கொடையால் நேரே தோற்றம் பெற்று வருதலின் அது இங்கே முதன்மையாய் நின்றது. தகுதியின் மிகுதிகளால் தலைமை வருகின்றது.

வீரம் முதலிய வற்றினும் கொடையை முந்தி வைத்தது புகழ் விளைவில் அதன் நிலைமை நீர்மைகளை நினைந்து தெளிய. உள்ளம் உவந்து கொடுப்பதால் உயர்ந்தபுகழ் ஒளிமிகுந்துவருகிறது.

> கடிப்பிடு கண்முரசம் காதத்தோர் கேட்பர்;
> இடித்து முழங்கியது ஓர் யோசனையோர் கேட்பர்;
> அடுக்கிய மூவுலகும் கேட்குமே சான்றோர்
> கொடுத்தார் எனப்படும் சொல். (நாலடியார், 100)

பேரிகை ஓசை காததூரம் கேட்கும்; இடி முழக்கம் யோசனை எல்லை கேட்கும்; கொடையின் புகழ்மொழி மூன்று உலகங்களுக்கும் கேட்கும் என்னும் இது ஊன்றி உணரவுரியது.

ஒரு கொடையாளியினுடைய இசை பூதலம், மீதலம்,பாதலம் முதலிய நில மண்டலங்கள் யாண்டும் பரவி நீண்டு நிலவும் என்றது அதனது நிலையான நிலைமையும் தலைமையும் தெரிய வந்தது. கொடை வள்ளல் யாண்டும் உயர் நிலையில் ஒளி வீசியுள்ளான்.

கன்னனுடைய கொடையின் புகழ் அன்று வையகமும் வானகமும் பரவி நின்றது. தேவராசனுன இந்திரனும் அவனிடம் வந்து இரந்து வேண்டினன்; அவனது அதிசய நிலையைத் துதிசெய்து போயினன். அந்தக் கொடைக் குரிசில் இறந்து ஐயாயிரம் ஆண்டுகள் கழிந்து போயின; இன்றும் அவனுடைய கொடைவலியும், புகழ் நிலையும் எங்கும் ஒளிவீசி நின்று நிலவு

கின்றன. ஈகையால் எய்தும் புகழே வேறு எவற்றினும் மேலாய் வாகை பெற்று நிற்கும் என்பதை இவனது சீவியமும் காவியமும் ஒவிய வுருவங்களாய் யாண்டும் உணர்த்தி நிற்கின்றன.

> உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கு ஒன்று
> ஈவார்மேல் நிற்கும் புகழ். (குறள், 232)

எளியராய் வந்து இரப்பவர்க்கு அளிபுரிந்து ஈவார்மீதே புகழ் மேவி நிற்கும்; அதனையே உலகம் உவந்து பேசிவரும் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். ஈகையில் ஓர் அதிசய இனிமை மருவியுள்ளது; ஆகவே யாவரும் அதனைப் பாராட்டி மகிழ்கின்றனர். கொடையாளியை உலகம் புகழ்ந்து பேசும், புலவர்களும் உவந்து பாடுவார்கள் என்றதனால் கொடைக்கும் புகழுக்கும் உள்ள உறவுரிமையை உணர்ந்துகொள்ளலாம்.

> " வெய்ய குரல்தோன்றி வெஞ்சினவே றுட்கொளினும்
> பெய்யு மழைமுகிலைப் பேணுவரால் --- வையத்து
> இருள்பொழியும் குற்றம் பலஎனினும் யார்க்கும்
> பொருள்பொழிவார் மேற்றே புகழ். " (தனிப்பாடல்)

இடியும் மின்னலும் மருவியிருந்தாலும் மழை பொழியும் மேகத்தை யாவரும் போற்றி மகிழ்வர்; அதுபோல் கொடிய குற்றங்கள் பல கூடியிருந்தாலும் பொருளை ஈவார்மீதே புகழ் ஏறிநிற்கும் எனக் கொடையின் மகிமையை இது குறித்துள்ளது.

வீரத்தாலும் புகழ் விளைந்து வருகிறது; அது அரிய திறலோடு அமைந்து விளைகிறது. இராமன் விசயன் முதலிய வீரக் குரிசில்களின் கீர்த்திகள் விண்ணும் மண்ணும் விரிந்து நிற்கின்றன.

கல்வியின் புகழைத் திருவள்ளுவர் நக்கீரர் கம்பர் முதலான புலவர் திலகர்களிடம் பொலிந்து விளங்குவதை விழைந்துகண்டு மகிழ்ந்து வருகிறோம். காரணக் கோடையான் எனக் கம்பரைக் குறித்திருத்தலால் அவரது ஞான தானத்தையும் அதனால் விளைந்துள்ள மேன்மையான புகழையும்நன்குஉணர்ந்துகொள்கிறோம்.

அரிய நூலை இயற்றி அருளுவது பெரிய புகழை விளைத்து வருகிறது. வரபதி ஆட்கொண்டான் என்பவர் சோழ மன்னனிடம் மந்திரியாயிருந்தவர். காரிய சாதனையிலும் ஆட்சி முறையிலும் ஆற்றல் மிக்கவர்; அதிசய சாதுரியம் அமைந்தவர்; மதி

யூகம் வாய்ந்தவர்; கொடை வீரங்களால் புகழ் அடைந்தாலும் அது புலவர் வாயால் பாடப்பெற்ற போதுதான் உயர்வடையும் என உணர்ந்து உறுதி நிலையை நாடினர். அக்காலத்தில் சிறந்த கவிஞராய் விளங்கியிருந்த வில்லிபுத்தூரரோடு உறவு கொண்டார்; தங்கள் இருவர் பெயரும் பொங்கிய புகழோடு பொலிந்து வரும் வழியைத் தெளிந்து வந்தார்; பாரதக் கதையைக் காவியமாப் பாட வேண்டினர்; புலவரும் அவ்வாறே பாடியருளினர்.

எங்கும்இவன் இசைபரப்பி வருநாளில்
யாமுரைத்த இந்த நாட்டில்
கொங்கர்குல வரபதியாட் கொண்டான் என்று
ஒரு வண்மைக் குரிசில் தோன்றி
வெங்கலியின் மூழ்காமல் கருநடப்பேர்
வெள்ளத்து விழாமல் நான்காம்
சங்கம் என முச்சங்கத் தண்டமிழ் நூல்
கலங்காமல் தலைகண் டானே. (1)

தென்னாட்டில் வடநாட்டில் குடநாட்டில்
குணநாட்டில் தெவ்வர் ஓடக்
கன்னாட்டி அமர்பொருது கங்கைநீர்
ஊட்டுவித்துக் கண்டன் வேங்கை
எந்நாட்டும் எழுதியவன் திருமரபோர்
பெற்றபுகழ் யாவர் பெற்றார்?
அந்நாட்டுக் கொற்றம்எல்லாம் அக்குரிசில்
புகழொடவ தரித்த தன்றே. (2)

பிறந்துய்யக் கொண்டவனிப் பேருலகம்
பெருவாழ்வு கூரு நாளில்
நிறைந்தபுகழ்ச் சனிநகர்வாழ் வில்லிபுத்தூ
ரனைநோக்கி நீயும் நானும்
பிறந்ததிசைக்கு இசைநிற்பப் பாரதமாம்
பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்தசெவிக்கு அமுதமெனத் தமிழ்மொழியின்
விருத்தத்தால் செய்க என்றான். (பாரதம், பாயிரம்)

கல்வியால் அவன் புகழ் நாடியிருக்கும் நிலையை இவை காட்டியுள்ளன. தாம் பிறந்த திசைக்கு இசை நிற்க உணர்ந்து செய்து கொள்வதே சிறந்த மேலோர் கடமை என்பதை இங்கே தெளிந்து கொள்கிறோம். பெற்றபிறவிக்கு இசைபேறாய்நின்றது.

குணத்தால் புகழை அடைந்தவர் பரதன் தருமன் முதலாயி னோர். வேறு சில வழிகளாலும் புகழை அடையலாம் ஆயினும் அவற்றை இங்கே குறித்த இந்த நான்கனுள் அடக்கிக் கொள்ளலாம். சீவர்களுக்கு இதமானசெயல்கள் சீர்மைகளாய்வந்தன.

தேவாலயம் கட்டுதல்; அன்னசத்திரம் அமைத்தல், குளம் கிணறு முதலிய நீர் நிலைகளை ஆக்கல், நந்தவனம் வைத்தல், குளிர் பூஞ்சோலைகளை விளைத்தல் முதலியனவும் புகழை விளைத்துவரும். தருமமான கருமங்களுள் புகழ் மருமமா மருவியுளது.

புகழ் பொன்றுது நிற்கும் என்றது அதன் நித்திய நிலைமையை உய்த்துணர வந்தது. பொன்றுதல் = அழிந்து மறைதல்.

உற்ற உடம்பு ஒழிந்து போனலும் ஒருவன் பெற்ற புகழ் அவனுடைய பேரைச் சீர்மையாக உலகில் நிலைநிறுத்திவருகிறது. புகழ் பெற்ற பேர்கள் ஒளிமிகப் பெற்று வழி வழியே மக்கள் தெளிவடைந்து உயர யாண்டும் ஒளிபுரிந்து வருகின்றனர்.

சீமூதன், ததீசி, சிபி, திலீபன், ரகு, ககு, நளன், சகரன், விராடன், சந்தன், அந்திமான், காரி முதலிய சீராளரை நினைந்து மகிழ்ந்து பாராளர் என்றும் பயன் பெற்று வருகின்றனர்.

பொன்றும் உடல்கொடுத்துப் பொன்றுப் புகழ்படைத்தார்
என்றும் உலகில் இருக்கின்றுர் — நின்ற
சிபிமன்னன் சீமூதன் கன்னன் ததீசி
புவிமன்னி யுள்ளார் பொலிந்து.

அழியும் உடலை விடுத்து அழியாத புகழை அடைந்தவர் உலகம் தொழுது வாழ்த்த உயர்ந்து விளங்குகின்றுர். வான சோதிகள்போல் வயங்கி வையம் உய்ய அவர் வழி செய்து வருதலால் வழிமுறையே எவரும் அவரை வாழ்த்தி வருகின்றுர்.

மக்கள் இனம் தொடர்ந்து மகிமையோடு வழிபட்டு வருகின்றமையால் புகழ்பெற்றவர் சாகா வரம்பெற்ற சிரஞ்சீவிகளாய்ச் சிறந்து யாண்டும் என்றும் உயர்ந்து திகழ்கின்றுர்.

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும், மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றுனும், —உண்ணுநீர்க்
கூவல் குறையின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னர். (திரிகடுகம், 16)

அழியா நிலையிலுள்ள விழுமியோரை விழிதெரிய இது விளக்கியுளது. புகழாளரை இதில் முதலில் நிறுத்தியது தலைமை கருதி.

செத்து ஒழியும் நிலையில் வந்த மக்களுள் புகழ் படைத்த வித்தகரே என்றும் சாகாமல் இனியராய் நின்று நிலவுகின்றார்.

சேத்தும் சாகாதவர்.

"அனைவர்க்கும் உபகாரமாம் வாவி கூவம்உண்
டாக்கினோர், நீதி மன்னர்,
அழியாத தேவாலயங்கட்டி வைத்துளோர்,
அகரங்கள் செய்த பெரியோர்,
தனைஒப்பில்லாதநற் புதல்வனைப் பெற்றபேர்,
சமர்வென்ற சுத்த வீரர்,
தரணிதனில் நிலை நிற்க எந்நாளும் மாறாத
தருமங்கள் செய்த பேர்கள்,
கனவித்தை கொண்டவர்கள், ஓயாத கொடையாளர்,
காவியம் செய்த ருளினோர்,
கற்பினில் உயர்ந்தவர்கள், அற்புதம் புரிந்தவர்கள்
கருணைமிகு புனிதர் இந்த
மனிதரியல் உடலங்கள் மாயினும் மாயாத
மகிமை யுடையார்கள் இவர்காண்."

இறந்தும் இறவாதவரை இது வரைந்து காட்டியுளது.

சீவர்களுக்கு இதமான காரியங்களைச் செய்பவர்களும், புனிதமான இனிய இயல்புகளை யுடையவர்களும் மனித சமுதாயத்துள் மகிமை பெற்று நிற்கின்றார். அந்நிலை நித்தியமாய் நிலைத்து வருகிறது; வரவே உலகில் தலைமையான ஒளிகளாய் உயர்ந்து எவ்வழியும் சிறந்து அவர் நிலவுகின்றனர்.

புகழ் அடைந்தவர் விண்ணில் விளங்கும் மதிபோல மண்ணில் விளங்கி எண்ணில்லாதவர் மகிழ்ந்து வர எழில்பெற்று மிளிர்கின்றார். அவரது பேர் யாண்டும் பேரொளி வீசி வருகிறது.

வண்ணமாலை கைபரப்பி உலகை வளைந்த இருள் எல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத் துதயத்துஎழுந்தநிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசைஅனைத்தும் விழுங்கிக் கொண்டவிரி நன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன் புகழ்போல் எங்கும் பரந்துளவால்.
(இராமா, மிதிலை, 74)

திருவெண்ணெய் நல்லூரில் இருந்த சடையப்ப வள்ளலுடைய புகழ் விண்ணும் மண்ணும் திசை எங்கும் பரவி நின்றது போல் நிலா ஒளிவீசி நின்றது என இது உரைத்துள்ளது. அரிய புகழை எய்தியவர் பெரிய சோதிகளாய்ப் பெருகி விளங்குகின்றனர். அந்த ஒளியை அடைந்து நீ உயர்ந்து திகழ்க.

———

736 பெற்றோர் உனக்கிட்ட பேரை உலகமெலாம்
உற்றோதி நிற்கும் உரிமைதான்—எற்றால்
வருமென்னில் வந்தவர்க்கு மாறாமல் ஈயும்
பெருமையால் எய்தும் பெரிது. (சு)

இ-ள்

தாய் தந்தையர் உனக்கு உரிமையாக இட்ட பெயரை உலகம் எல்லாம் பெருமையாக உவந்து பேசும்படியான மகிமை ஈகையினால் உண்டாகிறது; ஆகையினால் அந்த ஈதலைப் பேணி உன் அருமை உயிர்க்குஇனியஊதியத்தைக் காணுக என்பதாம்.

உற்ற தொடர்புகளில் மனிதனுக்குப் பற்று அதிகம். தன்னுடைய தாய் தந்தை மனைவி மக்கள் முதலிய உரிமையாளர் எவரினும் தன் உயிரில் ஒருவனுக்குப் பிரியம் அதிகம். அவ்வுயிர்க்கு நிலையமாயுள்ள உடலை எவ்வழியும் செவ்வையாக இனிது பேணுகிறான். தன் பெயரைக் குறித்துப் பிறர் உயர்வாகப் பேசும்போது உவகையுறுகிறான். பத்திரிகை முதலிய எழுத்துக்களில் அதனைப் பார்க்க நேர்ந்தால் உள்ளம் உவந்துகொள்கிறான்.

தனக்கு உரிமையாய் அமைந்த பேரை உலகத்தில் தலைமையாக நிலை நிறுத்துவதே புகழாம். அது அரிய செயல்களால் அமைகின்றது. சீவர்களுக்கு இதமாய் உதவி வருகிற உபகாரி பெயரையே எவரும் உயர்வாக உவந்து பேசி வருகின்றனர்.

தொண்டை மண்டலத்திலே நின்றை என்னும் ஊரிலே காளத்தியப்ப முதலியார் என்பவர் ஒருவர் இருந்தார். நல்ல கொடையாளி; அவருடைய செல்வம் ஊருணி நீர்போல் பலர்க்கும் உபகாரமாயிருந்தது. பொருளின் அளவு நிலையை யாதும் கருதாமல் எல்லை மீறி ஈந்து வந்தமையால் அவரது செல்வம் தேய நேர்ந்தது. வறுமை வரவே அவர் மிகவும் மறுகினார். தன்னை நாடி வருபவர்க்கு நன்கு உதவி செய்ய முடியவில்லையே! என்று

உள்ளம் வருந்தியிருந்த அவர் ஒருநாள் மாலையில் அயலூருக்குச் சென்றார்; செல்லும் வழியில் இடையே ஒரு சத்திரத்தில் தங்கியிருந்தார். அங்கு முன்னதாகவே ஒரு புலவர் வந்து படுத்திருந்தார். பசியால் வருந்தியிருந்தமையால் நடுச்சாமம் ஆகியும் அவர் உறங்கவில்லை. தனக்கு நேர்ந்துள்ள வறுமையை நினைந்து உள்ளம் நொந்திருந்த அவர் அதனையே முன்னிலைப்படுத்தி ஒரு பாட்டுப் பாடினார். அந்தப் பாடல் அயலே வருகின்றது.

"நீளத் தொடர்ந்துவந்தாய் நீங்கா நிழல்போல
நாளைத் தொலைந்தொழிவாய் நல்குரவே-காளத்தி
நின்றைக்கே சென்றக்கால் நீஎங்கே நான்எங்கே
இன்றைக்கே சற்றே இரு."

"ஏ தரித்திரமே! நீ என்னை நெடுங்காலம் நிழல்போல் தொடர்ந்து வந்துள்ளாய்; நாளைத் தொலைந்துபோவாய்; காளத்தி வள்ளலுடைய ஊருக்கு நாளை நான் போவேன்; என் கலி நீங்கிப்போம்; நான் பெரிய செல்வன் ஆகிவிடுவேன்; அதன் பின் என்னை நீ காண முடியாது; இன்றைக்கு மட்டும் கொஞ்சம் இருந்துபோ!" என்று புலவர் இப்படிப் பாடியிருக்கிறார். காளத்திமுதலியாரைத் தேடியே அவர் அங்கு வந்திருத்தலால் இவ்வாறு பாட நேர்ந்தார். இதனைக் கேட்டதும் முதலியார் உள்ளம் உருகினர்; கண்ணீர் மல்கியது. தன்னைக் காண விரும்பித் தன் ஊருக்குப் புலவர் நாளைக்குப் போவார் என்று தெரிந்ததும் விடியு முன்னரே விரைந்து எழுந்து வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அரிதின் முயன்று சமையல் செய்துவைத்தார்; புலவர் வந்தார்; அவரை உவந்து உபசரித்து விருந்து புரிந்தார். கையில் கொடுத்தற்குப் பொருளில்லையே என்று வருந்தினர். ஈதல் இயையா வழி உளதாம் நோதல் சாதலினும் கொடிது என்பதை அனுபவத்தில் கண்டார். மன வேதனையோடு கொல்லைப்புறத்திற்குப் போனர். அங்கே இருந்த பாம்பின் புற்றில் தன் கையை விடுத்தார்; யாதொரு அபாயமும் நேரவில்லை; மீண்டு எடுத்தார்; ஒளி மிகுந்த மணி ஒன்று கையில் இருந்தது. தெய்வம் தந்தது என்று மகிழ்ந்தார். அதிசயமான அந்த நாகரத்தினத்தைப் புலவரிடம் கொடுத்துப் போற்றி விடுத்தார். இவருடைய மன நிலையையும் கொடை இயல்பையும் உலகம் உவந்து கொண்டாடியது. அரிய செயலால் இவர் பெயர் பெரிய புகழோடு இன்றும் நிலவியுள்ளது. இசை பெற்றவர் என்றும் இனியராய்த் திகழ்கின்றார்.

சிறந்த குணநலங்களோடு உயர்ந்த கொடையும் நன்கு அமைந்த பொழுது அந்த மனிதனை உவந்து புகழ் வந்து அடைகிறது. கோடன் என்பவன் செல்வ வளங்கள் நிறைந்த ஒரு சிற்றரசன். யாவரிடமும் பேரருளுடையனாய் ஆதரவு புரிந்து வந்தான். கல்வி யறிவிலும் வீரத்திலும் ஈகையிலும் சிறந்து நல்ல இசை பெற்றிருந்தான் ஆதலால் நல்லியக் கோடன் என நாடு புகழ்ந்து பேசப் பீடு மிகுந்து நின்றான். பாடலிலும் துலங்கினன்.

"அஞ்சினர்க்கு அளித்தலும் வெஞ்சினம் இன்மையும்
ஆணணி புகுதலும் அழிபடை தாங்கலும்
வாண்மீக் கூற்றத்து வயவர் ஏத்தக்
கருதியது முடித்தலும் காமுறப் படுதலும்
ஒருவழிப் படாமையும் ஓடியது உணர்தலும்
அறிவுமடம் படுதலும் அறிவுநன் குடைமையும்
வரிசை அறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்தப்
பன்மீன் நடுவண் பால்மதி போல
இன்னகை ஆயமோடு இருந்தோன்
குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச்
செல்இசை நிலைஇய பண்பின்
நல்லியக் கோடன்" (சிறுபாண்)

இதனால் இவனுடைய பண்பாடுகளை நன்கு அறிந்துகொள்கிறோம். நல்லூர் நத்தத்தனார் என்னும் சங்கப் புலவர் இவனது நிலைமை தலைமைகளை வியந்து கலையின் சுவைகள் கனிய ஒரு நூல் பாடியிருக்கிறார். உபகாரியின் பெயரை உலகம் உவந்து கூறும் என்பதை இவன் பேர் எங்கும் நன்கு விளக்கி நின்றது.

நல்லது செய்; புகழ் உன்னை நாடிவரும்.

---

737 பிள்ளைப்பே றின்றேல் பிழைசொல்வர் அன்னதினும்
வள்ளற் புகழை மருவாரே—எள்ளற்பா
டெல்லாம் அடைந்திங் கிழிவார் அவர்தோற்றம்
பொல்லாத தாகும் புவிக்கு. (எ)

இ-ள்

பிள்ளைப் பேறு இல்லாதவரைப் பிழை சொல்லுவர்; அது

ஒரு பிழையாகாது; புகழைப் பெருமையே மனிதனுக்குப் பெரிய பிழையாம்; அப்பிழையுடைய பழியாளன் இருப்பது பூமிக்குப் பாரமாம்; அவ்வாருகாமல் புகழை ஆக்கிக் கொள்ளுக.

பிறந்த மக்கள் பெறவுரிய பேறுகள் பல. அறம் பொருள் இன்பம் வீடுகளை அடைய வந்துள்ள மனிதன் இடையே கடையாய் இழிந்து படலாகாது. அடைய வேண்டியவைகளை அடையவுரிய தகுதிகளை யுடையவனாய் உயர்ந்து வரவேண்டும். தன் பிறப்பு நல்ல பயன் உற ஒழுகி வருபவன் விழுமிய மேன்மகனாய் விளங்கி வருகிருன். அவ்வரவு அதிசயநிலையை அருளுகிறது.

இனிய புகழை அடைந்துகொள்வதே அரிய பிறவியின் பெரிய பயனும். உரிமையான அதனை அடையவில்லையானல் அது சிறுமையாய்ப் பழி அடைந்ததாம். பிறவிப் பேற்றைப் பெருதவன் பேராத ஓர் பேறிழந்தவனாய்ச் சீரழிந்தான்.

வசைஎன்ப வையத்தார்க் கெல்லாம் இசைஎன்னும்
எச்சம் பெருஅ விடின். (குறள், 238)

புகழ் ஆகிய மகவை ஒருவன் பெறவில்லையானல் அது அவனுக்குக் கொடிய பழியாம் என இது முடிவு செய்துள்ளது.

இசை = புகழ். வசை = பழி. எச்சம் = சந்ததி.

ஒருவன் இறந்து போனலும் அவன் பின் எஞ்சி நிற்பது எச்சம் என வந்தது. இந்த நிலையில் சந்ததியும் எச்சம் என நேர்ந்தது. உச்சமான எச்சம் உயர்ந்த கீர்த்தியே.

"எச்சம் இன்மையின் எவ்வம் கூராத்
துப்புரவு எல்லாம் துறப்பேன்." (பெருங்கதை, 2, 11.)

மகவை எச்சம் என்று இது குறித்து வந்துள்ளது.

தான் இறந்து போனல் தன் பேரைச் சொல்லவும், தனது குடியை விளக்கவும் ஒரு பிள்ளை வேண்டும் என்று எந்த மனிதனும் ஆவலோடு சிந்தனை செய்துள்ளான். புத்திரன் இல்லையேல் அது ஒரு பெரிய பழியாக எண்ணப்பட்டுள்ளது. அறிவறிந்த மக்கட்பேறு பெறுமவற்றுள் எல்லாம் உயர்ந்த பேறு எனத் தேவரும் குறித்துள்ளார். இத்தகைய மகவினும் புகழ் உயர்நிலை யுடையது. உத்தமமானது; நித்தியமாய் நிலவி நிற்பது.

மகப்பேறு இல்லாதவன் மலடன் என நின்ருன்.

புகழ்ப்பேறு இல்லாதவன் பழிகாரன் என இழிந்தான்.

முன்னதினும் பின்னது மிகவும் இழிவுடையது. நல்ல புகழைப் பெற்றவன் எல்லா மகிமைகளையும் ஒருங்கே பெற்ருன். பிள்ளைகளைப் பெற்றவர் பலர் அல்லலும் அவலமுமே அடைந்து யாண்டும் வருந்தி நீண்ட துயரோடு நெஞ்சுநொந்துநிற்கின்ருர்.

கொள்ளிக்குப் பிள்ளைஎனக் கொண்டாடிப் பேணியவன்
துள்ளித்தீங் கூக்கத் தொலைகின்ருர் --- தெள்ளுபுகழ்
பெற்ருர் இருமையும்சீர் பேற்றுப் பெருமகிழ்ச்சி
உற்ருர் நிலையா யுயர்ந்து.

பிள்ளைப் பேற்றிற்கும் புகழ்ப் பேற்றிற்கும் உள்ள வேற்றுமையை இது உணர்த்தியுள்ளது. தான் இறந்தால் தனக்குக் கொள்ளிவைத்து எள்ளும் தண்ணீரும் இறைக்கவேண்டும் என்று ஒருவன் உள்ளிப் பெறுகின்ருன்; அப்படிப்பெற்றபிள்ளை அந்தக் குடிக்கே கொடுமையாக் கொள்ளி வைத்து விடுகிறது.

"இந்தச் சண்டாளன் பிறந்தானே; என் குடிக்கு இழிவு நேர்ந்ததே; நான் செய்த பாவம் இந்த உருவில் இப்படித் திரண்டுவந்துள்ளது" என்று தந்தையர் சிந்தை நொந்து வருந்த மைந்தர்கள் பிறந்துள்ளனர். அப்படிப்பட்ட பிள்ளைகளைப் பெற்றவரினும் பெருதவரே எங்கும் நல்ல சுக சீவிகளாயிருக்கின்றனர்.

" கோட்டானே! நாயே! குரங்கே! உனைஒருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்."

ஒரு ஈன மகனைப் பார்த்து இப்பாட்டு இப்படி வெறுத்து வந்துளது. இவ்வாறுஎள்ளிஇகழப்பெறுவதினும் பெருமையேநல்லது.

இல்லற வாழ்க்கைக்குப் பிள்ளைப்பேறு பெருமையே ஆயினும் அது நல்லதாக அமையவில்லையாஞல் கொடிய அல்லலே. பொல்லாத பிள்ளைகள் யாண்டும் புலைத் துயரங்களேயாம்.

வசையான கொச்சை மக்களைப் பெறுவதினும் இசையான எச்சம் பெற்றவனே உச்ச நிலையில் உயர்ந்து உய்தி பெறுகின்ருன். புகழே உயிர்க்கு ஊதியமான உத்தம புத்திரனும்.

அறிவறிந்த மக்கள் (குறள், 61) எனப் பிள்ளைப் பேற்றின் நிலைமையைத் தலைமையாக விசேடித்து விளக்கியருளிய வள்ளு

வப் பெருந்தகை அத்தகைய பிள்ளைகளைப் பெறவில்லை. இசை என்னும் எச்சம் ஒன்றே பெற்றார். அதனால் வையமெல்லாம் புகழ்ந்து போற்ற உச்ச நிலையில் உயர்ந்து ஒளி வீசியுள்ளார்.

இசையிற் பெரியதுஓர் எச்சம் இல்லை. (முதுமொழிக்காஞ்சி)

புகழினும் உயர்வான சந்ததி யாதும் யாண்டும் இல்லை எனக் கூடலூர் கிழார் இவ்வாறு ஆராய்ந்து கூறியிருக்கிறார்.

இம்மையிலும் மறுமையிலும் இன்பம் தரவல்லது புகழே; அதனைத் தனி உரிமையாக மனிதன் ஈட்டிக்கொள்ள வேண்டும் அங்ஙனம் கொள்ளவில்லையானால் அவன் எள்ளலடைந்து இழிகின்றான். நல்லபிறவிப்பயன் இல்லாமையால் பொல்லாமை ஆயது.

அவர் தோற்றம் புவிக்குப் பொல்லாத தாகும்.

என்றது புகழ்பெறாத அந்த மாக்களைப் பூவிதேவி உள்ளம் கடுத்து வெறுத்திருப்பாள் என்பதாம். உயிரின் பயனிழந்து பாழ்பட்டுள்ளமையால் தன்பால் அவர் தங்கிருப்பது புவிக்குப் புண்பாடாயது. வசையுடையான் உறின் வையம் வரவு குன்றும்.

வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம். (குறள், 239)

புகழ் இல்லாத பழியாளர் தங்கியுள்ள நாட்டில் விளையுள் குன்றும் என இது குறித்துள்ளது. நெல் புல் முதலிய உணவுப் பொருள்கள் நன்கு விளையா என்றதனால் பழியருடைய அழிதுயரும் இழி நிலையும் பாவத் தொடர்பும் நேரே தெரிய வந்தன.

வசை படிந்து வறிதே அழிந்துபோகாதே; இசை புரிந்து உயர்ந்துகொள்க. அது எங்கும் மகிமையாய் இன்பம் தரும்.

---

738 வந்து பிறந்தாய் வசைஒழிய வாழ்ந்துநீ
முந்தி இசையை முடித்துயர்க—பிந்தினையேல்
யாரும் இகழ அடுசமன்கைப் பட்டிழிந்து
சீரழிய நேரும் தெளி. (அ)

இ-ள்.

சிறந்த மனிதனாய்ப் பிறந்துள்ள நீ இழிந்த வசைகள் சேராமல் இனிது ஒழுகி உயர்ந்த இசையை விரைந்து அடைந்துகொள்

ளுக; அவ்வாறு கொள்ளாயேல் எள்ளலாய் இழிந்து எமன் கைப்பட்டு அல்லலுழந்து அழிந்து ஒழிவாய்; இதனை உணர்ந்து தெளிந்து உரிய நலனை உறுதியாகப் பெறுக என்பதாம்.

வந்து பிறந்தாய்! என்றது அளவிடலரிய பல இழி பிறவிகளைக் கடந்து உயர் நிலையில் தோன்றியுள்ள அருமையை ஊன்றி உணர வந்தது. வரவின் அருமை தெரிந்தவன் பிறவியின் பயனை விரைவில் கொள்ள நேர்கின்றான். நேரவே சீராளன் ஆகின்றான்.

உலகில் மனிதன் என வந்தவன் வளர்ந்து வாழ்ந்து சில காலம் இருந்துவிட்டுப் பின்பு மறைந்து போகின்றான். நிலத்தில் தோன்றிய மனிதன் நீர் மேல் தோன்றிய குமிழிபோல் விரைந்து மறைந்து போதலால் மாயவாழ்வு, பொய் வாழ்வு எனக் காய வாழ்வு கடைப்பட்டு நின்றது.

இன்ன நேரத்தில் இன்ன இடத்தில் இன்னபடி இவ்வுடலை விட்டு உயிர் நீங்கி விடும் என யாரும் வரைந்து கூற முடியாது. மணமகனாய் மகிழ்ந்திருந்தவன் பிணமகனாய்ப் பிறழ்ந்து வீழ்ந்தான் என்று பேசப்படுகின்றது. அழிகின்ற அவல நிலையில் உயிர்வாழ்வு ஊசலாடியுள்ளமையால் விழுமியதையுறவேண்டும்.

நிலையில்லாத இந்த வாழ்வில் நிலையுடையதை அடைந்து கொள்வது தலையாய கடமையாய்ச் சார்ந்து நின்றது. எடுத்தவுடல் இறந்து போனாலும் அடுத்து நின்று விளங்கி வருவது புகழே ஆகலால் அது பிறவிப்பயன் எனப் பெருமையாகப் பேச வந்தது. பொன்றுமுன்பொன்றாததை யுறுவதுஎன்றும்இனிதாம்.

ஒன்றா வுலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன் றில். (குறள், 233)

யாவும் பொன்றி ஒழியும் இவ்வுலகில் என்றும் பொன்றாமல் நிலைத்து நிற்பது புகழே; அதனை மனிதன் விரைந்து அடைந்துகொள்ளவேண்டும் எனத் தேவர் இவ்வாறு உணர்த்தியுள்ளார். நிலையில்லாத உலகத்தில் நிலையுடையதைப் பெறுவது தலைமையான ஆண்மையாம். அங்ஙனம் பெற்றவன் வெற்றிவீரனாகிறான்.

பெற்றி கருமம் பிழையாமல் செய்தாறின்
பற்றின்கண் நில்லாது அறம்செய்க --- மற்றது
பொன்றாப் புகழ்நிறுத்திப் போய்ப்பிறந்த ஊர்நாடிக்
கன்றுடைத் தாய்போல் வரும். (அறநெறிச்சாரம், 60)

நல்ல கருமங்களை நன்கு நாடிச்செய்; அதனால் புகழும் தருமமும் உளவாம்; இருமையும் பெருமையாம்; நிலையான கீர்த்தியால் இவ்வுலகம் உன்னைப் போற்றிவரும்; எடுத்த உடலை விடுத்து நீ இறந்து போய் எந்த ஊரில் பிறந்திருந்தாலும் கன்றைத்தேடித் தாய்ப்பசு வருதல்போல் செய்த தருமம் உன்னை நாடி வந்து இன்பம் ஊட்டி யாண்டும் இதம்புரியும் என இது காட்டியுளது.

எண்ணம் இனிதாய் மனிதன் நல்லது செய்ய நேர்ந்தால் புகழும் புண்ணியமும் அவனை அடைய நேர்கின்றன. நல்வினையாளன் கீர்த்திமானாய் வருதலால் அவன் என்றும் நித்திய சீவனாய் நிலைத்து உத்தம நிலையில் உயர்ந்து வாழ்ந்தவனாகிறான்.

Depart from evil, and do good; and dwell for evermore. (Bible)

"தீமையை விட்டு விலகி நன்மை செய்; என்றென்றும் நீ நிலைத்திருப்பாய்" என்னும் இது இங்கே அறியவுரியது. இதமான இனிய காரியங்களைச் செய்த பொழுதே மனிதன் நிலையான வாழ்வை நேரே அடைந்து தலைமையாய் நிலவுகின்றான்.

பிற உயிர்களுக்கு இரங்கி இதம் புரியும் உபகார நிலையில் உயர்வான புகழும் புண்ணியங்களும் உளவாகின்றன. ஆகவே அந்த உபகாரி இம்மையும் மறுமையும் உரிமையா இன்பம் பெறுகிறான். வையமும் வானமும் அவனை உவந்து வாழ்த்தி வருகின்றன. மன்னுயிர் ஓம்பினவன் பொன்னுயிராய் ஓங்கி உயர்கிறான்.

ஒரு பறவையைக் காப்பதற்காகத் தன் உடலில் இருந்து சிபி மன்னன் சதையை அறுத்துக் கொடுத்தான்; முடிவில் உயிரையும் விடத் துணிந்தான். அவனுடைய மன வுறுதியும்,கொடை நிலையும், குண நலமும் அதிசயங்களாய்த் துதிசெய்ய நின்றன.

ஓடிவந்து தன்பால் ஒதுங்கிநின்ற ஒண்புறவை
நாடி இரங்கி நயந்தருளிப் ---பீடுடைய
தன்னுடம்பும் கொய்துடனே தந்தான் சிபிமன்னன்
மன்னுபுகழ் கொண்டான் மகிழ்ந்து.

சிபியின் செயலும் அதனால் அடைந்துள்ள புகழும் இதனால் அறிந்துகொள்கிறோம். இம்மன்னன் இராமனுக்குப் பல தலைமுறைகளுக்கு முன்பு இருந்தவன். இவன் பிறந்த குடி வழியில் தான் பிறந்து வந்துள்ளது சிறந்த பெருமை என அவ் வீர வள்ளல் பல முறையும் இவனை உவந்து பாராட்டியிருக்கிறான்.

"பிறந்தநாள் தொடங்கி யாரும் துலைபுக்க பெரியோன்பெற்றி
மறந்த நாள் உண்டோ?" (இராமா' வீடணன், 110)

இராமன் இவ்வாறு சிபியை மனம் உருகிப் புகழ்ந்திருக்கிறுன்.

"புறவுஒன்றின்பொருட்டாகத் துலைபுக்கபெருந்தகைதன் புகழில்பூத்த
அறன் ஒன்று திருமனத்தான்." (இராமா, திருஅவதாரம், 65)

சிபியினுடைய புகழ் ஒளியில் பூத்த புண்ணியவான் எனத் தசரதனைக் குறித்து உரோமபதன் என்னும் அரசன் கலைக் கோட்டு முனிவரிடம் இவ்வாறு கூறியிருக்கிறுன். சிறிய பறவைக்காகத் தனது அரிய உயிரை உதவ நேர்ந்தது பெரிய அதிசயம் ஆதலால் சிபி மன்னனுடைய புகழ் புவி எங்கும் பரந்து சீவர்களின் செவி குளிர வளர்ந்து தேசு மிகுந்துள்ளது.

புகழ் எதனுல் வரும்? அதனை அடைய வல்லவர் யார்? என்பதை ஓரளவு ஈண்டு உணர்ந்து கொள்கிறேம். தன்பேரை இந்நிலவுலகில் நிலைநிறுத்திச் சீரும் சிறப்பும் பெருகி வரத் தலைமையான இன்பத்தைப் புகழாளர் பொருந்தி நிற்கின்றுர்.

மன்னுயிர்க்கு உதவி செய்; அது உன் உயிர்க்குப் புகழாம்.

---

739 பாரி குமணன் படைஅதிகன் நள்ளிஆய்
ஓரி எழினி உயர்பேகன் — காரிகன்னன்
என்றிருந்தார் அன்றிறந்தார் இன்றும் எதனுலே
நின்றுயர்ந் துள்ளார் நினை. (கூ)

இ-ள்

பாரி முதலிய வள்ளல்கள் பண்டே இறந்துபோயினர்; இறந்தும் இன்றும் அவர் எங்கும் விளங்கி வருகின்றனர்; எதனுல் இவ்வாறு அவர் நின்று நிலவுகின்றுர்? புகழாலேயாம்; இதனை உணர்ந்து அதனை நீ விழைந்து பெறுக என்பதாம்.

உயர்ந்த கருமங்களையும் சிறந்த தருமங்களையும் செய்தவர் பெரிய புகழாளர்களாய் விளங்கி நிற்கின்றனர். நாட்டில் நல்ல கீர்த்தியாளர் தோன்றின் அந்தத் தேசத்திலுள்ள கவிஞர்கள் அவரை உவந்து பாடுகின்றனர். அவ்வாறு புலவர் வாய்மொழிகளால் ஒளியும் உருவமும் பெற்றுள்ள விழுமியோரை உலகம் வழிமுறையே தொடர்ந்து விழைந்து போற்றி வருகிறது. அங்ஙனம் வந்த பேலோருள் சிலரை இங்கே காண வந்துள்ளோம்.

பாரி

இவன் பாண்டி நாட்டினன். குறு நில மன்னன். முந்நூறு ஊர்களையுடைய பறம்பு நாடு இவனுக்கு வரம்பாயிருந்தது. இவனுடைய உறுதியும் ஊக்கமும் பொறுதியும் அதிசய நிலையின. நிறைந்த கல்விமான்; சிறந்த கொடையாளி. மழை பொழியும் மாரி, பொருள் பொழியும் பாரி என உலகம் புகழ்ந்துவர உயர்ந்து வந்தான். இவனது வாழ்வு புகழ்மணம் தோய்ந்து வந்தது.

பாரிநீ மாரிஎனப் பாருலகம் பாராட்டச்
சீரியனுய் நின்ற திறமெல்லாம்--- வாரி
வழங்கிவந்த அந்தவுயர் வண்மையினுல் வந்து
முழங்கிய சீராம் முதிர்ந்து.

உரிமையோடு நேரே பெய்யும் மழை என்று வையம் மகிழ்ந்துவரப் பாரி வாழ்ந்து வந்துள்ளதை இதனுல் ஓர்ந்து உணர்ந்துகொள்கிறேம். கைம்மாறு கருதாமல் மழை பொழிவதுபோல் எவர்க்கும் இனியனுய் உதவியுள்ளமையால் இவனது விழுமிய நீர்மையை உலகம் வியந்து விழைந்து பேச நேர்ந்தது.

"நீரினும் இனிய சாயல், பாரி வேள்" (புறம், 105) எனக் கூறியிருப்பதும் கூர்ந்து சிந்திக்க வுரியது. பெரு நீர்மையுடைய இவன் ஒருநாள் தேர் ஏறிக் கானகம் போனுன். அங்கே ஒரு முல்லைக்கொடி கொழுந்தோடிப் படர்ந்து நெடிது அசைந்து கொண்டிருந்தது; அதனை இவன் கண்டான்; யாதொரு ஆதரவுமின்றித் தளர்ந்து அலமந்துள்ளதே! என்று இரங்கினுன்; தான் ஏறிப்போயிருந்த தேரை அதன் அருகே கொண்டுபோய் நிறுத்தி வளைந்து கிடந்த கொடியைத் தன் கையால் எடுத்துத் தேர்மேல் படர்ந்து வளரும்படி விடுத்தான்; தனியே நடந்து வந்தான். இது எவ்வளவு கண்ணோட்டம்! எத்துணைத் தண்ணளி! இந்த அரிய செயல் பெரிய மகிமையாய்ப் பாராட்ட வந்தது.

" பூத்தலை அருஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்துஓங்கு சிறப்பிற் பாரி." (புறம், 200)

" நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய

பிறங்குவெள் அருவி வீழும் சாரல்
பறம்பிற் கோமான் பாரி." (சிறுபாண்)

"புலர்ந்த சாந்திற் புலரா ஈகை
மலர்ந்த மார்பின் மாவண் பாரி." (பதிற்றுப்பத்து 61)

"ஏந்துகோட்டு யானை வேந்தர் ஓட்டிய
கடும்பரிப் புரவிக் கைவண் பாரி." (அகம், 78)

இன்னவாறு சங்க நூல் எங்கணும் பாரி புகழ் பாராட்டப் பட்டுள்ளது. அருளிய கொடை அதிசய கீர்த்தியாயது.

"கொடுக்கிலாதானைப் பாரியேஎன்று கூறினும்
கொடுப்பார் இலை." (தேவாரம்)

சுந்தர மூர்த்தி சுவாமிகளும் பாரியின் கொடையைக் குறித்து இங்ஙனம் கூறியிருக்கிறார். ஆகவே இவனது சீர்மையும் நீர்மையும் தெரியலாகும். கொடி செடிகளுக்கும் இரங்கி உதவியது அதிசய வண்மையாய் உயர்ந்து துதி செய்ய நின்றது.

ஊர்ந்துசென்ற மணித்தேரை ஒருமுல்லைக்
கொடிக்குதவி உவந்து மீண்டு
சார்ந்துவழி நடந்துவந்தான் தண்பாரி
முன்னாளில் இந்நாள் இங்கே
ஆர்ந்தவுற வினனேனும் அடுத்துவந்து
தம்காரில் அமர்ந்திருக்க
நேர்ந்துவிட மாட்டாத நெடுநிலையர்
படுநிலையில் நிமிர்ந்துள் ளாரே. (இந்தியத்தாய் நிலை)

அழகிய தனது அருமைத் தேரை ஒரு முல்லைக் கொடிக்கு உரிமையாக உதவிவிட்டுக் கால் நடையாய் மீண்டு பண்டு பாரி வந்தான்; அத்தகைய உபகாரி பிறந்திருந்த நாட்டிலே இன்று தமது காரில் உறவினனும் சிறிது போது அமர்ந்திருக்கச் சம்மதியாத வெம்மதியாளர் பெருகியுள்ளனரே! என்று இது மறுகியுள்ளது. பழைய நிலையும் புதிய புலையும் விழிதெரிய வந்தன.

## குமணன்.

இவன் உள்ளம் கனிந்த வள்ளல். உயர் குணங்கள் பல இயல்பாக அமைந்தவன். மலர் மணத்தை நுகர்ந்து வண்டுகள் மகிழ்தல்போல் இவனது குணநலத்தை உணர்ந்து பலரும்

புகழ்ந்து வந்தனர். இவனது புகழ் மணம் பூமி எங்கும் பரவி நின்றது ஆதலால் குமணன் என்னும் பேர் காரணக் குறியாய் அமைந்தது. கு=பூமி. மணன்=புகழாகிய மணத்தைப் புவி எங்கும் பரப்பி மனிதரின் செவிக்கு இனிய சுவை செய்தவன்.

"புவியினில் புகழ்மணம் பொலிந்து நின்றதால்
செவியினில் குமணன்பேர் சிறந்து நின்றது."

என்றதனல் இவனது சீர்த்தி நிலையை நன்கு அறியலாகும்.

எவர்க்கும் இல்லை என்னமல் இனிது ஈந்து வந்த இந்த நல்லவனுக்குப் பொல்லாத ஒரு தம்பி இருந்தான். அவன் பெயர் அமணன். பேராசை யுடையவன்; அரசை வலிந்து கவர்ந்து கொண்டு அண்ணனை வெளியே துரத்திவிட்டான்; இவன் தனியே ஒரு பூஞ்சோலையில் ஒதுங்கித் துறவிபோல் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் அங்கே சாத்தனுர் என்னும் புலவர் வந்தார்; அவரைக் கண்டதும் இவன் மகிழ்ச்சி மீக்கொண்டான். நல்ல கல்விமான் ஆதலால் அவரோடு அளவளாவி உணர்வின் சுவைகளை நுகர்ந்து உள்ளம் உவந்தான்; அவருக்கு ஏதேனும் கொடுத்துவிட வேண்டும் என்று கருதினன்; கையில் யாதும் இல்லை; நோதல் உழந்தான்; தன் தலையைக் கொய்துகொண்டு வருவார்க்குக் கோடி பொன் தருவதாக அமணன் கூறியிருந்தான் ஆதலால் அதனை நினைந்தார்; அகம் மகிழ்ந்தார்; அயலே கிடந்த வாளை எடுத்துப் புலவர் கையில் கொடுத்துத் தன் தலையை வளைத்து நீட்டி "இதனைக் கொய்துகொண்டு போய் என் தம்பி கைக் கொடுத்தால் உமக்குச் செப்பொன் கோடி கொடுப்பான்" என்முன். இவ்வுரையைக் கேட்டதும் புலவர் உள்ளம் உருகினர்; கண்ணீர் வெள்ளம் பெருகியது; விரைந்து அமணனிடம் போய் அவனுக்கு அறிவு போதித்தார்; அவன் ஓடிவந்து அண்ணன் காலில் விழுந்து தொழுது அழுதான். இருவரையும் உறவுசெய்து குமணனை அழைத்துப் போய் அரசனுக்கி வைத்துப் புலவர் உவகையோடு போயினர். அவர் செயல் உயர்நலனை அருளியது.

வெம்பும் காலை வெதும்பி விழும்சிரம்
செம்பொன் கோடி விலைஎனச் சிந்தித்தான்
உம்பர் நாடும் உலகினும் தேடினும்
எம்பிபோல் எமக்கு யாவர் உரியரே.

தன்னைக் கொலை புரிய நேர்ந்த கொடிய அமணனைக் குறித்துக் குமணன் பாடிய இந்தப் பாடலே அவனை உள்ளத்தை உருக்கி உறவுறச்செய்தது. தன் கையில் யாதொரு பொருளும் இல்லாத போதும் தன் தலையைக் கொய்து கொடுக்க நேர்ந்த இவனது கொடையையும் மன நிலையையும் உலகம் அன்று உவந்து புகழ்ந்தது. மனித சமுதாயம் இன்றும் இவனை வியந்து கொண்டாடி வருகிறது. தலைக் கோடையான் என நிலைத்த புகழோடு நிலவி நிற்கின்றான். அதிசய சீர்த்தி துதி செய்ய வந்தது.

அதிகன்.

இவன் சிறிய அரசன்; பெரிய வள்ளல்; நல்ல மதிமான்; சிறந்த போர்வீரன். இவனுடைய நாட்டிலிருந்த ஒரு மலைச் சாரலில் அரிய நெல்லி மரம் ஒன்றிருந்தது. அதன் கனி அமுதமயமானது; அதிசய நிலையது; தன்னை உண்டவரை நெடிது வாழச் செய்வது; அந்தக் கனியை முனிவர் ஒருவர் கண்டார்; எடுத்து வந்து இவனிடம் கொடுத்தார். நல்ல உபகாரி ஆதலால் நெடுங்காலம் சுகமாய் வாழவேண்டும் என்னும் குறிக்கோளோடு அந்த அருந்தவர் இந்தப் பெருந்தகைக்குக் கொடுத்துப் போனார். இனிய சுபதினத்தில் உண்ணவேண்டும் என்று அதனை இவன் புனிதமா வைத்திருந்தான்; குறித்த நாள் வந்தது; அன்று ஔவையார் வந்தார்; அரிய அக்கனியை அப்பெரியவள் உண்ணும்படி பேணித் தந்தான். அவள் பெற்று மகிழ்ந்தாள்; இவனுடைய உள்ளன்பையும் வள்ளன்மையையும் வியந்து அம்முதியவள் புகழ்ந்து பாடினாள். பாடல் பரமநீர்மையை நாடி வந்தது.

"பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே! தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத்து அடக்கிச்
சாதல் நீங்க எமக்கு ஈந்தனையே" (ஔவையார்)

தான் ஆலத்தை உண்டு அமுதத்தை அமரர்க்கு அளித்துப் பாதுகாத்த சிவபெருமான்போல் நீ இன்று எனக்கு அமுதக் கனி தந்து அருள்புரிந்தாய்; ஆதலால் அந்த நீலமணி மிடற்று

இறைவன் போலவே நெடும் புகழோடு நீ நிலைத்து வாழுக என அத் தவ மூதாட்டி இவனை இப்படி உவந்து துதித்திருக்கிறாள்.

நள்ளி.

இவன் பெரிய கொடை வள்ளல். தோட்டி என்னும் மலை நாட்டின் தலைவன். புலவர்கள்பால் பேரன்புடையவன். வன்பரணர் என்னும் புலவரை ஒருநாள் இவன் கண்டான். தன் குடும்பத்தோடு வழி நடந்து வெயிலால் வருந்திக் காட்டின் இடையே ஒரு ஆலமரத்தின் அடியில் தங்கியிருந்த அவரை வேட்டைமேல் விரைந்து வந்த இவன் வியந்து நோக்கினன். அவர் பசியால் வாடியிருப்பதை அறிந்து உணவு தந்து உபசரித்தான்; பின்பு தன் கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலையையும் கையில் பூட்டியிருந்த இரத்தினக் கடகத்தையும் அவிழ்த்துக் கொடுத்தான். அரிய பெரிய விலையுடைய அந்த அணிகளைப் பெற்றுக்கொள்ள நாணி அவை வேண்டாம் என்று புலவர் விநயமாய் மறுத்தார். "காட்டில் வந்துள்ளேன்; வேறுகொடுப்பதற்கு ஒன்றும் இல்லை; இவற்றை அவசியம் தாங்கள் பெற்றுக் கொள்ளவேண்டும்" என்று விழைந்து வேண்டிக் கொடுத்து விட்டு அயலே அவன் விலகிப் போனான்; புலவர் பின்தொடர்ந்து "தங்கள் பேர் என்ன? ஊர் யாது?" என்று கேட்டார். தன் பேரைச் சொன்னால் புலவர் புகழ்ந்து வெளியே பாடி விடுவார் என்று நாணி யாதும் கூறாமல் இவன் விரைந்து சென்றான்; அவர் வியந்து நின்றார். பிறரிடம் வினவிக் கேட்டு அந்நாட்டு மன்னன் என்று தெரிந்து நெடிது வியந்தார். நிகழ்ந்தவற்றை யெல்லாம் தொடுத்துப் பெரிய பாட்டு ஒன்று பாடினார். அதன் ஒரு சிறு பகுதி அயலே வருகிறது. கருதிக் காணுங்கள்.

"பெறுதற்கு அரிய வீறுசால் நன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டு நாட்டேம் என
மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம்
மடைசெறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்
எந்நாடோ? என நாடும் சொல்லான்;
யாரீரோ? எனப் பேரும் சொல்லான்;
பிறர்பிறர் கூற வழிகேட் டிசினே
இரும்பு புனைந்தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கும் அணிநெடுங் குன்றின்

பளிங்கு வகுத்தன்ன தீநீர்
நளிமலை நாடன் நள்ளியவன் எனவே" (புறம், 150)

இவனுடைய பெருங் கொடையும் பெருந் தகவும் எத்துணை நிலையின! என்பதை இதனால் உய்த்துணர்ந்து கொள்ளலாம். தான் கொடுத்ததும், தன் பெயரும் பிறர்க்குத் தெரியக்கூடாது என்று அடக்கமாய் மறைத்துப் போனான். அவை உலகமெல்லாம் பரவி ஒளி வீசி நிற்கின்றன. சிறிது கொடுத்தாலும் தம் பெயர் பெரிதும் பத்திரிகையில் வரவேண்டும் என்று பித்தேறி நிற்கும் பேதைகள் இந்த உத்தமன் நீர்மையை ஓர்ந்து சிந்தித்து உண்மைநிலையை உணர்ந்து உள்ளம்தெளிந்துகொள்ளவேண்டும்.

## ஆய்.

இவன் பாண்டி நாட்டில் இருந்தவன். பொதிய மலைக்குத் தலைவன். மதிநலம் வாய்ந்தவன்; இனிய நீர்மையன்; உள்ளி உள்ளமெல்லாம் எவர்க்கும் உவந்து ஈந்து வந்த வள்ளல்; பெரிய போர்வீரன்; எல்லைமீறிக் கொடுத்து வந்தமையால் தனது பெருஞ் செல்வம் தேய்ந்து ஒருமுறை இவன் வறுமையுற நேர்ந்தான். இவனது எளிமையை நோக்கி வலிய அரசர் சிலர் இகழ நேர்ந்தார். "அள்ளி இறைத்தான் அவலமா யிளைத்தான்" என்று அவர் எள்ளி மொழிந்ததைக் கேட்டுமோசியார் என்னும் புலவர் அவரை இகழ்ந்து கூறி இவனைப் புகழ்ந்து பேசினார். அவர் உவந்து பாடிய பாடலின் பகுதி ஒன்று அயலே வருகிறது.

"சுவைக்கு இனிது ஆகிய குய்யுடை அடிசில்
பிறர்க்கு ஈவின்றித் தம்வயிறு அருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போலாதே.
ஆயின் எங்கள் ஆய் கோயில்." (மோசியார்)

இந்தக் கவியின் சுவையைக் கருதி ஆய்ந்து உறுதி நிலையை ஓர்ந்து கொள்ளவேண்டும். பிறர்க்கு யாதும் ஈயாமல் இனிய உணவுகளை உண்டு தம் வயிற்றை நிரப்பி உடலைக் கொழுக்க வளர்த்துப் புகழை அடியோடு இழந்துள்ள முடிமன்னர் ஊர்கள் பொருளால் நிறைந்திருந்தாலும் ஆய் ஊர்போல் அருளும் புகழும் அமையா; ஆகவே அவை இதனோடு இணையாகா எனப் புலவர் எள்ளித் தள்ளியிருப்பது நன்கு உள்ளி உணரவுரியது.

ஓரி

இவன் சீரிய பண்புகள் அமைந்த வீரியன். கொல்லி மலைக்குத் தலைவன். எதையும் குறி தப்பாமல் வில் எய்வதில் வல்லவன். அதனால் வல்வில் ஓரி எனப் பல்லோரும் புகழ்ந்து சொல்ல நல்ல விருதுப் பேரோடு விளங்கி நின்றான். "கொல்லி ஆண்ட வல்வில் ஓரி" எனப் பெருஞ் சித்திரனார் இவனை இங்ஙனம் குறித் திருக்கிறார். யாவர் வரினும் யாதும் மறாமல் உவந்து கொடுத்து வந்தான் ஆதலால் இவன் புகழ் நாடெங்கும் பரந்து நின்றது.

"ஓங்கிருங் கொல்லிப் பொருநன்
ஓம்பா ஈகை விறல்வெய் யோனே." (புறம், 152)

என உலகம் உவந்து புகழ இவன் உயர்ந்து விளங்கினான்.

எழினி.

இவன் விழுமிய நீர்மையன். குதிரை மலையும் அதனை அடுத் திருந்த நாடும் இவனுக்கு உரிமையாயிருந்தன. தன்பால் வந்த வர்க்கு எதையும் அன்போடு உதவி வந்தான். தடையில்லாத கொடையாளி என்று நாடு புகழ இவன் பீடு பெற்று நின்றான். போரினும் வல்லவன் ஆதலால் பேரரசரும் இவனுடைய உத வியை நாடி உறவு கொண்டு உரிமை பூண்டு வந்தனர்.

"ஊராது ஏந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூண் எழினி." (புறம், 158)

இவனுடைய வேல் மாலை அணி முதலியவற்றைக் குறித்து இன்னவாறு புலவர் பலரும் புகழ்ந்து கூறியுள்ளனர். கொடை வீரமும் படை வீரமும் இவனிடம் நன்கு குடிகொண்டிருந்தன.

"வெம்போர் நுகம்படக் கடக்கும்
பல்வேல் எழினி." (குறுந்தொகை 80)

போர் முனையில் எழினி புரிந்துள்ள வீர நிலையை இது விளக் கியுள்ளது. ஈகையிலும் வாகைபெற்றிருந்தமையால் வீரவள்ளல் என யாரும் உவந்து புகழ்ந்து வர இவன் விளங்கி நின்றான்.

பேகன்.

இவன் மலை நாட்டு மன்னன்; நிலைநாட்டிய புகழை யுடை யவன். நல்ல அறங்கள் பல செய்து வந்தமையால் இவன்

இருந்த நகர் நல்லூர் என்று சிறந்து விளங்கியது. "வயங்கு புகழ்ப் பேகன் முல்லை வேலி நல்லூரானே" (புறம், 144) என எல்லாரும் புகழ்ந்து போற்ற இவன் உயர்ந்து வாழ்ந்தான். கைம்மாறு கருதாமல் மாரிபோல் வாரி வழங்கி வந்தான் ஆதலால் இவனுடைய சீரும் சிறப்பும் பாரெங்கும் பரவி நின்றன.

அறுகுளத்து உகுத்தும் அகல்வயற் பொழிந்தும்
உறுமிடத்து உதவா துவர்நிலம் ஊட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்கால் பேகன்
கொடைமடம் படுதல் அல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே. (புறம், 142)

இவனுடைய கொடை நிலையைக் குறித்து வந்துள்ள இது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. கோடைமடம் என்றது தகுதி தெரியாமல் எவர்க்கும் மிகுதியாக் கொடுத்து விடுவான் என்பதாம். கொடையில் இப்படிப் பேதையாய்ப் பித்தேறியிருந்தாலும் போரில் அதிசய சதுரனாய் அமராடி வெல்லுவன் என்பார் படைமடம் படான் என்றார். ஈகையிலும் வீரத்திலும் ஓகையோடு வாகை பெற்று இவன் இருந்துள்ள நிலையைப் பரணர் இங்ஙனம் வரைந்து காட்டியுள்ளார். காட்சி கருதி நோக்கி நுணுகி உணரவுரியது. புலமைச் சுவை தலைமை இன்பம் தந்து வருகிறது.

ஒருநாள் இவன் வெளியே உலாவப் போயிருந்தான். அங்கே குளிர் பூம்பொழிலில் ஒரு மயில் ஆடிக்கொண்டிருந்தது; அதன் ஆட்டத்தைக் கண்டு மகிழ்ந்தான்; அது குளிரால் வருந்தலாகாதே என்று இரங்கினன்; நாட்டியம் ஆடிய நங்கைக்கு நல்ல சன்மானம் தருவதுபோல் தான் போர்த்தியிருந்த உயர்ந்த பொன்னுடையை அம்மயில் மீது போர்த்திவிட்டு மகிழ்ந்து வந்தான். முல்லைக்கொடிக்குத் தேரைக் கொடுத்த அந்தப் பாரியையும், மயிலுக்குப் போர்வை ஈந்த இந்தப் பேகனையும் ஒரு நிலையில் வைத்து உலகம் பல வகையிலும் உவந்து போற்றி நின்றது.

"இன்னோர் இன்னவை கொடுத்தார் நீயும்
அன்னோர் போல அவைஎமக்கு ஈகென
என்னோரும் அறிய எடுத்துரைத் தன்று."

என்ற இயல்மொழி வாழ்த்தின் இலக்கணத்துக்கு இவரையே

தலைமையாக எடுத்துக் காட்டிப் புலமையுலகம் புகழ்ந்துள்ளது.

"முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
எல்லைநீர் ஞாலத்து இசைவிளங்கத்--தொல்லை
இரவாமல் ஈந்த இறைவர்போல் நீயும்
கரவாமல் ஈகை கடன்." (பாடாண்)

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை அளித்தாரைக் கேட்டறிதும்--சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப!
அறிமடமும் சான்றோர்க்கு அணி. [பழமொழி]

ஒரு செடிக்குத் தேரையும், பறவைக்குப் பீதாம்பரத்தையும் கொடுக்கலாமா? அதற்கு ஒரு கொம்பையும், இதற்குக் கொஞ்சம் இரையையும் போட்டிருக்கலாமே? என்று எவரும் கேட்க நேர்வர்; ஆனல் அருள் நெறியில் பழகி ஈகையால் ஓங்கி கொண்டுள்ள வள்ளல்களின் உள்ளம் உலக நிலையைக் கடந்து நிற்றலால் அவருடைய செயல்கள் வியப்புகளை விளைத்து நிற்கின்றன. கொடையாளிகள் அதிசயமான தெய்வீக நிலையினர்.

"உடாஅ போரா ஆகுதல் அறிந்தும்
படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோன்
கடாஅ யானைக் கலிமான் பேகன்." (பரணர்)

மயிலின் இயல்பை அறிந்திருந்தும் தனது இயல்பான ஈகையின் உவகையால் தன்னைமறந்து இன்னவாறுஇதம்செய்திருக்கிறான்; கொடை மடமானது இவனுக்குப் பெரு மகிமையாய் நின்றது.

காரி.

இவன் குறுநில அரசன். பெண்ணையாற்றங் கரையைச் சூழ்ந்திருந்த மலையமானாட்டின் தலைவன். திருக்கோவலூர் இவனுக்கு இராசதானியாயிருந்தது. மூவேந்தரும் இவனுடைய உதவியை நாடி உறவு பூண்டு வந்தனர். எந்த நிலையிலும் இவனை வந்து கண்டவர் ஏதேனும் பெற்றுச் சிந்தை மகிழ்ந்தே சென்றனர். இவனது உபகார நிலை உயர்தரமான வியனுடையது.

"நாள்அன்று போகிப் புள்இடை தட்பப்
பதன்அன்று புக்குத் திறன்அன்று மொழியினும்
வறிது பெயர்குவர் அல்லர் நெறிகொளப்
பாடான்று இரங்கும் அருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே." (புறம், 124)

நேரே சகுனத்தடை நேரினும், கருநாள் உறினும், அகாலம் ஆயினும், தகாத மொழி கூறினும் காரியை வந்து கண்டவர் வெறுங் கையோடு மீண்டது இல்லை எனக் கபிலர் இங்ஙனம் பாடியிருக்கிறார். இதனால் இவனது கொடையும், தகவும் நடையும் நலனும் நன்கு அறியலாகும். மலையமான் திருமுடிக் காரி என நாட்டாலும் ஆட்சியாலும் இவன் பெரிய மாட்சி பெற்றிருந்தான்.

### கன்னன்.

இவன் குந்தி வயிற்றில் பிறந்தவன். தருமன் முதலிய ஐவருக்கும் மூத்தவன். பாண்டவர் தலைவனாயிருக்க உரிய இவன் விதியின் நியதியால் துரியோதனனோடு சேர்ந்து கொண்டான். அவனும் இவன்பால் பேரன்பு பூண்டு அங்கதேசத்தின் அதிபதியா நியமித்து எவ்வழியும் செவ்வையா இவனை ஆதரித்து வந்தான். இவனுடைய மதிவலியும் கொடை நலனும் படை வீரமும் அதிசய நிலையின. வண்மைக்கும் திண்மைக்கும் உண்மையான உரிமையாளனாய் இவன் உயர்ந்திருந்தான். அதிசய வீரனை இவன் எதிரியோடு சேர்ந்திருத்தலால் பாண்டவர் வெற்றி பெறுவது அரிது என்று கண்ணன் கருதி உளைந்து இவனுடைய வலியைக் குறைக்க விரைந்தான்; இந்திரனை நினைந்தான்; அவன் வந்து உசாவினான். "கவசம் குண்டலம் என இரண்டு அணிகள் கன்னனிடம் உள்ளன; அவற்றைப் பூண்டு நின்றால் அவனை யாராலும் வெல்ல முடியாது; அந்த அணிகளைத் தந்திரமா நீ போய் வாங்கிவரவேண்டும்" என்று கண்ணன் வேண்டினான். உயிராதாரமாயுள்ளவற்றை அவன் கொடுப்பானா? என்று தேவராசன் திகைத்தான். அப்பொழுது கண்ணன் கன்னனுடைய வள்ளன்மையைக் குறித்து உள்ளம் உவந்து உரிமையோடு சொன்ன மொழிகள் அருமை மிக உடையன; கருத வுரியன.

வல்லார் வல்ல கலைஞருக்கும் மறைநூலவர்க்கும் கடவுளர்க்கும்
இல்லாதவர்க்கும் உள்ளவர்க்கும் இரந்தோர் தமக்கும் துறந்தவர்க்கும்
சொல்லாதவர்க்கும் சொல்பவர்க்கும் சூழும் சமயாதிபர்களுக்கும்
அல்லாதவர்க்கும் இரவிமகன் அரிய தானம் அளிக்கின்றான். (1)

மைந்தற்கு உறுதி நீவேண்டில் வல்லே முனிவர் வடிவாகிச்
சந்தப்பனுவல் இசைமாலைத் தானகரனை விரைந்து எய்தி
அந்தக் கவச குண்டலங்கள் அளிப்பாய்! என்றால் அவன்ஒன்றும்
இந்தப் புவியில் மறுத்து அறியான் உயிரே என்னினும் ஈந்திடுவான். (2)

(பாரதம்)

கன்னனுடைய அரியகொடை இயல்புகள் எவ்வளவு உயர் நிலை யின! என்பதை இவற்ருல் உணர்ந்து கொள்ளுகிருேம். இந்த உரைகளைக் கேட்டதும் இந்திரன் வியந்தான். ஒரு முதிய வேதி யன்போல் வடிவம் கொண்டு தண்டு ஊன்றி நடந்து கன்னன் மாளிகையை அடைந்தான். இவன் வணங்கி உபசரித்து என்ன வேண்டும்? என்ருன். வேண்டியதை எல்லாம் கொடுக்க முடி யுமா? என்று வந்தவன் விந்தையுடன் கேட்டான். "இயல்வது கரவேன்; எதுவேண்டுமோ அதைக் கேளுங்கள்" என்று இவன் வேண்டி நின்ருன். அவன் கவசமும் குண்டலமும் வேண்டும் என்ருன். உடனே இவன் உவந்து கொடுத்தான்; அவன் வியந்து வாங்கிக்கொண்டு கண்ணனை அடைந்து கன்னனைப் புகழ்ந்தான். உயிர் நிலையமான அரிய பொருளை உதவினன் என இருவரும் பரிவு கூர்ந்து இவனது அதிசய நிலையைத் துதிசெய்து நின்ருர். கோடைக்குக் கன்னன் எனப் பழமொழி வழக்காய் நாட்டில் வழங்கி வருவதை யாவரும் கேட்டு வருகின்றனர்; பாட்டிலும் புலவர்கள் இவன் புகழைப் பலவகையிலும் காட்டியுள்ளனர்.

அன்று இறந்தார்; இன்றும் உள்ளார்.

என்றது புகழ்பெற்றவர் என்றும் சிரஞ்சீவிகளாய் நின்று வரும் நிலை தெரிய வந்தது. மேலே குறித்துள்ள வள்ளல்களின் உரு வங்கள் மறைந்து போயின; நெடுங்காலங்கள் ஆகின்றன; ஆன லும் இன்றும் அவர் எங்கும் இனியராய் விளங்கி வருகின்றனர்.

அழியும் நிலையில் பிறந்து வந்துள்ள மனிதன் என்றும் அழி யாமல் இருப்பதற்கு வழி விழுமிய புகழை அடைந்துகொள்வதே. நில்லா உலகில் நிற்கும் நிலைமை புகழுக்கே தலைமையாயுள்ளது.

பாரில் தோன்றிய ஒருவன் இறந்து போனலும் அவன் பெயரை எஞ்ஞான்றும் இறவாமல் நிலைநிறுத்தி யருளுவது புகழே; அதனல் அது விலைமதிக்க முடியாத அரிய சஞ்சீவியாய் மேவிச் சீவர்களுக்குத் தேவ நீர்மையை அருளி வருகிறது.

"A good name is better than precious ointment." (Bible)

"நல்ல புகழ் பரிமளமான அரிய உயிர் மருந்தினும் பெரி யது." என்னும் இது இங்கே அறிய வுரியது. பொய்யான போலிப் புகழ்ச்சியும் மனிதரைக் களிக்கச் செய்கிறது. அகத்

தோடு தோய்ந்து வராமல் முகத்து எதிரே வெளிவேடமாய்ப் புகழ்ந்து பேசுவதால் போலிப் புகழ்ச்சி முகத்துதி என வந்தது. இதற்குப் பலரும்ஆவலோடு யாண்டும் வசமாய் வருகின்றனர்.

"Flattery is the food of fools;
Yet now and then your men of wit
Will condescend to take a bit." (Swift)

"முகஸ்துதி மூடர்களின் உணவு; அறிவாளிகளும் மறைவாய் வளைந்து வந்து அதனை விழைந்து கொள்கின்றனர்" என சுவிவ்ட் என்னும் மேல்நாட்டு அறிஞர் இவ்வாறு கூறியுள்ளார்.

போலியான புகழ்ச்சி மொழி சீவர்களுக்கு இவ்வளவு இனிப்பை விளைக்குமானல் உண்மையான புகழை அடைந்து கொண்டவன் எவ்வளவு பாக்கியவான்! எத்துணை நித்திய இன்பத்தை அவன் பெற்றவனாகிறான்! இதனை ஈண்டு உய்த்துணர வேண்டும். இனிய புகழ் தனி மகிமையான இன்பம் தருகிறது.

சிறந்த மனித வாழ்வில் வந்தவன் தகுந்த புகழை அடைந்தபோதுதான் அவன் உய்தி பெற்றவனாய் உயர்ந்து போகிறான். அவனையே கவிகள் யாண்டும் விழைந்து பாட நேர்கின்றார்.

" கெடாஅ நல்லிசை நிலைஇத்
தவாஅலியரோ இவ்வுலகமோடுடனே. "
(பதிற்றுப்பத்து, 14)

"அழியாத நல்ல கீர்த்தியை நிலைநிறுத்தி இவ்வுலகில் என்றும் நிலையாய் நின்று வருக எனச்" சேரமன்னனைக் குறித்துக் குமட்டூர்க் கண்ணனார் என்னும் புலவர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

கொடை முதலிய குணநலங்களால் ஒருவன் புகழ் அடைந்தபோது அவனுடைய பெயரை விழைந்து பேசி உலக மக்கள் அவனை நினைந்து மகிழ்ந்து வருகின்றார்; அவ்வரவு பரம்பரையாக வழிமுறையே தொடர்ந்து வருதலால் அவன் என்றும் அழியாத நிலையில் இவ் வுலகில் எங்கும் நின்றவன் ஆகின்றான்.

"To live in hearts we leave behind,
Is not to die." (Thomas Campbell)

"மனிதர் இதயங்களில் தம் பெயர் இருக்கும்படி நிறுத்திச் சென்றவர் என்றும் இறவாமல் நின்றவரேயாவர்" என்னும் இது இங்கே அறியவுரியது. உலகர் உள்ளங்களில் புகழர் உள்ளனர்.

இறந்து போகும் நிலையில் மனிதன் இங்கே பிறந்து வருகிறான்; அங்ஙனம் வந்தவன் இறவாமல் நிலைத்து நிற்கவேண்டுமானால் புகழை அவன் மறவாமல் அடைந்துகொள்ள வேண்டும் யாதும் நிலையாத இந்த உலகத்திலே புகழ் ஒன்றே நிலைத்து நிற்கிறது. அதனை உரிமையாப் பெற்றவன் என்றும் பெருமையாய் நிலைபெற்று யாண்டும் தலைமையாய் நிலவி நிற்கின்றான்.

மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர்
தம் புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே. (புறம், 165)

தொலையா நல்இசை உலகமொடுநிற்ப. (மலைபடுகடாம், 70)

நல்லிசை நிலைஇய நனந்தலை உலகத்து.
(பதிற்றுப்பத்து, 86.)

மன்னு உலகத்து மன்னிய சீர் (தஞ்சைவாணன், 21)

இந்நிலத்து மன்னுதல் வேண்டின் இசைநடுக.
(நான்மணிக்கடிகை, 17)

வசைதீர் புனிதம் மருவும் புகழ், (இராமா, நகர்நீங்கு, 42)

பொன்றும் இவ்வுடல்; புகழ் என்றும் நிற்கும்.
(சூளாமணி, சீய, 226)

களைகணுத் தம்அடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் — தளர்நடையது
ஊனுடம் பென்று புகழுடம்பு ஓம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம். (நீதிநெறிவிளக்கம், 40)

புகழ் நிலையைக் குறித்து வந்துள்ள இவை இங்கே கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்க வுரியன. நிலையான புகழை நினைந்து பெறுக. அதனைப் பெற்ற அளவு உன் பிறவி பெருமைபெற்றது.

---

740 நீறாகி மண்ணாய் நிலத்தில் விளிந்தொழிந்து
மாறுமுன் நல்ல மனமருவி — ஆறான
நீதி நெறியில் நிலைத்து நெடும்புகழாம்
ஊதியம் கொள்மின் உயிர்க்கு. (ம)

இ-ள்.

நீவிர் இறந்து சாம்பலாய் மடிந்து போகுமுன் நல்ல மனம் உடையராய் நீதிநெறியில் ஒழுகி நெடிய புகழை அடைந்து

கொள்ளுங்கள்; அதுவே உங்கள் அருமை உயிர்க்கு இனிய ஊதியமாய் இருமையும் அரிய இன்ப நலங்களை அருளும் என்க.

இறப்பின் நிலையை எடுத்துக் காட்டியது பிறப்பின் பயனை விரைந்து பெறவேண்டி. அழிந்து படுமுன் அழியாத விழுமிய ஊதியத்தை அடைந்துகொள்ள வேண்டும்; அவ்வாறு அடைந்து கொள்ளாதவர் கடையராய்க் கழிந்து படுவர்ஆதலால் அப் பாடு தெரிந்து உன் கூடு பிரியுமுன் பீடு பெறுக. உயர்ந்த பிறவியில் உதயமாய் வந்தும் உரிய பயனைப் பெருமல் இழிந்து போவது மிகுந்த பழியாம். அறிய வேண்டியதை அறிந்து அடையவேண்டியதை விரைவில் அடைவதே அறிவுடைய மனிதனதுகடமையாம்.

தனக்கு உரிய ஊதியத்தை உரிமையாய்ப் பெறுபவன் மேதை ஆகிருன்; அங்ஙனம் பெருதவன் பேதையாய் இழிகிருன். தனது கிழமையை இளமையில் அறியாதிருந்தாலும் வயது வள்ர்ந்த பின்னராவதுஉணர்ந்துஉடனேஉறுதி காணவேண்டும்.

இறந்து படுமுன் பிறந்த பயனை விரைந்து பெறவில்லையாஞல் அது கொடிய மடமையாய் நீண்டு நெடிய பரிதாபமாய் மூண்டுவிடும். தனக்கு உரிய இனிய இலாபத்தை இழந்தவன் பெரியகேட்டை அடைதலால்அவனது அழிவு நிலையை அறியலாம்.

இளமை கழிந்தது; மூப்பு வந்தது; முதுகு வளைந்தது; பல்லு விழுந்தது; கண் ஒளி இழந்தது; காது செவிடாயது; வாய்மொழி குழறியது; இவ்வாறு மரணக் குறிகள் நெருங்கி வருதலை அறிந்தும் தன் உயிர்க்கு ஒரு நன்மையையும் நாடாமல் மூடமாய்இருப்பதுகொடிய புன்மையானநெடியபுலைக்கேடாம்.

"Men may live fools, but fools they cannot die."

(Edward young)

"மனிதர் மூடராய் இருக்கலாம்; ஆனால் மூடராய்ச் சாகக் கூடாது." என எட்வர்டு யங் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிருர். வயது முதிர்ந்து சாக நேர்ந்தபோதாவது தன் உயிருக்கு ஊதியமான நன்மையை மனிதன் மருவிக் கொள்ள வேண்டும் என்னும் உறுதி நலனை இதனுல் உணர்ந்து கொள்கிறோம். காலம் உள்ளபோதே பெறுவது சாலவும்நன்ரும்.

செழியன் என்னும் பாண்டிய மன்னன் அதிக இளமையிலேயே பெரிய புகழை அடைந்தான். திருஞானசம்பந்தர் பதினறு

வயதில் மறைந்தார். அதற்குள் அதிசய கீர்த்திமானுய் அவர் விளங்கி நின்றுர். சிறிய பருவத்தில் பெரிய புகழ்கள் பெருகின.

"இன்னெளி பூண்டார் இளமையிலே மாண்டாலும்
பின்னெளி நீண்டு பெருகுமே---மின்னெளி
வீசி மறைந்தாலும் மேலான ஓசைஎங்கும்
மூசி யிருக்கும் முனைந்து."

மின்னல் தோன்றி விரைந்து மறைந்தாலும் அதன் இடி ஓசை நெடிது முழங்கும்; அதுபோல் புகழ் ஒளி யுடையார் இளமையில் மாண்டாலும் அவரது இசை திசை எங்கும் பரவி நிற்கும் என அரிய புகழாளர் நிலையை இதுஇனிது விளக்கியது.

விவேகானந்தர் முப்பத்திரண்டு வயதுள் முடிந்தார்; அவரது புகழ் மறுபுலம் எங்கணும் பரவியுள்ளது. புகழ் பெற்றவர் திகழ் ஒளி ஞாயிறு போல் உலகில் ஒளி பரப்பி நிற்கின்றுர். இளமையிலேயே தலைமையான புகழை எய்தி நின்றவரை இந் நாடு வளமையா வாய்ந்து கிழமை தோய்ந்து வந்துள்ளது.

எழினி ஆதன் என்பவன் விழுமிய பண்பினன். வாட்டாறு என்னும் ஊரில் இருந்தவன். சிறந்த கொடையாளி; நிறைந்த மதிமான்: யாருக்கும் ஆறுதல் கூறி ஆதரவு புரிந்து வந்தான். தேச மக்கள் யாவரும் இவனைப் பிரியமா உவந்து பேசி வந்தனர். மாங்குடிகிழார் என்னும் சங்கப் புலவர் இவனது அரிய இனிய பல இயல்புகளை வியந்து மகிழ்ந்து பாடியிருக்கிறுர்.

"உள் இல்லோர்க்கு வலி ஆகுவன்;
கேள்இல்லோர்க்குக் கேள் ஆகுவன்;
வளநீர் வாட்டாற்று எழினி யாதன்
மாரி வானத்து மீன் நாப்பண்
விரிகதிர வெண் திங்களின்
விளங்கித் தோன்றுகஅவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசால் நன்கலம் நல்கி
உரைசெலச் சிறக்க அவன் பாடல்சால் வளனே."

(புறம், 396)

ஆதனுடைய சீர்மை நீர்மைகளை இதனல் அறிந்து கொள்கிறேம். உலகம் உவந்து புகழ இவன் உயர்ந்து வாழ்ந்துள்ளான்.

இவன் புகழ் திங்கள்போல் எங்கும்விளங்கித் தோன்றுக எனப் புலவர் உளம் உவந்து கூறியிருக்கிறார். சந்திரன் இருள் நீக்கி உலகிற்கு இதம் புரிகின்றான்; இவனும் துயர் நீக்கி உயிர்களுக்கு உதவி புரிந்துள்ளான். அவனது நிலவொளி எங்கும் பரந்து நின்றது: இவனது புகழ் ஒளி யாண்டும் நீண்டு நின்றது. கலங்கா நல் இசை என்றது எவ்வழியும் நிலை குலையாத நல்ல கீர்த்தி என்றவாறு. புகழ் மருவியபொழுது உயர்நிலை ஒளி பெறுகிறது.

உலகம் நலமுற உதவி புரிந்து வருபவர் தலைமையான புகழை அடைந்து கொள்கின்றனர். உள்ளம் உயர்ந்து நல்லது செய்து எல்லாரும் புகழ இசைபெற்று வாழ்வதே எய்திய பிறவிக்கு இனிய பயனும். குணம் செயல்கள் இனிமை ஆய பொழுது மனிதனிடம் புகழ் தனியே மருவி வருகிறது. புகழ் புரிந்து புண்ணியம் சுரந்து கண்ணியம் பெறுக.

ஒன்றாக நல்லது உயிர் ஓம்பல்; ஆங்கதன்பின்
நன்றாய்ந் தடங்கினார்க் கீத்துண்டல்---என்றிரண்டும்
குன்றாப் புகழோன் வருகென்று மேலுலகம்
நின்றது வாயில் திறந்து. (அறநெறிச்சாரம்)

புகழ் விளைந்து வரும் நிலையும், அதனையுடையவன் அடையும் கதியும் இங்கே உணர்ந்து இனிது தெளிந்து கொள்கிறோம்.

## இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

புகழ் உயிர்க்கு ஊதியம்.
அரிய செயலால் அது மருவி வரும்.
அதனை யுடையவன் உயர்நிலை அடைவான்.
இறைவனும் அவனை உவந்து கொள்வான்.
ஈகையால் புகழ் இனிது விளைகிறது.
பேரும் சீரும் பெருகி வருகின்றன.
இசை பெற்றவரே திசை மெச்ச நிற்கின்றார்.
அது பெறாதவர் அவமே அழிகின்றார்.
சீர் பெற்றவர் சிரஞ்சீவிகளாய் வாழ்கின்றார்.
உயிரின் பயனை உரிமையோடு பெறுக.

எசு-வது புகழ் முற்றிற்று.

---

# எழுபத்தைந்தாவது அதிகாரம்.

## புண்ணியம்.

அஃதாவது நல்ல கருமங்களால் நன்கு விளைந்து வரும் தருமம். இருமையும் இன்பம் தரும் பெரு மகிமையுடையது. இம்மைப் பயனாய் எழில் செய்துள்ள புகழோடு ஒளி செய்து வருவது ஆதலால் அதன் பின் இது வைக்கப் பட்டது. புகழும் புண்ணியமும் ஒளியும் மணியும் போல் தழுவியுள்ளன. அவ்வுண்மையை உணர்ந்து கொள்ள இவ் வுறவுரிமை ஈண்டு இவ் வண்ணம் இணைந்து பிணைந்து இசைந்து நின்றது.

741. புண்ணியவான் என்னும் புகழே ஒருவனுக்குக்
கண்ணிய மான கதியாகும்—எண்ணியதைப்
பெற்றான் பெருமகிமை பெற்றான் பெறாதவன்
அற்றான் அவமே அழிந்து. (க)

இ—ள்

புண்ணியவான் என்னும் புகழ் ஒருவனுக்கு அமையுமாயின் அது கண்ணியமான கதியாம்; தலைமையான அந்த நிலைமையைப் பெற்றவன் அரிய பல மகிமைகளை அடைந்தான்; அதனைப் பெறாதவன் பிறந்தும் பிறவாதவனாய் அழிந்தான் என்க.

உலக வாழ்வில் மனிதன் பலவகை நிலையால் நிலவி வருகிறான். கருமச் சார்புகளின்படியே காட்சி புரிகிறான். ஆட்சி முறை செய்பவன் அரசன்; நீதிநிறை செய்பவன் நியாயாதிபதி; பொரு திறலுடையவன் போர்வீரன்; இரவலர்க்கு ஈபவன் வள்ளல்; பொருள் வளமுடையவன் செல்வன்; கல்வியறிவுடையவன் புலவன்; காவியங்கள் செய்பவன் கவிஞன்; ஓவியங்கள் புனைபவன் ஓவியன். சீவிய நிலைமைகள் சிந்திக்க வுரியன.

இன்னவாறு செயல் இயல்புகளின் சார்பின் வழியே பேரும் சீரும் பெருகி வந்துள்ளன. புனித நினைவுகள் தோய்ந்து இனிய நீர்மைகள் வாய்ந்துவரின் அந்த மனிதன் தனி மகிமையில் தழைத்துத் தலைமையான நிலைமையில் இனிது நிலவுகிறான்.

எண்ணம் தூய்மை சுரந்து எவ்வண்ணமும் இனியனுய் இயங்கி வருபவன் புண்ணியவானுய்ப் பொலிந்து வருகிருன். புண்ணியம் மிகுந்த பொழுது மனிதத் தன்மை கழிந்து போகிறது; அது போகவே அவன் தேவனுய்ச் சிறந்து திகழ்கின்ருன்.

சீவ கோடிகளுள் புண்ணியங்களை யுடையவர் தேவர் ஆகின்ருர்; ஆகவே அவர் திவ்விய போகங்களை அனுபவிக்க நேர்கின்ருர். தேவ போகம் என்னும் வழக்கு அதன் சிறப்பை விளக்கியுளது.

துறக்கம், சுவர்க்கம், புண்ணிய லோகம் எனத் தேவர்கள் வாசம் செய்யும் இடங்கள் புகழ்ந்து பேசப் பட்டுள்ளன. அரிய சுக போகங்கள் நிறைந்த இனிய தானம் என்பதை உரிய நாமங்கள் உணர்த்தி நின்றன. அந்த அதிசய இன்ப நிலையம் புண்ணியம் உடையார்க்குத் தனி உரிமையாய் அமைந்துள்ளது.

*புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்*
*என்னும் ஈது அருமறைப் பொருளே*
*மண்ணிடை யாவர் இராகவன் அன்றி*
*மாதவம் அறத்தொடும் வளர்த்தார்?*
*எண்ணருங் குணத்தின் அவன் இனிதிருந்திவ்*
*ஏழுலகு ஆள்இடம் என்ருல்*
*ஒண்ணுமோ இதனின் வேறுஒரு போகம்*
*உறைவிடம் உண்டென உரைத்தல்.* (இராமாயணம்)

அயோத்தி நகரின் சிறப்பை இது குறித்துள்ளது. போக பூமியான ஒரு புண்ணிய உலகம் என்றே அதனைச் சொல்ல வேண்டும் எனக் கருதிய கவிஞர் பிரான் வாத முறையில் ஏதுக்களை விரித்து இவ்வாறு இனிய சுவை கனியக் கூறியிருக்கிருர்.

புண்ணியம் புரிந்தவர் இனிது வாழும் இடம் சுவர்க்கம் என்று சொல்லப்படும்; அத்தகைய புண்ணியவான்கள் யாவரும் ஆவலோடு எண்ணிப் போற்றுகின்ற இராமன் எண்ணில் காலம் தங்கியிருந்து ஆட்சி புரிந்த இடம் ஆதலால் அயோத்தி துறக்கத்தினும் மாட்சி மிக வுடையது என அதன் மகிமையைப் புகழ்ந்திருக்கிருர். காவிய நாயகன் சீவியம் கருதி யுணர வந்தது.

இராமன் புண்ணிய மூர்த்தி ஆதலால் அவன் இருந்த ஊர் புண்ணிய லோகமாய்ப் பொலிந்து விளங்கியது. புண்ணியம்

புரிந்தோர் புகுவது துறக்கம் என்றது இங்கே எண்ணி உணர வுரியது. சுவர்க்கத்தின் நிலை, புண்ணியத்தின் பயன், அதனை உடையவர் அடைவது முதலியன முறையே அறிய வந்தன.

புண்ணியம் உடையவர் இன்ப உலகில் புகுகின்றார்.

பாவம் புரிந்தவர் துன்ப நிரையத்தில் விழுகின்றார்.

இந்த இரண்டும் கலந்தவர் கரும பூமிக்கு வருகின்றார்.

இயற்கை நியமங்களின்படியே சீவகோடிகள் யாண்டும் இயங்கி வருகின்றன. வரவு செலவுகள் எல்லாவற்றிற்கும் மனிதன் தலைவனாய் நிற்கின்றான்; வினையின் வழியே விளங்குகிறான்.

ஒருவன் செய்கின்ற கருமம் தருமங்களோடு மருவி வரின் இருமை இன்பங்களும் அவனுக்கு உரிமையாய் அமைகின்றன.

ஈனுலகத் தாயின் இசைபெறூஉம் அஃதிறந்து
ஏனுலகத் தாயின் இனிததூஉம்---தான்ஒருவன்
நாள்வாயும் நல்லறம் செய்வாற்கு இரண்டுலகும்
வேள்வாய்க் கவட்டை நெறி. (பழமொழி, 6)

தருமவான் இம்மையில் புகழையும், மறுமையில் இன்பத்தையும் ஒருங்கே அடைந்து கொள்ளுகின்றான் என இது குறித்துள்ளது. இருமையும் இன்பமாத் தருமம் அருளி வருகிறது.

அறம், தருமம், புண்ணியம் என்னும் பதங்கள் ஒரு பொருளையே குறித்து வரினும் தம்முள் நுண்மையான வேறுபாடுகள் உடையன. நன்மை தீமைகளைப் பகுத்து விதி விலக்குகளை வரையறுத்து உரைப்பது அறம் என வந்தது. அரிய பல நன்மைகளை உரிமையா மருவி இருப்பது தருமம் என நேர்ந்தது. அறத்தின் விளைவுகளான இன்பங்கள் பழுத்து இனிமை சுரந்து நிற்பது புண்ணியம் என அமைந்தது. குறித்துள்ள குறிப்புகள் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து தெளிந்து உணர்ந்து கொள்ளத்தக்கன.

புண்ணியம் என்பது வெளியிலிருந்து வருவது அன்று. மனிதனுடைய நல்ல நீர்மைகளிலிருந்தே அது விளைந்து வருகிறது. மனம் புனிதமாய் இனிய கருமங்களைச் செய்து வரின் அது புண்ணியமாய்ப் பொலிந்து வருகிறது.

"மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அறம்" (குறள்,34)

அறம் இன்னது என்பதைத் தேவர் இவ்வாறு செவ்வையாக விளக்கியிருக்கிருர். மனம் மாசு நீங்கிய போது தேசு பெறுகிறது. தூய உள்ளம் உடைய அவனது சொல் செயல் எல்லாம் நல்லனவாய் வருகின்றன. வரவே புண்ணியம் விளைந்து மிளிர்கிறது. அதனுல் இன்ப நலன்கள் யாவும் எளிதே வருகின்றன.

"புண்ணியம் பயக்கின்றுழி அரியது எப்பொருளே?"
(இராமா, கவந்த, 41)

இந்த அருமை வாசகம் அரிய பல மருமங்களைத் துலக்கியுள்ளது. அறிவின் சுவையைக் கருதி நுகர வேண்டும். புண்ணியம் பலன் கொடுக்க நேர்ந்தால் எண்ணரிய அதிசய இன்பங்கள் எதிரே பெருகி வரும் என்பது இதனுல் நன்கு தெரிய வந்தது.

இருதயம் பரிசுத்தம் ஆய போது மனிதன் தெய்வத் தன்மையை அடைகிருன்; அடையவே அரிய சுவர்க்க போகங்கள் அவனுக்குத் தனி உரிமைகளாய் இனிது அமைகின்றன.

"When we shall reverence heart, not brain,
Then Eden will be man's domain." (New Eden)

"நாம் இதயத்தைப் புனிதமாக்கி விழுமிய நிலையில் ஒழுகி வரின் இன்ப வுலகமாகிய சுவர்க்கம் மனிதனுடைய தனி இராச்சியமாயிருக்கும்" என்னும் இது இங்கே இனிது அறிய வுரியது.

புண்ணியமே கண்ணியமான கதி என்றது உயர்கதி எய்தி உய்ய வுரிய மனிதன் விரைந்து உணர்ந்து கொள்ள வேண்டிய உறுதிநலனை உணர்த்திநின்றது. உணர்வுதெளிந்துஉயர்வுபெறுக.

---

742 தண்ணளியோ டெவ்வுயிர்க்கும் தான்செய்த நல்வினையே
புண்ணியமாம் பேரோடு போந்துநின்று—எண்ணியன
எல்லாம் எளிதா இனிதருளி எஞ்ஞான்றும்
நல்லான் எனச்செய்யும் நன்கு. (உ)

இ-ள்.

எவ்வுயிர்க்கும் இரங்கி அருள்புரிந்து ஒழுகும் இனிய நீர்மையே புண்ணியம் எனப் பொலிந்து நின்று எண்ணிய இன்ப நலங்களை எல்லாம் இனிது அருளி அரிய மேன்மைகளை உரிமையோடு புரியும்; அதனை மருவி மகிழுக என்பதாம்.

அன்பு அருள் முதலிய பண்பாடுகள் அமைந்த பொழுது அந்த மனிதன் புனிதனாய்த் தனி நிலையில் உயர்ந்து திகழ்கிறான். உள்ளம் நல்வழியில் உருகி வரின் உயர் நிலைகள் வெள்ளம் என வெளி வருகின்றன. மனத்தின் தகுதி அளவே மனிதனுக்கு மகிமைகள் அமைகின்றன. அதன்வழியே யாவும் விளைகின்றன.

இனிய நீர்மைகளுள் சீவ தயை தனி நிலையில் உயர்ந்துள்ளது. பிற உயிர்களுக்கு இரங்கி அருளின் அவன் ஒரு பெரிய மகானாய் விளங்கி வருகிறான். பரிபக்குவம் அடைந்து படி ஏறிய சீவனுக்கே அருளியல்பு தனி யுரிமையாய் அமைந்து இனிமை சுரந்து மிளிர்கிறது. தண்ணளியின் அளவு கொண்டே புண்ணியவான் என மனிதனை மேலோர் எண்ணி யுள்ளனர்.

மன்னுயிர்க்கு இரங்கி இன்னருள் புரிபவன் தன்னுயிர்க்குப் பேரின்ப நிலையை நேரே செய்தவன் ஆகின்றான். வெளியே செய்கிற தண்ணளி உள்ளே புண்ணிய ஒளியாய்ப் பொங்கி வருகிறது; வரவே அவன் எண்ணிய இன்ப நலங்கள் எல்லாம் எளிதே எதிர்வருகின்றன. அளியால்விழுமியநிலைகள்விரிகின்றன.

அளி புரிய ஒளி விரியும் என்னும் பழமொழியால் அருளாளர்க்கு உளவாம் இன்பமும் தேசும் இனிது தெளிவாம்.

மன்னுயிர் ஓம்பி அருள்ஆள்வற்கு இல் என்ப
தன்னுயிர் அஞ்சும் வினை. (குறள், 244

பிற உயிர்களைப் பேணி ஒழுகும் கருணையாளர்க்கு யாதொரு அல்லலும் நேராது; எவ்வழியும் நல்ல இன்பங்களே உளவாம் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். அருள் இயல்பு எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து வருதலால் அதனை யுடையவர் யாதும் துன்பம் காணாமல் யாண்டும் இன்பமே கண்டு வருகின்றார்.

எந்த உயிர்க்கும் இடர் நினையாத சிந்தை ஒருவனுக்கு அமையுமாயின் அந்தமில்லாத இன்ப நிலை அவனுக்குச் சொந்தமாயமைகிறது. இன்னாமை ஒழியவே இனிமைகள் விளைகின்றன.

ஒருவனைத் தருமவானாக்கி இருமையும் இன்பம் தரவல்ல மருமம் கருணையினிடத்தே கனிந்திருக்கிறது; இதனை உறுதியா யுணர்ந்து உரிமை செய்து கொண்டவன் எவ்வழியும் திவ்விய மகிமைகளை எய்திச் செவ்விய பேரின்பங்களை நுகர்கின்றான்.

அருள் மருவி வர அறம் பெருகி வரும்; வரவே அருளாளன் புண்ணியவானுய் ஒளி மிகுந்து எண்ணிய இன்பங்களை எய்தி மகிழ்கின்ருன். இனிய சுகங்களுக்கு அருள் மூலமாயது.

ஒருவன் செய்கிற கருமங்கள் நன்மை தோய்ந்து வரின் அது நல் வினையாய் அவனுக்கு நலம் பல தருகிறது. இனிய செயல்களிலிருந்து அறம் விளைந்து வருதலால் அதனையுடையவன் அரிய பல மேன்மைகளை அடைந்து கொள்கிருன்.

தனக்குத் துணை ஆகித் தன்னை விளக்கி
இனத்துள் இறைமையும் செய்து-மனக்கினிய
போகம் தருதலால் பொன்னே! அறத்துணையோடு
ஏகமாம் நண்பொன்றும் இல். (அறநெறிச்சாரம்)

அறம் மனிதனுக்குச் செய்யும் மகிமைகளை இது இனமா விளக்கியுளது. எவ்வழியும் உறுதித் துணையாய் நின்று உதவி புரியும்; சமுதாயத்துள் தலைவனுக உயர்த்திப் பெருமைப்படுத்தும்; இனிய இன்ப போகங்களை நல்கும்; ஆதலால் அறம் போல் உரிமையான நல்ல துணை யாண்டும் இல்லை எனச் சொல்லியிருக்கும் இதனை ஈண்டு உள்ளி உணர்ந்து கொள்ள வேண்டும்.

பலநாளும் ஆற்ருர் எனினும் அறத்தைச்
சிலநாள் சிறந்தவற்ருல் செய்க-முலைநெருங்கி
நைவது போலும் நுசுப்பினுய்! நல்லறம்
செய்வது செய்யாது கேள். (பழமொழி 134)

எந்த வழியிலேனும் கொஞ்சமாவது அறத்தைச் செய்து கொள்க; அதனுல் எல்லா இன்ப நலங்களும் உளவாம்; பெற்ற தாயை விட உன்னை அது பேணியருளும்; அது போல் யாரும் உனக்கு இதம் செய்ய முடியாது என்னும் இது இங்கே அறியவுரியது. அறம் அமுத சுரபியாய் நின்று யாவும் தருகின்றது.

நிறைந்த செல்வங்களும் சிறந்த சுகபோகங்களும் வேண்டும் என்றே மனிதன் யாண்டும் விரும்புகிருன்; அந்த விருப்பம் விரைந்து நிறைவேற வேண்டுமானுல் அவன் புண்ணியத்தை விழைந்து செய்துகொள்ள வேண்டும். எண்ணிய இன்ப நலங்களையெல்லாம் இனிது உதவ வல்லது புண்ணியமே ஆதலால் புனிதமான தெய்வத்திரு என அமரரும் அதனை எண்ணி வியந்துள்ளனர். தெய்வ பதவியை அது இங்கே செய்தருளுகிறது.

எளிதுஎன இகழாது அரிதுஎன உரையாது
நுமக்குநீர் நல்குதிர் ஆயின் மனத்திடை
நினைப்பினும் பிறக்கும் மொழியினும் வளரும்
தொழிற்படின் சினைவிடுஉப் பயக்கும் உணர்த்தின்
இவனும் உம்பரும் துணையே; அதனால்
துறைதொறும் துறைதொறும் நோக்கி
அறமே நிறுத்துமின் அறிந்திசினோரே. (ஆசிரியமாலை)

கருதியன எல்லாம் தருமம் தரும்; இருமையும் இனிய துணையாம்; எவ்வழியும் செவ்விய இன்பங்களை நல்கியருளும்; திவ்விய நிலையமான அதை உங்கள் உயிர்க்கு உயர்ந்த ஊதியமாக உவந்து செய்து கொள்ளுங்கள் என மனித சமுதாயத்தை நோக்கி உரிமையோடு போதித்துள்ள இதை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். தருமத்தை உரிமையா மருவித் தருமவானாய் உயர்க.

———

743 செய்யும் கருமங்கள் செம்மை நலம்தோய்ந்து
பொய்யும் புலையும் புகாமலே—மெய்யின்
வழியில் வளர்ந்து வருமேல் தருமம்
பொழியும் அவற்றின் புறம். (௩)

இ-ள்.

ஒருவன் செய்கின்ற கருமங்கள் பொய் புலைகள் புகாமல் செம்மையும் நன்மையும் தூய்மையும் வாய்மையும் தோய்ந்து வரின் அவை புண்ணியங்களாய்ப் பொங்கி வரும் என்பதாம்.

கருமம் என்னும் சொல் கருத்தாவால் கருதிச் செய்யப்படுவது என்னும் பொருளையுடையது. தம்முடைய குடிவாழ்க்கையைச் செவ்வையாக நடத்த மனிதர் எவ்வழியும் தொழில் செய்ய நேர்ந்தனர். வினை ஆண்மை, முயற்சி, கருமம், காரியம் ஆள்வினை என்பன செயல் முறைகளின் சீர்மை தெரிய வந்தன.

வாழ்க்கை வசதிக்குப் பொருள் தேவை: அதை ஈட்டுதற்கு உழவு, வாணிகம் முதலிய தொழில்கள் பல தோன்றின. இந்தக் கருமங்கள் நேர்மையோடு நெறி முறையாய் வரின் பொருளும் புகழும் பெருகி வரும்; களவு வஞ்சனைகள் கலந்தால் இளிவுகள் ஏறிவிடும். தவறான வழிகளில் பொருள் வருவது

போல் தெரியினும் முடிவில் அது பழி பாவங்களை நிறுத்தி அழி துயரங்களை விளைத்து அடியோடு ஒழிந்தே போய்விடும்.

களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும். (குறள், 283)

உள்ளம் கோடிக் கள்ள வழியால் ஈட்டிய பொருள் வெள்ளம் போலப் பெருகித் தோன்றினும் ஒல்லையில் முழுதும் ஒழிந்தே போம் எனத் தேவர் இவ்வாறு உறுதியாய் உணர்த்தியுள்ளார்.

தமக்கு நேர்கிற கேடு தெரியாமல் பொருள் மேலுள்ள மருளால் பழி வழிகளில் விழைந்து பலர் அழி துயரங்களை அடைகின்றனர். பாவத்தால் வருவது பழியும் துன்பமுமேயாம்.

"அறத்தான் வருவதே இன்பம்" (குறள், 39) என்றதனால் பிற வழிகளால் வருவன எல்லாம் துன்பங்களேயாம் என்பது தெரிய வந்தது. தருமம் ஒன்றே இருமையும் இன்பம் தரும்.

தருமம் ஆவதே இன்பம் தருமலால் தருமம் நீக்கும்
கருமம் ஆவதுபோல் தோன்றிக் காட்டினும் பசுமட்பாண்டத்து
அருமையாய் நிரப்பும் தெண்ணீர் அனைத்தும் அப் பாண்டத்தோடும்
ஒருமையாய்க் கெடுதலே போன்று ஒருகணத்து அழியு மன்றே.
(மெய்ஞ்ஞான விளக்கம்)

பசிய மண் பாண்டத்தில் நிரப்பி வைத்த தண்ணீர்போலப் பாவ வழியில் வந்த பொருள் விரைவில் அழிந்துபோம் என இது உணர்த்தியுள்ளது. பானை விரிந்து நீர் முழுதும் இரிந்து ஒருங்கே அழிதல் போலக் களவால் சேர்த்த பொருளும் அந்த ஆளும் குடியும் அடியோடு ஒழிந்துபோம் என்பது உவமையால் தெளிந்துகொள்ள வந்தது. சுகமாய் வாழவேண்டும் என்று மனிதன் பொருளை ஈட்டுகிறான்; அந்த ஈட்டத்தில் பாவம் கலந்தால் அது துக்கத்தையேநீட்டி ஒக்க ஒழிந்து போகின்றது.

"தீவினை விட்டு ஈட்டல் பொருள்" என்றார் ஔவையார். தீவினையால் வந்த பொருள் அல்லலே புரியும்; அது இல்லாததே நல்ல பொருளாய் யாண்டும் இன்பம் தரும் என இப்பாட்டி காட்டியிருக்கும் காட்சி கருதி நோக்கத் தக்கது. பழி வழிகளில் பொருள் பெருகி வந்தாலும் சாக்கடை நீர்போல் மேலோரால் அது இழிக்கவே படும். இழிவில் வருவது இழிவாய் அழியும்.

அற நெறியால் வருவது அமிர்த மயமாய் யாண்டும் இன்பம் தரும் ஆதலால் அவ்வழியில் ஈட்டுவோரே விழுமியோராய் விளங்கி மேலான இன்ப நிலைகளை அடைந்து கொள்கின்றார்.

"பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்ணிழல் வாழ்க்கை
நடுவு நின்ற நன்னெஞ்சி னோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்து வீசும்
தொல்கொண்டித் துவன்றிருக்கை." (பட்டினப்பாலை)

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந்த நாட்டிலிருந்த வணிகர்களைக் குறித்து இப் பாட்டு வந்திருக்கிறது. நேர்மையான நெஞ்சினர்; பழிக்கு அஞ்சுபவர்; எப்பொழுதும் மெய்யே பேசுபவர்; பிறர் பொருளையும் தம் பொருள்போல் பேணுபவர்; பண்டங்களை விற்பதிலும் வாங்குவதிலும் யாதொரு கரவும் செய்யாதவர்; எவர்க்கும் இரங்கி உதவுபவர்; பகுத்து உண்பவர்; கண்ணியமான புண்ணிய வாழ்க்கையர் என அவரை இவ்வாறு போற்றியிருத்தலால் அவரது நெறியும் நீர்மையும் அறியலாகும். மெய்வழி ஒழுகியதால் மேன்மைகள் மேவின.

பொய் பேசாமலும், கள்ளத்தனம் செய்யாமலும் இருந்தால் பொருள் சேருமா? என்று இக்காலத்து வியாபாரிகள் பலர் வாய் கூசாமல் கூறுகின்றனர். பழிவழிகளில் பொருள் சேர்த்து அழி துயரங்களை அடைவது அதிசய வியப்பாயுள்ளது.

"துன்மதி வணிகர் தங்களைப் படைத்துச்
சோரரை என் செயப் படைத்தாய்?"

"பிரமாவே! வணிகர்களைத்தான் நீ படைத்திருக்கிறாயே! வேறே திருடர்களையும் ஏன் படைத்தாய்?" எனச் சிருட்டிகருத்தாவை நோக்கி ஒரு கவிஞர் இப்படி வாதாடியிருக்கிறார். சோரத்தனம் வியாபாரிகளை எவ்வாறு சோரம் புரிந்து பேரம் செய்து வருகிறது என்பது இதனால் தெரிய வந்தது. நல்ல சீல

முள்ள நாடு கால வேற்றுமையால் இவ்வாறு சீரழிந்து போயிருக்கிறது. மடமையிருள் மண்டிக் கொடுமை விரிந்துளது.

மனிதர் மனம் பொருளாசையால் மருள்கொண்டு இருள் மண்டியிருத்தலால் தரும நெறி தெரியாது போயது. அணு அளவு புண்ணியத்தால் அடைகிற பொருளை மலை அளவு முயற்சியாலும் அடைய முடியாது. அருமையான இந்த தெய்வத் திருவின் கருவை அறியா திருப்பது பெரிய பரிதாபமே யாம். நேர்மையான முறையில் பண்ட மாற்றுகளைச் செய்து நம் முன்னோர் சீர்மையும் சிறப்பும் எய்தி வந்துள்ளனர். அவ்வுண்மைகளைப் பழந் தமிழ் நூல்களில் உணர்ந்து உளம் களிகூர்கின்றோம்.

"உண்ணுவ பூசுவ பூண்ப உடுப்பவை
மண்ணுவ மணிபொன் மலைய கடல
பண்ணிய மாசறு பயந்தரு காருகப்
புண்ணிய வணிகர் மனைமருங்கு ஒருசார்." (பரிபாடல்)

ஆடை கூலம் அணி முதலிய பல வகைப் பொருள்களையும் மனச் செம்மையோடு நாணயமாய் வாணிகம் புரிந்து வந்தவரை இது வரைந்து காட்டியுள்ளது. புண்ணிய வணிகர் என அவரைக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத் தக்கது. இத்தகைய உத்தம வணிகர்களை இந் நாடு முன்னம் பெற்றிருந்தமையால் மற்றைய நாடுகளும் வியந்து நோக்கப் பெருஞ் செல்வங்கள் இங்கே பெருகி யிருந்தன. பொங்கிய புகழ்களும் பொலிந்து விளங்கின.

கட்டுஒன்று கலம்காட்டிக் கதிர்உழக்கு
நெற்காட்டிக் கடல்சூழ் ஞாலம்
தட்டுஒன்றும் இல்லாமல் சார்ந்தஉயிர்
இனங்களெல்லாம் ஆர்ந்து வாழ
இட்டுண்டு பெரும்புகழை ஈட்டிவந்த
இந்தியா இன்று நொந்து
பட்டினியின் படுதுயரைப் பார்எங்கும்
பார்த்துளதே பாவம் என்னே? [இந்தியத்தாய்நிலை]

இந்நாடு பண்டு நல்ல வளம் படிந்திருந்தது; இன்று பொல்லாத வறுமை புகுந்து புலையாடி நிற்கின்றது; இந் நிலைக்குக் காரணம் என்ன? மக்களிடம் புண்ணிய நீர்மைகள் மங்கிப் பாவத் தீமைகள் பொங்கியுள்ளமையே யாம். தவம் தானம் ஞானம் தருமங்

களுக்குத் தனி நிலையமாய் நின்ற நாடு அவகேடுகளுக்கு இடமாய் அவலம் அடைந்திருக்கிறது. நண்ணிய புலைகள் ஒழிந்து புண்ணியநிலைகள் வளர்ந்து யாண்டும்புனிதம்ஓங்கிவரவேண்டும்.

———

744 போந்து நுகரின்பம் புண்ணியத்தால் புண்ணியமோ
ஓர்ந்துபுரி நல்வினையால் ஊறுமால்—தேர்ந்திதனைக்
காணுமல் தீவினையைக் கண்டபடி செய்கின்ருர்
நாணுர்கொல் பின்னும் நவை. (௪)

இ-ள்.

ஐம்பொறிகளின் போக நுகர்வுகள் புண்ணியத்தால் அமைகின்றன; புண்ணியம் நல் வினைகளால் வருகிறது; இந்த உண்மையை உணர்ந்து கொள்ளாமல் தீமைகளைச் செய்பவர் பின்பு துன்பங்களை அனுபவித்துத் துடித்து வருந்த நேர்கின்ருர் என்பதாம்.

சுகபோகங்களின் மூல காரணத்தை இது கூறுகின்றது. உயிரினங்களுள் மனித இனமே சுவை நுகர்வுகளில் உயர் நிலை பெற்றுள்ளது. அருந்தல் பொருந்தல்களைத் திருந்திய முறையில் சுவை செய்து எவ்வழியும் செவ்வையாய் இனிது அனுபவிக்கிறது. இந்த இன்ப போகங்கள் எல்லாருக்கும் ஒரு படியாய் இயல்பாக அமையவில்லை. அவரவர் செய்த நல்வினைகளின் அளவே பல் வகையிலும் படி எங்கும் படி அளந்துள்ளது.

சிறந்த புண்ணிய முடையவர் உயர்ந்த இன்பங்களை அனுபவிக்க உரிமை பெற்று வருகின்ருர். அரசர், கந்தருவர், தேவர் முதலானவர்கள் இந்த வரிசையில் உயர்ந்து நிற்கின்ருர். புண்ணியப் பயனுகிய போகங்களை நுகரவே தேவருலகம் அமைந்திருத்தலால் அங்கே நல்ல கருமங்களைப் புரிந்து தருமங்களைப் பெற இயலாது. இன்பக் களிப்புகளே அங்குப் பொங்கியுள்ளன.

ஆபுத்திரன் என்பவன் சிறந்த ஜீவகாருணியமுடையவன்; பிறவுயிர்களுக்கு இதம் செய்வதே பிறவிப்பயனுக் கருதினவன்; அமுதசுரபி என்னும் அதிசய பாத்திரத்தால் உயிர்களின் பசித்துயர்களை நீக்கி உதவி புரிந்து வந்தான். அவனுடைய புண்ணிய நீர்மையை வியந்து இந்திரன் நேரே தோன்றிப் பொன்னுலகத்துக்கு வரும்படி அவனை உவந்து வேண்டினுன். அவன் மறுத்

தான்; அது பொழுது தேவர் கோனை நோக்கி அவன் உரைத்த உரைகள் உணர்வுநலம் சுரந்து வந்தன. அயலே வருவனகாண்க.

"ஈண்டுச் செய்வினை ஆண்டு நுகர்ந்திருத்தல்
காண்டகு சிறப்பின்நும் கடவுளர் அல்லது
அறம்செய் மாக்கள் புறம்காத்து ஓம்புநர்
நற்றவம் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரும் இல்லாத் தேவர்நன் னாட்டுக்கு
இறைவன் ஆகிய பெருவிறல் வேந்தே!
வருந்தி வந்தோர் அரும்பசி களைந்து அவர்
திருந்துமுகம் காட்டும்என் தெய்வக் கடிஞை
உண்டி கொல்லோ உடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவை ஈங்கு அளிப்பன தேவர்கோன்!" (மணிமேகலை, 14)

தேவராசனே! உனது நாடு இனிய போகங்களை அனுபவிக்க வுரியதே அன்றிப் புண்ணியங்களைச் செய்து கொள்ள இயலாது; ஆதலால் நான் அங்கே வர முடியாது என்று ஆபுத்திரன் மாபுத்தியுடன் கூறியிருப்பது இங்கே கூர்ந்து சிந்திக்கவுரியது.

"பொலம் பூங்காவின் நன்னாட் டோரும்
செய்வினை மருங்கின் எய்தல் அல்லதை
உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்
கடவது அன்மையின் கையற வுடைத்து." (புறம், 38)

பொன்னாட்டின் நிலையைக் குறித்து ஆவூர் மூலங்கிழார் இவ்வாறு காட்டியிருக்கிறார். தருமங்களைச் செய்து மேலான நிலைகளுக்கு அங்கிருந்து செல்ல முடியாது ஆதலால் கரும வீரர்கள் மருமமா அதனை இங்ஙனம் இகழ்ந்திருக்கின்றனர்.

"ஈவாரும் கொள்வாரும் இல்லாத வானத்து
வாழ்வாரே வன்க ணவர்."

ஈகையின் இனிமை இன்றி, அருள் வளர்ச்சி குன்றி, அறப்பேறு பொன்றி வெறும் சுகபோகமே ஒன்றியுள்ளமையால் வான வாழ்வு ஞானவான்களுக்கு ஈனமாய்த் தோன்ற நேர்ந்தது. புண்ணியப் பயனாகிய போக நுகர்வு முடிந்தவுடன் தேவரும் ஆவி அழிய நேர்கின்றார். சீவிய நிலை தாழ்ந்து போகின்றார்.

செல்வம் சிறப்பு இன்பம் முதலிய யாவும் புண்ணிய வினை வாய் வருகின்றன; அதன் அளவுக்குத் தக்கபடி அமைந்து நின்று பின்பு எல்லாம் கரைந்து மறைந்து போகின்றன.

புண்ணியம் உலர்ந்தபின் பொருள் இலார்களைக்
கண்ணிலர் துறந்திடும் கணிகை மார்கள்போல்
எண்ணிலள் இகந்திடும் யாவர் தம்மையும்
நண்ணிய நண்பிலள் நங்கை வண்ணமே. (சூளாமணி)

பொருள் இருக்கும் வரையும் வேசையர் விழைந்து தழுவுவர்; அது இல்லையானால் எவரையும் இகழ்ந்து விடுவர்; அதுபோல் புண்ணியம் இருக்கும் வரையும் செல்வ போகங்கள் சேர்ந்திருக்கும்; அது தீர்ந்ததானால் அவை யாவும் உடனே விலகி விடும் என இது விளக்கியுள்ளது. இன்ப நிலை இனிது தெரிய வந்தது.

எந்தக் காரணத்தால் எது வந்ததோ அது முடிந்ததும் அந்தக் காரிய வூரவும் ஒழிந்து போகிறது. செய்த நல்வினையால் செல்வச் சிறப்புகள் சேருகின்றன; சேரவே மனிதன் சிந்தை திரிகின்றான்; செருக்கு மிகுகின்றான்; பொறி வெறிகளில் இழிகின்றான்; பிறரை இகழ்வா எண்ண நேர்கின்றான்; பாவத் தொடர்புகள் பற்றி ஏறுகின்றன: ஏறவே பெற்ற நலன்களையெல்லாம் இழந்து பேதையாயிழிந்து அழிந்து போகின்றான்.

புண்ணியத்தால் வந்த பொருளும் புகழுமது
நண்ணி யுளஅளவே நண்ணுமால்---கண்மறையின்
யாவும் அவமே அழியும் அரும்பொருளின்
ஆவி அறமே அறி.

செல்வத்தின் உயிர் புண்ணியமே; அதனைப் போற்றி ஒழுகும்வரையும் எல்லா ஏற்றங்களும் உளவாம். போற்றாது விடின் யாவும் பொன்றி ஒழியும் என இது போதித்துள்ளது.

தன்னை உரிமையோடு பேணி வருபவரைத் தருமம் எவ்வழியும் பெருமைகள் பெருகிவரச் செவ்வையாப் பேணி வருகிறது. அதனை மறந்து பிரிந்தவர் தாமாகவே இழிந்து அழிந்து ஒழிகின்றார். தருமத்தை மறந்தவன் இருந்தும் இறந்தவன் ஆகின்றான்; பழி துயரங்களையும் அழிகேடுகளையும் அடைய நேர்கிறான்.

அறத்தின் ஊங்கு ஆக்கமும் இல்லை; அதனை
மறத்தலின் ஊங்கில்லை கேடு. (குறள், 32)

அறத்தை ஒருவன் மறந்து விடின் அழி கேடுகள் அவனைத் தொடர்ந்து கொள்ளும் என இது குறித்துள்ளது. தனக்கு நன்மையை நாடுகின்றவன் தருமத்தை யாண்டும் மறக்கலாகாது; அதனைக் கிழமையோடு தழுவி வரின் விழுமிய மேன்மைகள் விளைந்து வரும். தருமவாளுய் என்றும் நீ பெருமை பெற்று நில்.

745 கருதிப்போய் வேண்டியதைக் கற்பகம்நின் றீயும்
கருதாத இன்பமெலாம் கண்முன்—ஒருவாமல்
தந்தருளும் புண்ணியமே தாழாது செய்துய்க
வந்தருளும் மேன்மை வளர்ந்து. (ரு)

இ-ள்.

தேவர்கள் கருதி வேண்டியதையே கற்பகத்தரு தரும்; மனிதர் கருதாத இன்ப நலங்களை யெல்லாம் புண்ணியம் உரிமையோடு தரும்ஆதலால்இதனை விரைந்துசெய்து உயர்ந்துகொள்க; செய்யாது அயர்ந்து நின்றால் வெய்ய துயர் விளைந்து வரும்.

கற்பகத் தருவினும் புண்ணியம் அற்புதத் திரு என்றது இதன் அதிசய மகிமைகளைக் கருதி யுணர வந்தது. கருமங்கள் யாதும் புரியாமல் தாங்கள் செய்த தருமங்களின் பயன்களை நுகர்பவர் தேவர்கள். இன்ப போகங்களை இனிது அருளவல்ல குளிர் தருக்கள் ஐந்து புத்தேள் உலகத்தில் வித்தகமாய் அமைந்துள்ளன. கண்ணியன தருதலால் புண்ணிய உருவங்களாயின.

சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என அவை பெயர் பெற்றிருக்கின்றன. அமரர் கருதிய போகங்களை உரிமையுடன் அவை உதவியருளுகின்றன. இந்திரதிரு என ஐந்தரு அமைந்துள என்றதனால் அவற்றின் நிலைமையும் நீர்மையும் தெரியலாம். விரும்பியன அருளலால் வியன்பெயர்பெற்றன.

"சந்தானம் வேண்டிற்றெல்லாம் தரும் அரிசந்தனம்பூ
மந்தாரம் பாரிசாதம் கற்பகம் மற்றோர் ஐந்தாம்." (நிகண்டு)

என மண்டலவரும்இங்ஙனம் பெயர்களை வரைந்துகூறியுள்ளார்.

விண்ணுலக வாசிகளுக்கு எண்ணிய இன்ப நலன்களை இனிது தருகிற இந்தத் திவ்விய தருக்களினும் மண்ணுலக வாசிகளுக்குப் புண்ணியம் எண்ணரிய பெருமைகளையும் இன்ப சுகங்களையும் எவ்வழியும் செவ்வையாய் நன்கு அருளி வருகிறது.

"கங்கைநதி பாவம் சசிதாபம் கற்பகம்தான்
மங்க லுறும்வறுமை மாற்றுமே--- துங்கமிகும்
இக்குணம்ஓர் மூன்றும் பெரியோர் இடம்சேரில்
அக்கணமே போம்என் றறி." (நீதிசாரம்)

கங்கைநதி பாவத்தை நீக்கும்; சந்திரன் தாபத்தை போக்குவான்; கற்பகம் வறுமையை ஒழிக்கும்; புண்ணிய சீலராகிய பெரியோரைச் சேரின் பாவம் தாபம் வறுமை முதலிய சிறுமைகள் யாவும் ஒருங்கே ஒழிந்து பெருமைகள் பெருகி வரும் என்னும் இது இங்கே உரிமையோடு ஊன்றி உணர வுரியது.

புண்ணியம் உடையவர் அரிய பல மகிமைகளை அடைந்து விளங்குகின்றார்; அஃது இல்லாதவர் அவல நிலைகளில் இழிந்து உழல்கின்றார். அறத்தை இழந்தபோதே அவகேடுகள் விளைந்தன.

தான் கருதியபடி யெல்லாம் எவ்வழியும் செவ்வையாக எவனும் எதையும் அடைய முடியாது; அவன் முன்பு செய்துள்ள அல்லது பின்பு செய்து வருகிற நல்வினையின் அளவே நல்ல பலன்கள் அவன்பால் வந்து சேர்கின்றன. ஈட்டி வந்த புண்ணிய கருமங்களே இன்பத்தைக் காட்டியருளுகின்றன.

மனம் நல்லதாய், வாக்கு இனியதாய், செயல் இதமாய் ஒருவனுக்கு அமைந்துவரின் அவனிடம் புண்ணியம் பொங்கி வருகிறது. இந்த மூன்று கரணங்களையும் நல்ல வழிகளில் பழக்கி வருபவர் மேலோராய் உயர்ந்து எல்லா மேன்மைகளையும் எளிதே எய்துகின்றனர். மும்மையும் நலமாயின் எம்மையும் இனிதாம்.

புண்ணிய நீர்மை தோய்ந்த நல்லோருடைய உள்ளமும் சொல்லும் செயலும் எவ்வாறு இருக்கும்? என்பதைச் சுருக்கமாகத் தெரிந்துகொள்ள விரும்பின் அயலே வருவதை ஊன்றி உணர்ந்துபொருள் நிலைகளை ஓர்ந்து தெளிந்துகொள்ளவேண்டும்.

உள்ளம்

"உள்ளச் செய்தி தெள்ளிதில் கிளப்பின்,

இருள்தீர் காட்சி அருளொடு புணர்தல்;
பெரும்பொறை தாங்கல்; பிறன்பொருள் விழையாமை;
செய்தநன்று அறிதல்; கைதவம் கடிதல்;
பால் கோடாது பகலில் தோன்றல்;
மான மதாணி ஆணியின் தாங்கல்;
அழுக்காறு இன்மை; அவாவில் தீர்தல்;
அருந்துயர் உயிர்கட்கு இருந்த காலை
அழல்தோய் வுற்ற மெழுகே போலக்
கழலும் நெஞ்சில் கையற்று இனைதல்;
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்கு
அறிவும் பொறியும் கழிபெருங் கவினும்
பெறற்கரும் துறக்கமும் இறப்ப ஊங்குத்
தம்மினும் வேண்டும் என்றுஎண்ணும் பெருங்குணம்:

சொல்

வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள
அறம்பெரிது அறைதல்; புறங்கூறாமை;
வாய்மை கல்வி தீமையில் திறம்பல்;
இன்மொழி இசைத்தல்; வன்மொழி மறுத்தல்;
அறிவுநூல் விரித்தல்; அருமறை கழறல்
அடங்கிய அறைதல்; கடுஞ்சொல் விடுத்தல்;
பயனுள படித்தல்; படிற்றுரை விடுத்தல்:

செயல்.

காயத்து இயைந்த வீயா வினையுள்
அருந்தவம் தொடங்கல்; திருந்திய தானம்;
கொடைமடம் படுதல்; படைமடம் படாமை;
அமரர்ப் பேணல்; ஆகுதி அருத்தல்;
ஒழுக்கம் ஓம்பும் விழுப்பெருங் கிழமை;
ஐம்பெரும் பாதகத்து ஆழி நீந்தல்
இந்தியப் பெரும்படை இரிய நூறும்
வன்தறு கண்மை; வாளிட் டாங்கு
நோவன செய்யினும் மேவன செய்தல்;
தவச்சிறிது ஆயினும் மிகப்பல விருந்து
பாத்தூண் செல்வம்; பூக்கமழ் இரும்பொழில்
தன்மனைக் கிழத்தி அல்லதை பிறர்மனை
அன்னையின் தீரா நன்னர் ஆண்மை;

கார்கோள் அன்ன கயம்பல கிளைத்தல்;
கூவல் தொட்டல்; ஆதுலர் சாலை;
அறங்கரை நாவின் ஆன்றோர் பள்ளி,
கடவுட் கண்ணிய தடவுநிலைக் கோட்டம்,
இனையவை முதலா நினைவரும் திறத்த
புரத்தல் மாதோ அறத்துறை; மறத்துறை
இவற்று வழிப்படாஅது எதிர்வன கெழீஇ
உஞற்றென மொழிப உணர்ந்திசி னோரே.” (ஞானமிர்தம்)

மனம் மொழி மெய்களால் விளையும் புண்ணிய நிலைகளை இது வரைந்து குறித்துள்ளது. உரைக் குறிப்புகள் ஓர்ந்து சிந்திக்கத் தக்கன. இனிய கருமங்கள் புனித தருமங்களாய் வருகின்றன.

எல்லா மேன்மைகளுக்கும் மனமே மூல காரணமாயுள்ளது; அது நல்லதாக அமையின் யாவும் நலமாய் மேவி வருகின்றன. மனநல முடையவனிடம் எல்லா நன்மைகளும் இனமாய் வந்து சேருதலால் உயர்ந்த கதியை அவன் விரைந்து அடைந்து கொள்ளுகிறான். புனித மனமே புண்ணியம் ஆகிறது.

ஒருவன் உள்ளம் தூய்மை ஆய பொழுது தரும தேவதை அவன்பால் உரிமையாய் ஒளிபுரிந் தருளுகின்றது. அருளவே அதிசய நிலையில் யாண்டும் அவன் துதிகொண்டு திகழ்கின்றான். அவன் எதிரே எவரும் தலை வணங்கி நிற்க நேர்கின்றார்.

பரசுராமன் பெரிய தவம் உடையவன்; அரிய போர் வீரன்; அரசர் மரபிடம் கறுவு கொண்டிருந்தான் ஆதலால் அந்த வரிசையில் வந்த இராமனோடு போராட நேர்ந்தான். சினந்து முனைந்து சீறி மூண்ட அவன் இராமன் எதிரே விரைந்து தோல்வி அடைந்தான். தனது தோல்வியை உணர்ந்த அவன் எதிரியை வியந்தான். இராமனிடம் தருமம் நிறைந்துள்ளமையால் தன்னை எளிதே வென்று நின்றான் என்று வியந்து புகழ்ந்தான். “தரும மூர்த்தியே! உன்னை யாரும் வெல்ல முடியாது; நீயே எவரையும வெல்லவல்லவன்; கருதியஎவையும் உனக்கு இனிது கைகூடும்” என்று உரிமையோடு தொழுது உவந்து புகழ்ந்து போனான்.

“எண்ணிய பொருள்எலாம் இனிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ண! வண்துழாய்க்
கண்ணிய! யாவர்க்கும் களைகண் ஆகிய

புண்ணிய! விடைஎனத் தொழுது போயினன்."
(இராமா, பரசுராம, 40)

இராமனுடைய அதிசய நிலையை உணர்ந்ததும் பரசுராமன் இவ்வாறு துதி செய்து தொழுது போயிருக்கிறான். புண்ணிய! என்று கண்ணியமா விளித்தது தருமமே இவனுக்கு அதிசய வெற்றிகளை அருளியுள்ளது என்பது தெளிய வந்தது.

தருமத்தை இவ் வீரன் போற்றியிருக்கும் நிலை இவனது சீவிய காவியத்தில் ஓவிய உருவங்களாய் ஒளி புரிந்து திகழ்கின்றது. உரைகள் எல்லாம் தருமங்களையே உணர்த்தியுள்ளன.

"அறத்தினால் அன்றி அமரர்க்கும் அருஞ்சமம் கடத்தல்
மறத்தினால் அரிது என்பது மனத்திடை வலித்தி!"
(இராமா, முதல்போர், 252)

படைகள் யாவும் இழந்து போரில் தன் எதிரே தோல்வியடைந்து நின்ற இராவணனை நோக்கி இராமன் இப்படிக் கூறியிருக்கிறான். "தருமமே வெற்றி தரும்; அதனை இழந்தவன் உயர்ந்த தேவனாயினும் இழிந்தே படுவான் என்பதை இனிமேலாவது நீ தெளிந்து கொள்!" என்று அந்த நிருதர் பதிக்கு இந்த நீதிபதி போதித்திருக்கும் நீர்மை ஓதி ஓதி உணர்ந்து தெளிய வுரியது.

எல்லாப் பெருமைகளையும் இனிது நல்கி எவ்வழியும் இன்பமே தருகிற தருமத்தை இயன்ற அளவு தழுவி வருவதே உயர்ந்த மனிதனாய்ப் பிறந்து வந்ததின் சிறந்த பயனாம்.

பிறந்துநாம் பெருகி நின்றும் பேணிய உடம்பு நீங்கி
இறந்து போய்ச் சேர்ந்து நிற்கும் எல்லையும் தெரியவில்லை;
மறந்துமுன் திரிவாழ் நாளை மயங்கியே கழிக்கின் றேமால்
அறந்துணை அன்றி வேறே அருந்துணை யாதும் இன்றே.

குணத்தினை மறந்து பொல்லாக் கொடுமையும் சூதும் சூழ்ந்து
பணத்தினைப் பரிந்து பற்றிப் பழிபவம் வளர நாளும்
பிணத்தினை வளர்த்து நின்றார் பேயர்கள் உயிரைப் பேணி
மணத்தினை அடையா தந்தோ மயங்கி வாளா மடிந்தார். (2)
(வீர பாண்டியம்)

அறத்தை ஒருவி அவலங்களைத் தழுவி அவமே இழிந்து அழிந்து போகாதே; புண்ணியத்தை மருவிப் புனிதனாய் உயர்க.

---

746. அறமே பொருளின்பம் ஆக்கி யருளும்
மறமே துயர்செய்து மாய்க்கும்—திறமாக
ஓர்ந்து புரிந்தார் உயர்ந்தார்; அயர்ந்தார்பின்
பேர்ந்து விழுந்தார் பிறழ்ந்து. (சு)

இ—ள்

பொருளையும் இன்ப நலங்களையும் தருமமே அருளும்: பாவம் அல்லல்களை விளைத்து அழிதுயரங்களையே கொடுக்கும்; இந்த உண்மை நிலைகளை உறுதியாகத் தெளிந்து நன்மை செய்பவர் பேரின்ப நிலையில் உயர்ந்தார்; அவ்வாறு செய்யாமல் அயர்ந்து புன்மை புரிபவர் இழிந்து அழிந்தார் என்பதாம்.

அரிய பிறவியில் வந்த மனிதன் உரிமையாகப் பெற உரிய பொருள்கள் நான்கு; அவை அறம் பொருள் இன்பம் வீடு என வரம்பு அமைந்துள்ளன. நன்மை தீமைகளை நாடி அறிந்து உண்மை கண்டு உய்தி பெறுந்தன்மை மனிதனிடம் தனியுரிமையாய் அமைந்திருக்கிறது. சிறந்த நிலையில் தோன்றியுள்ள இவன் பிறந்த பயனை விரைந்து பெற வேண்டும். அவ்வாறு பெறவில்லையானல் எவ்வழியும் இழிந்து படுவான்; வெவ்விய துயரங்கள் விளைந்து விடும். விளைவுகள் தெரியாமல் விளிவது இழிபழியாம்.

நீர்மேல் குமிழிபோல் நிலத்தில் ஒல்லையில் அழிந்து மறையும் உடம்பை எடுத்து வந்துள்ள மனிதன் தனது நிலைமையை உணர்ந்து உயிர்க்கு உறுதிநலனை உரிமையாக அடைந்து கொள்ளவில்லையானல் அவன் சிறுமையாய்ச் சீரழியவே நேர்கின்ருன்; நேரவே பிறவிப் பேற்றை இழந்த பேதை எனத் தருமதேவதை அவனை மருமமா இகழ்ந்து எள்ளித் தள்ளி விடுகின்றது.

மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலும்
தேய்தலும் உடைமையைத் திங்கள் செப்புமால்
வாய்புகப் பெய்யினும் வழுக்கில் நல்லறம்
காய்வது கலதிமைப் பால தாகுமே. (சீவக சிந்தாமணி)

மனிதர்காள்! நீவிர் விரைந்து இறந்து படுவீர்! சாவு நேருமுன்னரே நல்ல தருமத்தை மருவிக் கொள்ளுங்கள்; இல்லையேல் அல்லலேயாம் என வானத்தில் தோன்றி நின்று சந்திரன் ஞானத்தைப் போதிக்கின்ருன்; தேய்தல் மாய்தல் ஆகிய தனது

நிலைமையை நேரே காட்டி அவன் போதித்தும் மாந்தர் புண்ணிய நிலையைப் பொருந்தாமல் இழிந்து போவது கொடிய தீவினையின் கூறே என இது இரங்கியிருக்கின்றது. பொருளின் நயங்களும்போதனையும் தெருளோடு உணர்ந்து சிந்திக்கவுரியன.

தான் இன்பமாய் இனிது வாழவே எந்த மனிதனும் யாண்டும் நீண்டு சிந்தனை செய்து வருகிறான்; தான் கருதியபடி அடையாமல் பெரும்பாலும் அவன் மறுகி யுழல்கின்றான்; அதற்குக் காரணம் அவனிடத்திலேயே பூரணமாய் மருவி யிருக்கிறது. உரிய மூலத்தை உணராமல் ஊனமாய் அலைகிறான்.

துன்பங்கள் பாவத்தின் விளைவுகளாய் வருகின்றன.

இன்பங்கள் புண்ணியத்தின் பயன்களாய் மருவுகின்றன.

மனிதன் ஒருவன் துயரங்களில் அழுந்தி உழலுகின்றான் என்றால் தான் செய்த தீவினைப் பயன்களை அவன் அனுபவிக்கின்றான் என்பது அறிய வருகிறது. இன்ப நலன்களை நுகர்கின்றான் என்றால் நல்வினையின் விளைவுகளை அவன் நன்கு துய்க்கின்றான் என்பதை உய்த்து உணர்ந்து கொள்கின்றோம்.

வித்திய படியே விளைவுகள் வெளி வருகின்றன. காரண காரிய உரிமைகள் எவ்வழியும் பூரணமாய்ப் பொருந்தி வருவது திருந்திய நியமமாய்ச் சிறந்து திகழ்கிறது. அல்லலான வினைகளைச் செய்தவன் அவலத் துயர்களையே அடைகின்றான்; நல்லது புரிந்தவன் எவ்வழியும் இனிய நலனையே பெறுகின்றான்.

இனிய நீர்மைகளால் தருமம் விளைகிறது; அதனால் இருமையும் பெருமையாய் இன்ப நலன்கள் அமைகின்றன. புண்ணியமே யாண்டும் போகங்களை ஊட்டியருளுதலால் அது அரிய பெரிய இனிய ஒரு சீவ அமுதமாய் மேவியுள்ளது.

“முற்பிறப்பில் தாம்செய்த புண்ணியத்தின் நல்லதோர்
இற்பிறந்து இன்புறு நின்றவர்---இப்பிறப்பே
இன்னும் கருதுமேல் ஏதம்கடிந்து அறத்தை
முன்னி முயன்றெழுகற் பாற்று. (1)

அம்மைத்தாம் செய்த அறத்தின் வருபயனை
இம்மைத்துய்த்து இன்புறு நின்றவர்---உம்மைக்கு

அறம்செய்யாது ஐம்புலனும் ஆற்றுதல் நல்லாக்
கறந்துண்டு அஃது ஓம்பாமையாம்." (அறநெறிச்சாரம்)

ஒருவனுக்கு நல்ல குடிப்பிறப்பும் இனிய சுகபோகங்களும் அரிய சிறப்புகளும் அவன் புரிந்த புண்ணியத்தினாலேயே அமைந்து வருகின்றன; அத்தகைய புண்ணிய நீர்மைகளை மேலும் தொடர்ந்து மருவி மேலான கதிகளை அடைந்து கொள்ள வேண்டும்; அறம் புரியாமல் ஐம்புல இன்பங்களை நுகர விரும்புவது பசுவுக்குப் புல்லுப் போடாமல் பாலைக் கறந்து கொள்ள விரும்புவது போலாம் என இவை உணர்த்தியுள்ளன. உவமைக் குறிப்புகள் ஊன்றி உணர வுரியன.

கறவைப் பசு பாலைச் சொரிவது போல் அறவினை இன்பத்தைப் பொழியும். தருமம் ஆகிய காமதேனுவை ஒருவன் பெறுவான் ஆனால் எவ்வழியும் அவன் சேமமாய் இனிது வாழுவான்.

திருந்திய நல்லறச் செம்பொற் கற்பகம்
பொருந்திய பொருளொடு போகம் பூத்தலால்
வருந்தினும் அறத்திறம் மறத்தல் ஓம்புமின்
கரும்பெனத் திரண்டதோட் கால வேற்கணீர்.
(சீவக சிந்தாமணி)

தருமம் தெய்வத் தரு; பொருளும் போகமும் அது உரிமையாய் அருளும்; கருதிய யாவும் தரும்; அதனை மறவாமல் பேணி வருபவர் அரிய பல மகிமைகளைப் பெறுவர் எனச் சீவக மன்னன் இவ்வாறு யாவரும் அறியக் கூறியிருக்கிறான்.

உன் உயிர்க்கு இனிய துணையாய் எவ்வழியும் இன்பம் தருவது அறமே; அதனை மறந்துவிடின் துன்பமே விளையும்; இவ்வுண்மையைச் செவ்வையா உணர்ந்துஅறத்தைப் பேணிஉயர்க.

---

747. எண்ணம் புனிதமாய் யார்க்கும் இதம்புரிந்து
தண்ணளி செய்து தகையாள்க—கண்ணகன்ற
ஞாலமெலாம் உன்னை நயந்து தொழுதேத்த
மேலவனாய் நிற்பாய் மிகுந்து. (எ)

இ—ள்

எண்ணம் தூய்மையாய்த் தண்ணளி புரிந்து எவ்வுயிர்க்கும்

இதம் செய்து வருக; அவ்வாறு வரின் நீ புண்ணியவான் ஆவாய்; ஆகவே விரிந்து பரந்த உலகம் எல்லாம் உவந்து தொழுது புகழ்ந்து வர நீ உயர்ந்து விளங்குவாய் என்பதாம்.

இது மேலோன் ஆகும் மூலம் கூறுகின்றது.

செல்வத்தில் சிறந்து பதவியில் உயர்ந்து நல்ல சுக போகங்களை நுகர்ந்து யாவரும் புகழ்ந்து போற்ற இனிது வாழ வேண்டும் என்றே எல்லா மனிதரும் எண்ணுகின்றனர். அந்த எண்ணம் நன்கு நிறைவேற எந்த வண்ணம் நடந்து கொள்ள வேண்டும் என்பதை எவனும் சிந்தை செய்வதில்லை. உரிய கடமைகளைச் செய்யாமல் அரிய பெருமைகளை அடைய அவாவுவது பெரிய மடமைகளாய்ப் பெருகியுள்ளது. வரவு நிலை தெரியாமல் கரவு வழிகளில் மனிதசமுதாயம் மறுகி யுழலுகின்றது.

செய்த வினை அளவே பலன் எய்த வருகிறது. நிலைமைகளுக்குத் தக்கபடியே கருமங்கள் பெருமை பெற்றுப் பெரும் பலன்களைத் தருகின்றன. கரும விளைவுகள் மருமங்களாயுள்ளன.

தான் உழைத்து ஈட்டிய பொருளைத் தன் அளவில் அடைத்து வைப்பவனும், தானாகவே உண்டு களிப்பவனும் உயர்ந்த நிலைகளை அடைந்து கொள்ள முடியா. பிற உயிர்கள் இன்புற உதவி வருபவனே தன் உயிர்க்கு இன்பத்தைச் செய்தனாய் உயர்ந்து வருகிறான். இனிய இதம் அரிய அறம் ஆகிறது.

தன் கருமத்தால் தருமத்தை விளைத்து வருபவன் இருமையும் பெருமையாய் இன்புறுகிறான். அவ்வாறு செய்யாதவன் சிறுமையே அடைகின்றான் புண்ணியத்தைப் பேணி வரும் அளவே மனிதன் கண்ணியம் பெறுகின்றான் ஆதலால் மண்ணியல் மாந்தர்க்கு விண்ணியல் அமிர்தமாய் அது விளங்கி நிற்கிறது.

அறம் படியாத வாழ்வு மறம் படிந்து எவ்வழியும் இழிந்து படுகிறது. தருமம் மருவியதே பெருமையாய்ப் பேரின்பமுறுகிறது.

நொறுங்கு பெய்து ஆக்கிய கூழ்ஆர உண்டு
பிறங்கிரு கோட்டொடு பன்றியும் வாழும்;
அறம்செய்து வாழ்வதே வாழ்க்கை; மற்றெல்லாம்
வெறும்பேழை தாழ்க்கொளீஇ அற்று.

(அறநெறிச்சாரம், 78)

சுயநலமே கருதித் தன் வயிற்றை மாத்திரம் வளர்த்து வருபவன் இளி வாழ்வுடையனாய் இழிந்து படுகிறான்; அவன் ஈனமான ஒரு கான விலங்கே என இது மானமா வரைந்து காட்டியுளது.

பன்றியும் நாயும் கூட வயிறார உண்டு வாழ்கிறது; அது வாழ்வா? மனிதன் அந்த நிலையில் வாழ லாமா? மதிநலமுடைய மனிதன் விதிமுறை தெரிந்து தன் உயிர்க்கு இனிய உறுதி நலனை உரிமையோடு மருவிக்கொள்ள வேண்டும்; அங்ஙனம் கொள்ளாமல் உடம்பைக் கொழுக்க வளர்த்துக் களித்துத் திரியின் அவன் இழிந்த ஒரு மிருகமே யாவன்; அழிந்துபடும் அவலமே யுடையவன் என்பது இங்கே தெளிந்து கொள்ள வந்தது.

அறம் புரியும் வாழ்வே வாழ்வு; அஃது இல்லாத வாழ்வு பாழே. வெறும் பெட்டியை ஒருவன் பூட்டி வைத்தான்; பின்பு திறந்து பார்த்தான்; உள்ளே ஒன்றும் இல்லை; ஏங்கி வருந்தினான்; இழிந்து ஒழிந்தான்; தருமம் புரியாதவனும் அவ்வாறே யாதும் இல்லாதவனாய் அல்லலுழந்து அலமந்து போகின்றான்.

தன் வாழ்க்கையில் புண்ணியம் புரிந்தவன் பொன் கட்டிகளை நிறைத்து வைத்தவனாகின்றான்; ஆகவே எண்ணிய இன்ப நலன்களை யெல்லாம் எங்கும் பெற்றுப் பொங்கிய புகழோடு பொலிந்து விளங்குகிறான். அறம் அமர வாழ்வை அருளுகிறது.

தண்ணளி செய் என்றது புண்ணிய விளைவை எண்ணி வந்தது. உள்ளம் உருகியருள உயர்பேரின்பம் பெருகி வருகிறது.

புண்ணியம் பொருளால் மாத்திரம் அன்று; அருளாலேயே பெரிதும் அது பெருகி விளைகிறது. உயிர்களுக்கு இரங்கி உதவுவது அருளியல்பு ஆதலால் அது பெரிய புண்ணிய நிலையமாய்த் தலைமை எய்தியுள்ளது. அதனையுடையவர் அரிய பல மேன்மைகளை விரைந்து அடைந்து பெரிய இன்பங்களைப் பெறுகின்றார்.

விசாலன் என்பவன் இரக்கம் மிக வுடையவன்; வயனங்கோடு என்னும் ஊரில் வேதியர் சிலர் வேள்வி செய்ய நேர்ந்தார்; அதில் பலியிடும் பொருட்டு ஒரு பசுவைப் பிணித்து வைத்திருந்தார்; அதனை இவன் கண்டான்; அதன் நிலைமையை நோக்கி நெஞ்சம் இரங்கினான். "ஐயோ! பசுவைப் படுகொலை செய்யப் போகிறார்களே!" என்று பரிந்து வருந்திய இவன்

இரவு வரவும் யாரும் அறியாமல் புகுந்து அதனை அவிழ்த்து வெளியேற்றி அயலே இதமாக் கொண்டு போய் விட்டான்.

"அப்பதி தன்னுளோர் அந்தணன் மனைவயின்
புக்கோன் ஆங்குப் புலைசூழ் வேள்வியில்
குரூஉத்தொடை மாலை கோட்டிடைச் சுற்றி
வெரூஉப்பகை அஞ்சி வெய்துயிர்த்துப் புலம்பிக்
கொலைநவில் வேட்டுவர் கொடுமரம் அஞ்சி
வலையிடைப் பட்ட மானே போன்றுங்கு
அஞ்சிநின்று அழைக்கும் ஆதுயர் கண்டு
நெஞ்சு நடுக்குற்று நெடுங்கணீர் உகுத்துக்
கள்ள வினையில் கடுந்துயர் பாழ்பட
நள்ளிருட் கொண்டு நடக்குவன் என்னும்
உள்ளம்கரந்து ஆங்கு ஒருபுடை ஒதுங்கி
அல்லிடை ஆக்கொண்டு அப்பதி அகன்றோன்."

(மணிமேகலை,.13)

அருள்புரிந்து இவன் பசுவைக் காத்துள்ள நிலையை இப் பாசுரம் உணர்த்தியுள்ளது. ஆவின் நிலையைக் கண்டபோது இவன் குலை துடித்து மறுகியிருக்கிறான். நெஞ்சு நடுக்குற்று நெடுங்கண் நீர் உகுத்து என்றதனால் இவனது இரக்கமும் உருக்கமும் உணரலாகும். சீவதயை ஆவி நிலையாய் மேவி மிளிர்கின்றது.

கொலை நிலையிலிருந்து நீக்கிப் பசுவை இவ்வாறு இவன் பாதுகாத்துக் கொண்டுபோய்க் காட்டில் ஓரிடத்தில் அதற்குப் புல்லை ஊட்டி நின்றான். ஆவைக் காணாமையால் வேதியர் வேதனையோடு தேடித் திரிந்தார்; இவனைக் கண்டார்; எள்ளி வைது தள்ளி அடித்தார்; அப்பொழுது அந்தப் பசு சீறிப் பாய்ந்து ஒரு பார்ப்பானை வயிற்றைக் கிழித்துக் குடலைச் சரித்து விட்டு அடலோடு ஓடிப்போயது. கையில் அகப்பட்ட இவனை எல்லாரும் நையப் புடைத்தார். அடிகளைத் தாங்கிக் கொண்டு அம் மறையவர்களை நோக்கி இதமொழிகளை இனிது கூறினான். அன்றுஇவன் கூறிய அறிவுரைகள் சீரிய நீர்மைகள் தோய்ந்தன.

"நோவன செய்யன்மின்! நொடிவன கேண்மின்!
விடுநில மருங்கில் படுபுல் ஆர்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாள் தொட்டுச் சிறந்ததன் தீம்பால்

அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்
இதனெடு வந்த செற்றம் என்னே?
முதுமறை அந்தணிர் முன்னியது உரைமோ!" (விசாலன்)

"தாளுகக் காட்டில் முளைத்த புல்லை உண்டு, ஏரி குளங்களில் நீரைக் குடித்து, நாட்டிலுள்ள மக்களுக்கு யாண்டும் தரும சிந்தனையோடு பாலை ஊட்டியருளுகிற பசுவினிடம் நீங்கள் கொடுமை காட்டுகிறீர்கள்; அதனைக் கொல்லவும் துணிகிறீர்கள்; யாகம் என்று வெளியே இனிய பேரை வைத்துக் கொண்டு உள்ளே கொடிய கொலைகளைச் செய்கிறீர்கள்; இது எவ்வளவு புலைத்தீமை! உங்களுக்கு அந்தணர் என்ற பெயர் யார் தந்தது? எதனல் வந்தது? அதனைக் கொஞ்சம் சிந்தனை செய்து பாருங்கள்; விவேக சூனியமாய்த் தீவினைகளைச் செய்யாதீர்கள்; நீசமான அவை உங்களுக்கு நாசமேயாம்; தெளிந்து ஒளிந்து போங்கள்" என்று இவன் மொழிந்திருப்பது உணர்ந்து சிந்திக்கவுரியது. அருள் சுரந்த உரைகள் பொருள் நிறைந்துள்ளன.

குழந்தையா யிருந்த பொழுது ஒரு பசு பால் ஊட்டி இவனை வளர்த்தமையாலும், பசுவை அன்புரிமையோடு பாதுகாத்தமையாலும் இவன் ஆபுத்திரன் என நேர்ந்தான். மிகுந்த சீவகாருணிய முடையவனாய் யாண்டும் உயிர்களை இவன் இனிது பேணி வந்தான். குருடர், முடவர், வறியவர் முதலிய எவரைக் கண்டாலும் உள்ளம் உருகி இவன் உதவி புரிந்தான்.

"காணர் கேளார் கால்முடப் பட்டோர்
பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்
யாவரும் வருகஎன்று இசைத்துடன் ஊட்டி
உண்டொழி மிச்சில்உண்டு ஓடுதலை மடுத்துக்
கண்படை கொள்ளும் காவலன்." (மணிமேகலை)

என இவனது உபகார நிலையைக் குறித்துச் சாத்தனர் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் உரைத்திருக்கிறர். தண்ணளியோடு உயிர்களை இவ்வண்ணம் பேணி வந்தமையால் பின்பு இவன் நாக நாட்டு மன்னனுய்ப் பிறந்தான். சிறந்த புண்ணியத்தால் பிறந்த இவன் அந்த வாசனையோடே தரும நீர்மைகள் நிறைந்திருந்தான் ஆதலால் புண்ணிய ராசன் என்னும் பேரோடு பொலிந்து விளங்கினன். உலகம் இவனை உவந்து தொழுதது.

தன்னை ஈன்ற தாயினும் தருமம் ஒருவனுக்கு ஆன்ற துணையாம். தாய் உடலை உரிமையோடு பேணுவாள்; தருமம் உயிரை என்றும் அருமையாகப் பேணி அருளுகிறது. ஒரு பிறவியில் மருவிய தருமம் வரு பிறவிகளிலும் உரிமையாய்ப் பெரு மகிமைகள் புரிகின்றது; பேரின்பங்களை அருளுகின்றது; ஆதலால் அது சீவனுக்குத் தேவ அமுதமாய்ச் சிறந்து திகழ்கின்றது.

அன்றறிவாம் என்னாது அறம்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை. (குறள், 36)

தருமத்தை விரைந்து செய்து கொள்ளுக; அது சிறந்த திரு; நீ இறந்து படுங்கால் அது இறவாத துணையாய் உனக்கு உடன் தொடர்ந்து உறுதி நலன்களைப் புரியும் எனத் தேவர் இங்ஙனம் கருணையோடு தரும போதனையை உரிமையாச் செய்திருக்கிறார்.

ஆறிடு மேடும் மடுவும்போலாம் செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்!---சோறிடும்
தண்ணீரும் வாரும் தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து. (நல்வழி, 32)

உலக மக்களே! உங்கள் வாழ்வு நிலையில்லாதது; பிற உயிர்களுக்கு இரங்கிச் சோறும் நீரும் கொடுங்கள்; அது தருமமாய் உங்கள்உயிர்க்குஇருமையும்இன்பம் தரும்; அதனை உரிமையாப் பேணிக்கொள்ளுங்கள்எனஔவையார் இவ்வாறுகூறியுள்ளார்.

ஈட்டிய ஒண்பொருளும் இல்ஒழியும்; சுற்றத்தார்
காட்டுவாய் நேரே கலுழ்ந்தொழிவர்;---மூட்டும்
எரியின் உடம்புஒழியும் ஈர்ங்குன்ற நாட!
தெரியின் அறமே துணை. (அறநெறிச்சாரம், 147)

நீ ஈட்டிய செல்வம் வீட்டோடு ஒழியும்; உன் சுற்றத்தார் சுடுகாட்டளவில் விட்டுவிலகுவர்; உடம்பு தீயில் எரிந்து தொலையும்; நீ செய்த தருமமே உனக்கு இனிய துணையாய் வரும் என முனைப்பாடியார் இப்படி மனிதனுக்கு நினைப்பூட்டியிருக்கிறார்.

அத்தமும் வாழ்வும் அகத்துமட்டே; விழிஅம்புஒழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே; விம்மி விம்மிஇரு
கைத்தல மேல்வைத்து அழுமைந்தரும் சுடுகாடுமட்டே;
பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே.
[பட்டினத்தார்]

உறவுரிமைகளாய் நண்ணியிருந்த எவையும் மனிதனுக்குத் துணையாகா; செய்த புண்ணியமே அவனைத் தொடர்ந்து சென்று எவ்வழியும் இன்பம்அருளும் எனப் பட்டினத்தார் இவ்வண்ணம் சுட்டிக் காட்டி உயிர்க்கு ஊதியத்தை உணர்த்தியுள்ளார்.

அரிய இந்த உயிர் அமுதத்தை உனக்கு இனிமையாக உரிமைசெய்துகொள்ளுக; இருமைநலனும் எதிரே எய்த வரும்.

---

748 புண்ணியம் என்னும் புனிதப்பேர் உள்ளத்தே
எண்ணினும் இன்பமிக எய்துமே—நண்ணியதைச்
செய்யாமல் வீணே திரிந்து திருவிலியாய்
ஐயோ அழிதல் அவம். (அ)

இ-ள்.

புண்ணியம் என்னும் சொல் புனிதமானது; எண்ணினும் இன்பம் தருவது; அதனைச் செய்துகொண்டவர் திவ்விய மகிமைகளை எய்துகின்றார்; செய்யாது இழிந்தவர் வீணே கழிந்து வெறியராய் அழிந்து ஒழிகிறார்; அழிவு நிலை தெரிந்து ஆவதைச் செய்க.

உயிர்கள் துயர்களோடு தொடர்ந்து பிறவிகளில் வந்துள்ளன. உற்ற துன்பங்களை நீக்கி உயர்ந்த இன்பங்களைப் பெற்றுக் கொள்ளவே பிறந்த சீவர்கள் யாண்டும் ஆவலாய் உழந்து திரிகின்றன. உண்மை நிலை இவ்வாறு இருந்தும் பழகி வந்துள்ள வாசனைகளால் பொறி வெறிகளில் இழிந்து பிழை வழிகளில் புகுந்து மேலும் மேலும் அழி துயரங்களையே அடைய நேர்ந்தன.

மனம் தீய வழிகளில் பழகி வந்தால் மனிதன் பாவி ஆகின்றான்; அதன் பலனாகப் படு துயரங்களை அடைகின்றான்; முடிவில் அடு நரகங்களில் ஆழ்கின்றான். தன் மனத்தை நல்ல நெறிகளில் ஒருவன் செலுத்திவரின் அவன் நல்லவன் ஆகின்றான்; ஆகவே அல்லல்கள் யாவும் அவனை அணுகாமல் அகலுகின்றன.

"இன்னாத செயல் ஒழியின், இனியவனாய்
எவ்வழியும் இன்பம் காண்பான்"

என்றது வினையின் விளைவுகளை விழைந்து காண வந்தது.

மனம் புனிதமாய் இனிமை தோய்ந்த பொழுது புனிதன் ஆன பரமன் அருள் அங்கே தனி உரிமையாய் இனிது சுரந்து

வருகிறது. புண்ணியன் என்று கடவுளுக்கு ஒரு பெயர். ஆகவே புண்ணியம் உடையவர் எவ்வளவு தெய்வீக மகிமைகளை எய்தியுள்ளனர் என்பதை எளிதே தெளிந்து கொள்ளலாம்.

புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவர் ஆவதும் வானவர் ஆவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே. [1]

புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீர்உண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்இறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே." (திருமந்திரம்)

பரம புண்ணியனை இறைவனை எண்ணி ஒழுகுவது பெரிய புண்ணியம்; அவ்வாறு எண்ணுமல் பலர் மண்ணாய் மடிந்து போகின்றாரே என்று திருமூலர் இவ்வாறு மறுகி இரங்கியிருக்கிறார். அரியபிறவியை அடைந்தும் அவலமாயழிவது பரிதாபமாயது.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா! உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரம்தர வேண்டும்." (தேவாரம்)

அப்பர் இப்படி ஆண்டவனை நோக்கி வேண்டியிருக்கிறார்.

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே! இருங்கடல் வையத்து
முன்னம் நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே.
[தேவாரம்]

பரமனைக் கருதி ஒழுக நேர்ந்தது அரிய புண்ணியம் என்று வியந்து தமது நெஞ்சை நோக்கித் திருஞானசம்பந்தர் இங்ஙனம் உருகி உரையாடியிருக்கிறார். உரையுள் உணர்வுநிலை ஒளிர்கிறது.

புண்ணிய மூர்த்தியான கடவுளை உரிமையோடு எண்ணினால் மனிதன் பெரிய புண்ணியவானாய் அரிய மகிமைகளை அடைகிறான். அந்தப் பாக்கியங்களைப்பெற்று மகிழ்ந்த மேலோர் உலகம் நலமுற உறுதி நலன்களை உரிமையாய் உரைத்திருக்கிறார்.

புண்ணியம் செய்து நல்ல புனலொடு மலர்கள் தூவி
எண்ணுமின் எந்தை நாமம் இப்பிறப்பறுக்கும்; அப்பால்

திண்ணம்நாம் அறியச் சொன்னோம் செறிபொழில் அனந்தபுரத்து
அண்ணலார் கமல பாதம் அணுகுவார்; அமரர் ஆவார்.

(திருவாய்மொழி)

தெய்வ சிந்தனை பெரிய புண்ணியம்; அது பிறப்பை நீக்கிப் பேரின்பம் அருளும் என நம்மாழ்வார் இங்ஙனம் அருளியிருக்கிறார்.

புண்ணியம் உடையவர் அரிய பல செல்வங்களை எளிதே பெறுகின்றார்; அதனை அடையாதவர் அரும்பாடு பட்டாலும் யாதொரு பலனும் கிடையாமல் வருந்தி யுழல்கின்றார். தருமம் ஆகிய உரம் கலந்தபோது தான் கருமம் சிறந்த பயனைத் தருகிறது. அது கலக்கவில்லையானால் கடுமுயற்சி செய்தாலும் மனிதன் கலக்கத்தையே காண்கிறான். நல்லதை இழந்ததால் அல்லலே அடைந்தது.

எண்ணில் எண்கினம் இட்ட கிரிக்குலம்
உண்ண உண்ணச்சென்று ஒன்றினோடு ஒன்றுறச்
சுண்ண நுண்பொடி யாகித் தொலைந்தன
புண்ணியம் பொருந் தாத முயற்சிபோல்.

(இராமா, சேதுபந்தனம் 44)

கடலில் அணைகட்டக் கரடிக்கூட்டங்கள் மலைகளை வாரி எறிந்தன; அவை ஒன்றோடு ஒன்று தாக்கி இடையே நொறுங்கி ஒழிந்தன; அணைக்குப் பயன்படவில்லை; புண்ணியம் பொருந்தாத முயற்சி எண்ணிய பயனை எய்தாததுபோல் அவை இழிந்து போயின எனக் கவி உணர்த்தியிருக்கிறார். கருத்தின் நிலையைக் கருதி உணர வேண்டும். உவமைக்குறிப்புகள் உயர்பொருளுடையன.

பொழுது நீட்டிய புண்ணியம் போனபின்
பழுது செல்லுமன்றே மற்றைப் பண்பெலாம்
தொழுது சூழ்வன முன்னின்று தோன்றவே
கழுது சூழ்ந்தன இராவணன் கண்எலாம்.

(இராவணன் வதை, 165)

நீண்ட காலமாக இராவணன் புண்ணிய போகங்களை அனுபவித்து வந்தான்; இறுதியில் அந்தப் புண்ணியம் கழிந்து போயது; பாவம் விளைந்து வந்தது; வரவே தேவரும் ஏவல் புரிய வாழ்ந்தஅவனுடைய கண்களைப் பேய்கள் தோண்ட நேர்ந்தன; பேரழிவுகள் மூண்டன என்று நேரே இது காட்டியிருக்கிறது.

தருமம் இருக்கும் அளவே ஒருவன் பெருமையும் சுகமும் பெற்று வருகிருன்; அது அற்றதாயின் அவன் அவமே இழிந்து படுகிருன். அறம் இழந்த போதே அவலங்கள் விளைகின்றன.

புண்ணியம் தெய்வீகமுடையது; அதனை மருவி மகிமை பெறுக; அப்பேறு எப்பேற்றினும் யாண்டும் இன்பமாம்.

---

749. எண்ணியநல் இன்பமெலாம் எய்தி இருமையும்நீர்
நண்ணி மகிழ நனியருளும்—புண்ணியத்தைப்
பேணி வருமின் பிழைப்பின் பெருந்துயரம்
காண வருவீர் கடிது. (௯)

இ-ள்.

கருதிய இன்ப நலங்களை எல்லாம் இனிது அருளி இம்மையிலும் மறுமையிலும் உயிர் உவந்து வாழப் புண்ணியம் விரைந்து அருளுகிறது; இத்தகைய புண்ணியத்தைப் பேணி உத்தம நிலையில் வாழுங்கள்; பேணுது ஒழியின் எவ்வழியும் பெருந்துயரே அடைந்து அழிவீர்; அழிவுநேராமல்விழியூன்றி உயர்களன்பதாம்.

ஒரு மனிதனுடைய வாழ்க்கை வசதிகள் அவன் செய்த வினையின் அளவே விளைந்து வருகின்றன. நல்ல வினைகளை நாடிச் செய்தவனிடம் செல்வ வளங்கள் சேர்ந்து நிற்கின்றன. அங்ஙனம் செய்யாதவன்பால் அவை சேராது போகின்றன. ஒருவன் வளம்பெற்று வாழ்வதும், வறுமையுற்றுத் தாழ்வதும் இயல்பாக நிகழ்வன அல்ல; அவனுடைய வினைவிளைவுகளே மூலகாரணங்களாயுள்ளன. கரும போகங்கள் மருமங்களாய் வருகின்றன.

தான் செய்த இனிய கருமங்களின் விளைவே ஒருவனுக்குத் தருமமாய் மருவி அரிய பல போகங்களை உரிமையாய் அருளுகின்றது. அவ்வாறு நல்ல கருமங்களைச் செய்து தருமத்தை விளைத்துக் கொள்ளாதவன் எவ்வழியும் அல்லல்களையே அடைய நேர்கின்ருன். ஊழ் ஊட்ட மனிதன் உண்டு வருகின்ருன். அது ஊட்ட வில்லையானல் எவனும் எதையும் உண்ண முடியாது.

வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது. (குறள், 377)

ஒருவனிடம் பெரும் பொருள்கள் நிறைந்திருந்தாலும் ஊழ் உதவவில்லையானல் அவற்றை அவன் அனுபவிக்க முடியாது; ஊழ் வகுத்த வகையே உயிர்கள் நுகர்ந்து வருகின்றன எனத் தேவர் இவ்வாறு நுகர்ச்சி நிலைகளை நன்கு குறித்திருக்கிருர்.

நல்வினையின் பயனை இன்ப போகங்களும், தீவினையின் விளைவான துன்ப வேதனைகளும் அவற்றைச் செய்தவனை நோக்கி வந்துகொண்டே யிருக்கின்றன. தான் செய்து வைத்த கருமத்தின் விளைவுகளையே மருமமா மனிதன் மருவி வருகிருன். நெஞ்சம் கருதியபடி அடையாமல் முன்பு நேர்ந்தபடியே அடைந்து வருதலால் மாந்தர் யாண்டும் அவலக் கவலைகளால் அலமந்து வருகிருர். விதியின் விளைவுகள் அதிசய நுழைவுகளாயுள்ளன.

*வருந்தி அழைத்தாலும் வாராத வாரா;*
*பொருந்துவன போமின்என்ருல் போகா;---இருந்தேங்கி*
*நெஞ்சம்புண் ஆக நெடுந்தூரம் தாம்நினைந்து*
*துஞ்சுவதே மாந்தர் தொழில்.* (1)

*உள்ளது ஒழிய ஒருவர்க்கு ஒருவர்சுகம்*
*கொள்ளக் கிடையா குவலயத்தில்---வெள்ளக்*
*கடல்ஓடி மீண்டு கரைஏறி ஞலென்*
*உடலோடு வாழும் உயிர்க்கு.* (2)

*எழுதியவா றேகாண் இரங்குமட நெஞ்சே!*
*கருதியவா ருமோ கருமம்---கருதிப்போய்க்*
*கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்காய் ஈந்ததேல்*
*முற்பவத்தில் செய்த வினை.* (3)

[ஔவையார்]

வினையின் விளைவுகளைக் குறித்து ஔவையார் இவ்வாறு செவ்வையாக விளக்கியிருக்கிருர். கவிகளின் பொருள்களையும் குறிப்புகளையும் சுவைகளையும் கருத்தூன்றி உணர வேண்டும்.

நல்ல கருமங்களைச் செய்யுங்கள்; அவை தருமங்களாய் வருகின்றன; அவற்ருல் நீங்கள் அரிய பல இன்பங்களை அடையலாம்; அவ்வாறு செய்யாமல் இருந்தால் எவ்வழியும் இடர்களே காண்பீர்! எனப் பாட்டி இங்கே நன்கு காட்டியுள்ளாள்.

"பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்." (ஔவையார்)

என்றது நுண்ணிய பொருளுடையது. எண்ணி யுணர வுரியது.

பிற உயிர்களுக்கு இரங்கி யருளுகிற உபகாரி நிலத்தில் பயிர் எவ்வழியும் செழித்து விளையும் என்பதை இது விளக்கியுளது.

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்துஓம்பி
மிச்சில் மிசைவான் புலம். (குறள், 85)

விருந்தினரை முன்பு ஊட்டிப் பின்பு உண்ணும் உபகாரி நிலத்தில் வித்தும் விதைக்கவா வேண்டும்? என்று தேவர் இப்படி வினவியிருக்கிறார். எரு இட வேண்டுமா? நீர் பாய்ச்ச வேண்டுமா? என்று கேட்கவில்லை. விளைவுக்கு வித்து எவற்றினும் தலைமையானது. அதுகூட வேண்டியதில்லை; புண்ணியம் ஒன்றிருந்தால் போதும்; அந்தப் புண்ணியவான் எண்ணியபடியெல்லாம் நிலம் நன்கு விளையும் என இது இங்கு விளக்கியுள்ளது.

நந்தனார் யாதும் விதையாமலே கட்டு முக்கலங்கள் காண கதிர் படி நெல்லு காண மட்டில்லா விளைவு கண்டான் மாதவன் என்றது எதனால்? இதனைக் கருதிக் காண வேண்டும்.

வித்தும் இடவேண்டும் கொல்லோ? விடையடர்த்த
பத்தி யுழவன் பழம்புனத்து--மொய்த்தெழுந்த
கார்மேகம் அன்ன கருமால் திருமேனி
நீர்வானம் காட்டும் நிகழ்ந்து. (இயற்பா)

திருமழிசையாழ்வார் இவ்வாறு பாடியிருக்கிறார். வள்ளுவர் வாய்மொழியை இது வரைந்து வந்துள்ளது. இந்த ஒப்புமை நிலை ஓர்ந்து ஆராய்ந்து காலமுறை தேர்ந்து கொள்ள வுரியது. உருகிய அன்பன் நிலத்தில் திருமாலே கருமேகமாய்த் தோன்றிப் பெரும் போகங்களைத் விளைத்தருளுவார் என இது உணர்த்தியுள்ளது.

மனிதன் எண்ணியபடி யாதும் நடவாது; அவன் பண்ணிய புண்ணியம் இருந்தால் அது எண்ணரிய மேன்மைகளை இனிது விளைத்து இன்பங்களை அருளும் என்பது எளிது தெளிய வந்தது.

எண்ணி ஒருகருமம் யார்க்கும்செய் யொண்ணாது
புண்ணியம் வந்தெய்து போதல்லால்-- கண்ணில்லான்
மாங்காய் விழஎறிந்த மாத்திரைக்கோல் ஒக்குமே
ஆங்காலம் ஆகும் அவர்க்கு. (நல்வழி 4)

ஒரு குருடன் கையில் கோல் இருந்தது; வழியைத் தடவி நடத்தற்கு அது அவனுக்கு உதவியாய் நின்றது. ஒரு சோலைவழியே

ஒரு நாள் மாலையில் அவன் போனான்; அங்கே மாமரங்கள் நிறைந்திருந்தன; நல்ல மாந்தோட்டம் என்று பிறர் சொல்லக் கேட்டான்; மாம்பழங்களை அவன் உண்ண விரும்பினான்; அந்த ஆசையால் தன் கையில் இருந்த கோலை மரத்தின் மீது அவன் ஓங்கி வீசினான். கனிந்த பழம் ஒன்று அயலே போய் விழுந்தது; அவ் வழியே சென்றவன் அதனை விரைந்து எடுத்து உண்டு உவந்து போனான். கோலை இழந்தமையால் குருடன் கால் தடுமாறி வருந்தினான். சிறிது புண்ணியம் இருந்தமையால் வழிப் போக்கனுக்கு அவன் எண்ணாமலே மாம்பழம் கிடைத்தது; குருடன் முயன்றும் கிடையாது போயது; அத்தோடு கோலும் தொலைந்தது. புண்ணியம் பொருந்தாத முயற்சியால் பொருள் கைகூடாது; கையிலிருந்ததும் கழிந்து ஒழிந்து போம்; அவன் வருந்தி யுழல்வான் என்பது இங்கே இதனால் தெளிய வந்தது.

உற்ற புண்ணியம் தருவதைப் பெற்ற தாயும் தரமுடியாது.

இந்த அரிய புண்ணியத்தை மருவி அதிசய நிலையை அடைக.

---

750 மண்ணில் அரசாய் மணிமுடிபூண் டாளலும்
விண்ணில் அமரராய் மேவலும்—புண்ணியத்தின்
பேறே அதனைப் பெறாது கழிவரேல்
ஈரேழ் பிறப்பும் இழிவு. (ய)

இ-ள்

இந்த உலகத்தில் மணிமுடி புனைந்து அரசராய் ஆளுதலும், அந்த உலகத்தில் தேவராய் அமர்ந்து சிறந்த இன்ப போகங்களை நுகர்ந்து வாழுதலும் புண்ணியத்தால் வந்தனவே; இந்த அரிய உறுதிநலனைப் பெறாது கழிவரேல் ஈரேழு பிறவிகளும் இழிவாம்.

புண்ணிய விளைவுகள் புலன் கொள வந்தன.

அறிவு கல்வி செல்வம் முதலிய கருவிகளால் அடைய முடியாத அரிய பெரிய மகிமைகளை யெல்லாம் புண்ணியத்தால் எளிதே அடைந்து கொள்ளலாம். தேவர் கருதியபடியெல்லாம் உரிமையோடு தருகிற கற்பக தருவினும் மனிதன் எண்ணியபடியெல்லாம் இனிது அருளுகிற புண்ணியம் யாண்டும் உயர்ந்தது.

பொருளை ஈட்டுகிறவனை விடப் புண்ணியத்தை ஈட்டுகிற வன் பெரிய பாக்கியவான். தான் செய்கிற நல்ல கருமங்களால் மாத்திரம் ஒருவனுக்கு உயர்ந்த தருமம் விளைந்து விடாது. உள் ளம் தூய்மையாய்ச் சத்தியம் தயை நேர்மை முதலிய நீர்மை கள் தோய்ந்து நிலைத்து வந்த பொழுதுதான் புண்ணியம் தழைத்து வருகிறது. அது வரவே எவ்வழியும் செவ்வையான இன்பபோகங்களும் இனிய மகிமைகளும்பொங்கி வருகின்றன.

ஒருவன் அரசனாய்த் தலை சிறந்து திகழ்வதும், தேவனாய் நிலையுயர்ந்து நிற்பதும் புண்ணியத்தாலேயாம். அதிசய நிலைகளை யெல்லாம் எவரும் துதி செய்யும்படி அது ஆக்கியருளுகிறது. அதனை யுடையவன் யாண்டும் மேன்மையாய் ஓங்குகிறான்; அதனை இழந்தவன் எங்கும் இழிந்தவனாய்த் தாழ்ந்து படுகிறான்.

உலகெலாம் காக்கும் ஒருவன்; ஒருவன்
உலகெலாம் காலால் உழன்றும்--விலையுண்டாங்கு
ஆராது நல்கூரும் என்றால் அறம்பாவம்
பாராதது என்னேஇப் பார். (பாரதம்)

தருமத்தின் உயர்வையும் பாவத்தின் இழிவையும் இது ஒருங்கே வரைந்து காட்டியுள்ளது. ஒருவன் அரசனாய் அரிய போகங்களை நுகர்ந்து இன்புறுவதும், ஒருவன் அடிமையாய்க் கூலி வேலை செய்து குடிக்கக் கூழும் கிடையாமல் துன்புறுவதும் எதனால்? ஒத்த மனிதருள் இத்தகைய வேற்றுமைகளுக்குக் காரணம் என்ன? முன்னவன் புண்ணியம் புரிந்தவன்; பின்னவன் பாவம் படிந்தவன்; இந்த உண்மையை ஈண்டு உணர்ந்து கொள்ளவும்.

எண்ணரிய மகிமைகளுடைமையால் புண்ணியம் கடவுள் உருவமா எண்ணவந்தது. முழுமுதல் பரமன் என்று சீர்மையாக் கூற வேண்டுமானால் புண்ணியம் எவ்வளவு நீர்மை நிறைந்தது என்பதைக் கூர்மையாய் ஓர்ந்துகொள்ளலாம்.

“நோக்கிற்றுக் காமன் உடல்பொடியாக; நுதி விரலால்
தாக்கிற்று அரக்கன் தலைகீழ்ப்படத்; தன் சுடர்வடிவாள்
ஒக்கிற்றுத் தக்கன் தலைஉருண்டோடச்; சலந்தரனைப்
போக்கிற் றுயிர்பொன்னி சூழ்மருதாளுடைப் புண்ணியமே.”
[மருதூர்மும்மணி]

சிவபெருமானைப் புண்ணியம் என்று இது குறித்துள்ளமை காண்க. தருமமூர்த்தி என்பார் புண்ணியன் என்றார்.

"புண்ணிய! புராதன! புதுப்பூங் கொன்றைக்
கண்ணி வேய்ந்த கைலை நாயக!"

எனப் பரமனை இவ்வாறு பட்டினத்தார் பாடியிருக்கிறார்.

புண்ணியம் எனும் நின்உயிர் போயினால்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?
(இராமா, மீட்சி, 232)

பரதன் உயிரைப் புண்ணியம் என்று கோசலை இப்படிக் கூறி யிருக்கிறாள். எண்ணரிய பொருளை இது மருவி வந்துள்ளது.

புண்ணிய நறுநெயில் பொருவில் காலமாம்
திண்ணிய திரியினில் விதிஎன் தீயினில்
எண்ணிய விளக்கவை இரண்டும் எஞ்சினால்
அண்ணலே அவிவதற்கு ஐயம் யாவதே?
(இராமா கிளைகண்டு; 75)

தசரதன் இறந்தான் என்றதை அறிந்து இராமன் வருந்தி அழுத பொழுது வசிட்டர் இவ்வாறு உறுதி கூறித் தேற்றியிருக்கிறார். உடலில் உயிர் ஒளி செய்து வாழ்தற்குப் புண்ணியம் மூல காரணம் என்பதை இதில் குறித்துள்ள உவமையால் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். புண்ணிய நறு நெய்யில் எரிந்து வந்த விளக்கு என்றது தசரதன் சிறந்த இராச போகங்களை அனுபவித்து உயர்ந்த நிலையில் ஒளிசெய்து வந்துள்ளமை தெரிந்து கொள்ள.

புண்ணியம் புரிந்தவர் உயர்ந்தவராய்ப் போகங்களை நுகர் கின்றனர். அதனை இழந்தவர் தாழ்ந்தவராய்ச் சோகங்களில் உழல்கின்றனர். போகங்களும் சோகங்களும் புண்ணிய பாவங் களின் விபாகங்களே. போகி என்று இந்திரனுக்கு ஒரு பெயர். ஆகவே அவனது அரிய இனிய போக நிலைகள் தெரிய வந்தன.

அறம் சிறப்பையும் இன்பங்களையும் அருளுகின்றன. அதனை மறந்தவர் அவற்றை யிழந்து இழி துயரங்களை மருவு கின்றனர். தருமம் ஒருவிய அளவில் சிறுமைகள் வருகின்றன.

அறத்தாறு இதுஎன வேண்டா; சிவிகை
பொறுத்தானோடு ஊர்ந்தா னிடை. (குறள், 37)

புண்ணியத்தின் பெருமையை நேரே கண்ணுரக் கண்டு கொள்ளுங்கள்; அதைக் குறித்து வேறே நான் விரித்து உரைக்க வேண்டியதில்லை எனத் தேவர் இவ்வாறு உரைத்திருக்கிறார். பல்லக்கில் ஒருவன் அமர்ந்து செல்கிறான்; சிலர் அதனைச் சுமந்து போகின்றார்; மேலே சுகமாயிருப்பவன் புண்ணியம் புரிந்தவன், கீழே வருந்தி நடப்பவர் அதனை இழந்து நின்றவர்; இந்த உண்மையை உலகம் தெளிவாய்த் தெரிந்துகொள்ள அந்தச் சிவிகைக் காட்சி சிறந்த சாட்சியாய் உணர்த்தியுள்ளது.

மனிதர்கள் யாண்டும் விழைந்து நுகருகிற இன்ப போகங்கள் யாவும் புண்ணியத்திலிருந்தே விளைந்து வருகின்றன. எண்ணிய சுகங்களை யெல்லாம் புண்ணியம் உடையவர் எளிதே அடைந்து எவ்வழியும் உவந்து உயர்ந்து வருகின்றனர்.

கண்ணிய தருதற்கு ஒத்த கற்பக தருவும் என்ன
உண்ணிய நல்கும் செல்வம் உறுநறுஞ் சோலை ஞாலம்
எண்ணிய இன்பம் அன்றித் துன்பங்கள் இல்லையான
புண்ணியம் புரிந்தோர் வைகும் துறக்கமே போன்றதன்றே.

(இராமாயணம்)

மதங்க முனிவர் இருந்து தவம் புரிந்த இனிய சோலையைக் குறித்து இது வந்துள்ளது. மதுரமான கனிகளையும் குளிர் நிழல்களையும் உதவி அமைதியாய் யாருக்கும் ஆனந்தம் புரிந்து வரும் அதன் புனித நிலையும் முனிவர் வாசமும் இனிது உணர வந்தன.

எண்ணிய இன்பம் எல்லாம் புண்ணியத்தால் வரும்: அதனையுடையவர் சுவர்க்க போகிகளாய்ச் சுகித்திருப்பர் என இங்கே உணர்த்தியிருப்பது நுனித்து நோக்கத் தக்கது. தான் செய்த நன்மையே இன்ப நலங்களாய் யாண்டும் எய்த வருகின்றது.

செல்வமும் போகமும் சிறப்பும் சீர்த்தியும் பல்வகை நலங்களும் நல்வினையின் பயன்களாகவே வருதலால் அதனை யுடையவன் எல்லா இன்பங்களையும் எளிதே அடைகிறான்; அஃது இல்லாதவன் யாதும் இல்லாதவனாய் எங்கும் அல்லலே யுறுகின்றான்.

"பூர்வ ஜன்ம மந்து புண்யம்பு சேயநி
பாபி தநமுகு ஆச படுட யெல்ல
வித்த மறசி கோய வெதகிந சந்தம்பு,"

(வேமநம்)

"முன் சன்மத்தில் புண்ணியம் புரியாமல் பாபியா யிருந்தவர் பின்பு செல்வத்துக்கு ஆசைப்படுவது விதைக்காமல் இருந்து விட்டுப் பின் விளை போகம் பெற விழைவது போலாம்" எனத் தெலுங்கு மொழியில் வேமஙர் இங்ஙனம் விளம்பியுள்ளார்.

ஒருவன் செய்கிற நல்ல கருமங்கள் தருமமாய் மருவி அவனுக்கு அரிய மகிமைகளை அருளுகின்றது. வினை, விதி, தெய்வம் என்பன கரும பலன்களை ஊட்டி வருவதைக் காட்டி வருகின்றன. செய்த வினை விளைவு தெய்வம் என எய்தி மிளிர்கிறது.

தெய்வம் என்றால் என்ன? என்று ஓர் அரசன் ஒரு பெரியவரைக் கேட்டான். அந்தக் கேள்வியும் விடையும் வடமொழியில் நிகழ்ந்தன. அரிய பொருளுடைய அவை அயலே வருகின்றன.

> தைவம் கிம்? — தெய்வம் என்பது என்ன?
>
> யத்ஸுகிர்தம் — நீ செய்யும் நல்ல காரியமே.
>
> க: ஸுகிர்தி? — நல்வினை யுடையவன் யார்?
>
> ஸ்லாக்யதேசய: ஸத்பி: — நல்லவர்களால் புகழ்ந்து சொல்லப் பெறுபவன்.

தான் செய்கிற நல்ல கருமமே தெய்வமாய் வந்து மனிதனுக்கு இனிய சுகங்களை அருளுகின்றது என்பதை இதனால் அறிந்து கொள்ளுகிறோம். அரிய சுவர்க்க போகங்கள் யாவும் நல்வினையின் பயன்களாகவே அமைந்துள்ளன. மனிதன் இங்கே செய்த புண்ணியத்தின் அளவே விண்ணில் நண்ணியிருந்து போகங்களை நுகர்கின்றான்; அப் புண்ணியம் தீர்ந்தவுடன் விண்ணை இழந்து மீண்டு இம் மண்ணில் பிறக்க நேர்கின்றான்.

> "தேதம் புக்த்வா ஸ்வர்க்க லோகம் விசாலம்
> க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி." (கீதை, 9-21)

"விசாலமான சுவர்க்க லோகத்தில் இனிய போகங்களை அனுபவித்துப் புண்ணியம் தீர்ந்தவுடனே அவர் இம் மண்ணுலகத்தை அடைகின்றனர்" எனக் கண்ணன் இன்னவாறு அருச்சுனனுக்குப் புண்ணிய நிலையைப் போதித்திருக்கிறான்.

எவ்வழியும் இன்பங்களுக்கு மூலகாரணம் புண்ணியமே; அவ்வாறே துன்பங்களுக்குப் பாவம் காரணமாயுள்ளது.

இருமை இன்பங்களும் தெய்வீக நிலையும் புண்ணியத்தால் வருகின்றன; சிறுமைத் துயர்களும் தீனப் பிறப்பும் பாவத்தால் நேர்கின்றன. நிலைமை தெளிந்து தலைமை பெறுக.

புண்ணியவான் எங்கும் புகழ்மிகுந்து பொன்மலைபோல்
கண்ணியமா ஓங்கிக் கதித்துள்ளான்---பண்ணியபுன்
பாவப் பதர்கள் படுதுயர மாயிழிந்து
கூவப் படுவார் குலைந்து.

உண்டவனை நஞ்சுகொல்லும் உள்ளத்தே தீயஎண்ணம்
கொண்டவனும் அன்றே கொலையாகி---மண்டியுயிர்
புக்கவழி யெல்லாம் புலைத்தீமை யேபெருகித்
துக்கமே காண்பன் தொடர்ந்து.

புண்ணிய பாவங்களின் நிலைகளைக் குறித்து வந்துள்ள இவை ஈண்டு எண்ணி உணர வுரியன புண்ணியம் அமுதம்; பாவம் நஞ்சு; நஞ்சை யாண்டும் தீண்டலாகாது; அமுதத்தையே பேணி அமரனாக வேண்டும். அதுவே உறுதியான உய்தியாம்.

புண்ணியம் ஒருவனை அரசன் ஆக்கும்; தேவன் ஆக்கும்; அரிய பல மேன்மைகளையும் இன்ப போகங்களையும் அருளும்; அதனை மறந்து விடின் எவ்வழியும் இழி துயரங்களே விளையும்; ஆதலால் யாதும் மறவாமல் அதனை உரிமையோடு உறவாய் மருவிக் கொள்ளுங்கள். அது அரிய பெரிய பிறவிப் பேறும்.

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

புண்ணியம் கண்ணியமான கதி.
அருள் நீர்மையால் அது அமைந்து வருகிறது.
மனத் தூய்மையால் மருவி விளைகிறது.
அது இன்ப போகங்களை இனிது அருளுகிறது.
கற்பக தருவினும் அது அற்புதத் திரு.
பொருள் இன்பங்கள் அதன்வழி எழுகின்றன.
புனித எண்ணம் புண்ணியம் ஆகிறது.
கடவுளும் அதன் பெயரால் விளங்குகிறார்.
இருமையிலும் அது பெருமை தருகிறது.
மன்னன் எனத் தேவன்என மகிமை புரிகிறது.

எரு-வது புண்ணியம் முற்றிற்று.

# எழுபத்தாறுவது அதிகாரம்.

## அ ர சு.

அஃதாவது அரசனுடைய நீர்மை சீர்மைகளின் நிலைமை. உலகத்தை ஆளும் தலைமை அரிய புண்ணியப் பேற்றால் அமைந்து பெரியமகிமைதோய்ந்து வருகிறது. அந்த உண்மையை உணர்ந்து உயர்வு தெளிந்து கொள்ள அதன் பின் இது வைக்கப்பட்டது.

751 இறைவன் ஒருவன் இருத்தல்போல் இங்கும்
இறைவன் ஒருவன் இசைந்தான்—இறைவன்தான்
தோன்றாமல் நின்று துணைபுரிவன்; தொல்லரசன்
தோன்றி யருளும் துணை. (க)

இ-ள்.

கடவுள் ஒருவர் எங்கும் நிறைந்திருக்கிறார்; அதுபோல் அரசனும் இங்கு அமைந்திருக்கிறான்; அவன் தோன்றாமல் நின்று துணை புரிந்து வருகிறான்; இவன் நேரே தோன்றி வந்து அரசு புரிந்து ஆருயிர்களைப் புரந்து அருளுகின்றான் என்க.

இறைவன் என்பது கடவுளுக்கு ஒரு பெயர். எங்கும் நிறைந்துள்ளவன்; என்றும் இருப்பவன்; எல்லாம் அறிபவன்; யாவும் வல்லவன் என்னும் பொருள்களை அது மருவியுள்ளது. ஒரு பொருளைக் குறித்து வரும் பெயர் அதன் சீர்மை நீர்மைகளை நேர்மையாத் துலக்கிக் கொண்டிருக்கின்றது. நேர்ந்த பெயர்களுக்கு உரிய பொருள்களின் காரணங்கள் ஓர்ந்து சிந்திக்கத் தக்கன. சொல்லும்பொருளும் தொடர்புதோய்ந்து வந்துள்ளன.

அதிசய மகிமைகளை விளக்கிக் கடவுளுக்கு உரிமையாய் அமைந்திருக்கும் இறைவன் என்னும் இப் பெயர் அரசனுக்கும் வரிசையாய் இசைந்திருக்கிறது. இந்த நாம அமைதி அவனுடைய நேம நியதிகளையும் நெறிமுறைகளையும்விளக்கியுள்ளது.

அரச ஆட்சியின் இயல்புகளை இறைமாட்சி என்று தேவர் குறித்திருக்கிறார். ஆட்சிக்குறிப்பைக் காட்சிப் படுத்தியிருப்பதில் அரியபொருள்கள் பெருகி மாட்சிகள் பல மருவியிருக்கின்றன.

அகில உலகங்களையும் இறைவன் காத்து வருகிருன்; அவனது அமிசமாய் அரசன் ஒரு தேசத்தைக் காக்க நேர்ந்துள்ளான். காப்பு முறைகள் கருதி யுணரத் தக்கன.

அரசன் அன்று கேட்கும்; தெய்வம் நின்று கேட்கும்.

என்பது பழமொழி. உலக மக்களுக்குத் தலைமையாய் நின்று ஆதரவு புரிந்து முறை செய்து வருவார் இருவரது நிலைமை நீர்மைகளை இது இவ்வாறு குறித்து வந்துளது. ஒருவன் குற்றம் செய்தால் அரசன் தண்டனை அவனுக்கு நேரே விரைந்து கிடைக்கும்; தெய்வ தண்டனை கொஞ்சம் பொறுத்துத்தான் வரும். முன்னது உடலை வருத்தி உள்ளத்தைத் திருத்துகிறது; பின்னது வினைப் போகமாய் உயிரை வருத்தி உய்தி புரிகின்றது.

கண் எதிரே காணும் தெய்வமாய் அரசன் காட்சி புரிந்திருத்தலால் மக்களுடைய நன்மை தீமைகளைக் கடிது நாடி முடிவு செய்தருளுகிருன். நாட்டம்நாட்டின்நலத்தைநீட்டுகிறது.

ஒரு நாட்டிலுள்ள மனித சமுதாயம் அமைதியாகவும் ஒழுங்காகவும் வாழ வேண்டுமானுல் அங்கே ஒரு தகுதியான தலைவன் ஆளவேண்டும். தலைமையில் நிலைமைகள் நிலவுகின்றன.

தாய் தந்தை மனைவி மக்கள் முதலாக ஒரு குடும்பத்தில் பலர் குழுமி யிருந்தாலும் அதனைச் சீர்மையோடு நடத்த வுரிய நீர்மையாளன் அதற்கு இயல்பாய் நேர்ந்து நிற்கிருன். இயற்கை நியமம் குடியையும் படியையும் இனிது இயக்கி வருகிறது. ஒரு குடி அதன் தலைவனுல் இயங்கி வருதல்போல் படியும் அதன் தலைவனுல் உயர்ந்து நடந்து ஒளிமிகுந்து திகழ்கிறது.

உணவும் உடையும் உயிர்களுக்கு எப்படி அவசியமோ அப்படியே சமுதாயத்துக்குத் தலைவன் தேவையாயுள்ளது. அரசனுக்குத் தலைவன் என்று ஒரு பெயர் தனி உரிமையாய் அமைந்திருக்கிறது. உடலுக்குத் தலைபோல் உலகிற்கு அரசன் ஒளிபுரிந்து நிற்கிருன். உரிய உரிமை அரிய மகிமையாயுளது.

நெல்லும் உயிர் அன்றே; நீரும் உயிர் அன்றே;
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம். (புறம், 186)

நெல் இருந்தாலும் நீர் இருந்தாலும் அரசன் இல்லையானுல் மாந்தர் இனிது வாழ இயலாது என மோசி கீரனுர் என்னும் சங்கப்

புலவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். உலகம் மன்னனை உயிர் ஆக உடையது என்றது அவனது நிலைமை தலைமைகளை நினைந்து தெளிய வந்தது. நீர்மை நோக்கியே சீர்மை நேர்ந்துள்ளது.

நெல்உயிர் மாந்தர்க் கெல்லாம் நீர்உயிர் இரண்டும் செப்பின்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழல் இலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலம் தன்னுள் நாமவேல் நம்பி என்றான்.
(சீவகசிந்தாமணி, 2908)

நெல்லும் நீரும் மக்களுக்கு உயிராதாரமா யிருந்தாலும் மன்னனே அவர்க்கு உண்மையான உயிர் என இது உணர்த்தியுள்ளது. மாந்தர் வாழ்வு வேந்தனால் விளங்கி வருகிறது.

மன்னுயிர் ஞாலக்கு இன்னுயிர் இறை. (பெருங்கதை, 2-11-17)

வையம் மன்னுயிர் ஆக அம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னன். (இராமா, மந்தரைசூழ், 17

உலகுக்கும் அரசுக்கும் உள்ள உறவுரிமையை இவ்வாறு பல நூல்களும் குறித்துள்ளன. வையம் உயிர் மன்னன் உடல் என்றது உன்னி யுணரவுரியது. உடல் இல்லை ஆனால் உயிர் உருவாய் இயங்காது; அரசன் இல்லையானால் உலகம் சரியாய் நடவாது. உடலை மருவிய உயிர் போல் அரசை மருவிய போது தான் உலகம் வரிசையாய் இயங்கி வழிமுறை விளங்கி வரும்.

வயிரவான் பூண்அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிரெலாம் தன்உயிர் ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில் சென்று நின்றுவாழ்
உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்.
(இராமா, அரசியல், 10)

தசரதன் உலகத்தைப் பரிபாலித்து வந்த நிலைமையை இது உணர்த்தியுள்ளது. உயிரை எவ்வழியும் உரிமையோடு உடம்பு பேணி வருதல்போல் உலகை இவன் பேணி வந்த நீர்மையை இது கூர்மையாக் காண வந்தது. உலகிற்கு அரசன் உயிர் என்று பலர் கூறி வந்துள்ளனர்; உடம்பு என்று கம்பர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். இதன் நயமும் சுவையும் நாடி நுகரவுரியன. அறிவு நுகர்ச்சி அரிய பெரிய ஆனந்த நிலையமாம்.

பல்லாயிரம் மக்கள் நிறைந்த பெரிய தேசத்தை அரசன் தேசு பெறக் காத்து வருதலால் ஈசனது அமிசம் என அவன் எண்ண நேர்ந்தான். நேரவே இறை என்னும் பெயரை முறையே பெற்றான். பேரும் சீரும் பெருமகிமை யுடையன.

இறைகாக்கும் வையகம் எல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின். (குறள், 547)

உலகத்தை அரசன் காப்பான்; அவனை முறை காக்கும் எனத் தேவர் இவ்வாறு நிறை தூக்கிக் காட்டியிருக்கிறார். முறை= தரும நீதி. நீதி நெறியே அரசனுக்கு அதிசய ஆற்றலை அருளி வரும் ஆதலால் அதனை அவன் பேணி வரும் அளவு பெருமை பெருகி வரும் என்பது தெரிய வந்தது. இறை என ஈசன் பெயரால் அரசனைக் குறித்தது அவனது திவ்விய நிலைமை கருதி.

"நராணும் ச நராதிபம்." (கீதை, 10-27)

"மனிதருள் நான் அரசன்" எனக் கண்ணன் இவ்வண்ணம் கூறியுள்ளான். காவல் தெய்வம் காவலன் என நின்றது.

"திருவுடைமன்னரைக்காணின் திருமாலைக்கண்டேனே என்னும்"
[திருவாய்மொழி]

குலமகட்குத் தெய்வம் கொழுநனே; மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்---அறவோர்க்கு
அடிகளே தெய்வம்; அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. (நீதிநெறிவிளக்கம்,27)

மன்னர் திருமாலின் அமிசமாய் மருவி வந்துள்ளனர்; மாந்தர் அனைவருக்கும் அவர் தெய்வமே யாவர் என இவை குறித்திருக்கின்றன. குறிப்புகள் அவருடைய சிறப்புகளையும் பொறுப்புகளையும் விளக்கி உலக ஆட்சியின் காட்சியைத் துலக்கியுள்ளன.

Kings are like stars-they rise and set—they have
The worship of the world, but no repose. [Shelley]

"அரசர் விண் ஒளிகள்போல் மண்ணில் விளங்கி மறைகின்றனர்; உலகம் தொழுது வணங்கும் மகிமை யுடையவர்; ஆயினும் அவர்க்கு அமைதியான ஆறுதல் இல்லை" என ஷெல்லி என்னும் ஆங்கிலக்கவிஞர் அரசரைக் குறித்து இங்ஙனம் பாடியிருக்கிறார்.

"Princes are like to heavenly bodies" [Bacon]

"அரசர் தெய்வ வுருவினர்" என பேக்கன் இவ்வாறு கூறியிருக்கிறார். அரிய புண்ணிய நிலைகளை மருவி வந்தவர் ஆதலால் பெரு மகிமைகளை யுடையராய் அரசர் யாண்டும் பேர் பெற்றுள்ளனர். அதிசய ஆற்றல்கள் அமைந்திருத்தலால் தெய்வம் என்று வேந்தர் துதிசெய்யப்பெற்றனர். துதிமொழிவிதிவழியேவிளங்கியது.

ஒருமையால் துன்பம் எய்தும் ஒருவனை உரிமையாலே
திருமையான் முயங்கும் செல்வச் செருக்கோடு திளைப்ப நோக்கி
இருமையும் ஒருமையாலே இயற்றலின் இறைவன் போலப்
பெருமையை உடைய தெய்வம் பிறிதினி இல்லை யன்றே.

(சூளாமணி)

தான் கருதியபடியே அரசன் எவரையும் ஆக்கவும் அழிக்கவும் வல்லவன்; ஆதலால் அவன் மெய்யான ஒரு தெய்வமே எனச் சுச்சுதன் என்னும் மதிமான் இங்ஙனம் உரைத்திருக்கிறான். அரசனை இறைவன் என்று குறித்து அவனது தெய்வீக நிலையை விளக்கியுள்ள இது இங்கே விழைந்து சிந்திக்கத்தக்கது.

---

752 நீராழி சூழும் நிலவலயத் தெல்லையெலாம்
ஓராழித் தேரோன் ஒளிர்தல்போல்—பாராளும்
மன்னன் புகழினால் வானுலகம் எங்குமே
இன்னொளி செய்வன் இருந்து. (உ)

இ-ள்.

கடல் சூழ்ந்த உலகம் முழுவதும் சூரியன் தோன்றி ஒளி செய்கின்றான்; அதுபோல் நெறியுடைய அரசன் தனது அரிய புகழொளி எங்கும் வீசி விண்ணும் மண்ணும் விரிந்து விளங்குவான்; இவனது ஒளியும் அளியும் உயிர்கள் நலமுற உதவி வரும் என்க.

அரசனை ஆதவனோடு நேர் வைத்தது வரிசையும் மரபும் வகைமையும் தகைமையும் கருதி. அவனுடைய ஒளியால் உலகம் விழித்துத் தொழில் செய்து வருகிறது; இவனுடைய அளியால் உயிர்கள் களித்து எழில் செய்து வாழ்கிறது. அவன் தேர் ஏறி உலாவுகின்றான்; இவனும் தேரில் அமர்ந்து சீரில் திகழ்கின்றான்.

"நீயே அலங்குளைப் பரீஇ யிவுளிப்
பொலங்தேர் மிசைப் பொலிவு தோன்றி
மாக்கடல் நிவந்து எழுதரும்
செஞ்ஞாயிற்றுக் கவினை" (புறம், 4)

சூரியன்போலத் தேரில் எழில் மிகுந்து விளங்கும் தேசாதிபதியே! என்று சோழ மன்னனை நோக்கிப் பரணர் இவ்வாறு பாடியிருக்கிறார். கதிரின் உவமை காட்சிகள் பல காண வந்தது.

விரியிருட் பகையை ஓட்டித் திசைகளை வென்று மேல் நின்று
ஒரு தனித் திகிரி யுந்தி உயர்புகழ் நிறுவி நாளும்
இருநிலத்து எவர்க்கும் உள்ளத் திருந்தருள் புரிந்து வீய்ந்த
செருவலி வீரன்என்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்.
(இராமா, கங்கை 49)

பகை இருளை ஓட்டித் திசைகள் தோறும் தனது ஆணையைச் செலுத்திப் புகழ் ஒளி பரப்பி உலக உயிர்கள் உவந்து வாழ எவ்வழியும் அருள் புரிந்து ஆதரித்து வந்த தசரத மன்னன் போல் சூரியன் அன்று மறைந்தான் என வரைந்து கூறியிருக்கும் இந்த அருமைப் பாசுரம் இங்கே உரிமையோடு உணர்ந்து கொள்ளவுரியது. உலக ஒளியாய் அரசு நிலவியுள்ளது.

சீர்மை நீர்மைகளில் சிறந்து மன்னன் மாநிலத்தை இனிது காத்து வருதலால் மாந்தர் அவனை இன்னுயிர்போல் எண்ணி மகிழ்ந்து எவ்வழியும் கண்ணியமாப் போற்றி வர நேர்ந்தார். அவனுக்கு வாய்ந்துள்ள பெயர்கள் யாவும் காரணங்கள் தோய்ந்து பூரண வுரிமைகள் பொருந்தி வந்திருக்கின்றன.

அரசன் என்னும் பேர் இனிமை செய்பவன் என்னும் பொருளையுடையது. ரசம் = இனிமை. அதனை இயல்பாக மருவியுள்ளவன் அரசன் எனவும் இராசன் எனவும் நேர்ந்தான்.

மன்னன்- மாண்புடையவன்.
வேந்தன்- மேலான ஆணையை விதிப்பவன்.
நிருபன்- நரர்களின் தலைவன்.
புரவலன்- புரத்தலில் வல்லவன்.
பூபாலன்- பூமியைக் காப்பவன்.
ஏந்தல்- எவரினும் உயர்ந்தவன்.

பெருமான்- அரிய பெருமையாளன்.
நரபதி- மனிதரின் அதிபதி.
குரிசில்- கருணை தோய்ந்த கவுரவம் நிறைந்தவன்.
அண்ணல்- அணுகியவரை ஆதரிப்பவன்.
சக்கிரி- தக்க ஆணை புரிபவன்.
பார்த்திபன்- உலகத்தை ஆள்பவன்.
கோ- தலைமையான நிலையினன்.
பொருநன்- பொருதிறல் வாய்ந்தவன்.
கொற்றவன்- வெற்றியை விழைபவன்,
காவலன்- யாவரையும் பாதுகாப்பவன்.
தலைவன்- உலகில் உயர்ந்தவன்.
இறைவன்- எங்கும் திறை பெறுபவன்.
மகிபன்- மகியாளும் மகிமை வாய்ந்தன்.

இன்னவாறு மன்னிய காரணங்களோடு மன்னன் மாண்பமைந்து வந்துள்ளான். உற்ற இயல்புக்குத் தக்கபடி உரிமை தோய்ந்து உறுதி சூழ்ந்து உயர்ந்து நிற்கின்றான்; காரியம் செய்து வரும் அளவு அரசன் சீரியனாய்ச் சிறந்து திகழ்கின்றான்.

இந்நாட்டு ஆட்சிமுறை மிக்க மாட்சிமை யுடையது; எந்நாடும் வியந்து புகழ முன்னாள் விளங்கி நின்றது. குடிசனங்கள் மன அமைதியோடு எவ்வழியும் இனிது வாழ்வதையே புனிதமான தனது வாழ்வின் பயனாக அரசன் கருதி வந்தான். யாதொரு குறையும் யாரிடமும் நேராதபடி நாடி முறைசெய்து வந்தமையால் நாடு பீடும் பெருமையும் யாண்டும்பெருகிவந்தது.

யாருக்காவது ஏதேனும் இடையூறு நேர்ந்தால் அதனை விரைவில் வந்து எளிதே தெரிவிக்கும்படி சோழ மன்னன் ஓர் வழிகோலி வைத்திருந்தான். தனது அரண்மனை எதிரே ஒரு மண்டபம் அமைத்து அதன் நடுவே பெரிய மணி ஒன்றைத் தொங்கவிட்டிருந்தான். குறைபாடு நேர்ந்தவர் அந்த மணியை அடித்தால் அரசன் விரைந்து அவரை அழைத்து வேண்டியதைச் செய்தருளுவன். அவ்வாறு அமைத்த மணி நெடுங்காலமாய் யாதும் அசையாதிருந்தது. தேசத்தில் யாருக்கும் யாதொரு

குறையும் இல்லை என்பதை அந்த அசையாமணி இசையாய் அறிவித்து அரசனுடைய நீதிமுறையை நேரே துலக்கி நின்றது.

"ஆடுங் கடைமணி நாவசையாமல் அகிலம் எங்கும்
நீடுங் குடையைத் தரித்த பிரான்."

என உலகம் அம்மன்னது ஆட்சியின் மாட்சியைப் போற்றி வந்தது. அவ்வாறு வருங்கால் ஒருநாள் அந்த மணி அதிசயமாய் ஒலித்தது; அரசன் விரைந்து வந்து பார்த்தான்; ஒரு பசு மணி அருகே நின்று தன் கொம்பால் அசைப்பதைக் கண்டு வியந்து நெருங்கி விழைந்து நோக்கினன். கண்ணீர் பெருகி ஓட அப் பசு கதறி நின்றது. அரசன் மறுகி உருகினன்; யாது நேர்ந்தது? என அயலே நின்றவரை ஆவலோடு விசாரித்தான்; அரசனுடைய அருமைத் திருமகன் தேர் ஊர்ந்து வீதியில் செல்லுங்கால் அந்தப் பசுவினுடைய இளங் கன்று பாய்ந்து வந்து தேரில் வீழ்ந்து இறந்துபோயது என்று உரைத்தார். அரசன் பரிந்து வருந்தினன்; தனது ஆட்சியில் கேடு நேர்ந்ததே என்று நெஞ்சம் நெடிது கலங்கினன்; மந்திரிகள் வந்து மன்னனைத் தேற்றி வேத விதிப்படி அதற்கு ஓர் பரிகாரத்தைச் செய்து விடலாம் என்று உரைத்தார். மன்னன் மறுத்தான்: "அந்தப் பசு அடைந்த துன்பத்தை நானும் அடைய வேண்டும்" என்று துணிந்து மொழிந்தான். மகனை அழைத்தான்; அவன் வந்து வணங்கினன்; அக் கன்று இறந்த வீதியில் அவனைக் கிடத்தினன்; தானே தேரைச் செலுத்தினன்; ஊரார் எல்லாரும் ஓலமிட்டு அழுதார்; தெய்வத் திருவருளால் இறந்த கன்று எழுந்தது; மடிந்த மகனும் மகிழ்ந்து நின்றான். விதியின் விளைவுகள் வியந்து காண நேர்ந்தன.

ஒருமைந்தன் தன்குலத்துக்கு உள்ளான்என்பதும் உணரான்
தருமம்தன் வழிச்செல்கை கடன்என்று தன்மைந்தன்
மருமம்தன் தேராழி உறஊர்ந்தான் மனுவேந்தன்
அருமந்த அரசாட்சி அரிதோமற்று எளிதோதான். (1)

அங்கிலையே உயிர்பிரிந்த ஆன்கன்றும் அவ்வரசன்
மன்னுரிமைத் தனிக்கன்றும் மந்திரியும் உடன்எழலும்
இன்னபரிசு ஆனன்என் றறிந்திலன் வேந்தனும்யார்க்கும்
முன்னவனே முன்நின்றால் முடியாத பொருள் உளதோ? (2)

அடிபணிந்த திருமகனை ஆகமுற எடுத்தணைத்து
நெடிதுமகிழ்ந் தருந்துயரம் நீங்கினான் நிலவேந்தன்;
மடிசுரந்து பொழிதீம்பால் வருங்கன்று மகிழ்ந்துண்டு
படிநனைய வரும்பசுவும் பருவரல்நீங் கியதன்றே. (3)

(பெரியபுராணம்)

இங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள் மிகுந்த வியப்புகளை விளைத்து நிற்கின்றன. அரசனுடைய ஆட்சி முறையும் தரும நீதியும் கருமவீரமும் உலக உள்ளங்களை உருக்கியுள்ளன.

இப்படி ஒரு அரசன் இருந்தால் அந்த நாட்டு மக்கள் அவனை எப்படிப் போற்றி நிற்பர்! உலகம் முழுவதும் உழுவலன்போடு அவனை உவந்து கொண்டாடுமே யன்றி அயலே மயலாய் வேறு ஏதேனும் எண்ணுமா? இத்தகைய உத்தம அரசர்கள் மறைந்து போனமையால் வேறு சில தலைமைகள் கிளைத்து மாறுபாடுகளை விளைத்து மீறி வர நேர்ந்தன.

குடி அரசு, சனநாயகம், சமுதாய ஆட்சி எனச் சில வகையான நிலைகள் கால வேற்றுமைகளால் படி படிய வந்தன. எது எப்படி வந்தாலும் அது ஒரு தலைவனைத் தாங்கிக் கொண்டே நிற்கிறது. எவனும் அந்த நிலைக்கு வந்து சேரலாம். வந்தவனுடைய நிலைமைக்குத் தக்கபடி தலைமையும் நிலைத்து வருகிறது. பரம்பரையாய் உரம் பெற்று வராமல் புது புதிதாய் வரம் பெற்று வருதலால் வந்த தலைமை எந்த வகையிலும் உண்மையான கம்பீரமில்லாமல் சிந்தை தளர்ந்து தியங்கி யிருந்து காலம் கழிந்தவுடன் சாலவும் அயர்ந்து கோலம் ஒழிந்து போகிறது.

முடி அரசு என்னும் மொழி விழுமிய பொருளுடையது. அரச வாசனை தோய்ந்து உரிமையோடு தொடர்ந்து வருதலால் தேச மக்கள் அவன் பால் பேரன்பு பூண்டு பெருகி வருகின்றனர். அவனும் தன் ஆவிபோல் யாவரையும் ஆதரவோடு பேணி வருகின்றான். பாதுகாப்பு பண்பு படிந்து பயன் சுரந்துவருகிறது.

வையம் இன்புறின் மன்னன் இன்புறும்;
வெய்யது ஒன்றுறின் தானும் வெய்துறும்;
செய்ய கோலினாய்! செய்ய லாவதன்று
ஐய தாரினான் அருளின் வண்ணமே. (1)

வீவிலங்கு நீர் வேலி வாழ்பவர்க்கு
ஆவி ஆபவர் அரசர் ஆதலால்
காவல் ஓவுங்கொல் என்று கண்படாள்
மாவல் தானைஅம் மன்னர் மன்னனே. [சூளாமணி]

பயாபதி என்னும் அரசனைக் குறித்து இவை வந்திருக்கின்றன. மாந்தரை அவன் பேணி வந்திருக்கும் நீர்மையை உணர்ந்து சீர்மையை வியந்து சிந்தை உவந்து கொள்கிறோம்.

தன் ஆட்சியில் இருந்த மக்களை மாத்திரமல்ல; மிருகங்களையும் பறவைகளையும் அரசர் பரிவோடு பாதுகாத்து வந்துள்ளனர் என்பதை முன்னம் குறித்த மன்னவன் சரிதம் நன்கு விளக்கியுள்ளது. நீதிமுறை நிறைபெருந் தவமாய் நிலவுகின்றது.

"வாயில் கடைமணி நடுநா நடுங்க
ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத் தான்தன்
அரும்பெறல் புதல்வனை ஆழியின் மடித்தோன்."
(சிலப்பதிகாரம், 20)

சோழ மன்னன் புரிந்த அரிய நீதியைப் பாண்டிய மன்னனுக்குக் கண்ணகி இப்படி எடுத்துக் காட்டியிருக்கிறாள். இந்த அரசனது நீதி நிலையைச் சோதிக்க ஈசனும் எமனும் பசுவும் கன்றுமாய் இசைந்து அதிசய நிலையில் அங்கே வந்துள்ளனர். அந்த வுண்மையை அயலே வருவதில் காணலாம்.

"ஈசன் பசுவாகி ஏமன் ஒரு கன்றாகி
வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் அம்மானை;
வீசுபுகழ் ஆரூரின் வீதிவந்தார் ஆமாயின்
காசளவு பாலும் கறவாதோ அம்மானை?
கன்றையுதை காலி கறக்குமோ அம்மானை." (பசுபதி)

ஈசன் பசு; ஏமன் கன்று; கன்றையுடைய பசு நிறையப் பால் கறக்குமே அவ்வாறு அது கறந்ததோ? இல்லை; ஏன்? கன்றை உதை காலி கறக்குமோ? என்று பதில் வந்துள்ளது. பொருளை உணர்ந்து இதன் சுவையை நுகர்ந்துகொள்ள வேண்டும். கவியின் சுவையை நுகர்வார் புவியில் அருகியுள்ளனரே! என்று ஒரு கவி மறுகியுள்ளார். சமனை உதைத்த சிவனே இவனது அரச நீதியை உலகம் அறியச் செய்ய அவ்வாறு வந்தருளினர்.

அரசன் தரும நீர்மையுடையனாய் முறை புரியின் அவன் எதிரே தெய்வமும் உவந்து வரும்; திவ்விய மகிமைகளைத் திருவருள் விழைந்து புரியும் என்பது இங்கே தெரிய வந்தது.

இந்த மன்னனை மனு நீதி கண்ட சோழன் என உலகம் இன்றும் உவந்து துதித்து வருகின்றது. நெறி முறையான ஆட்சிக்கு இவன் ஓர் சிறந்த சாட்சியாய் நிலவி நிற்கின்றான். அரிய செயல் செய்துள்ள இவன் பெரிய புகழுடையனாய் விளங்கியுள்ளமையால் அரச மரபு முழுவதும் இவனை வியந்து புகழ்ந்து விதிமுறையே பரசி வர நேர்ந்தது.

அவ்வருக்கன்மகன் ஆகிமனு மேதினி புரந்து
அரிய காதலனை ஆவினது கன்றுநிகர் என்று
எவ்வருக்கமும் வியப்ப முறை செய்த கதையும்
இக்குவாகு இவன் மைந்தன்என வந்தபரிசும்.
(கலிங்கத்துப்பரணி)

இந்தவாறு பல நூல்களும் உவந்து புகழ இவன் உயர்ந்து திகழ்கின்றான். நீதி வழுவாத மன்னன் ஆதி பகவன் அருள் எய்தி யாண்டும் சோதி வீசித் துலங்குவான் என்பதை இவன் இனிது துலக்கியிருக்கிறான். முறைமை அளவே இறைமை விளைகிறது.

---

753. காப்புக் கடவுளெனக் காவலனிப் பூவுலகுக்
காப்புற் றிருக்கும் அமைதியால்—பூப்புற்று
வாழும் உயிரினங்கள் வாழ்த்தி அவனடியைச்
சூழும் உரிமை சுரந்து. (௩)

இ-ள்.

சீவகோடிகளைக் காத்தருளும் கடவுளைப் போல் இவ்வுலகிற்கு அரசன் உறுதியாய் அமைந்திருக்கிறான்; ஆகவே எல்லாரும் அவனை வணங்கி வாழ்த்தி மரியாதைகளோடு உரிமை செய்து வருகிறார்; விழுமிய நிலைமைகள் வழிமுறையே செழுமியுள்ளன.

உலகங்களும் உயிரினங்களும் பல வகை நிலைகளில் தோன்றிப் பரந்து விரிந்திருக்கின்றன. பிறந்த பிராணிகளுள் மனித இனம் சிறந்து வந்துள்ளன. அறிவும் கட்டுப்பாடும் பழக்க வழக்கங்களும் வாழ்க்கை வசதிகளும் அதனோடு தொடர்ந்து

வளர்ந்து வந்திருக்கின்றன. அந்த வரவில் நாட்டுக் கூட்டங்களுக்கு அங்கங்கே தலைவன் அமைய நேர்ந்தான். தலைமைத் தானம் வழி முறையாய் வரவே அது விழுமிய நிலையில் விளங்கி நின்றது. சிறப்புரிமையின் செழுமை நோக்கி அரசனிடம் மக்கள் பயமும் பத்தியும் படிந்து வந்தனர். அரிய ஒரு தெய்வமாகவே கருதி வையம் அவனை வணங்கி வர நேர்ந்தது.

திலக நீள்முடித் தேவரும் வேந்தரும்
உலக மாந்தர்கள் ஒப்பஎன்று ஓதுப;
குலவுதார் மன்னர்க்கு யான்இது கூறுவன்
பலவு மிக்கனர் தேவரிற் பார்த்திவர். (1)

அருளுமேல் அரசு ஆக்குமன்; காயுமேல்
வெருளச் சுட்டிடும் வேந்தெனு மாதெய்வம்
மருளி மற்றவை வாழ்த்தினும் வையினும்
அருளி ஆக்கல் அழித்தலங்கு ஆபவோ? (2)

உறங்கு மாயினும் மன்னவன் தன்ஒளி
கறங்கு தெண்டிரை வையகம் காக்குமால்;
இறங்கு கண்இமையார் விழித்தே யிருந்து
அறங்கள் வெளவ அதன்புறம் காக்கலார். (3)

யாவ ராயினும் நால்வரைப் பின்னிடின்
தேவர் என்பது தேறுமிவ் வையகம்;
காவல் மன்னவர் காய்வன சிந்தியார்
நாவினும் உரையார் நவை அஞ்சுவார். (4)

[சீவக சிந்தாமணி]

இந்தப் பாவினங்கள் இங்கே கருதிக் காணவுரியன. தேவரினும் அரசர் சிறந்தவர் எனக் காரணங்களைக் குறித்துக் காட்டி இவை விளக்கியுள்ளன. குறிப்பு நிலைகள் கூர்ந்து உணரத் தக்கன.

கடவுளை நினைந்து நினைந்து நெகிழ்ந்து உருகி நின்ற அன்பர்கள் அரசே! என்று அவரை ஆர்வத்தோடு அழைத்திருக்கின்றனர். பரமபதியும் அரசன் என வரிசையோடு பரச நின்றான்.

அரசே! பொன்னம்பலத்தாடும் அமுதே!
அரசனே! அன்பர்க்கு அடியனேனுடைய அப்பனே!

(திருவாசகம்)

அரசே! நின் திருக்கருணை அல்லாது ஒன்றை
அறியாத சிறியேன் நான் அதனால் முத்திக்
கரைசேரும் படிக்குனருட் புணையைக் கூட்டும்
கைப்பிடியே கடைப்பிடியாக் கருத்துட் கண்டேன்.
(தாயுமானவர்)

இறைவனை அரசே! என்று பிரியமா அழைத்திருத்தலால் அந்தப் பதத்தின் அருமையும் பெருமையும் அறியலாகும். இறைவனே அரசனாய் வந்து இந்நாட்டை ஆண்டிருக்கிறார். அந்த ஆட்சியும் மாட்சியும் அதிசயக் காட்சிகளாய்த் துதிசெய்ய நின்றன.

"தென்னாடுடைய சிவனே!
எந்நாட் டவர்க்கும் இறைவா!"

சிவபெருமான் இந் நாட்டைத் தனி உரிமையா ஆண்டு வந்ததை மணிவாசகப் பெருந்தகை இவ்வாறு மனம் உருகி உரைத்திருக்கிறார். பரமன் பாண்டிய மன்னனாய்த் தோன்றி மதுரையிலிருந்து அரசு புரிந்தருளினார். அந்தமும் ஆதியும் இல்லாத அவன் சுந்தர பாண்டியன் என்னும் பேரோடு துலங்கியிருந்து இந்த நாட்டை ஆண்டு வந்தது அரச குலத்துக்கெல்லாம் அரிய மகிமையாய் நீண்டு யாண்டும் பெரிய வியப்பை விளைத்து நின்றது.

"கடுக்கைமலர் மாற்றி வேப்பலர் சூடி
ஐவாய்க் காப்புவிட்டு அணிபூண் அணிந்து
விரிசடை மறைத்து மணிமுடி கவித்து
விடைக்கொடி நிறுத்திக் கயல்கொடி எடுத்து
வழுதி ஆகி முழுதுலகு அளிக்கும்
பேரருள் நாயகன்." (கல்லாடம்)

சடைமறைத்துக் கதிர்மகுடம் தரித்துநறுங்
கொன்றையந்தார் தணந்து வேப்பம்
தொடைமுடித்து விடநாகக் கலன்அகற்றி
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி
விடை நிறுத்திக் கயல் எடுத்து வழுதிமரு
மகனாகி மீன நோக்கின்
மடவரலை மணந்து உலக முழுதாண்ட
சுந்தரனை வணக்கம் செய்வாம். (1)

கறை நிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்
உறை நிறுத்திய வாளினால் பகையிருள் ஒதுக்கி

மறை நிறுத்திய வழியினுல் வழுதியாய்ச் செங்கோல்
முறை நிறுத்திய பாண்டிநாட்டு அணியது மொழிவாம்.(2)
(திருவிளையாடற் புராணம்)

இறைவன் பாண்டிய வேந்தனுய் வந்து இந்த நாட்டை ஆண்டிருந்ததை இவற்ருல் அறிந்து கொள்ளுகிருேம். சீவ ராசிகளை என்றும் எங்கும் தனியுரிமையா யினிது காப்பவன் தேவ தேவனே. அந்த வரிசையில் அரச பதவியும் ஓர் நிலையமாய் அமைந்திருக்கிறது. பரிபாலனமுறை பரம நீர்மையாய் நின்றது.

உயிரினங்களை நன்கு காத்து வரும் அளவு அரசன் உயர் நிலையில் ஒளி செய்து வருகிருன். காவலன் என்னும் பெயர் அவனது கடமையை நன்கு காட்டி வருகிறது. தன் நிலைமையை ஓர்ந்து எவ்வழியும் செவ்வையாகக் குடிகளைப் பேணி வரின் திவ்விய மகிமைகளை அவன் காணுகிருன். பேணுது பிழைபடின் ஆனுத பழிகளை அடைந்து அவலமாயிழிந்து படுகிருன்.

அரசு முறையில் சிறிது வழுவினும் பெரிய பிழைகள் நேர்ந்துவரும் ஆதலால் தீது யாதும் நேராதபடி யாண்டும் அவன் கண்ணுேடிக் காத்து வரவேண்டும். அவ்வாறு காத்துவரின் உலகம் அவனை வாழ்த்தி வணங்கி வழிபாடுகள் செய்து வரும்.

இன்சொலால் ஈத்தளிக்க வல்லாற்குத் தன்சொலால்
தான்கண் டனைத்திவ் வுலகு. (குறள், 387)

இனிய சொல்லும் ஈகையும் பாதுகாப்பும் உடைய அரசனுக்கு உலகம் முழுவதும் உரிமையாய்ப் பணி செய்து வரும் என்பது இதனுல் அறிய வந்தது. தரும நீர்மைகள் தழுவி வரும் அளவு பெருமைகள்பெருகி இருமையும்இன்பங்கள்சுரந்து வருகின்றன.

இனிய சொல்லினன் ஈகையன் எண்ணினன்
வினையன் தூயன் விழுமியன் வென்றியன்
நினையும் நீதி நெறிகடவான் எனின்
அனைய மன்னற்கு அழிவும் உண்டாங்கொலோ?
[இராமா, மந்தரை 18]

ஒரு மன்னன் இன்ன நிலையில் இருக்க வேண்டும் என இது உணர்த்தியுள்ளது. குறிப்பு மொழிகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. இனிய நீர்மைகள் அரிய மேன்மைகளை அருளுகின்றன.

754. கண்ணை இமைகாக்கும் காட்சிபோல் காவலனிம்
மண்ணை இனிதோம்பி வாழுமேல்—விண்ணை
விழைந்திருக்கும் தேவருமிம் மேதினியை நோக்கி
விழைந்து மகிழ்வர் வியந்து. (ச)

இ-ள்.

கண்ணை இமை காக்கும் காட்சிபோல் இம் மண்ணை மன்னன் இனிது பேணி வருவான் ஆனால் விண்ணை விழைந்து மகிழ்ந்திருக்கின்ற தேவர் யாவரும் இவ் வுலகை உவந்து நோக்கி விரைந்து வருவர் என்பதாம்.

உலகிற்கு அரசன் உயிர் என அமைந்துள்ளமையான் இதனைப் பேணி வருவது இயல்பான இனிய உரிமையா யிசைந்தது. உடலை எவ்வழியும் உயிர் பிரியமா ஓம்பி வருகிறது. தேகாபிமானம் என்னும் பழமொழி தேகியின் நிலைமையை விளக்கியுள்ளது. யாரும் தூண்டாமலே வேண்டிய யாவும் உடலுக்கு உயிர் செய்துகொண்டு வருகிறது. அதுபோல் உலகை அரசர் ஓம்பி வருகின்றார். உயிரும் உடலும் என உலகும் அரசும் மருவி உரிமை புரிந்து வருதலால் பலவும் நலமாய் நடந்து வருகின்றன.

தன் உயிரைப் போலவே குடிசனங்களையும் அரசன் கருதிப் பேணி வருதலால் அவனைத் தெய்வமாகவே உரிமையோடு வழிபாடு செய்து அவர் கிழமை தோய்ந்து வருகின்றார். இதமாய் இனிமை செய்து வருபவனை வையம் தனிமையாக உயர்த்தித் துதித்து மதித்துவருகிறது. மதிப்பு மன்னியசெயலால்மருவியது.

"தன்னுயிர் ஆமென உலகில் தங்கிய
மன்னுயிர் அனைத்தையும் புரக்கும் மாட்சியான்"
(நைடதம்)

நள மன்னனுடையஆட்சிநிலையை இது காட்சிப்படுத்தியுள்ளது.

புரவலன் என அரசனுக்கு ஒரு பெயர் அமைந்திருக்கிறது. உயிர்களை அவன் புரந்து வரும் நீர்மையால் அது விளைந்து வந்தது. புரத்தல் = பாதுகாத்தல். எவ்வழியும் சிரத்தையோடு பரிந்து பாதுகாத்தருளுதல் புரத்தல் என நேர்ந்தது. தன் ஆட்சியை அவ்வாறு அவன் காத்து வந்தமையால் புரக்கும் மாட்சியான் எனக் காப்பு நிலையின் சீர்த்தியோடு போற்ற நின்றான்.

கண்ணுக்கு இமை என்ன உரிமையோடு இசைந்துள் ளதோ அன்னவாறே மண்ணுக்கு மன்னன் மன்னியுள்ளான். கண்ணில் ஏதேனும் இடறுற நேர்ந்தால் இமை விரைந்து காக்கும்; அதுபோல் நாட்டுக்கு ஏதேனும் அல்லல் நேர்ந்தால் அரசன் ஒல்லையில் அதனை நீக்கித் தன் எல்லையை இனிது காத்தருளுவான். இக் காப்புமுறை இயல்பான நிலையில் விரைவாய் நிகழும் என்பதை உவமைக் குறிப்பால் ஓர்ந்து உணர்ந்து கொள்ளலாம். கண்ணின் நீர்மை நுண்ணிய சீர்மையுடையது.

கண்ணைக் காப்பது கவிந்துள இமையன்றி அயலே
நண்ணி யுள்ளன நயந்துடன் காக்குமோ? பிறந்த
மண்ணைக் காப்பது வந்ததில் பிறந்தமன் குலத்தோர்க்கு
ஒண்ணுமே அன்றி ஒழிந்துளோர் செய்வரோ? உரிமை.

(வீர பாண்டியம்)

கண் ஊன்றி எண்ணி யுணர ஈண்டு இது நண்ணி வந்துள்ளது.

ஆங்கிலேயர் ஈங்கு வந்து வணிக முறையில் ஆங்காங்குத் தேசங்களை வளைந்து முடிவில் அரசாள மூண்டு தன்பால் நீண்டு புகுந்து திறை கேட்ட பொழுது இத் தென்னாட்டு மன்னன் அவரை நோக்கி இன்னவாறு கூறியிருக்கிறான். கண்ணில் தூசி விழ நேர்ந்தால் இமை காக்குமே யன்றிக் கை கால்கள் காவா; என் நாட்டிலுள்ள எனது குடி சனங்களை நான் இனிது பேணுவேன்; ஆறாயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள நீவிர் உரிமையோடு பேணமாட்டீர்; பொருள் வரவிலேயே கண்ணாய் அருளின்றி மருளே புரிவீர்; பழமை தோய்ந்து கிழமை வாய்ந்து உரிமை புரிந்து பெருமை பெருகி வருகிற எனது அரசில் சிறுமைபுக நீர் நுழையாதீர்; ஒல்லையில் விலகி எல்லை கடந்து போய் விடும்! என அவ் வல்லவன் வாய்விட்டுச் சொல்லி யுள்ளது ஈண்டு உள்ளி யுணர்ந்து உண்மை தெளிய வுரியது. பாஞ்சாலங் குறிச்சி மன்னன் வீரபாண்டியன் இந் நாட்டின் வீர நிலையை யாண்டும் நிலை நாட்டியுள்ளான்; அவனுடைய சரிதம் அரிய மகிமை வாய்ந்தது; உலகமக்கள் யாவரும்ஓர்ந்துஉணரத்தக்கது.

அரசன் நன்கு பேணி வருவான் ஆயின் நாடு எங்கும் செழித்துப் பொங்கிய வளங்களோடு பொலிந்து விளங்கும். மாந்தர் உவகை மீதூர்ந்து யாண்டும் இனிது வாழ்ந்து வருவார்.

மாந்தர் மனமகிழ்ந்து மாநிலத்தில் வாழ்வதெல்லாம்
வேந்தர் புரியும் விருந்து.

திருந்திய பண்போடு இருந்து அரசன் புரந்து வரின் அங்கே அரிய பல நன்மைகள் சுரந்து வரும். வரவே யாவரும் இனியராய் உயர்ந்து வாழுவர்; தேவரும் அந்த வாழ்வை ஆவலோடு விழைந்து மகிழ்வர்; போகலோகமாய் அதுபொலிந்து விளங்கும்.

தன்னுடைய நாட்டை எவ்வழியும் செவ்வையாக நெறி முறையோடு கண் ஊன்றி மன்னன் பேணி வரின் குடி சனங்கள் மடி முதலிய இளிவுகள் படியாமல் யாண்டும் தெளிவடைந்து ஒளிபுரிந்து வருவர்; நாடும் வளங்கள் பல விளைந்து பீடும் பெருமையும் நிறைந்து யாண்டும் உயர்ந்து விளங்கும்.

தேசம் தேசு மிகுந்து திகழ்வதும், மாசு படிந்து மருள்வதும் அரசனது பாதுகாப்பின் உயர்வினுலும் அயர்வினுலும் முறையே அமைகின்றன. ஆட்சிநிலையேமாட்சியை அருளுகிறது.

கண்ணை இமை காப்பது போல மண்ணை அரசன் பாது காக்கவேண்டும் என்றது காப்பின் உரிமையையும் கடமைகளையும் தலைமை நிலைமைகளையும் கருதியுணர வந்தது.

கண்எனப் படுவ மூன்று; காவலன் கல்வி காமர்
விண்ணினைச் சுழல ஓடும் வெய்யவன் என்னும் பேர;
எண்ணினுள் தலைக்கண் வைத்த கண்ணது இல்லை ஆயின்
மண்ணினுக்கு இருளைநீக்கும் வகைபிறிது இல்லை மன்னே.

குடிமிசை வெய்ய கோலும் கூற்றமும் பிணியும் நீர்சூழ்
படிமிசை இல்லை ஆயின் வானுள்யார் பயிறும் என்பார்?
முடிமிசைத் திவள வேந்தர் முறைமுறை பணிய விம்மி
அடிமிசை நரலும் செம்பொன் அதிர்கழல் அரசர் ஏறே.
(சூளாமணி)

அரசனது நிலையையும் ஆட்சி முறையையும் குறித்து வந்துள்ள இந்தப் பாசுரங்கள் இரண்டையும் நன்கு கருதியுணரவேண்டும்.

சூரியன், கல்வி, அரசு ஆகிய இந்த மூன்றும் கண்என உள்ளன.

சூரியன் வெளியே உலக இருளை நீக்குகிறுன்.

கல்வி உள்ளே மடமை இருளை நீக்குகிறது.

அரசன் உள்ளும் புறமும் எல்லா இருள்களையும் நீக்குகிறுன்.

கதிர் ஒளி விரிந்திருந்தாலும், கல்வியறிவால் மனிதர் உயர்ந்திருந்தாலும் அரசன் நெறிமுறையோடு நாட்டைச் சரியாகப் பாதுகாவானாயின் யாவும் பரிதாபமாய் நிலை குலைந்து போம். கண் என இங்கே எண்ணிய மூன்றனுள் காவலன் முன்னுற நின்றது எண்ணி உணர வுரியது. அரசன் நீதி முறையே சரியாக ஆட்சி புரியின் அந் நாடு சிறந்த மாட்சி யுடையதாம்; வறுமை மடமை பகைமை முதலிய சிறுமைகள் அங்கே சேரா; செல்வ வளங்களும் நல்ல நிலைகளுமே பல்கி நிற்கும்; பிற நாடுகளும் அந் நாட்டைப் பெருமையாப் புகழ்ந்து வரும்; பொன்னுட்டவரும் விழைந்து மகிழ்ந்து வியந்து வருவர். பூமியில் ஒரு சுவர்க்கம் போலத் தன் நாட்டை அரசன் பேணி வரவேண்டும்.

---

755 எல்லா வளங்களும் எய்தி இருந்தாலும்
நல்ல அரசொருவன் நண்ணுனேல்—வல்லஇஞ்
ஞாலம் இனிது நடவாதே மீகாமன்
காலழிந்தால் என்னும் கலம். (ரு)

இ-ள்.

நாட்டில் செல்வ வளங்கள் பல செழித்திருந்தாலும் நல்ல ஒரு அரசன் அங்கு இல்லையானல் இவ் வுலக வாழ்வு இனிது நடவாது; தலைவன் இல்லாத கலம்போல் யாவும் நிலை குலைந்து போம்; அங்ஙனம் போகாமல் போற்றி வருபவன் புரவலனே.

மனித சமுதாயத்தின் வாழ்வுகள் இனிது நடைபெறப் பல வகையான வசதிகள் தேவையா யுள்ளன; அவை யாவும் மேவியிருந்தாலும் யாவரும் அமைதியாய் வாழ அங்கே ஒரு தலைவன் நிலையாயிருக்க வேண்டியது நியமமா நேர்ந்தது. சிறிய கூலித் தொழிலாளர் கூட்டத்தையும் சரியா நடத்த ஆண்டு ஒரு மேலாள் வேண்டியிருப்பதை அனுபவத்தில் கண்டு வருகிறோம். கண்காணி என்னும் பெயர் அவன் கண்டு புரிந்து வரும் காட்சியை நேரே காட்டி நாட்டின் ஆட்சியை நினைவூட்டிவருகிறது.

பூபாலன் என அரசனுக்கு ஒரு பெயர். பூமியை நன்கு பரிபாலித்து வருபவன் என்பது அதற்குப் பொருள். ஆகவே பூமியோடு அவனுக்குள்ள தொடர்பையும் காணியாட்சியாய்ப் பேணி வரும் நிலையையும் இதனால் உணர்ந்து கொள்கின்றோம்.

பூபாலன் இல்லையேல் பூமி புலைப்படிந்து
கோபாலன் இல்லாத கோக்கள்போல் — ஓவாமல்
மக்கள் மறுகி மயங்கி யுழலுவார்
பக்கம் சிதைந்து பரிந்து.

தம்மை மேய்த்துப் பாதுகாத்து வரும் கோன் இல்லையானால் பசுக்கள் எப்படி நிலை குலைந்து படுமோ அப்படியே அரசன் இல்லையானால் மக்கள் மறுகி யுழல்வர் என இது குறித்துள்ளது. உவமைக் குறிப்புகள் ஓர்ந்து உணர்ந்து கொள்ளத் தக்கன.

கடலில் ஓடும் கப்பலுக்கு அதனை ஓட்டுந் தலைவன் எவ்வாறு உறுதி பூண்டுள்ளானோ அவ்வாறே உலகில் ஓடும் மனித வாழ்க்கை ஆகிய கப்பலுக்கு அரசன் தலைமை தாங்கி நிற்கின்றான். நீரின் ஓட்டமும் நிலத்தின் ஓட்டமும் நேர்ஒத்து நின்றன.

மீகாமன் அழிந்தால் கலம் என்னும்?

என்றது நிலைமையை நினைந்து தெளிய வந்தது. கலம் = மரக்கலம். மீகாமன் = கலத்தை நடத்தும் தலைவன். மேலாளாய் நின்று ஆழி நிலைகளை ஆய்ந்து நோக்கிக் கலத்தை நலமாச் செலுத்துபவன் ஆதலால் கப்பல் ஓட்டி மீகாமன் என நேர்ந்தான்.

விழுமிய நாவாய் பெருநீர் ஓச்சுநர். (மதுரைக் காஞ்சி)

சிறந்த மரக்கலங்களை நெடிய கடலில் கடிது ஓட்டும் உயர்ந்த மீகாமர் இந்நாட்டில் இருந்து வந்துள்ள நிலையை இது வரைந்து காட்டியுளது. காலநிலைகளை நூல்களால் அறிந்து கொள்கிறோம்.

செலுத்தும் தலைவன் இல்லையானால் கலம் நிலைகுலைந்து அழியும்; அதுபோல் உரிய அரசன் இலனேல் நிலம் பலவகையிலும் சிதைந்து பரிந்துபடும். உலகம் அரசால் ஓடி வருகிறது.

கண்ணுக்கு ஒளிபோல் மண்ணுக்கு மன்னன் மருவியிருக்கிறான்; உரிமையான அவன் இல்லையானால் நிலம் சிறுமையாயிழிவுறும். உறவுரிமை உள்ளி உணர வுரியது.

வள்ளுறு வயிரவாள் அரசில் வையகம்
நள்ளுறு கதிரிலாப் பகலும் நாளொடும்
தெள்ளுறு மதியிலா இரவும் தேர்தரின்
உள்ளுறை உயிரிலா உடலும் ஒக்குமே. (1)

தேவர்தம் உலகினும் தீமை செய்துழல்
மாவலி அவுணர்கள் வைகு நாட்டினும்
ஏவெவை உலகம்என்று இசைக்கும் அன்னவை
காவல்செய் தலைவரை இன்மை கண்டிலம். (2)

முறைதெரிந்து ஒருவகை முடிய நோக்குறின்
மறையவன் வகுத்தன மண்ணில் வானிடை
நிறைபெருந் தன்மையின் நிற்ப செல்வன
இறைவரை இல்லன யாவும் காண்கிலம். (3)

பூத்தநாள் மலரயன் முதல புண்ணியர்
ஏத்துவான் புகழினர் இன்று காறும்கூக்
காத்தனர் பின்னொரு களைகண் இன்மையால்
நீத்தநீர் உடைகலம் நீர தாகுமால். (இராமாயணம்)

இந்த நான்கு கவிகளையும் கவனித்துப் படியுங்கள். பொருள் நயங்களைக் கூர்ந்து நோக்குங்கள். உலகுக்கும் அரசுக்கும் உரிய தொடர்புகளைக் குறித்து வசிட்ட முனிவர் பரதனுக்கு உரைத்து வரும்பொழுது இவ்வாறுஉண்மைகளை விளக்கிக்கூறியிருக்கிறார்.

கதிரும் மதியும் பகல் இரவுகளை விளக்கி வருகின்றன; உயிர் உடலை இயக்கி வருகிறது. தேவர் கந்தருவர் விஞ்சையர் இயக்கர் அசுரர் முதலியோர் வாழுகின்ற எந்த உலகங்களும் தலைவர்களாலேயே நிலவி வருகின்றன. பிரம சிருட்டியில் தோன்றிய சராசரங்கள் யாவும் தமக்கு உரிய தலைமைகளை மேவியே தழைத்து வருகின்றன. யானைக் கூட்டத்திற்கும் தலைமையிருக்கிறது; தலைவனுயுள்ள அந்த யானைக்கு யூதபதி என்று பேர். குரங்குக் கூட்டங்களுக்கும் தலைமையுள்ளது; அந்தத் தலைமைக் குரங்குக்கு யூகபதி எனப் பேர் அமைந்திருக்கிறது. தேனீக்களுக்கும் தலைமை அமைந்துள்ளது. ராணி ஈ என அதன் பெண் இனத் தலைமையைக் கூறி வருதலால் ராசாவின் மேன்மையைத் தெரிந்து கொள்ளலாம். எந்தப் பிராணியும் சொந்தமான ஒரு தலைமையில் வாழ்ந்து வருவது விந்தையாய் விளங்கி வருகிறது. தாய் இல்லாத சேய் இல்லை; தலைமை இல்லாத நிலைமை இல்லை.

இறைவரை இல்லன யாவும் காண்கிலம்.

என முனிவர் இவ்வாறு தெளிவாக விளக்கியுள்ளது விழியூன்றி

உணர வுரியது. இயற்கை நியமங்கள் இங்கே இனிது விளங்கி யுள்ளன. காப்பாளரின் காட்சியும் மாட்சியும் காண நேர்ந்தன.

புண்ணியர், புகழினர் கூக் காத்தனர்.

என்றது இராமனது குல மரபில் வந்த அரசரது மகிமை தெரிய வந்தது கீர்த்திகளை வார்த்தைகளால் வார்த்திருக்கின்றார்.

பெரிய புண்ணியங்களால் அரிய அரசர்கள் அமைந்து வருதலால் புண்ணியர் என அவரது நிலைமை தலைமைகளை எண்ணி யுணர வுரைத்தார். பிறப்பும் சிறப்பும் குறிப்போடு கூடிவந்தன.

இங்ஙனம் தலைமையை மருவி நிலவி வருகிற உலகத்துக்கு ஆதிமுதல் உங்கள் குல மரபு உயர்ந்த நீதி மன்னரை உதவி வந்துள்ளது. அந்த வரிசையில் வந்துள்ள நீ இந்த அரசை ஏற்றருள வேண்டும் என்று பரதனிடம் பரிந்து வேண்டுகின்றார் ஆதலால் அந்த விரத முனிவர் அரசர் நிலைகளை இவ்வண்ணம் வரைந்து கூறினர். கூரிய உரைகள் சீரிய பொருள்களுடையன.

இராமாயண காவியத்தில் இராச தருமங்கள் நிறைந்திருக்கின்றன. அரச நீர்மைகளையும் ஆட்சி முறைகளையும் உரிய பாத்திரங்களின் வாயிலா வெளிப்படுத்தி இடங்கள் தோறும் கம்பர் பெருமான் வரைந்து வைத்திருக்கும் வகைகள் சிறந்த காட்சிச் சாலைகளாய் விளங்கி நிற்கின்றன. காளிதாசர் முதலிய பெரிய கவிகள் ரகுவம்சம் முதலிய நூல்களில் இராச நீதிகளை விரித்துக் கூறியிருக்கின்றார்; ஆயினும் கம்பரது அரசியல் காட்சி அதிசய நிலையில் ஒளி வீசியுள்ளது. கம்பரும் அரசியலும் என அரிய நூல் எழுதும்படி பெரிய உணர்வு நலங்கள் பெருகி யிருக்கின்றன. இருந்து என்ன பயன்? எழுதி என்ன செய்ய? அருமை அறியாமல், அறிவை மதியாமல், தகுதி கண்டு பேணமல் போலிகளை உவந்து கால வேகத்தில் மயங்கிச் சாலவும் மருண்டு வெருண்டு இருண்டு திரிகிற மக்கள் எதிரே தக்கது தலை எடுத்து வருமா?

எந்நாட்டும் பெறலரிய இனியபெருங்
கலைச்செல்வம் இயல்பாய் ஓங்கி
இந்நாட்டில் என்றுமே எழிலோடு
பெருகியுளது இருந்தும் அந்தோ

தந்நாட்டம் தெரியாமல் தனிநாட்டம்
காணுமல் தவறே மண்டிப்
புன்னுட்டம் உடையராய்ப் புலையாடித்
திரிகின்றூர் புன்மை என்னே! (1)

அறிவில்எழும் ஆனந்தம் அறியாமல்
அயல்ஒதுங்கி அவமே பேசிப்
பொறியிலெழு சுவைகளையே பொங்கிஎங்கும்
நுகர்கின்றூர்; புலமை யின்பம்
நெறியிலெழு கலையில்அன்றி நிலைதிரிந்து
புலைபேசி நிமிர்ந்து நிற்கும்
வெறியில்என்றும் விளையாதே; விளைவறியாது
இழிவுறுதல் விளிவே அம்மா! (2)

கலைகளையாம் வளர்க்கின்றேம் காசினியீர்!
என்றுசிலர் கலையின் பேரால்
கொலைகளையே வளர்க்கின்றூர்; கொடுமைகளே
செய்கின்றூர்; குரோத மான
புலைகளையே புரிகின்றூர்; பொய்வஞ்சம்
வீண்பெருமை பொருமை யாதி
நிலைகளையே விளக்கின்றூர்; நேராக
விளைவதனை நினையார் அந்தோ! (3)

தாய்மொழியும் கல்லாமல் தந்தைமொழி
கேளாமல் தனையர் என்று
வாய்மொழிகள் பலபேசி வயிற்றளவில்
குறிக்கோளை வளர்த்து நேரே
பேய்மொழிகள் பேசுதல்போல் பிழையாகப்
பிதற்றுகின்றூர்; பெருமை எல்லாம்
தூய்மொழியில் தோய்நினைவில் தொழிலியலில்
துருவிவரும் தொடர்தல் நன்றே. (4)

(இந்தியத்தாய் நிலை)

இந் நாட்டு நிலையை நினைந்து நொந்து இந்தப் பாட்டுகள் வந்துள்ளன. பாடுதெரிந்து நாடு திருந்தி நலம்பெற **வேண்டும்.**

அரசு முறை புரிவது அரிய செயல். பலவும் ஆராய்ந்து நெறியோடு கருதிச் செய்யின் பெருமை மிகப் பெற்று அரிய

பல பலன்களையும் அரசன் அடைவான். மடி மடமை முதலிய இழிவுகள் படிந்து பிழையாய் அவன் வழுவி யிருப்பின் எவ்வழியும் அழி துயரங்கள் பெருகி விடும்; ஆட்சியும் நழுவி ஒழிய நேரும்; அவலக் கேடனாய் அவன் பழிபட நேர்வான்.

கால்பார் கோத்து ஞாலத்து இயக்கும்
காவற் சாகாடு உகைப்போன் மாணின்
ஊறின் றாகி ஆறினிது படுமே;
உய்த்தல் தேற்றான் ஆயின் வைகலும்
பகைக் கூழ் அள்ளற் பட்டு
மிகப்பல் தீநோய் தலைத்தலைத் தருமே. [புறம், 185]

உலகில் ஆட்சி முறை ஆகிய தேரைச் செலுத்துகிற அரசன் எவ்வகையிலும் தேர்ச்சி பெற்று மாட்சியுடையனா யிருக்க வேண்டும்; அவ்வாறிருந்தால் அந்த ஆட்சி எவ்வழியும் செவ்வையா யினிது நடைபெறும்; அவன் மாண்பு இலனாயின் அது பிழையாயிழிந்து அழிவில் வீழ்ந்துவிடும் என அரசு நிலையை விழிதெரிய விளக்கிப் பேணும் முறையை இது துலக்கியுள்ளது.

தோண்டைமான் இளந்திரையன் என்னும் அரசன் தனது உரிமையை மகனிடம் தரும்பொழுது ஆட்சி நிலைமையை இவ்வாறு காட்சிப் படுத்தியருளினான். தேரைச் செலுத்தும் சாரதி போல் அரசன் பாரைச் செலுத்துகிறான். பாகன் பிழை படின் தேர் பாழாம்; அரசன் வழுவுறின் பார் பாழாம். ஒரு புகை வண்டியைச் செலுத்திச் செல்லுகிற சாரதி குடி வெறியனாய்த் தவறுபடின் வண்டிகள் நொறுங்கிப்போம்; ஏறிச் சென்ற சனங்களும் அல்லலுழந்து அலமந்து அழிவர்; ஒரு நாட்டை ஆளுகிற அரசன் ஆட்சியை மாட்சிமையோடு நன்கு செலுத்த வில்லையானால் நாடு நாசமாம்; குடிசனங்களும் படுதுயரங்களை அடைவர். தேரும் பாரும் ஊர்பவரால் ஒளி பெறுகின்றன.

ஆர்வலம் சூழ்ந்த ஆழி அலைமணித் தேரை வல்லான்
நேர்நிலத்து ஊருமாயின் நீடுபல் காலம் செல்லும்;
ஊர்நிலம் அறிதல் தேற்றாது ஊருமேல் முறிந்து வீழும்
தார்நில மார்ப! வேந்தர் தன்மையும் அன்ன தாமே.
(சீவகசிந்தாமணி).

தனது அரசுரிமையைத் தன் மகனுக்கு அருள நேர்ந்த சீவக

மன்னன் இன்னவாறு அரச நீதியை அவனுக்கு இனிது போதித்திருக்கிறான். நெறி முறைகளை ஓர்ந்து வேந்தர் அரசை நடத்தின் அது வழிமுறையாய் நிலைத்து நெடிது நிலவி வரும்; அவ்வாறு ஆளாராயின் அரசு பாழாயழியும்; அவரும் பழியில் இழிந்து அழிந்து போவர். இவ்வாறு அழிவுகள் நேராமல் விழுமிய நிலையில் அரசை விழியூன்றிப் பேணுக என மைந்தனுக்கு மன்னன் அறிவுறுத்தியிருக்கும் அரச நீதிகள் யாரும் கருதியுணரவுரியன.

அரச பதவி எவ்வளவு பொறுப்புடையது; எத்துணை நெறியோடு கவனித்து நடத்தத் தக்கது! என்பன இங்கே உய்த்துணர வந்தன. இனிய சுக போகங்களை நுகர்ந்து இறுமாந்து இருப்பதுதான் அரசு நிலை என்று கருதின் அது கொடிய மடமையாம். தம் கடமையை மறந்த மடமைகளாலேயே அரசுகள் யாவும் அடியோடு அழிந்து படி மறைய நேர்ந்தன.

கிடைத்த அரசு நெடிது நிலைத்து வரவேண்டுமானால் நேர்ந்த தலைவர்கள் நெறிமுறையோடு நின்று தரும நீதிகளைத் தழுவி எவ்வழியும் ஆட்சியைச் செவ்வையாய் நடத்திவரவேண்டும். சிறிது வழுவினும் பெரிய கேடுகள் பெருகிவிடும் ஆதலால் யாதொரு பிழையும் புகாமல் ஆன்ற நெறியோடு ஒழுகி அரசை ஊன்றி உணர்ந்து வருவதே ஆணையாளர்க்கு யாண்டும் நலமாம்.

உள்ளம் தூய்மையாய் ஓர்ந்து வினை செய்; உலகம் வாய்மையாய் உன்னைத் தேர்ந்து மகிழ்ந்து உரிமை கூர்ந்து கொள்ளும்.

---

756. என்னவகை இன்னல் எதிர்ந்தாலும் தாமேற்று
மன்னுயிர்கட் கின்பருள்வார் மன்னவர்—துன்னுகதிர்
காயும் வெயிலெல்லாம் காத்தினிய நன்னிழலை
ஈயும் மரம்போல் இனிது. (சு)

இ-ள்.

வந்து பாய்கிற சுடுவெயிலைத் தான் தாங்கிக் கொண்டு குளிர் நிழலை இனிது தரும் கனிமரம் போல் அரசர் தனி அமைந்துள்ளனர்; எவ்வளவு இடையூறுகள் நேர்ந்தாலும் அவ்வளவையும் எதிர்த்து நீக்கிக் குடி சனங்களை அவர் இனிது பேணியருளுவர்; அவரது கருமமுறை தரும நிலையமாம் என்க.

அரசு ஆதரவு புரியும் இனிய நீர்மைக்கு மரம் தனி உவமையாய் வந்தது. சீர்மையான அதன் இயல்புகளை யெல்லாம் கூர்மையா ஓர்ந்து பொருள் நிலையைத் தேர்ந்து கொள்ள வேண்டும்.

உறவுரிமைப் பிணைப்புகளால் மனித சமுதாயம் இனிது இயங்கி வருகிறது. பிள்ளையைத் தாய் பேணுவதும், மனைவியைக் கணவன் ஆதரிப்பதும் முதலிய பாசத் தொடர்புகள் யாண்டும் படர்ந்து தொடர்ந்திருக்கின்றன. அந்தத் தொடர்புகளால் உலகம் தொடர்ந்து நடந்து முறையே துலங்கி வருகிறது.

ஒரு நாட்டில் வாழும் மாந்தர் அதனை ஆண்டு வரும் அரசனுக்கு உரிமையான பிள்ளைகள் போல்பவர் ஆதலால் அவரை எவ்வழியும் இனிது பேணும் கடமையை அவன் உடையவனாகின்றான். ஆகவே யாவரையும் அன்புரிமையோடு அவன் ஆதரிக்க நேர்கின்றான். செய்யும் ஆதரவளவே சீர்மை சேர்கின்றது.

தான் வருந்தி முயன்று தன் குடும்பத்தைப் பாதுகாக்கும் ஒரு குடும்பத் தலைவனைப்போல் தன் தேச மக்களை அரசன் பாசத்தோடு பாதுகாத்து வருகின்றான். பிறப்புரிமையான கடப்பாடாய் அது அவனுக்குச் சிறப்பு நிலையில் அமைந்திருக்கிறது.

தான் என்ன இன்னல்களை அடைந்தாலும் தன்னை அடைந்தவரை இனிது ஆதரிப்பவனே உயர்ந்த மன்னனாய் ஒளிபெற்று நிற்கின்றான். அன்னவனை யாவரும் தம் இன்னுயிரா எண்ணி ஏத்தி வருகின்றனர். ஆட்சிஇனியதேல்மாட்சிகள்மருவுகின்றன.

முன்னாளில் இந்நாட்டில் அரசு புரிந்து வந்த அரசர்களிடம் அரிய பல நீர்மைகள் அமைந்திருந்தன. அவருள் ஒரு மன்னனுடைய பண்பாடுகளை அயலே வரும் கவியில் காண வருகிறோம்.

இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத்து அகலமும்
வளி வழங்கு திசையும்
வறிது நிலைஇய காயமும் என்றாங்கு
அவை அளந்து அறியினும் அளத்தற்கு அரியை
அறிவும் ஈரமும் பெருங்கண்ணோட்டமும்
சோறு படுக்கும் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது
பிறிதுதெறல் அறியார் நின்னிழல் வாழ்வோரே;

திருவில் அல்லது கொலைவில் அறியார்;
நாஞ்சில் அல்லது படையும் அறியார்;
திறனறி வயவரொடு தெவ்வர் தேயஅப்
பிறர்மண் உண்ணும் செம்மல்நின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணின் அல்லது
பகைவர் உண்ணா அருமண் ணினையே;
அம்பு துஞ்சும் கடியரணால்
அறம்துஞ்சும் செங்கோலையே;
புதுப்புள் வரினும் பழம்புட் போகினும்
விதுப்புற அறியா ஏமக்காப்பினை
அனையை ஆகன் மாறே
மன்னுயிர் எல்லாம் நின்னஞ் சும்மே." (புறம், 20)

நல்ல ஆட்சியின் சீர்மையையும், அரசனது நீர்மையையும் இது காட்சிப் படுத்தியுள்ளது. கோழியூர் கிழார் என்னும் சங்கப் புலவர் சேர மன்னனை நோக்கி இன்னவாறு பாடியிருக்கிறார். "அரசர் பெரும! உனது அறிவும் அன்பும் கண்ணோட்டமும் எண்ணோட்டம் கடந்தன; நின் குடை நிழலில் வாழ்பவர் இடர் நிலைகள் அறியார்; சோறு சமைக்கும் தீ வெப்பமும் சூரிய வெப்பமும் தவிர வேறு வெம்மை தெரியார்; வானத்தில் தோன்றும் இந்திர வில்லைக் கண்டிருப்பரே யன்றி அயலே பகைவரது வில்லுகளைக் கண்டிரார்: உழுகிற கலப்பைகளைப் பார்த்திருப்பார்; மாற்றாருடைய வாள் வேல் முதலிய படைக் கலங்களைப் பார்த்தறியார்; தரும தேவதை தங்கியுள்ள உனது செங்கோலால் எங்கும் இன்ப நலன்கள் பொங்கியிருக்கின்றன; ஆதலால் யாவரும் ஆவலோடு உன்னைப் போற்றி நிற்கின்றனர்; யாதொரு அல்லலும் நேராமல் நல்ல சுகமாய் என்றும் நீ இனிது வாழவேண்டும் என்று அல்லும் பகலும் உள்ளம் உருகி உரிமையோடு இறைவனை வேண்டி வருகின்றனர்" என ஈண்டிய நண்போடு அரசர் எதிரே புலவர் இவ்வாறு கூறியுள்ளார். குடிகளை அரசன் எவ்வாறு பேண வேண்டும் என்பது இங்கே காண வந்துள்ளது. பொருட் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

உலக மக்கள் எவ்வழியும் அமைதியாய் இனிது வாழும் படி புரிவது அரசனது தனியுரிமையான கடமையாம். அக் கடமையை அவன் நன்கு செய்துவரின் புகழும் புண்ணியமும் அவ

னிடம் பொங்கி வரும்; சீவர்கள் யாவரும் அவனைப் பேரன் போடு புகழ்ந்து யாண்டும் போற்றி வருவர்.

"வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து இனிது அரசு செய்கின்றான்."
(இராமா, அரசியல், 12)

தசரதச் சக்கரவர்த்தி வையத்தைக் காத்து வந்த வகையை இது காட்டியிருக்கிறது. உவமானக் காட்சி பொருளைத் தெளிவா விளக்கி உணர்ச்சிக்கு ஒளியூட்டி யுள்ளது. எளிய ஒரு குடியா னவன்; மனைவியும் நான்கு குழந்தைகளும் உடையவன்; ஒரு ஏக்கர் நிலமே அவனுக்கு உரிமையா யிருந்தது; அதில் விளைந்து வருவதைக்கொண்டுதான் தன் குடும்பத்தை அவன் நடத்த வேண்டும் ஆதலால் அதனை எந்த வேளையும் செவ்வையாக் கவ னித்தான். நன்கு உரம் இட்டு உழுது பண்படுத்திப் பருவம் பார்த்து விதைத்து நீர் பாய்ச்சிக் களைகளை நீக்கிப் பயிர்களை வளர்த்துப் பட்டி முதலிய கெட்டது யாதும் புகாமல் பாது காத்து நெல்லை நிறைய விளைத்து இல்லை இனிது பேணி வந்தான். அதுபோல் வையகம் முழுவதையும் தசரதன் செவ்வையா ஓம்பி ஆட்சி செய்து வந்தான் என்க. செல்வ வளங்கள் நிறைந்த அரசர் பெருமானை வறிஞனோடு ஒப்பவைத்துப் பாதுகாப்பின் பண்பாடுகளை விளக்கியிருக்கும் நுட்பம் உய்த்துணரத் தக்கது. நாட்டைப் பாதுகாப்பதிலேயே தன் நாட்டத்தைச் செலுத்தி வருபவனே நல்ல அரசன் ஆவான். தேசமக்கள் சிறந்த நிலையில் மகிழ்ந்து வாழ்ந்து வரப் புரந்து வருவதே உயர்ந்த ஆட்சியாம்.

---

757 வான்வழங்கி வந்தாலும் மண்விளைந்து தந்தாலும்
கோன்விளங்கி நீதிமுறை கோலாமல்—தான்விழைந்த
வண்ணம் புரியினே வையமெலாம் வெய்யதுயர்
உண்ண உளையும் உயிர். (எ)

இ-ள்.

வானம் பருவ மழைகளைப் பொழிந்தாலும், மாநிலம் மிகுதியான விளைவுகளைத் தந்தாலும் அரசன் இங்கே நெறியோடு அமர்ந்து நீதிமுறை புரியாமல் பொறி வெறியனாய்க் கோது படிந்திருப்

பின் மக்கள் யாவரும் மிக்க துயரங்களை அடைந்து வருந்துவர்.

இது நீதிக் காப்பின் நிலைமையை உணர்த்துகின்றது.

உலகில் நிலவும் உயிரினங்கள் பசித் துயரோடு பிறந்திருக்கின்றன. அந்தப் பசி தீர உணவு தேவை; அவ்வுணவுகள் பயிர்களிலிருந்து விளைந்து வருகின்றன. அவ் விளை பயிர்கள் மழையினல் உயர்ந்து மலர்ந்து பலன் தருகின்றன. ஆகவே, வான மழையும் மண்ணின் விளைவும் மன்னுயிர்க்கு இன்னமிர்தங்களாய் ஈண்டு எண்ண நேர்ந்தன.

உயிராதாரமான இந்த மழையும் விளைவும் வளமாக வாய்ந்திருந்தாலும் அரசன் நெறியோடு தோய்ந்து நிதி புரியானயின் அந் நாடு பீடையாய்ப் பெருந்துயரங்களையே அடையும். நெல் இருந்தாலும் நீர் இருந்தாலும் பொன் இருந்தாலும் பொருள் இருந்தாலும் அரசன் இருந்து முறையாய் ஆளவில்லையானல் யாரும் அங்கே அமைதியாய் வாழமுடியாது; ஆதலால் அவனது ஆட்சியும் நாட்டின் காட்சியும் இங்கு நன்கு காண வந்தன.

வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி. (குறள், 542)

உலகம் மழையால் வாழும்; குடிகள் அரசனது நீதியால் வாழும் எனத் தேவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். பொது வாழ்வும் சிறப்பு வாழ்வும் ஒருங்கே குறிக்கப்பட்டன. கோல் = செங்கோல். யாண்டும் கோடாமல் எவ்வழியும் செம்மையான நேர்மையோடு நீதி புரிவேன் என்பதற்கு அடையாளமாகவே செவ்விய ஒரு கோலை மன்னன் கையில் மாண்பா ஏந்தி யிருக்கிறான்.

அரசனது உள்ளம் செம்மையாய் ஆட்சி புரியின் அவன் செங்கோலன் ஆகிறான். அவ்வாறு ஆயின் அதிசய மேன்மைகள் அவனிடம் பெருகி வருகின்றன. தரும தேவதை உரிமையா உதவி புரிகின்றது. கருதியபடி காரியங்கள் கை கூடுகின்றன.

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோல் அதூஉம் கோடாது எனின். (குறள், 546)

அரசன் நீதி கோடாமல் செங்கோலனு யிருந்தால் வெற்றி புகழ் திரு முதலிய யாவும் அவன்பால் திரண்டுவரும் என்பது இதனல் தெரிய வந்தது. நீதிமுறையால் அரியபலமகிமைகள் விளைகின்றன.

மழைவளம் சுரக்கு மாறும், வயல்நிலம் விளையு மாறும்,
விழையறம் வளருமாறும், வேதநூல் விளங்குமாறும்,
தழைபொருள் ஈட்டுமாறும், சமரிடை வெல்லுமாறும்,
பிழைதப வாழு மாறும், பிறழ்தராக் கோலின் ஆகும்.
(விநாயகபுராணம்)

செங்கோலால் விளையும் விளைவுகளை இது நன்கு விளக்கியுளது.

எங்கும் எவ்வுயிர்க்கும் யாதும் பங்கம் நேராமல் எவ்வழியும் செவ்வையாய் நீதி செலுத்துவேன் என்பதற்கு அறிகுறியாகத் தன் கையில் செங்கோல் தாங்கியுள்ள மன்னன் நிலை தவறிப் பிழை செய்ய நேர்ந்தால் உலகம் பல வகையிலும் அல்லலுழந்து அலமரலடைந்து யாண்டும் அவலமுற நேரும்.

துயர் உண்ண உயிர் உளையும்

என்றது துன்பங்கள் சூழ்ந்து தின்ன மக்கள் துடித்து வருந்துவர் என அவரது வாழ்வின் பரிதாப நிலை தெரிய வந்தது. வேந்தன் வெய்யனுயின் வைய மாந்தர் ஐயோ என்று அலமரலுறுதலால் இருவர் நிலைமையும் ஒருமுகமா யுணர நேர்ந்தது.

அரசன் முறையோடு காவானுயின் வேலி இழந்த பயிர் போல் குடிகள் நிலைகுலைந்து துறைதோறும் துயரங்களையே அடைவர். தன் கடமையை உணர்ந்து முறை புரிந்து அரசன் நாடு காத்து வந்தால் தாய் கைப்பிள்ளைபோல் மக்கள் யாண்டும் மகிழ்ந்து வாழ்வார்; அவன் மடமையாய் மாறுபட்டிருப்பின் பேய்வாய்ப் பிள்ளைபோல் அச்சமும் திகிலும் மண்டி எவ்வழியும் மாந்தர் வெவ்விய துயரங்களோடு வெருவி உழலுவர். இனிய ஆதாரமா யுள்ளவன் கொடியனுகவே நெடிய துன்பங்கள் நீண்டு நின்றன.

நிறந்தலை மயங்க வெம்பி நெடுங்கடல் சுடுவ தாயின்
இறந்தலை பெருகு நீர்வாழ் உயிர்க்கு இடர்எல்லை யுண்டோ?
மறந்தலை மயங்கு செவ்வேல் மன்னவன் வெய்யன் ஆயின்
அறந்தலை மயங்கி வையம் அரும்படர் உழக்கும் அன்றே. (1)

மண்குளிர் கொள்ளக் காக்கும் மரபுஒழிந்து அரசர் தங்கள்
விண்குளிர் கொள்ள ஓங்கும் வெண்குடை வெதும்புமாயின்
கண்குளிர் கொள்ளப் பூக்கும் கடிகயத் தடமும் காவும்
தண்குளிர் கொள்ளு மேனும் தான்மிக வெதும்பு மன்றே. (2)

தீயினம் படர்ந்து வேந்தன் செறுவதே புரியு மாயின்
போயினம் படர்ந்து வாழும் புகலிடம் இன்மை யாலே
வேயினம் படர்ந்த சாரல் வேங்கையை வெருவிப் புல்வாய்
மாயினம் படர்ந்த தெல்லாம் வையகம் படரும் அன்றே. (3)

மறந்தலை மயங்கி வையத்து ஒருவரை ஒருவர் வாட்ட
இறந்தலை யுறுமை நோக்கி இன்னுயிர் போலக் காக்கும்
அறந்தலை நின்ற வேந்தர் அடிநிழல் அன்றி யார்க்கும்
சிறந்தது ஒன்றில்லை கண்டாய் திருமணி திகழும் பூணோய்!

(சூளாமணி)

அரசன் சரியானபடி முறை செய்யவில்லையானால் நாடு எப்படி இருக்கும்? மக்கள் எவ்வாறு மறுகி வருந்துவார்? என்பதை இவை நன்கு வரைந்து காட்டியுள்ளன. பாசுரங்களைக் கருத்தூன்றிப் படித்துப் பொருள்களின் நயங்களை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். மன்னன் காப்பால் மாநிலம் மகிழ்ந்தது.

கடல் காய்ந்து வெதும்பினால் அதில் வாழும் மீன்கள் என்னபாடு படுமோ அன்னவாறே இனியனாய இதம்புரிய வுரிய மன்னன் கொடியனாயின் அந்நாட்டு மக்கள் இன்னலுழந்து இடர்மிகுந்து தவிப்பர் என்று குறித்திருக்கிறார். உவமைக் குறிப்பு அரிய பல பொருள்களை அடக்கிக்கொண்டுள்ளது. ஆய்ந்து சிந்தித்து யாவும் தேர்ந்து கொள்ளவுரியன.

ஒரு வீட்டுத் தலைவன் நெறிகேடன் ஆனால் கேடு அந்த வீட்டோடு நிற்கும்; நாட்டுத் தலைவன் நிலை திரிந்தால் நாடு முழுவதும் புலைக் கேடுகள் புகுந்து பொல்லாங்குகள் மிகுந்து விடும்.

நாடோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாடோறும் நாடி அவன்நெறி நாடானேல்
நாடோறும் நாடு கெடுமூடம் நண்ணுமால்
நாடோறும் செல்வம் நரபதி குன்றுமே. (திருமந்திரம் 239)

நாளும் மன்னன் நாடி ஆராய்ந்து ஆளுகை புரியானாயின் அந்த நாடு விரைந்து கெடும்; மூடங்கள் விரிந்து யாண்டும் பீடைகள் பெருகும்; உரிய திருவை இழந்து அவனும் இழிந்து அழிந்து போவான் எனத் திருமூலர் இவ்வாறு மொழிந்திருக்கிறார்.

தானும் கெட்டு நாட்டையும் கெடுத்து அரசன் நாசம் அடையாமல் தேசுடையனாய் நின்று செங்கோல் புரிய வேண்டும். கடமை புரியும் அளவு தலைமை தழைத்து வரும்.

758 நல்லாரைக் காத்துநலம் நாட்டலும் நன்றிகெட்ட
பொல்லாரைக் கொன்றொழித்துப் போக்கலும்-எல்லார்க்கும
தெய்வமென நின்றருளும் தேர்வேந்தன் செய்கையாம்
செய்வ தவறினுறும் தீது. (அ)

இ-ள்.

நல்லவர்களை உரிமையுடன் ஆதரித்து உவந்துபேணுதலும், பொல்லாதவர்களை ஒல்லையில் கடிந்து நீக்கித் தன் எல்லையிலும் இல்லாதபடி செய்தலும், தெய்வ நீர்மையுடைய அரசனது கடமையாம்; அதனை அவன் செய்யத் தவறினால் வெய்ய தீமைகள் யாண்டும் நீண்டு விரிந்து நெடுந்துயரங்கள் விளைந்து விடும் என்பதாம்.

பயிர்களை உழவன் பாதுகாத்து வருதல்போல் உயிர்களை அரசன் உரிமையோடு பேணி வருகிறான். கள்வர் பகைவர் முதலிய பொல்லாதவர்கள் புகுந்து அல்லல் புரியாதபடி எவ்வழியும் செவ்வையாக் குடிசனங்களைப் பாதுகாத்து வருபவனே முடிமன்னன் ஆகின்றான். காவல் அளவே கண்ணியம் மேவுகிறது.

யாதொரு கவலையும் காணாமல் தன் நாட்டு மக்கள் யாண்டும் சுகமாய் வாழ்ந்து வரும்படி வழி செய்து விழுமிய நிலையில் விழியூன்றிப் புரந்து வருவதே சிறந்த ஆட்சியாய் விளங்கி வருகிறது. காவலன் என அரசனுக்கு அமைந்துள்ள பேர் அவனுடைய காப்பு நிலையையும் கடமையையும் நன்கு காட்டியுள்ளது.

மாநிலங் காவலன்ஆவான் மன்னுயிர்காக் குங்காலைத்
தானதனுக்கு இடையூறு தன்னால்தன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால்
ஆனபயம் ஐந்தும் தீர்த்து அறம்காப்பான் அல்லனோ?
(பெரியபுராணம்)

உயிர் இனங்கள் துயர் உறாமல் காத்து அருளும் கடமை அரசனுக்குப் பிறப்புரிமையாய் அமைந்துள்ளது என இது உணர்த்தியுள்ளது. நிலம் காவலன் என மன்னனுக்கு ஒரு நீர்மையான பேர் சூட்டிச் சீர்தூக்கிக் காட்டியது பரிபாலன முறையில் அவனது குறியான தலைமையை ஓர்ந்து கொள்ள வந்தது.

தேசத்தின் தலைமைப் பொறுப்பை ஈசன் அரசனுக்கு அளித்திருத்தலால் அவன் யாண்டும் கண் ஊன்றி நோக்கிச்

சிவர்களைப் பேணி வரவேண்டும். பெற்ற பிள்ளைகளுக்குக் கல்வி யறிவும் செல்வ வளனும் நல்கித் தந்தை பேணி வருவது எங்கும் இயற்கையா யுள்ளது; அந்த நிலையிலேயே அரசனும் பலவகை யான வசதிகளைக் குடிகளுக்கு உதவி இனிது பேணி வரும் இயல்பு தோய்ந்து உயர்வு வாய்ந்துள்ளான்.

ஒத்த மனிதருள் உயர்ந்த பதவியை அடைந்த போதே அந்த அதிகாரி சமுதாயத்துக்குப் பெரிய கடனாளியாகின்றான். ஆகவே தனது கடமையைச் சரியாகச் செய்துவரும் அளவே அவன் பெருமை பெறுகின்றான்; செயல் தவறின் சிறுமையும் பழியும் சேர நேர்கின்றான். இருமையும் இழந்து போகின்றான்.

"மாந்தருக்குள் உன்னை மதிப்புடைய னாக்கியே
ஏந்தி எதிர்வைத்த தெற்றுக்கோ?---ஓர்ந்து
கடமை புரிக கருதா தயர்ந்தால்
மடமை குடியாம் மதி."

தனது நிலைமையை உணர்ந்து தன் கடமையை அரசன் ஒழுங் காகச் செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யாது வழுவின் எவ் வழியும் இழிவே விளையும் என்னும் இது இங்கே விழியூன்றி உணரவுரியது. உரியமுறை தவறியபோது பெரிய பிழையாகிறது.

களைகளைக் களைந்து நீக்கிப் பயிர்களை உழவன் பேணி வரு கிறான்; அதுபோல் அயில் உழவன் ஆன அரசனும் தீயவர்களைக் கடிந்து நீக்கி நல்லவர்களை நாடி யுணர்ந்து நன்கு பேணி வர வேண்டும் தீமை ஒழிய நன்மை விளையக் காப்பதே காப்பாம்.

கொலையில் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். (குறள், 550)

கொடியவர்களை அடியோடு அகழ்ந்து அரசன் ஒழிக்க வேண் டும்; அது பயிருக்குக் களை எடுத்தது போலாம் என உழவு தொழிலை ஒப்பு உரைத்து அரசனது விழுமிய ஆட்சி நிலையைத் தெளிவாகத் தேவர் இங்ஙனம் நன்கு விளக்கி யிருக்கிறார்.

பொல்லார் என்றது அல்லலான தீவினையாளரை.

நல்லார் என்றது இனிய நீர்மையரான நல்வினையாளரை.

புல்லிய களைகள்போல் பொல்லாதார் நாட்டுக்கு இடை யூறாயிருப்பர்; ஆகவே அவரை அழித்து ஒழித்து நல்லோரைப்

பாதுகாத்து வருவது அரசுக்கு உரிய தருமமாய் அமைந்து நின்றது. அரசர் தெய்வத் திருவருள் பெற்று வருபவர் ஆதலால் தரும நீதிகளைப் பேணுவது இயல்பான கருமமா யிசைந்தது.

*பரித்ராணய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்*
*தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே.*

(கீதை, 4-8)

"நல்லோரைக் காக்கவும், தீயோரை அழிக்கவும், தருமங்களை நிலை நிறுத்தவும் யுகம் தோறும் நான் அவதரிக்கிறேன்" எனக் கண்ணன் இவ்வாறு கூறியிருக்கிறார். காவல் தெய்வமான திருமாலின் அமிசமாய் வருகிற அரசரும் இக்கருமங்களைச் செய்ய வுரிமையா யுள்ளனர். அறம் தலைநிறுத்துவதே சிறந்த அரசாம்.

அறந்தலை நிறுத்தி வேதம் அருள்சுரந்து அறைந்த நீதித்
திறந்தெரிந்து உலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்
இறந்துக நூறித் தக்கோர் இடர்துடைத்து ஏக விண்டு
பிறந்தனன் தன்பொற்பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான்.

(இராமா, சுந்தர, பிணிவீட்டு, 81)

தீயோரை இறந்துக நூறி, நல்லோரைப் புரந்தருளி, தரும நீதிகள் உலகில் உயர்ந்து வர இராமன் பிறந்து வந்துள்ளான் என இராவணன் எதிரே அனுமான் இவ்வாறு செவ்வையாக உணர்த்தியுள்ளான். தரும வீரனது கரும வீரம் காண வந்தது.

நன்மை வளர்ந்து வரத் தீமை தளர்ந்து ஒழியச் செம்மையாக அரசு புரிந்து வருபவரே செங்கோல் மன்னராய்ச் சிறந்து வருகிறார். விக்கிரமார்க்கன் ஆட்சியில் நல்லோர் யாண்டும் உயர்ந்து வாழ்ந்தனர்; தீயோர் எங்கும் மங்கி மாய்ந்தனர் என அவனது பரிபாலன முறையை உலகம் உவந்து பாராட்டியுள்ளது. மேல் நாட்டாரும் வியந்து புகழ்ந்திருக்கின்றனர்.

"Vikramarka, punishing the wicked and protecting the good, reigned over the kingdom."

"தீயவர்களைத் தண்டித்து ஒடுக்கி நல்லவர்களைப் பாதுகாத்து நாடு முழுவதையும் விக்கிரமார்க்கன் நன்கு ஆண்டு வந்தான்" என அம்மன்னது ஆட்சி நிலையைக் குறித்து மறுபுலத்தவரும் இன்னவாறு மாட்சியோடு மகிழ்ந்து போற்றி யிருக்கின்றனர்.

அறிவும் சீலமும் உள்ள மேலோர்களாலேதான் ஞாலம் மேன்மை பெற்று வருகிறது. அத்தகைய நல்லோரைப் பேணி வரும் அளவே அரசன் நீதி முறை செய்தவனுகின்ருன். தருமம் கற்பு தவம் முதலிய புனித நீர்மைகள் இனிது பெருகி வர, மாந்தர் யாவரும் யாண்டும் சுகமாய் வாழ்ந்து வர ஓர்ந்து முறை செய்பவனே உண்மையான வேந்தனுய் ஒளி மிகுந்து நிற்கின்ருன். இடர் நீக்கி இன்பம்புரிவதே இறையின் கடமையாம்.

"எந்த வேளையினும் நொந்தவர் துயர்கேட்டு
இடர் இழைப்பவன் தனது ஏக
மைந்தனே எனினும் வதைத்திட ஒல்கான்;
மாக்களின் சுகநலம் அன்றிச்
சிந்தனை மற்ருேர் பொருளினில் செலுத்தான்;
தீ மொழி கனவிலும் புகலான்;
தந்தைபோல் தாய்போல் எவரையும் ஓம்பும்
தன்மையனே இறை அன்ருே?" (நீதி நூல்)

உண்மையான அரசின் நிலையை இது உணர்த்தியுள்ளது.

பரிபாலன முறையில் மன்னர் மன்னியிருந்துள்ள துறைகளை இந்நாட்டு இறைமையாளர் சரிதங்கள் பல காட்டியுள்ளன.

உதய குமரன் என்பவன் சோழ நாட்டு மன்னன் மகன். நல்லஅழகன்; மணிமேகலையைவிழைந்து மையலாய் உழந்தான். ஒரு நாள் இரவு அவளை நாடிச் சென்ருன்; அங்ஙனம் செல்லுங்கால் சோரன் என்று மாறுபாடாய் எண்ணிக் காஞ்சனன் என்னும் விஞ்சையன் அவனை வெட்டி வீழ்த்தினுன். அவன் கொலையா யிறந்து பட்ட நிலையை அரசனிடம் வந்து ஓர் மறையவன் சொன்னுன். அவ்வுரையைக் கேட்டதும் நெடுமுடிக் கிள்ளி என்னும் அம்மன்னன் யாதும் வருந்தாமல் தீதுசெய்தவன் சேத்தது நல்லதே என்று சிந்தை துணிந்திருந்தான். தனது அருமை மகன் இறந்தான் என்று கவலாமல் நீதி முறையை அவன் நினைந்து நின்றதை உலகம் உவந்து கொண்டாடி வந்தது. இளவரசனது இழவு கேட்ட பொழுது விழுமிய அவ் வேந்தன் விளம்பி நின்றது வியந்து சிந்திக்கத்தக்கது. அரிய அந்த மனநிலை பெரிய அதிசய நிலையாயுள்ளது. அயலே வருவது காண்க.

"யான் செயற் பாலது இளங்கோன் தன்னைத்
தான்செய் ததனுல் தகவிலன் விஞ்சையன்;

மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால்;
மகனை முறைசெய்த மன்னவன் வழியோர்
துயர்வினை யாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தம்செவி உறுவதன் முன்னம்
ஈங்குஇவன் தன்னையும் ஈமத்து ஏற்றி'' (மணிமேகலை, 22)

நான் செய்யவேண்டிய தண்டனையை விஞ்சையன் செய்தான்; ஒரு பசுவின் கன்றுக்காகத் தன் மகனைக் கொன்று நீதி முறை செய்த அந்த உத்தம அரச மரபிலே இப்படி ஒரு தீதான புத்திரன் தோன்றினனே! என்று உலகம் இகழ்ந்து பழிக்கு முன் இவனைச் சுட்டுத் தொலையுங்கள் என வேந்தன் நீதி நிலையோடு நெஞ்சம் துணிந்து உரைத்திருப்பது உள்ளத்தை உருக்குகிறது.

கற்பும் தவமும் காவலன் காவலால் நிலைத்து வருகின்றன. நல்ல தன்மைகளை நன்கு பேணிப் பொல்லாத புன்மைகளைப் பொன்ற ஒழித்து எங்கும் எவ்வழியும் செவ்விய நீதியைச் செய்து வருவதே திவ்விய அரசரது கடமையாம் என்பதை இக் காவலன் காட்டித் தனது பரிபாலனமுறையை விளக்கியுள்ளான்.

பெற்றபிள்ளை யானாலும் குற்றம் செய்தால் அவனைத் தண்டித்து அடக்கி மற்றவரைப் பேணி வருவதே வெற்றி வேந்தரது நீர்மையாம் என்பது ஈண்டு விளங்கி நின்றது. நல்லவை நாளும் தழைத்து வர அல்லவை யாவும் அழிந்து ஒழிய ஒல்லும் வாயெல்லாம் அரசன் ஓர்ந்து தேர்ந்து உறுதியா வினை செய்யவேண்டும்.

கான்பூஸியஸ் (Confucius) என்னும் சீன தேசத்துப் பெரியார் அரசுக்கு உரிய கடமைகளைக் குறித்து வரும்பொழுது நல்லோரைக் காக்கவேண்டிய முறையை நன்கு உணர்த்தியுள்ளார். அவருடைய போதனைகளை மேல் நாட்டு அறிஞரும் உவந்து போற்றி ஆட்சியாளர் எதிரே காட்சியாக் காட்டியுள்ளனர்.

"Put a stop to false accusations, in order to protect the honest and the good-" (E. C.)

"கண்ணியமான நல்லவர்களைக் காக்கும் பொருட்டுப் புல்லிய தீமையாளரை நீக்கியருள்" என்னும் இது இங்கே நோக்கவுரியது. உத்தமர் பெருகி வர உறுதி புரிவதே தரும நீதியாம்.

759 அண்ணல் அரசன் அருள்நீதி இல்லானேல்
எண்ணரிய சீருறினும் ஈனமாம்—வண்ணஒளி
இல்லையெனில் கண்ணிருந்தும் என்னும்? இனியவுயிர்
இல்லையெனின் மெய்என்னும்? எண். (கூ)

இ-ள்.

மாண்பு மருவிய மன்னன் சீவ கருணையும் தரும நீதியும் தழுவி யிருக்கவேண்டும்; அவையிலனாயின் அளவிடலரிய பெருமைகள் நிறைந்திருந்தாலும் யாவும் அவமேயாம்; ஒளி இழந்த விழிபோல் உயிர் இழந்த உடல்போல் அவன் இழிவே அடைவான் என்க.

கண் அருளையும், உயிர் நீதியையும் கருதி வந்துள்ளன. தன் உயிர் என நீதியை மன்னன் பேணிவரின் யாவும்காணியாய் அவனைக் காண வரும். பல உயிர்களை நலமாக் காத்து வரும் பொறுப்பு அரசனிடம் மருவியுள்ளது. அரிய பெரிய கருமக் கடமைகளை யுடையவன் தருமத் தொடர்போடு தழுவி வருகிறான். குடிசனங்களிடம் பிழைகள் நுழையாமல் பாதுகாக்க நேர்ந்தவன் விழுமிய நீர்மைகள் தோய்ந்து வர நேர்ந்தான். அந்த நல்ல தன்மைகளுள் அருள் தலை சிறந்துள்ளது. உயிர்கள் துயர் உறாமல் இரங்கி அருளுவது உயர்ந்த புண்ணியமாய் ஒளி சிறந்து நின்றது. உள்ளத்தில் அளி சுரந்து வரும் அளவு அரசன் வெளியே ஒளி மிகுந்து வருகிறான். புகழையும் இன்பத்தையும் பதவியையும் நிலை நிறுத்தி வருதலால் தண்ணளி அரசுக்குப் புண்ணியத் திருவாய்ப் பொலிந்து நின்றது.

மன்னனிடம் மருவியுள்ள அளி மன்னுயிர்களுக்கு இன்னமிர்தமாய் இனிமை புரிந்து வருதலால் வையம் அவனை எவ்வழியும் வாழ்த்தி வழிபட்டு வருகிறது. உலகம் நலமுற ஒளி செய்து அருளுகிற இந்த அளி அரசனிடம் இல்லையானால் மாந்தர் மறுகி வருந்துவர். அவ் வேந்தனும் வீணே இழிந்து படுவன்.

துளியின்மை ஞாலத்திற்கு எற்றுஅற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. (குறள், 557)

மழை இல்லையானால் வையம் எவ்வாறு வாடி வருந்துமோ அவ்வாறே வேந்தனிடம் அளி இல்லையானால் அந்த நாட்டுக் குடிசனங்கள் படு துயருழந்து பரிதபிப்பர் எனத் தேவர் இவ்வாறு

கூறியுள்ளார். மழையோடு நேர் வைத்து மன்னனுடைய நீர்மையை விளக்கி யிருக்கும் சீர்மை உன்னி யுணரவுரியது.

பிள்ளைகள்பால் உள்ளம் உருகி உரிமை செய்து வரும் தாய்போல் குடிமக்கள்பால் அருள் புரிந்து அரசன் ஆதரவு செய்ய வேண்டும்; அவ்வாறு செய்து வரும் அளவே அரசும் குடியும் வரிசையாய் வளம் சுரந்து வரும்; இந்த அருளைச் செய்யாது மாறின் அந்த அரசு பொலிவிழந்து நலிவடைந்து தொலையும். குடிக்கு அளி புரியின் முடிக்கு ஒளி புரிகின்றது.

அருள் இல்லாத அரசை ஒளி இல்லாத கண் என்றது நிலைமையை எண்ணியுணர வந்தது. கண் உருவமா யிருந்தாலும் உள்ளே ஒளி இல்லையானால் அது விழி குருடாய் இழி பழியே அடையும்; அதுபோல் செல்வம் முதலிய நிலைகளால் அரசன் வெளியே பெருமையா யிருந்தாலும் அகத்தே அருள் இல்லையானால் கொடியவன் என்று வையம் அவனை வைது தள்ளும்.

அரசு முறை கருதி நீதிநெறி ஒழுகி நாட்டை நன்கு பாது காத்துவரின் அந்த அரசனை யாவரும் உவந்து புகழ்ந்து உரிமை கூர்ந்து போற்றி வருவர்; தருமமும் அவனிடம் பெருகி வரும் ஆதலால் உயர் தலைமையுடையனாய் ஒளி பெற்று விளங்குவன்.

நீதி நெறியில் நிலைத்துவரும் நீதிமான்
ஆதி அருளை அடைகின்றான்—நீதிநெறி
பேணா திழிந்து பிழைபுரியின் பேதையாய்
வீணா யழிவன் விரைந்து.

அரசன் நெறி முறை தழுவி நீதிமானாய் நின்றால் ஆதி முதல்வனுடைய அருளை அடைந்து யாண்டும் நீண்ட பெருமை பெறுவான்; அவ்வாறின்றி நெறி கேடனாய் முறை பிறழ்ந்தால் பரிதாபமா யிழிந்து அவன் பாழ்படுவான் என இது உணர்த்தியுள்ளது. அரசு பாழாகாமல் பாதுகாப்பது நீதிமுறையே யாம்.

உயர்ந்த நிலையில் சிறந்து நிற்கின்ற அரசன் தனது கடமையை நன்கு உணர்ந்து எவ்வழியும் செவ்வையாய் ஒழுகி வர வேண்டும்; தான் சிறிது வழுவினால் உலகம் பெரிதும் வருந்திப் பிழைபட நேரும்; நேரவே பழியும் பாவமும் அடைந்து அவன் அழிவுற நேர்வான். அழிவு நேராமல் தொழில் புரிவதே அறிவாம்.

நீதியாய் நேரே முறைமை செய்து வரின் இறைமை எவ்வழியும் உரிமையாய் ஓங்கி வரும்; அது தவறினல் யாண்டும் அவகேடே யாம். செங்கோல் சீவன்; வெங்கோல் சாவு என்றதனல் அரச னுடைய வாழ்வும் வீழ்வும் நன்கு அறியலாகும்.

முறைமைமுட்டாது செய்து முழுநிலம் காப்பின் அந்த
இறைவனைச் செங்கோல்காக்கும்; எளிய செவ்வியனும்ஆகான்;
குறைவளர் குற்றம் ஓரான் குணத்தொடு முறை செய்யானே
நிறைதரு பாவம் தேய்க்கும் நெடும்பகை இன்று மேனும்.
(விநாயகபுராணம்)

சேங்கோலனய் முறை புரிந்து வரின் அந்த அரசன் நிறை திரு வுடன் நெடிது வாழுவான்; நிலை தவறிக் கொடுமை புரிய நேரின் அவன் அடியோடு அழிவான் என இது தெளிவா விளக்கியுளது.

கோடுங்கோலன் கடுங்காலன் என்னும் பழமொழியால் அரசன் கொடியன் ஆனல் குடிகள் நெடிய துயரம் அடைவர் என்பது தெரிய வந்தது. நீர்மைதொலையவே நிலைமைதொலைந்தது.

உலகமக்களை இனிது பேணி வரும்படி உரிமையாய் வந் தவன் கொடுமையாய்மாறின் அவனுடைய அழிவு கடுமையாய் நிகழ்ந்து விடும். தன் அழிவுக்குத் தனது இழிவே காரணமாம்.

"Tryanny hath been
The untimely emptying of the happy throne
And fall of many kings." (Shakespeare)

"தங்கள் அரிய இனிய அரியணையிலிருந்து விரைந்து தள்ளி அநேக அரசர்களைக் கொடுங்கோல் கடுமையா அழித்திருக்கி றது" என்னும் இது இங்கே நுனித்து உணர வுரியது.

மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை; அஃதின்றேல்
மன்னுவாம் மன்னர்க்கு ஒளி. (குறள், 556)

அரசர்க்குப் புகழும் பொருளும் செங்கோலால் உளவாம்; அது வழுவின் பழியும் அழிவும் விளையும் என இது உணர்த்தியுளது.

அரச பதவி அரிய பெரிய நிலை; அந்த உயர்ந்த தலைமை யைப் பெற்றவர் தமது நிலைமையை உணர்ந்து எவ்வழியும் கட மையைக் கண்ணூன்றிச் செய்து செவ்வியராய் ஒழுகி வர வேண்டும்; அது அவர்க்கு அரிய பல மகிமைகளை அருளி வரும்.

760 தாய்மகவைப் பேணும் தகைமைபோல் தன்குடியை
நேயம் புரிந்து நிதம்புரந்து—தாயன்பு
கொண்டு வருமளவே கோனை உலகினிதாக்
கண்டு மகிழும் கனிந்து. (ய)

இ-ள்.

பெற்றதாய் பிள்ளையைப் பேணும் பெற்றி போல் தன்பால் உற்ற குடிசனங்களை அரசன் அன்போடு ஆதரித்து வர வேண்டும்; அந்த ஆதரவின் அளவே உலகம் அவனை உரிமையா உவந்து பெருமை செய்து எவ்வழியும் வழிபட்டு வரும் என்க.

தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள உறவுரிமை குடிசனங்களுக்கும் அரசனுக்கும் முடிவாகி யுள்ளது. பாசத் தொடர்புகள் பிறப்புரிமையாலும் தேசத்தொடர்பாலும் சேர்ந்திருக்கின்றன. அன்னையும் பிதாவும் மகனுக்கு முன் அறி தெய்வமாய் மன்னி யிருத்தல்போல் உலக மக்களுக்கு அரசன் தாய் தந்தை தெய்வம் என நிலவி நிற்கின்றான். தோய்ந்த உரிமையில் செயல் இதமாய் வாய்ந்துவரின் அந்த உறவு ஆர்ந்த மேன்மையாய் உயர்ந்து ஒளி புரிகின்றது. தன் உள்ளம் இதமாய்க் கனிந்த அளவே உலக உள்ளங்கள் அவனை உவந்து புகழ்ந்து கொள்ளுகின்றன.

அரசன் அருள் புரிந்து குடிகளை ஆதரித்துவரின் அவனுடைய ஆட்சி யாண்டும் மாட்சியடைந்து வரும். பொருள் வரவையே கருதிப் பொல்லாங்குகள் செய்ய நேரின் எல்லாரும் வெறுத்து இகழ்ந்து விடுவர். தந்தை போற்றி வரும் அளவே மைந்தன் சிந்தை களித்து வருவன்; அவன் பொற்றுது ஒழியின் இவன் ஏற்றுது இழிவன்; அவ்வாறே அரசும் குடிகளும் வரிசையாமருவியுள்ளனர். உற்றஉறவுகள்உரிமையில்உயர்கின்றன.

பிள்ளைகளைப் பேணுகின்ற பெற்றதாய்
என்னவே பெருநீர் வையம்
உள்ளவுயிர் இனங்களைநேர் உரிமையுடன்
பேணிவரின் உவகை பொங்கித்
தள்ளரிய பெருநீதித் தனி இறை என்று
அவ்வரசைத் தழுவி வாழ்வார்;
கொள்ளை கொள்ள நேர்ந்தாரேல் கொள்ளிவைக்க
எல்லாரும் கொதிப்பர் அன்றே. (இந்தியத்தாய் நிலை)

இனிய அரசின் பெருமையையும் இன்னாத மன்னனின் இழிவையும் இது விழி தெரிய விளக்கி யுள்ளது. தனக்கு உரிய நீர்மையைத் தழுவியுள்ள அளவே எவரும் சீர்மை பெறுகின்றனர். தன்மை ஒழியின் புன்மை புகுந்து புலையுறுகின்றனர். பெண்ணுக்குக் கற்பு பெருமேன்மை தருதல் போல் அரசுக்கு நீதி முறை அதிசய மேன்மைகளை அருளி வருகின்றது.

நிறையின் நீங்கிய மகளிர் நீர்மையும்,
பொறையின் நீங்கிய தவமும், பொங்கு அருள்
துறையின் நீங்கிய அறமும், தொல்லையோர்
முறையின் நீங்கிய அரசின் முந்துமோ? (இராமாயணம்)

கற்பு இல்லாத மகளிர், பொறுமை இல்லாத தவம், அருள் இல்லாத அறம், நீதி முறை இல்லாத அரசு ஆகிய இவை அவலமாயிழிவுறும் எனப் போதித்துள்ள இது ஈண்டு ஓதி ஓதி உணரத்தக்கது. அரசன் முறை நீங்கினல், அரிவையர் நிறை நீங்குவர்; தவம் பொறை நீங்கும்; அறம் அருள் நீங்கும்; ஆகவே அவ கேடுகளுக்கெல்லாம் அவனே பூரணமான காரணன் ஆகின்முன்.

அளிசெய்து காவா அரசனும், ஆன்ற
ஒளிசெய்து நோலோ உறுவனும்---களிசெய்து
காமுற் றுழலும் கடையனும் என்றுமே
தோமுற் றுழல்வர் துயர்.

அரசன் அளிபுரிந்து காவான் ஆயின் அவன் ஒளி யிழந்து இழிவான் என்பதை இதனல் உணர்ந்து கொள்கிறோம். தோம்=குற்றம். தன் கடமையை உணர்ந்து கருணை தோய்ந்து மன்னன் மாநிலத்தைக் காத்து வரவேண்டும்; காவல் பிழைபடின் அவன் பழியடைந்து பாழ்படுவதோடு உலகமும் இழிவடைந்து தாழும் ஆதலால் பாதுகாப்பில் எவ்வழியும் அவன் மேதையா யிருக்கவேண்டும். உரிய காப்பே இனிய ஆட்சியாம்.

புரவலன், காவலன் என அரசனுக்கு அமைந்திருக்கும் பெயர்கள் அவனது இயல்பான பாதுகாப்பு நிலையை உயர்வாக உணர்த்தியுள்ளது. உயிரினங்களை உரிமையோடு நன்கு ஓம்பி வரும் அளவே அவன் எங்கும் மேன்மை பெற்று என்றும் வென்றியாளனுய் விளங்கி எவ்வழியும் நிலைத்து வருகின்முன்.

கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே ஆயினும்---தண்ணளியால்
மன்பதை ஓம்பாதார்க்கு என்னும்? வயப்படைமற்று
என்பயக்கும் ஆணல் லவர்க்கு. (நீதிநெறிவிளக்கம்)

அரசு நிலை அரிய புண்ணியத்தால் அமைவது; அதனைப் பெற்ற வர் உயிர்களை உரிமையுடன் பேணி வரவேண்டும்; அவ்வாறு பேணவில்லையானால் அவர் பழி படிந்து இழிவர் என்பது இத னால் தெளிய வந்தது. தான் கருதிய காரியங்களைக் கண்ணால் சொல்லி, உலக நிலைகளைக் காதால் கேட்டறிந்து யாண்டும் செவ்வையாய் நீதிமுறை புரிவதே அரச நீர்மையாம். அந்தச் சீர்மை சிதையின் சிறுமை விளையும். சீரிய அரசு கிடைத்தும் அதை வீரியமாய்ச் செய்யாது ஒழியின் கூரிய வாள் பேடி கை யில் இருந்தது போல் பிழையே படும் என்று உவமையோடு குறித்தது தகுதியில்லாத அரசனது பழிபாடு காண வந்தது.

மனித சமுதாயம் இனிது வாழ்ந்து வரும்படி யாண்டும் ஆய்ந்து செய்யும் பொறுப்பு பிறப்புரிமையாய் வேந்தனுக்குத் தோய்ந்து வந்துள்ளமையால் தன் கடமையைக் கருதி யுணர்ந்து அவன் கருமம் புரிந்து வரவேண்டும். தலைமையாய் நேர்ந்தவன் நிலைமைகளைச் சரியாச் செய்துவரின் யாவரும் எவ்வழியும் செவ் வையாய்த் தேர்ந்து வருவார்.

மன்னன் எப்படி மன்னுயிர் அப்படி.

என்பது பழமொழி. ஒரு நாட்டு மக்கள் அதை ஆளும் அதிபதி யின் இயல்பின்படியே செயல் மருவி வருவர் என்பதை இது நயமா விளக்கியுள்ளது. அரசன் நல்ல நெறியுடையனாயின் குடி சனங்கள் நல்ல வழிகளில் பழகி நல்லவரா யுயர்ந்து வருவர்; அவன் நெறிகேடன் ஆனால் மக்களும் அவ் வழிகளில் திரிந்து அவகேடராய் இழிந்து போவர். நாடு மேன்மையாய் வாழ்வ தும் கீழ்மையாய்த் தாழ்வதும் மன்னனாலேயாம்.

கோன்நிலை திரிந்திடின், கோள்நிலை திரியும்;
கோள்நிலை திரிந்திடின், மாரி வறங் கூறும்;
மாரி வறங்கூரின், மன்னுயிர் இல்லை;
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதி இன்றாகும். (மணிமேகலை, 7)

அரசன் நீதிமுறை வழுவினல் விளையும் கேடுகளை இது விளக்கி யுள்ளது. உரிய கருமம் தவறிய பொழுது தருமம் விலகுகிறது; அது விலகவே பாவம் வருகிறது; பாவம் வரவே மழை பெய்யா மல் ஒழிகிறது; அது ஒழியவே பயிர்கள் பாழாகின்றன; அவை பாழாகவே உணவு முதலியன இழந்து உயிர்கள் நாசம் அடை கின்றன. இந்த நாசங்களுக்கெல்லாம் மூல காரணம் அரசனது நெறிகேடே ஆதலால் பழி பாவங்கள் யாவும் அவனையே சேர் கின்றன. கோல் ஒன்று கோடின் கொடுமைகள் கோடியாம்.

கோள்நிலை திரிந்து நாழி குறைபடப் பகல்கள் மிஞ்சி
நீணிலம்மாரி இன்றி விளைவுஅஃகிப் பசியும் நீடிப்
பூண்முலை மகளிர் பொற்பிற் கற்பழிந்து அறங்கள் மாறி
ஆணையிவ் உலகு கேடாம் அரசுகோல் கோடின் என்ருன்.
(சீவகசிந்தாமணி)

தற்பாடு பறவை பசிப்பப் பசையற
நீர்சூல் கொள்ளாது மாறிக் கால்பொரச்
சீரை வெண்டலைச் சிறுபுன் கொண்மூ
மழைகால் ஊன்ரு; வளவயல் விளையா;
வாய்மையும் சேட்சென்று கரக்கும்; தீதுதரப்
பிறவும் எல்லாம் நெறி மாறு படுமே
கடுஞ்சினக் கவைஇய காட்சிக்
கொடுங்கோல் வேந்தன் காக்கும் நாடே. (ஆசிரியமாலை)

வேந்தன் முறைதிறம்பின் வேத விதிதிறம்பும்;
ஏந்திழையார் தம்கற்பும் இல்லறமும் நில்லாவாம்;
மாந்தர் பசியால் உணங்க மழைவறந்து
பாந்தள் முடிகிடந்த பாரின்விளைவு அஃகுமால்.
(பிரமோத்தரகாண்டம்)

மன்னன் முறை புரியாமல் மதிகேடனய் மாறி நின்ருல் இன்ன வாறு கேடுகள் விளைந்து விடும் என இவை வரைந்து காட்டி யுள்ளன. குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. அரசுக்கும் உலகுக்கும் உள்ள உரிமைத் தொடர்புகள் இங்கே நயமாத் தெரிய வந்தன. உரியவன் சரியாயிருந்தால் உயர்வுகள் உளவாம்.

மழைவளம் சுரந்து நிலவளங்கள் நிறைந்து குடி சனங்கள் பல வழிகளிலும் உயர்ந்து இனியராய் வாழ்ந்து வருவன எல் லாம் அரசனுடைய நெறியான ஆட்சி முறையினலேயாம். அந்த ஆட்சி பிழைபடின் காட்சி பழுதுபட்ட கண்போல் மனித சமுதாயம் மருண்டு மயங்கி இருண்டு கலங்கி எங்கும் மங்கும்.

நீதிமுறை தழுவிய தெளிவான ஆட்சி எந்த நாட்டில் இருக்கிறதோ அந்த நாடு எல்லா நலங்களும் ஒருங்கே நிறைந்து ஒளி மிகுந்து விளங்கும். அரசன் அன்போடு யாண்டும் இனிது காத்துவருதலால் ஆங்கு மாந்தர் எவ்வழியும் சுகமாய் வாழ்ந்து வருகின்றனர். தாயின்பால் வாழ்ந்து வருகிற பிள்ளைகள்போல் நல்ல அரசன்பால் உள்ளவர்கள் உள்ளம் உவந்து திகழ்கின்றனர்.

தாய்ஒக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம் பயப்பின்;
சேய்ஒக்கும் முன்நின்று ஒருசெல்கதி உய்க்கும் நீரால்;
நோய்ஒக்கும் என்னின் மருந்து ஒக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவுஒக்கும் எவர்க்கும் அன்னான்.
[இராமா, அரசியல், 4]

உலக மக்களிடம் தசரதன் ஒழுகி வந்துள்ள நிலைமையை இது உணர்த்தியுள்ளது. ஒரு உத்தம அரசன் எவ்வாறு இருக்கவேண்டும் என்பதைக் கம்பர் இவ்வாறு வித்தக விநயமாய் விளக்கியிருக்கிறார். குறித்துள்ள நீர்மைகளைக் கூர்ந்து உணர்பவர் அரிய பல சீர்மைகளைத் தேர்ந்து கொள்வர். இத்தகைய சக்கரவர்த்தி அமையின் அத்தேச மக்கள் எத்தகைய மகிழ்ச்சியை அடைந்து எவ்வாறு வாழ்வர்! இதனை ஈண்டு உய்த்துணர வேண்டும்.

கருவிலேயே திருவுடையராய் வருகிற அரசர் தம் நிலைமையை உணர்ந்து உலகம் நலமுற உறுதி சூழ்ந்து உதவி புரிந்துவரின் தெய்வத் திருவருள் எய்தப் பெறுகின்றார்; அதனால் மேலும் உயர்ந்து திவ்விய கதியை அவர் அடைகின்றார்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அரசன் இவ்வுலகிற்கு இறைவன்.
அரிய பல மகிமைகள் வாய்ந்தவன்.
காவல் தெய்வமாய் அவன் மேவியுள்ளான்.
கண்ணுக்கு இமைபோல் மண்ணுக்கு மன்னன்.
ஞாலம் அவனால் நடந்து வருகிறது.
அல்லது களைந்து நல்லது புரிகிறான்.
அவன் இல்லையேல் அல்லலே விளையும்.
அவன் காத்துவர உலகம் பூத்து வருகிறது.
அருளும் நீதியும் அவன்பொருளா யுள்ளன.
பிள்ளையைத் தாய் பேணுவதுபோல் பேருலகை அவன்
பேணியருள்கிறான்.

எசு-வது அரசு முற்றிற்று.

# எழுபத்தேழாவது அதிகாரம்.

## அறிவு.

அஃதாவது உலக நிலைகளையும் கலைகளையும் ஓர்ந்து தெளியும் உணர்வு, நாடு ஆளும் அரசன் மேலான அறிவாளனாய் இருக்க வேண்டும் என உணர்த்துகின்றமையால் அரசின் பின் இது வைக்கப்பட்டது. அரச அறிவு வரிசையாய் அறிய வந்தது

771 மன்னன் அறிவு மதிகதிரின் இன்னொளிபோல்
மன்னுயிர்க் கெல்லாம் மகிழ்தரலால்—அன்னவன்
தெள்ளியனாய் நின்று செயல்புரியும் அவ்வளவே
ஒள்ளிய தாகும் உலகு. (க)

இ-ள்.

அரசனுடைய அறிவு சூரிய சந்திரர்களுடைய ஒளிபோல் எல்லா உயிர் இனங்களுக்கும் ஒருங்கே ஒளிபுரிந்து உதவி வருகிறது; ஆகவே அவன் தெளிந்த மதிமானாய் நின்று செயல் புரியும் அளவே உலகம் ஒளிமிகுந்து உயர்ந்து விளங்கும் என்க.

இது மன்னன் மதியின் மகிமை கூறுகின்றது

அறிவு ஆன்ம ஒளியாய் மேன்மை மிகுந்து மனிதனை மகிமைப் படுத்தி வருகிறது. மிருகம் பறவை முதலிய பிராணிகளைவிட மனிதன் உயர்ந்து நிற்பதற்கு மூலகாரணம் அறிவே. மனதை ஒருமுகப்படுத்திச் சிந்திக்கவும், நன்மை தீமைகளை நாடி அறியவும், எதையும் துருவி உணரவும், தான் உணர்ந்து துணிந்ததைக் காரியத்தில் கருதிச் செய்யவும் மனிதன் வல்லவனாயிருத்தலால் எல்லா வகையிலும் மேலானவனாய் அவன் விளங்கி நிற்கின்றான்.

இத்தகைய அறிவு அரசனிடம் உத்தம நிலையில் உயர்ந்து வித்தக விளைவாய் வியன் பயன் புரிந்து வருகிறது. உலகத்தை நன்கு பாதுகாத்து மனித சமுதாயத்தை இனிது நடத்திவர வுரியவன் ஆதலால் அரசன் பெரிய அறிவாளியா யிருக்கவேண்டும். அரிய பல பொறுப்புகள் அவன் மேல் அமைந்துள்ளன.

ஒரு நாட்டில் பல வகையான மக்கள் பரவியுள்ளனர். சாதி மதம் தொழில் முதலிய நிலைகளால் பிரிவடைந்து ஒரு முக

மாய் மருவி வாழ்கின்ற குடிசனங்களை இனிது பேணி வர வுரிய ஞய் அரசன் தனியமைந்துள்ளமையால் அறிவும் ஆண்மையும் நெறியும் நீர்மையும் அவனுக்கு அரிய பல மேன்மைகளை அருளி வருகின்றன. ஆட்சி நிலை அவன் காத்து வருகிற சீரிய காரிய முறையால் மாட்சி மிகுந்து நீட்சியடைந்து வருகிறது.

விரிந்து பரந்துள்ள உலக நிலைகளை நன்கு தெரிந்துகொள்ள வேண்டியவஞய் வேந்தன் உயர்ந்து நிற்கிருன். எல்லாம் அறிய வல்ல கடவுளைப்போல் அவனும் ஓரளவு அறிந்து வந்தபோது தான் சிறந்த நீதி முறைகளை விரைந்து செய்ய முடியும். தெய் வத்தின் பிரதிநிதியாய் அரசன் வையத்தில் வாய்ந்திருத்தலால் எதையும் ஓர்ந்து உணர்ந்து கூர்ந்து வினை செய்கிருன். அந்த வினைமாட்சி அறிவுக் காட்சியால் தெளிவாய் ஒளி பெற்று வருகிறது. உரிய அறிவுஅரிய பலசெயல்களை ஆக்கியருளுகிறது.

எல்லாம் அறியும் இறைவன்போல் மன்னனும்
எல்லார் நிலையும் எதிர் அறிந்து---ஒல்லையினில்
நீதி முறைபுரியும் நீர்மையஞய் நின்றுனேல்
ஆதி மனுவே அவன்.

முழுவதும் அறியும் முழுமுதல் பரமன் போல் அரசனும் வழி முறைகளைத் தெளிவாக அறிந்து விழுமிய நீதிகளை விரைந்து புரிய வேண்டும் என இது விளக்கியுள்ளது. தனிமுதல் அரசு என்று கடவுளை உரிமையோடு கூறி வருதலால் அரசுக்கும் கடவுளுக்கும் உள்ள உறவுரிமையை உணர்ந்து கொள்ளுகிறேம்.

"God is king of all kings."

"அரசர் எல்லாருக்கும் கடவுள் முதல் அரசன்" என மேல் நாட்டாரும் இவ்வாறு கூறியிருக்கின்றூர். எந்நாடும் அரசைப் பெருமையா மதித்துப் போற்றி வந்துள்ளது. பல உயிர்களைப் பாதுகாக்க நேர்ந்த அரசனிடம் தலைமையான அறிவு சேர்ந்த அளவுதான் அவன் நிலை உயர்ந்து திகழ்கின்றுன்.

ஆதவன் ஒளி அகில வுலகங்களுக்கும் தெளிவருளுகின்றது. அதுபோல் அசன் அறிவு அவன் தேசத்துக்கு இதமாய் ஒளி புரிந்து வருகிறது. தெளிவான மதி எவ்வழியும் அளி புரிகிறது.

தெருண்ட சிந்தனை மன்னவன், நீதிநூல், திசையின்
உருண்ட தேரினன் என்னும் மூவிழிகள்உண்டு உலகின்;
மருண்டு மன்னனும் விழிஒளி மறைந்திடின் மற்றை
இரண்டு கண்ணினும் பயன் இலை ஆகுமே என்றுன்.(செவ்வந்தி)

மன்னன் தெளிந்த மதிமானு யிருக்கவேண்டும் என இது மொழிந்துள்ளது. அறிவுடைய அரசன், நீதி நூல், சூரியன் ஆகிய மூன்றும் உலகங்களுக்கு ஒளிபுரியும் விழிகளாம். இவற்றுள் முதன்மையாயுள்ள அந்த விழி தகுதியா யில்லையாயின் மற்ற இரண்டு கண்களாலும் பயன் இலவாம் என இது குறித்திருக்கிறது. குறிப்பு நிலை கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கத் தக்கது.

சூரியன் இருளை நீக்கி ஒளியைப் பரப்பி உலக வுயிர்கள் தெளிவடைந்து உயர்ந்து வாழச் செய்கிருன்; அரசனும் அவ்வாறே செவ்வையாகச் செய்து வருகிருன். பகைமை வறுமை மடமை முதலிய இடர்களை நீக்கித் தனது குடிசனங்கள் எவ்வழியும் சுகமாய் வாழ்ந்துவரச் செய்வதே அரசனுடைய கடமையாய் அமைந்திருக்கிறது. பிறப்புரிமையாய்த் தனக்கு அமைந்துள்ள சிறப்பு நிலையை உணர்ந்து ஆட்சிபுரிய வுரிய அரசனுக்கு அறிவுக் காட்சி எவ்வளவு தேவையா யுள்ளது என்பதை எளிதே தெளிந்து இனிது உணர்ந்து கொள்ளலாம்.

பகலும் இரவும் சூரிய சந்திரர்களால் ஒளி பெறுகின்றன; அந்த இரு பொழுதையும் ஒருங்கே மருவியுள்ள உலகம் அரசனல் தெளிவடைந்து உயர்ந்து வருகிறது. ஆகவே கதிரும் மதியும்போல் ஒளிமிகுந்து மன்னன் அதிசய நிலையில் நிலவி நிற்கின்றுன். வேந்தன் அறிவு யாந்தருக்கு மகிழ்ச்சி புரிந்து வருகிறது

"தண்கதிர் மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்
மன்னிய பெருமநீ நிலமிசை யானே." (புறம் 6)

பாண்டிய மன்னனை நோக்கிக் காரிகிழார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம் பாடியிருக்கிருர். கவியின் கருத்தைக் கருதி நோக்கி உறுதி நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

---

762 கலைகள் பலவும் கருதிப் பயின்று
உலக நிலைகள் உணர்ந்து—தலைமையுடன்
வேந்து வினைபுரியின் மேலான நன்மைகளை
மாந்தர் அடைவர் மகிழ்ந்து. (உ)

இ-ள்.

அரசன் பலகலைகளையும் பயின்று தெளிந்து உலக நிலைகளை ஓர்ந்து

உணர்ந்து தலைமையுடன் ஆராய்ந்து வினைபுரிந்து வரின் மாந்தர் மேலான நலங்களை அடைந்து யாண்டும் மகிழ்ந்து வருவர் என்க.

இது அரச அறிவின் விளைவுகளை உணர்த்துகின்றது.

உலக நிலைகளை ஓர்ந்து யாண்டும் நிலை குலையாமல் ஒரு தேசத்தை ஆண்டு வருவது அரிய பெரிய செயல். அத்தகைய ஆட்சியைச் செய்ய வுரிய அரசன் இளமையிலேயே கலைகள் பலவும் கற்றுத் தலை சிறந்த அறிவாளியாய் நிலை யுயர்ந்து நிற்க வேண்டும். கல்வி யறிவு நன்கு அமையாதவன் ஒரு நாட்டுக்கு அரசனாய் வரின் அந்நாடு பல வகையிலும் இழிந்து புலைபடிந்து போம். மடமையான தலைமை கொடுமையான புலையாம்.

கல்வி அறிவு இல்லையானால் ஒளியிழந்த கண்போல் அவ்வுள்ளம் இளிவடைந்தே நிற்கும்; ஆகவே அவனால் யாதொரு நன்மையும் செய்ய முடியாது. பொல்லாத புலைகளில் படிந்து அல்லல்களே செய்வன் ஆதலால் அவனுடைய நாட்டில் உள்ள மக்கள் கொடிய புலி எதிர்ப்பட்ட புல்வாயினங்கள்போல் நெடிய துயர்களை யடைந்து யாண்டும் நிலைகுலைந்து வருந்துவர்.

*கல்லா அரசனும் காலனும் நேர்ஒப்பர்;*
*கல்லா அரசனில் காலன் மிகநல்லன்;*
*கல்லா அரசன் அறம்ஓரான் கொல்என்பான்*
*நல்லாரைக் காலன் நணுகிநில் லானே.* (திருமந்திரம்)

கல்லாத அரசன் காலனிலும் பொல்லாதவன் எனக் காரணத்தை விளக்கிக் காட்டித் திருமூலர் இவ்வாறு உரைத்திருக்கிறார். பல வகையான மக்களைப் பாதுகாத்து வரவுரிய அரசன் நீதிநூல் முதலிய கலைகளை நன்கு தெரிந்திருந்தபோதுதான் எங்கும் அவன் இசைபெற்று நிற்பன். அறிவு நலம் சரியா யில்லையாயின் வெறியனாய் நிமிர்ந்து வெய்ய துயரங்களையே செய்ய நேர்வன்.

அரசன் கல்வியறிவுடையனாயின் கற்றவர்களை நன்கு மதித்துப் பேணுவன்; அவரும் அவனுக்கு உற்ற துணையாய் நின்று உறுதி நலங்களை உதவியருளுவர். அவன் கல்லாதவன் ஆயின் பொல்லாத புல்லர்களையே துணையாகச் சேர்ப்பன். அந்தச் சேர்க்கை நாட்டுக்குக் கொடிய கேட்டை விளைத்து விடும்

*கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அதுவல்லது*
*இல்லை நிலக்குப் பொறை.* (குறள், 570)

கொடுங்கோல் மன்னனது கடுங்கேட்டை இது காட்டியுள்ளது. நீதிமுறை திறம்பித் தீதுபுரிபவன் கடுங்கோலன் ஆகின்றான். கல்லாத புல்லரையே தனக்குத் துணையாக அப் பொல்லாதவன் சேர்த்துக்கொள்வன்; அந்த மூடக்கூட்டம் உலகத்திற்குப் பெரும் பீடையாம் எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். நல்லாரையே அரசன் நயந்து தழுவ வேண்டும்; கல்லாரைக் கடிந்து ஒழிக்கவேண்டும் என்பது இங்கே தெளிந்துகொள்ள வந்தது. உரிய துணை அரிய நீர்மையுடையதேல் மேன்மையாம்.

அறிவாளிகளை எந்த அரசன் உரிமையோடு தழுவி உவந்து போற்றி வருகிறானே அவனுடைய ஆட்சி யாண்டும் மாட்சி அடைந்து வரும். தனது நிலைமைக்குத் தக்கபடியே மனிதன் துணை சேர்க்கின்றான். அரசன் நல்ல கல்விமான் ஆனால் கற்ற மாந்தரைக் கண் எனக் கருதி மருவிக் கொள்வன்; கல்வியறிவு இல்லை எனின் அவனுக்கு உரிய இனத்தையே அணைத்து நிற்பன்.

இனம் இனத்தையே நாடும் என்பது பழமொழி.

கல்லாத கூட்டம் தலைமைக்கு வந்தால் கல்வியறிவை அது மதியாது. ஆட்சி புரிவதற்கு அறிவு எதற்கு? என்று வெறி கொண்டு அது பேசவும் கூடும். உருட்டு, புரட்டு, வஞ்சச்சூழ்ச்சிகள் ஆகிய இவையே ஒரு நாட்டை ஆளப் போதும் என்று அக் கூட்டம் கோட்டி கொண்டு குலாவிக் கொழுத்துத் திரியும்.

மூட மக்களுக்கு மூர்க்கன் அரசன் ஆவான்.

என்பது முதுமொழி. நாட்டு மக்களுடைய படை அளவு அவர் தலைமை வளமையாய் நிலைத்துவரும். நல்ல அறிவாளிகள் நிறைந்த நாட்டில் கல்லாத மடையர்கள் தலைமையா யிருக்க முடியாது.

மூடத் தலைமை மூண்டு வருமானால் அது நாட்டுக்குக் கேடாகவே நீண்டு வரும். கல்லாத படையால் நல்லது காண முடியாது. அல்லல்களே கண்டு அவலமடையவே நேரும்.

கல்வியறிவோடு அரிய பல பண்பாடுகளும் அரசனிடம் மருவி யிருக்கவேண்டும். ஒரு அரசன் எவ்வாறு செவ்வியனா யிருக்கவேண்டும் என வெள்ளைக்குடி நாகனார் என்னும் சங்கப் புலவர் சோழமன்னனை நோக்கிக் கூறியிருக்கிறார். அரிய பல பொருள்கள் மருவியுள்ள அது கருதியுணர வுரியது. அரசின் இயல்புகளை நன்கு விளக்கியுள்ள அப் பாசுரம் அயலேவருகிறது.

"நாடுகெழு செல்வத்துப் பீடுகெழு வேந்தே!
நினவ கூறுவல் எனவ கேள்மதி!
அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதில் பதன்எளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதில் பெயல்பெற் றோரே;
ஞாயிறு சுமந்த கோடுதிரள் கொண்மூ
மாக விசும்பின் நடுவுநின் றாங்குக்
கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை
வெயில்மறைக் கொண்டன்றோ அன்றே வருந்திய
குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ!
வெளிற்றுப் பனம் துணியின் வீற்றுவீற் றுக் கிடப்பக்
களிற்றுக் கணம்பொருத கண்ணகன் பறந்தலை
வருபடை தாங்கிப் பெயர்புறத்து ஆர்த்துப்
பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை
ஊன்றுசால் மருங்கின் ஈன்றதன் பயனே;
மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகன் ஞாலம்;
அது நன்கு அறிந்தனை ஆயின் நீயும்
நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது
பகடு புறந்தருநர் பாரம் ஓம்பிக்
குடிபுறந் தருகுவை ஆயின் நின்
அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே." (நாகனார்)

"பெருமை பொருந்திய வேந்தே! உனக்கு வேண்டிய சில உறுதிநலங்களை எனக்குத் தோன்றிய அளவு சொல்லுகின்றேன்; செங்கோல் தருமதேவதைக்கு நிலையமானது; அதனைத் தாங்கியிருக்கின்ற அரசன் அரிய பல பண்பாடுகளில் ஓங்கியிருக்க வேண்டும்; குடிசனங்கள் வந்து தன்பால் முறையிட்ட பொழுது அவர்பால் அன்பு கூர்ந்து ஆதரவு புரிவதே ஆட்சியாளர்க்குச் சிறந்த மாட்சியாம்; யார்க்கும் எளிய செவ்வியனாய் இதம் புரிந்து வருகிற அரசன் மழை பெய் என்றால் உடனே பெய்யும்; உழு தொழில் புரியும் உழவர்கள் விழுமிய செல்வங்களைப் பெருக்கி நாட்டை வளம்படுத்தி வருபவர் ஆதலால் அவரை எவ்வழியும் உரிமையோடு பேணி வருவது நல்லது; அரசன் ஆதரவாய்க் கருதிவரும் அளவே வளங்கள் பெருகி

வரும்; மழை பெய்யாது மாறினும், விளைவுகள் குன்றினும், பஞ்சங்கள் தோன்றினும், வேறு விபரீதங்கள் விளையினும் அரசனையே உலகம் இகழ்ந்து பழிக்கும்; அரசன் நல்ல நீதியுடையனுயின் அல்லலான தீதுகள் யாதும் அடையாது என்று உலகம் உறுதியாய்க் கருதியிருத்தலால் ஏதேனும் துயரங்கள் நேர்ந்தபோது வேந்தனை அது வெறுத்து வைய நேர்கிறது; ஆதலால் அரசர் பெரும! தலைமையான நிலையிலுள்ள உன் பொறுப்பை நீ குறிப்போடு நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும்; கோளும் இச்சகமும் பேசும் கொச்சை மாக்களை யாண்டும் கூடாமல் மதிநலமுடைய மேலோர்களையே எவ்வழியும் உரிமையாய்த் தழுவிக் கொண்டு செவ்விய நீதி முறைகளைத் துறைகள்தோறும் ஆராய்ந்து நீ செய்துவரின் பகைவரும் திசைநோக்கித் தொழுது உன் அடி நிழலை அடைய வருவர்; நெடிய புகழ் நிலவி வரும்'' எனப் புலவர் இவ்வாறு வளவனுக்குப் போதித்திருக்கிறுர்.

ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னர் இந் நாட்டிலிருந்த ஒரு கவிஞர் அரசனுக்கு இப்படி நீதி முறைகளை அறிவுறுத்தி யிருப்பது கருதி யுணர வுரியது. கவி வேந்தருடைய பொருள் மொழிகளுக்குச் செவி சாய்த்துப் புவி வேந்தர் உழுவலன்போடு அவரைத் தழுவி வந்துள்ள உரிமையையும் பழங்காலத்து நிலைமையையும் ஓரளவு இதனுல் உணர்ந்து கொள்கிறோம். புலவர்களை இனிது மருவி அரசுகள் பொலிவடைந்தன.

ஆட்சி முறையில் உயர்ந்து செல்வ வளங்களில் நிறைந்து அறிவு சீலங்களில் சிறந்து இந்நாடு முன்னுள் எங்கும் பொங்கிய புகழோடு நன்கு விளங்கி யிருந்தது. இந்நாள் மங்கி மறுகியுளது.

நாடுகின்ற வளங்களெலாம் நாடாமல்
தந்தருளி நயந்து வந்து
கூடுகின்ற பேர்க்கெல்லாம் குறிப்பறிந்து
பல பொருளும் கொடுத்து நாளும்
நீடுகின்ற புகழ்ஒளியால் நிலவி வந்த
இந்தியா இன்று நைந்து
பாடுகின்ற பாட்டெல்லாம் பஞ்சமாய்ப்
பட்டினியாய்ப் படிந்த அந்தோ! (1)

சீனத்தார் திருவுடையத் தெண்கடலின்
முத்து அளித்தாய்! செர்மன் என்னும்

மானத்தார் மாண்படைய மலைவளங்கள்
பல கொடுத்தாய்! மற்றை மேலைத்
தானத்தார் உயர்வடையத் தரணிநலம்
பல தந்தாய்! தரும மான
வானத்தார் அதிசயிப்ப வாழ்ந்துவந்த
பாரதமே! வருந்தல் என்னே? (2)

காடுஎங்கும் விளையவில்லை; காலமழை
பெய்யவில்லை; கருதி ஓடிப்
பாடுஎங்கே பட்டாலும் எவ்வழியும்
பயன்இல்லை; படரே ஓங்கி
நாடுஎங்கும் அவலமாய் நகர்எங்கும்
கவலையாய் நலிவே கண்டு
வீடுஎங்கும் மாந்தரெலாம் விழிநீரே
சிந்தியுள்ளார் விளைவென்? அம்மா! (3)

கட்டுஒன்று கலன்காட்டிக் கதிர்உழக்கு
நெல்காட்டிக் கடல்சூழ் ஞாலம்
தட்டுஒன்றும் இல்லாமல் சார்ந்தஉயிர்
இனங்களெலாம் ஆர்ந்து வாழ
இட்டுஉண்டு பெரும்புகழை ஈட்டிவந்த
இந்தியா இன்று நொந்து
பட்டினியின் படுதுயரைப் பார்எங்கும்
பார்த்துளதே பாவம் என்னே! (4)

பட்டினியால் இந்நாட்டில் எவரையுமே
சாகவிடோம் பாரீர் என்று
கட்டி அரசாளுகின்ற மந்திரிகள்
கூறுகின்றார்; காலன் வாயில்
ஒட்டிமக்கள் உள்ளநிலை அவர்மொழியே
உலகறிய உணர்த்தி இந்நாள்
எட்டிநிற்கும் இழவுகளைத் தெளிவாக்கி
யுள்ளதே என்னே வாழ்வு! (5)

(இந்தியத்தாய் நிலை)

பழங்கால வளங்களைக் கூர்ந்து ஓர்ந்து இக் கால நிலைகளை நேர்ந்து நினைந்து நெஞ்சு நொந்து வந்துள்ள இந்த ஐந்து கவிக

ளும் இங்கே நன்கு சிந்திக்கத் தக்கன. நாட்டில் மூண்டுள்ள வறுமை முதலிய சிறுமைகளுக்குப் புதிதாய் நேர்ந்துள்ள ஆட்சியாளரை மாத்திரம் குறை கூறுவது முறையாகாது. மக்களும் தக்க நீர்மைகள் குன்றித் தாழ்ந்திருக்கின்றனர். பொய் வஞ்சம் பொறாமை புன்மை மடி மடமை முதலிய குடி கேடுகளில் நெடிது பழகி நிற்றலால் இயற்கையன்னையின் வெறுப்பும் தேவ கோபமும் மேவி யாண்டும் வேகமாய் மூண்டு நிற்கின்றன.

ஆட்சி புரிய நேர்ந்தவர் காட்சி தெளிந்து தரும நீதிகள் தோய்ந்து கருமங்கள் ஆய்ந்து நாட்டை மாட்சி பெறப் பேண வேண்டும். பேணல் கோணலாயின் யாதொரு பலனும் யாரும் காண முடியாது. கருதியுணர்ந்து கடமையை உறுதியாச்செய்க.

---

763. பொருளும் அறமும் புகழும் பெருக
மருளும் மடமும் மடிய—அருள்நீதி
எவ்வழியும் எய்தி இதம்புரியின் அவ்வறிவு
செவ்விய தாகும் சிறந்து. (௩)

இ-ள்.

செல்வமும் தருமமும் கீர்த்தியும் பெருகி வர, மடமையும் மடிமையும் மயக்கமும் அடியோடு ஒழிய, அருள் நீதியுடன் ஆருயிர்களை ஆதரித்து வரின் அந்த அரச அறிவு எவ்வழியும் திவ்விய முடையதாய்ச் சிறந்து செவ்விமிகுந்து விளங்கும்என்க.

இது சிறந்த அறிவுக்குப் பயன் எவர்க்கும் இதம் புரிவதே என்கின்றது. ஆதரவு செய்த அளவு ஆட்சி மாட்சி யுறுகின்றது.

உலகம் ஆகிய உடம்புக்கு அரசன் உயிர் என அமைந்திருக்கிறான். ஆகவே அவன் கூர்மையான அறிவு தோய்ந்து நீர்மை சீர்மைகளில் சிறந்து நிற்பின் பலவகை நிலைகளிலும் உயர்ந்து அது பொலிவடைந்து விளங்கும். அரசன் நல்ல அறிவு இலன் எனின் கல்லாத உடம்புபோல் உலகம் பொல்லாததாய் இழிந்து படும். அறிவுடைய அரசன் முறை செய்ய நேரின் அந்த நாடு ஒளி மிகவுடையதாய்த் தெளிவடைந்து திகழும். உரிய தலைவன் உணர்வு அரிய பல இன்ப நலங்களை அருளி வருகிறது.

தேச மக்களுடைய வாழ்வு முழுவதும் அரசன் கையில் மருவியிருத்தலால் அறிவும் சீலமும் அவனிடம் பெருகியிருத்தல் வேண்டும். அவ்வாறு அவை அமைந்திருந்த போதுதான் மாந்தர் வாழ்வு மாண்பு மிகுந்து வரும். அரச குல மக்கள்பால் கலையறிவு தலைசிறந்திருக்க வேண்டும் என்னும் கருத்தால் அவரைக் குறித்துக் கூற வந்த மேலோர் எல்லாரும் கல்வி நலனையே முதன்மையாக விரித்து விளக்கி உரைத்திருக்கின்றனர்.

கலையினது அகலமும் காட்சிக்கு இன்பமும்
சிலையினது அகலமும் வீணைச் செல்வமும்
மலையினின் அகலிய மார்பன் அல்லதுஇவ்
உலகினில் இலைஎன ஒருவன் ஆயினன்.
(சீவக சிந்தாமணி)

கல்வி அறிவு அழகு சங்கீதம் இங்கிதம் ஆண்மை வீரம் முதலிய நிலைகளில் சீவகன் உயர்ந்திருந்த தலைமையை இது உணர்த்தியுள்ளது. கலையை முதலில் வைத்தது அதன் நிலை கருதி.

அருளினது உறையுள்; நல்அறத்தின் வேலி; சொல்
தெருளுறு கல்வியம் தெய்வ மாக்கடல்;
குரைகடற் புவிபுகழ் குணக்குன்றம்; சுடர்
எரிதவழ் அலங்கல்வேல் அரசர் ஏறனன். (நைடதம்)

தருமம் கருணை கல்விகள் நிறைந்து குணத்தின் குன்றமாய் நளன் அமைந்திருந்த உண்மையை இதனால் உணர்கிறோம். கல்விக்கடல் என்றது பல கலைகளிலும் உயர்ந்துள்ளமை கருதி.

இளமையும் வனப்பும் இல்லொடு வரவும்
வளமையும் தறுகணும் வரம்பில் கல்வியும்
தேசத்து அமைதியும் மாசில் சூழ்ச்சியோடு
எண்வகை நிறைந்த நன்மகன். (பெருங்கதை)

உதயண மன்னன் இவ்வாறு எண்ணப்பட்டுள்ளான்.

"கலையுணர் புலமையில் தலைமையோன் ஆகி
விதிமுறை வழாது முதுநிலம் புரக்கும்
பெருந்தகை உக்கிரப் பெருவழுதி என்னும்
தன்னிகர் இல்லா மன்னவர் பெருமான்."

உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனுடைய நீர்மை சீர்மைகளை இது நேரே காட்டியுள்ளது. அரசு ஆள

வருபவர் அறிவுத் துறையில் எவ்வளவு வரிசை பெற்று உயர்ந்திருக்க வேண்டும் என்பதை இவை நன்கு விளக்கியுள்ளன. பொதுவாக யாருக்கும் அறிவு பெருமை தரும் ஆயினும் அரசர்க்கு அது அதிசய ஆற்றல்களை அருளி வருகிறது.

பொருளை ஈட்டவும், காக்கவும், செலவு செய்ய வுரிய துறைகளை முறையே அறிந்து நலமா வகுத்து விடவும், நன்மை தீமைகளை நாடிநோக்கி உண்மை நிலைகளை ஓர்ந்து கொள்ளவும், குடிசனங்களுடைய நிலைமைகளைக் கூர்ந்து தேர்ந்து அவர்களுக்கு வேண்டிய இதங்களை யாண்டும் ஆய்ந்து செய்யவும், காலம் இடம் வலி முதலிய வகைகளைக் கருதியுணர்ந்து உறுதி நலங்களை ஊக்கி ஆற்றவும் அரசன் உரியவன் ஆதலால் அவன் பெரிய அறிவாளியாயில்லையானால் அவை யாவும் எவ்வழியும் செவ்வையாய் நடைபெறா. அறிவு நிலையில் அரசன் தாழ்ந்து நின்றால் கருமக் காட்சி சிறுமையாய் மாறி ஆட்சி அவலமாய் வீழும்.

ஒரு மன்னனுடைய மதி மாண்புக்குப் பயன் குடிசனங்கள் யாண்டும் அமைதியாய் வாழ்ந்து வருவதேயாம். மனிதனுக்கு அமைதியான இனிய வாழ்வு அமையின் அது புனிதமான தெய்வ வாழ்வாம். அந்த வாழ்வு புண்ணியத்தால் அமைதலால் மக்கள் எண்ணங்கள் திருந்தி இனியராய் ஒழுகி வர வேண்டும். அந்த நிலையை அரசு முந்தற விளைத்து வருவது நன்று.

கள்ளம் கபடு பொய் பொறாமை வஞ்சனை முதலிய இழிபுலைகளால் அழி துயரங்களே நேரும் ஆதலால் அப்பழி வழிகளில் பழகாதபடி குடிசனங்களை அரசு பாதுகாத்து வரின் நாடு செல்வ வளங்களில் சிறந்து விளங்கி வரும். நிலத்தில் களைகள் பெருகினால் பயிர்கள் செழித்து விளையா; மக்கள் மனத்தில் இழிநினைவுகள் மருவினால் அவர் வெளியே சுகமாய் வாழ முடியாது.

தம் கடமைகளைக் கருதிச் செய்து தரும நீதிகளைத் தழுவி ஒழுகுமாறு மாந்தருக்கு மதியுறுத்தி வரின் அவ் வேந்தனை மண்ணவர் வாழ்த்துவர்; விண்ணவரும் வியந்து போற்றுவர்.

"Public instruction should be the first object of Government." (Napoleon)

"பொது மக்களுக்கு நல்லதைப் போதிப்பதே அரசாங்கத்

தின் தலைமையான குறிக்கோளா யிருக்க வேண்டும்" என நெப்போலியன் என்னும் வீர மன்னன் இவ்வாறு கூறியிருக்கிறான்.

சனங்களுக்கு உரிமையாய் உதவி செய்துவரின் அந்த ஆட்சி உறுதியாய் உயர்ந்து வருகிறது. உரிய இதம் ஒழியின் அரிய பெரிய அரசும் வலியிழந்து மெலிதாய் இழிந்து படும்.

"No government is ultimately strong, but in proportion to its kindness and justice." (Ruskin)

"அரசாட்சிக்குத் தனியே யாதும் வலியில்லை; குடிசனங்களுக்கு ஆதரவாய் நீதி புரிந்து வரும் அளவே அது வலியடைந்துள்ளது" என்று ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். நாட்டுக்கு நன்மை புரிந்து வருந்தோறும் அரசுக்கு வன்மையும் வனப்பும் நன்கு வளர்ந்து வருகின்றன.

---

764. கற்றுப் பெரிய கலைஞனாய் நின்றாலும்
உற்ற அறிவை உயர்நிலையில்—ஒற்றிநின்று
வெற்றி நலன்கள் விளையா தொழியுமேல்
எற்றும் இழிவே எழும். (௪)

இ-ள்.

அரிய பல நூல்களைக் கற்றுப் பெரிய கலைஞனாய் நின்றாலும் தனது அறிவை உயர் நிலையில் பண்படுத்திக் காரியசித்திகளை விளையாது ஒழியின் அந்த அரசன் சிறந்து விளங்கான்; எவ்வழியும் இழிவுகளையே கண்டு அவமே அழிவான் என்க.

இது வேந்தனுக்கு வினைத்திட்பம் வேண்டும் என்கின்றது.

உலகத்தை ஆள வந்தவன் உயர்ந்த எண்ணங்களை யுடையனாயிசைந்திருப்பது இயற்கை நியமமாய் நின்றது. தலைமை தாங்க நேர்ந்த பொழுது அந்த மனிதனுடைய நிலைமை ஓங்கி எழுகின்றது. அவனுடைய முன்னிலையில் எவரும் தாமாகவே அடங்கி ஒழுக நேர்கின்றனர். அரசனது காட்சி அரிய மாட்சியாய் அதிசய ஆட்சிகளைச் செய்கின்றது. உருவத்தோற்றத்தால் இவ்வாறு ஒளி பெற்றுள்ள அரசன் தெளிவான அறிவுடையனாய்ச் சிறந்து திகழின் அரிய பல மேன்மைகள் விளைந்து வரும்.

அறிவு பலவகை நிலைகளில் பரவிவிரிந்து ஒளிபுரிந்துள்ளது. இயல் இசை கணிதம் முதலிய கலைகளில் பழகி அறிவு தெளிவு பெற்றிருப்பினும் காரியங்களைச் சீரியமுறையில் செய்து முடியாதாயின் அந்த அறிவு ஆட்சிக்குப் பயன்படாது. கரும சாதனைகளில் தோய்ந்து வெற்றி பெற்று வரும் அளவே கொற்றவன் அறிவு கூர்மையாய்ச் சீர்மையுற்று மேன்மையோடு மிளிர்கிறது.

நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி எவ்வழியும் செவ்வியராய் அவர் வாழ்ந்து வரும்படி சூழ்ந்து செய்யின் அவன் செங்கோல் வேந்தனாய்ச் சிறந்து விளங்குகின்றான். மன நிம்மதியோடு அமைதியாய் வாழும் வாழ்வு எந்த ஆட்சியில் கிடைக்கிறதோ அந்த அரசை மக்கள் மிக்க வுரிமையாய் விழைந்து போற்றி மகிழ்ந்து வாழ்த்தி வருவர்.

குடிசனங்கள் உள்ளம் உவந்து வாழ உரிமை கூர்ந்து பேணி அரிய பல நீர்மைகள் வாய்ந்து சீர்மை தோய்ந்துள்ள அரசன் தேவரும் புகழ்ந்து மகிழச் சிறந்து திகழ்கின்றான். செய்ய வேண்டியதைச் செய்து முடித்த கருமவீரன் எனத் தருமதேவதையும் அவனை உரிமையோடு உவந்து புகழ்கின்றது.

அரிய பல குண நலங்கள் அமைந்து உயிரினங்களை இனிது பேணி உயர் புகழ் நிறுவிய பெரியவன் என நம்பிநெடுஞ்செழியன் என்னும் பாண்டிய மன்னன் யாண்டும் இசை பெற்று நின்றான். அவனுடைய நீர்மை சீர்மைகளைக் குறித்துப் பேரெயில் முறுவலார் என்னும் சங்கப் புலவர் வியந்து பாடியுள்ளார். சிறந்த பண்புகள் நிறைந்த அந்தப் பாடல் அயலே வருகிறது.

தொடியுடைய தோள் மணந்தனன்;
கடிகாவில் பூச் சூடினன்;
தண்கமழும் சாந்து நீவினன்;
செற்றாரை வழி தபுத்தனன்;
நட்டோரை உயர்பு கூறினன்;
வலியர்என வழி மொழியலன்;
மெலியர்என மீக் கூறலன்;
பிறரைத்தான் இரப்பு அறியலன்;
இறந்தோர்க்கு மறுப்பு அறியலன்;
வேந்துடை அவையத்து ஓங்குபுகழ் தோற்றினன்;